

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்,

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ வெளியீடு

(மூன்றாம் பதிப்பு)

பதிப்பாசிரியர்

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.,B.L.,



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்

அப்பிள்ளையுரை

ஸுதர்சனர் இயற்றிய

திவ்யப்ரபந்தஸார வ்யாக்யானத்துடன்

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்,

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ வெளியீடு

(மூன்றாம் பதிப்பு)

பதிப்பாசிரியர்

ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A.,B.L.,

ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ. 80-00. தபால் செலவு தனி

## மூன்றாம் பதிப்பு


<u>பதிப்பித்தவர்கள்</u>

*1.* ஸ்ரீ.ரா.கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது

<u>டிரஸ்டிகள்:-</u>

S.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A., B.L., அட்வகேட்
ராம அய்யங்கார், B.Sc., B.L., அட்வகேட்

2. ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ
214, கீழ உத்திர வீதி,
திருவரங்கம், திருச்சி – 620 006.

முதற் பதிப்பு : 1955
இரண்டாம் பதிப்பு : 1975
மூன்றாம் பதிப்பு : 1998

Printed at:
**Libra Offset Printers**
Thanjavur.
IIIrd Reprinted - 'பகுதான்ய' 1998
Paper used - Cream wove
Price - Rs. 80.00(Postage extra)

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# மூன்றாம் பதிப்பின் முகவுரை

இருபத்து மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு வெளியிடப்படும் இப்பதிப்பானது **ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ** மற்றும் **ஸ்ரீ ரா.கி. ஸ்ரீநிவாஸய்யங்கார்** குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் நிகழும் *பகுதான்ய வருஷம்,* நம்மாழ்வாரது அவதார நன்னாளான *வைகாசி விசாகத்தன்று (08.06.98)* வெளியிடப்படுகிறது.

இம்மூன்றாம் பதிப்பினை வெகு நேர்த்தியாக போட்டோ ஆப்செட் முறையில் பதிப்பித்து தந்த தஞ்சை லிப்ரா ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனத்தினற்கும், திருமழிசை ஆழ்வாருடைய வண்ணப் புகைப்படத்தினை கொடுத்துதவிய சென்னை ஸ்ரீ.உ.வே. கோவிந்தராஜன் ஸ்வாமி எம்.ஏ.பி.எல்., அவர்களுக்கும் எமது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

எமது ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ நிறுவனத்தின் சார்பில் தற்கால நிலைமையினைக் கருத்தினிற் கொண்டு, ஸ்ரீ வைஷ்ணவத்தின் அடிநிலைகள், ஆழ்வார், ஆசார்யர்கள் வைபவம், வைணவத்தின் உன்னத நெறிமுறைகள், ஆகியவற்றினை எளிய நடையில் எல்லோரும் அறிந்து கொள்ளும்படி அஞ்சல்வழிக் கல்வி மூலம், மூன்று நிலைகளில் (பதினெட்டு மாதங்களில்) குறிப்புகளை அனுப்பியும், நேர்முகப் பயிற்சி வகுப்புகளை ஏற்பாடு செய்து அதன் மூலம் விளக்கங்களை அளித்தும் வருகிறோம். ஆங்கிலம் அல்லது தமிழில் பாடங்களும், நேர்முகப் பயிற்சி வகுப்புகளும் நடைபெறுகின்றன. ஆயிரக்கணக்கான அன்பர்கள் தற்போது பயன் பெற்று வருகின்றனர்.

இக்கல்விமுறை மூலம் பயில விருப்பம் உடையோர் கீழ்கண்ட முகவரிக்குத் தொடர்புகொள்ள ப்ரார்த்திக்கிறோம்.

அடியேன் இராமானுசதாஸன்

**அ.கிருஷ்ணமாசாரி**
கல்வி முறை இயக்குநர்
**ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ**
*214, கீழ உத்திர வீதி,*
திருவரங்கம், திருச்சி - *620 006.*

திருச்சி
*08.06.1998*

# முகவுரை

"*அதிவாதீ பவ*" [முண்டக 1-1-4] [பரமபுருஷனே பெரியோன் என்று வாதம் செய்வாயாக] என்று விதித்தது வேதம். இதை அநுஷ்டித்துக் காட்டினார்கள் ஆழ்வார்கள். அவர்களுக்குள் உருவின வாளை உறையிலிடாதே பரதத்வ நிர்ணயம் செய்து பெருமைபெற்றவர் திருமழிசைப்பிரானேயாவர். மற்றுள்ள ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகள் மந்தமதிகளுக்கு மயக்கத்தையும் விளைக்கும். "நாரணன் நான்முகன் அரனென்னுமிவரை ஒன்ற நும் மனத்துவைத்து" [திருவாய் 1-3-7] "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" [திருவாய் 10-10-1] "அரியை அயனை அரனை அலற்றி" [திருவாய் 10-10-11] என்று நம்மாழ்வாரும். "இருவரங்கத்தால் திரிவரேலும் ஒருவன் ஒருவனங்கத்தென்றுமுளன்" [முதல் திருவ 98] "திருமலைமேல் எந்தைக்கு இரண்டுருவும் ஒன்றாயிசைந்து" [மூன் திருவ 63] என்று முதலாழ்வார்களும், "ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ ஒன்று மாகடலுருவம் ஒத்து நின்ற மூவுருவும் கண்டபோது ஒன்றாம் சோதி" [திருநெடு 2] என்று மங்கைமன்னனும் அருளியிருப்பதைக்கண்டு அறிவுடையார் சிலரும் "சடகோபன் சமரசம்" என்றும் "ஆழ்வார்கள் சமரசம்" என்றும் கட்டுரைகள் எழுதுவதைக் காணுகின்றோம். அவ்வாழ்வார்களே "கங்கையான் நீள்கழலான் காப்பு" [முதல் திருவ 74] "அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்" [முதல் திருவ 15] "மாமதிள் மூன்றெய்த இறையான் நின்றாகத்து இறை" [முதல் திருவ 28] "மாமலரான் வார்சடையான் என்றிவர்கட்கு எண்ணத்தானாமோ இமை" [மூன் திருவ 97] "நளிர் மதிச்சடையனும்" [திருவாசிரியம் 7] "ஒன்றும் தேவும்" [திருவாய் 4-10] "ஏ பாவம் பரமே" [திருவாய் 2-2-3] "சிவன் முடிமேல் தான்கண்டு பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை" [ஷை 2-8-6] "எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவர்" [பெரிய திரு 11-6-2] "மற்றுமோர் தெய்வமுளதென்றிருப்பாரோடுற்றிலேன்" [பெரிய திரு 8-10-3] என்றும் மற்றும் பல்லாயிரம் பாசுரங்களிலும் பரதத்வ நிர்ணயம் செய்திருப்பதைக் காண மனமில்லாமலே இருக்கின்றனர் இவர்கள். இப்புல்லறிவாளர்

கள் வாய்திறப்பதற்கும் வழியில்லாதபடி பரதத்வ நிர்ணயப் பெருமுரசுகொட்டி வெற்றிக்கொடி நாட்டியவர் இத்திருமழிசைப்பிரான். இப்பெருமை இவருடைய தனிப்பெருமையாகும். பாண்டிய ஸத₃ஸ்ஸிலே பரதத்வ நிர்ணயம் செய்தவரான பெரியாழ்வாரும் ப்ரபந்தங்களிலே அதை அதி₄கமாகச் செய்தாரல்லர். ப்ரதிபக்ஷநிராஸகமான ஸுத₃ர்சனத்தின் அம்ஸமான இவ்வாழ்வாரோவெனில், தம் இரு ப்ரபந்தங்களிலும் பரதத்வ நிர்ணயம் செய்வதையே பொழுது போக்காகக் கொண்டிருக்கிறார் இப்படி உலகிற்கு உண்மைப்பொருளைக் காட்டி உலகையும் உடையானையும் உஜ்ஜீவிக்கச்செய்த உபகாரகராகைடாலேயே; இவ்வாழ்வார் "திருமழிசைப்*பிரான்*" [பிரான்-உபகாரகர்] என்று பெயர் பெற்றார் போலும்!

இவ்வாழ்வார் செவிக்கினிய சந்தத்தில் பாடியருளிய திருச்சந்தவிருத்தம் ஜய-ஸூ தையில் மகத்தில் பெரியவாச்சான் பிள்ளையருளிய வியாக்கியானத்தோடு வெளியிடப்பெற்றது. அதையொட்டிச் சில மாதங்களில் நான்முகன்திருவந்தாதியும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தோடும், எளிய தமிழ் நடையிலான நமது தி₃வ்யப்ரப₃ந்த₄ஸார வ்யாக்₂யானத்தோடும் முதல் பதிப்பாக வெளியிடப்பெற்றது. இப்போது, அம்முதல் பதிப்பில் உள்ளவைகளோடு, அப்பிள்ளையுரையும் சேர்த்து வெளியிடப்படுகிறது. நமது எளிய நடை விவரணத்திலும், அப்பிள்ளையுரையில் காணும் சில சுவைமிக்க பொருள்கள் சேர்க்கப்பெற்றுள்ளன. நமது ஸுத₃ர்ஸனத்தில் இருமுறை வெளிவரும் பெருமையைப் பெற்ற இந்நூல் ஆஸ்திகவுலகத்தின் பேராதரவைப் பெறும் என்பதில் ஐயமில்லை.

இங்ஙனம்,

*தா₃ஸன்,*

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அதிவக்தா (அட்வகேட்)
'ஸுத₃ர்ஸனம்' ஆசிரியர்.

ராக்ஷஸ-ஸூ
புரட்டாசித் திருவோணம்
14—10—1975

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



பிள்ளைலோகம் ஜீயர் அருளிச் செய்த

# நான்முகன் திருவந்தாதி

## தனியன் வ்யாக்யானம்



ஸ்ரீராமப்பிள்ளை அருளிச்செய்த தனியன்

**நாராயணன் படைத்தான் நான்முகனை, நான்முகனுக்கு**
**ஏரார் சிவன் பிறந்தா னென்னும்சொல் — சீரார்**
**மொழி செப்பி வாழலாம் நெஞ்சமே, மொய்பூ**
**மழிசைப் பரனடியே வாழ்த்து.**

**நாராயணன்**-ஸ்ரீமந்நாராயணன், **நான்முகனை**-நான்கு முகங்களையுடைய ப்ரஹ்மாவை, **படைத்தான்**—ஸ்ருஷ்டித்தான், **நான்முகனுக்கு**—அப்பிரமனுக்கு, **ஏர் ஆர் சிவன் பிறந்தான்**—ஸாதநாநுஷ்டாநத்தினால் பூர்ணனான சிவன் பிறந்தான், **என்னும் சொல்**—என்னும் இவ்வார்த்தையைச்

---

**அவதாரிகை:** — (நாராயணன் படைத்தானித்யாதி,) ஸர்வேஶ்வரனுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தை ஸாதித்த பக்திஸாரருடைய ஸ்ரீஸூக்தியான திவ்யப்ரபந்தத்தை

---

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



# திவ்யப்ரபந்த ஸாரம்

## தனியன் வ்யாக்யானம்

**அவதாரிகை :**— நான்முகன் திருவந்தாதித் தனியனாகிய இப்பாசுரத்தை அருளியவர் கூரத்தாழ்வானுக்கு இரண்டாவது திருக்குமாரராய், ஸ்ரீபராசரபட்டருக்குத் திருத்தம்பியாராய், வேதவ்யாஸபட்டர் என்னும் திருநாமத்தையுடையரான ஸ்ரீராமப்பிள்ளையாவர். இப்பாசுரத்தில், "நெஞ்சே! ஸர்வேஶ்வரனுடைய பரத்து

சொல்லுவதாய், **சீர் ஆர்**—பெருமைகள் பொருந்தப்பெற்ற தான, **மொழி செப்பி**—இப்பிரபந்தத்தைச்சொல்லி, **வாழலாம்**—வாழ்ச்சி பெறலாம்; **நெஞ்சமே**—என் நெஞ்சே! **மொய் பூ மழிசை பரன் அடியே**—பூக்கள் நிரம்பிய திருமழிசைப்பிரானுடைய திருவடிகளையே, **வாழ்த்து**—மங்களாஶாஸனம் செய்வாயாக.

---

அனுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படி, மநஸ்ஸே! மஹீஸாரக்ஷேத்ராதிபதியானவர் ஸ்ரீபாதங்களையே ஸ்தோத்ரம் பண்ணு என்கிறது.

வ்யா— (நாராயணன் படைத்தான் நான்முகனை) **1. "एको ह वै नारायण आसीत्। न ब्रह्मा नेशानः॥"** (ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்। ந ப்ரஹ்மா நேஶாந: ||) என்றும், **2. "नारायणपरो ज्योतिः"** (நாராயணபரோ ஜ்யோதி:) என்றும், **3. "नारायणे प्रलीयन्ते"** (நாராயணே ப்ரலீயந்தே) என்றும், **4. "एकस्तिष्ठति विश्वात्मा स च नारायणः प्रभुः"** (ஏகஸ்திஷ்டதி விஶ்வாத்மா ஸ ச நாராயண: ப்ரபு:) என்றும், **5. "सृष्टिस्थित्यन्तकरणीं"** (ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம்) என்று தொடங்கி,

---

வத்தை நிருபித்த திருமழிசையாழ்வாருடைய திவ்யஸூக்தியாகிற நான்முகன் திருவந்தாதியை அநுஸந்தித்து உய்யும்படியாக, அவருடைய திருவடிகளையே துதிப்பாயாக" என்று தம் நெஞ்சை நோக்கி அருளிச்செய்கிறார்.

**வியாக்கியானம்:—** (நாராயணன் படைத்தான் நான்முகனை... என்னும் சொல்) 1. "நாராயணன் ஒருவனே (ஆதியில்) இருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை" என்று மஹோபனிஷத்திலும், 2. "மேலான சோதியும் நாராயணனே" என்று நாராயண ஸூக்தத்திலும், 3 "நாராயணனிடத்திலே லயிக்கின்றன" என்று நாராயணோபனிஷத்திலும், 4. "விஶ்வாத்மாவான பரமாத்மா ஒருவனே (மஹாப்ரளயத்தில்) எஞ்சி நிற்கிறான். அவனே ஸர்வேஶ்வரனான நாராயணன்" [பாரதம்] என்றும், 5. "ஸ்ருஷ்டிஸ்தித்யந்த கரணீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம்। ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாநேக ஏவ ஜநார்த்தந: ||" [ஜனார்த்தனனா அந்த

5. "एक एव जनार्दनः" (ஏக ஏவ ஜநார்த்த,ந:) என்றும், 6."एक एव जगत्स्वामी शक्तिमानच्युतः प्रभुः" (ஏக ஏவ ஜக,த்ஸ்வாமீ ஶக்திமாநச்யுத: ப்ரபு,:) என்றும், அவரவர்கள் ஸர்வேஶ்வரனாலே ஸம்ஹார்யரென்றும், 7. "यन्नाभिपद्मादभवन्महात्मा प्रजापतिः" (யந்நாபி,பத்,மாத,ப,வந் மஹாத்மா ப்ரஜாபதி:) 8. "नारायणाद्ब्रह्मा जायते। नारायणाद्रुद्रो जायते" (நாராயணாத் ப்,ரஹ்மா ஜாயதே நாராயணாத்,ருத்,ரோ ஜாயதே) 9. "विरूपाक्षाय ब्रह्मणः पुत्राय ज्येष्ठाय श्रेष्ठाय" (விரூபாக்ஷாய ப்,ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்ட,ாய ஶ்ரேஷ்ட,ாய) என்றும், 10. "ब्रह्मणश्चापि संभूतः शिव इत्यवधार्यताम्" (ப்,ரஹ்மணஶ்சாபி ஸம்பூ,த: ஶிவ

---

பகவான் ஒருவனே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யும் ப்ரஹ்மவிஷ்ணுசிவநாமங்களை அடைகிறான்.] [வி. பு. (1-2-66)] என்றும், 6. "சக்திமானாய், அழிவற்றவனாய், ஈஶ்வரனாயுள்ள அச்யுதன் ஒருவனே ஜகத்ஸ்வாமியாவன்" என்றும் பாரத விஷ்ணுபுராணாதிகளான உபப்ரும்ஹணங்களிலும் ப்ரஹ்மருத்ராதிகள் நாராயணனாலே ப்ரளயகாலத்தில் ஸம்ஹரிக்கப்படுபவர்கள் என்று சொல்லப்பட்டது.

7. "யந்நாபி,பத்,மாத,ப,வந் மஹாத்மா
ப்ரஜாபதிர் விஶ்வஸ்ருட் விஶ்வரூப: ।
தமேவ விதி,த்வாதிம்ருத்யுமேதி
நாந்ய: பந்தா,ா வித்,யதேऽயநாய ॥"

[எவருடைய திருநாபிக்கமலத்திலிருந்து விஶ்வஸ்ரஷ்டாவாய், விஶ்வரூபராய், மஹாத்மாவான ப்ரஜாபதி உண்டானாரோ, அவரை அறிந்தால் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான்; மோக்ஷமடைய வேறு வழியில்லை] என்று மஹோபனிஷத்திலும், 8. "நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்" என்று நாராயணோபனிஷத்திலும், 9. "ப்ரஹ்மாவின் புத்ரனாய், ஜ்யேஷ்டனாய், ஶ்ரேஷ்டனான விருபாக்ஷனுக்கு" என்று ஸாமவேதத்திலும்,

10. "யத் தத் பத்,மமபூ,த் பூர்வம் தத்ர ப்,ரஹ்மா வ்யஜாயத ।
ப்,ரஹ்மணஶ்சாபி ஸம்பூ,த: ஶிவ இத்யவதா,ார்யதாம் ॥"

**இத்யவத₄ார்யதாம்)** என்றும் அவரவர்கள் எம்பெருமானாலே ஸ்ருஜ்யர் என்றும் சொல்லப்படுகிற வேத₃ார்த்த₂ங்களை ஸர்வாதி₄காரமாம்படி "நான்முகனை நாராயணன் படைத் தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்,—யான்முகமாய், அந்தாதிமேலிட்டறிவித்தே னாழ்பொருளை, சிந்தாமல் கொண்மின் நீர் தேர்ந்து" என்று உபக்ரமித்து, "இனியறிந்தேன்" என்று தலைக்கட்டிலும் "நற்கிரிசை நாரணன் நீ" என்றிறே அருளிச்செய்தது. அத்தையாயிற்று "நாராயணன் படைத்தான் நான்முகனை நான்முகனுக்கேராா் சிவன் பிறந்தானெனும் சொல்" என் கிறது. (என்னும்) என்று வேத₃ாந்தப்ரஸித்₃தி₄ தோற்றச் சொல்லுகிறது.

(சொல் சீரார் மொழி)யாவது, — தமிழுக்கு அவயவ மாகச் சொல்லுகிற சொற்சீர்களாலே ஆர்ந்தமொழியென்னு

---

[(பகவானுடைய உந்தியிலிருந்து) யாதொரு தாமரை முன் உண்டாயிற்றோ அதில் பிரமன் பிறந்தான்; பிரமனிடமிருந்தே சிவன் பிறந்தானென்று அறியத்தக்கது.] என்று மஹாபாரதத்தி லும் அந்த ப்ரஹ்மருத்ரர்கள் ஸ்ருஷ்டி காலத்தில் பகவானாலே ஸ்ருஷ்டிக்கப்படுகின்றனர் என்றும் உரைக்கப்பட்டது. ருத்ரன் ப்ரஹ்மாவினாலே ஸ்ருஷ்டிக்கப்படுவதாகச் சொல்லப்பட்டாலும், ப்ரஹ்மாவுக்கும் நாராயணன் காரணனாகையாலே, ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாயிருந்து பகவானே ருத்ரனைப் படைக்கையாலே, "நாராயணனிடமிருந்து ருத்ரன் உண்டாகிறான்" என்று சொல்லத் தட்டில்லை, ஒரு கல்பத்தில் பிரமனிடமிருந்தும், மற்றொரு கல்பத் தில் நாராயணனிடமிருந்து நேராகவும் ருத்ரன் பிறப்பதாகவும் கொள்வதுண்டு. இந்த வேதார்த்தங்களை எல்லாரும் அறியும்படி "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று முதற்பாட்டிலே ஆரம்பித்து "இனியறிந்தேன்" என்னும் கடைசிப் பாட்டிலும் "ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம் நற்கிரிசை நாரணன் நீ" என்று அருளிச்செய்தார் திருமழிசையாழ்வார். அதையே "நாராயணன்......என்னும் சொல்" என்னும் இரண்டடிகளும் உரைக்கின்றன. 'என்னும்' என்னும் பதம் மேலே எடுத்த ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் ப்ரஸித்தியைச் சொல்லுகிறது.

தல்; "என்னும் சொல்" என்று சொல்லப்படுவதுமாய், "சீரார்மொழி" என்று "சீர் கலந்த சொல்" என்கிறபடியே கல்யாணகு₃ண ப்ரசுரமான மொழியென்னுதல். (மொழி செப்பி) ஏவம்வித₄மான நான்முகன் திருவந்தாதி ப்ரப₃ந்த₄த்தை அநுஸந்தி₄த்து. (வாழலாம்) உஜ்ஜீவிக்கலாம். (நெஞ்சமே) மநஸ்ஸே! நீ ஸஹகரிக்கவேண்டும்.

அதாவது:—(மொய் பூ மழிசைப் பரனடியே வாழ்த்து) ப்ரப₃ந்த₄வக்தாவான திருமழிசையாழ்வார் திருவடிகளையே ஸ்தோத்ரம்பண்ணு. "இடம் கொண்ட கீர்த்தி மழிசைக் கிறைவன் இணையடிப்போது" என்னும்படி நிரதிஶய போ₄க்₃யமாயிறே இருப்பது; வேறு போ₄க்₃யதாவிஷயங்களை விரும்பாதே, நிரதிஶயபோ₄க்₃யமாயிருக்கிற இத்தையே விரும்பிப்போரு. (மொய் பூ) என்று 'செறிந்த பூ என்னுதல், 'அழகிய பூ' என்னுதல்; அன்றிக்கே, பூ என்று அழகாகவு

---

(சொல் சீரார் மொழி பாட்டுக்கு லக்ஷணமாகச் சொல்லுகிற சொற்சீர்கள் நிறைந்த மொழி என்று ஒரு பொருள். "சொல்லப் படுவதாய், 'சீர்கலந்த சொல்' [பெரியதிருவ 86] என்கிற படியே நற்குணங்கள் நிறைந்த வார்த்தை" என்று மற்றொரு பொருள். (மொழி செப்பி) இப்படிப்பட்ட நான்முகன் திருவந்தாதி ப்ரபந்தத்தைச் சொல்லி, (வாழலாம்) உய்ந்துபோகலாம். (நெஞ்சமே) மநஸ்ஸே! நீ உதவிசெய்யவேணும்.

உதவிசெய்வது எப்படியெனில்:— (மொய் பூ மழிசைப் பரனடியே வாழ்த்து) இப்ப்ரபந்தத்தை அருளிச்செய்த திருமழிசை யாழ்வாருடைய திருவடிகளையே துதிப்பாயாக. இடம் கொண்ட கீர்த்திமழிசைக்கிறைவன் இணையடிப்போது" [இராமா-12] என்று அமுதனார் அருளியபடியே மிகவும் இனிதாயிருக்கிற இத்திருவடி களையே விரும்புவாயாக. "மொய் பூ" என்னும் பதங்களை திரு மழிசையாழ்வாருடைய திருவடிக்கும் விசேஷணமாக்கலாம்; மழிசை என்னும் க்ஷேத்திரத்திற்கும் (படிக்கும்) விசேஷணமாக்கலாம். அடிக்கு விசேஷணமாகும்போது 'நெருங்கிய பூ' என்றும் 'அழகிய பூ' என்றும் இரண்டு வகையாகப் பொருள். 'மொய்' என்னும் பதம் நெருக்கத்தையும் அழகையும் குறிக்கும். "நெருங்கிய (அல்லது

மாம். அப்போது மிக்க அழகு என்றபடி. "மொய் பூ" என்று மழிசைக்கு விசேஷணமாதல், திருவடிகளுக்கு விசேஷண மாதல், படிக்கு விசேஷணமாதல், அடிக்கு விசேஷணமாதல்.

இப்படி வைலக்ஷண்யத்தையுடைய திருமழிசையாழ் வார் திருவடிகளையே மங்களாஶாஸனம் பண்ணு என்கிறது. அவர் "வாழி கேசனே" என்றும், "மாலை வாழ்த்தி வாழ்மினோ" என்றும் பகவத்விஷய மங்களாஶாஸன ப்ரஶம்ஸை பண்ணினாலும், நீ ஆழ்வாரடி விடாமல் மங்களாஶாஸனம் பண்ணு என்கிறது.

பிள்ளைலோகம் ஜீயர் அருளிய
நான்முகன் திருவந்தாதித் தனியன் வ்யாக்யானம் முற்றிற்று.

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

அழகிய) பூக்களை உடைய திருவடிகள்" என்கை. 'பூ' என்னும் பதமும் அழகைக்குறிக்கும், அப்போது "மிகவும் அழகையுடைய திரு வடிகள்" என்றபடி. மழிசைப்பதிக்கு விசேஷணமானபோது "மிக்க அழகையுடைய மஹீஸாரக்ஷேத்ரம்" என்றோ "அழகிய (அல்லது நெருங்கிய) புஷ்பங்களையுடைய மழிசை" என்றோ கொள்வது.

(அடியே வாழ்த்து) இப்படிப்பட்ட பெருமையையுடைய திரு மழிசையாழ்வார் திருவடிகளையே மங்களாஶாஸனம் செய். அவர் "வாழிகேசனே" [திருச்சந்.61] என்றும் "மாலை வாழ்த்தி வாழ் மினோ" [திருச்சந்-68] என்றும் பகவானைப்பற்றிய மங்களாஶாஸனத் தையும் துதியையும் செய்தாலும், நீ ஆழ்வாரடிக்கே விடாமல் பல்லாண்டு பாடு. (பரனடியே வாழ்த்து) அவர் "ஈசற்கும் நான் முகற்கும் தெய்வம்" என்றும், "குணப்பரனே!" என்றும் எம்பெருமா னிடத்திலேயே பரத்வ புத்தியைப் பண்ணினாலும், நீ ஆழ்வாரிடத் திலேயே பரத்வ புத்தியைப் பண்ணி வாழ்த்து.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய
நான்முகன் திருவந்தாதித் தனியன் வ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ் ஸதா₃॥

ப்ரவேஶம்:— முதலாழ்வார்கள் அநுப₄வ்யவஸ்துவை நிஷ்கர்ஷிக்க, அதுக்குக் களைபிடுங்குகிறார். க்ஷேத்ரஜ்ஞர்

---

## அப்பிள்ளை உரையினவதாரிகை

முதலாழ்வார்கள் மூவரும் ப₄க₃வந் நிர்ஹேதுககடாக்ஷ விஶேஷலப்₃த₄மான ப₄க்திரூபாபந்நஜ்ஞாந விஶேஷத்தாலே அவன் படிகளைக் கட்டடங்கக்கண்டு அநுப₄வித்து,

---

## திவ்யப்ரபந்த ஸாரம்

# நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்

श्रीभक्तिसारसूरिं श्रीकृष्णसूरिमहागुरुं नत्वा।
करोमि हृद्यां व्याख्यां 'चतुर्मुखान्तादि' दिव्यगाथायाः॥

ஸ்ரீப₄க்திஸாரஸூரிம் ஸ்ரீக்ருஷ்ணஸூரிமஹாகு₃ரும் நத்வா।
கரோமி ஹ்ருத்₃யாம் வ்யாக்₂யாம் சதுர்முக₂ாந்தாதி₃
தி₃வ்யகா₃த₂ாயா:॥

[பக்திஸாரர் என்னும் திருமழிசையாழ்வாரையும், பெரியவாச்சான் பிள்ளையென்னும் பேராசிரியரையும் வணங்கி, நான்முகன் திருவந்தாதியாகிற திவ்யப்ரபந்தத்திற்கு அழகியதோர் வியாக்கியானத்தை இயற்றுகிறேன்.]

திவ்ய-ப்ரவேஶம்:— இப் பிரபந்தத்தை அருளியவர் திருமழிசையாழ்வாராவர். 'நான்முகன்' என்று தொடங்குவதாலும் அந்தாதித் தொடையால் அமைந்திருப்பதாலும் "நான்முகன் திருவந்தாதி" என்று பெயர்பெற்றுள்ளது இப்பிரபந்தம். இவ்வாழ்வாருடைய

பக்கலிலே ஈச்வரத்வ பு₃த்₃தி₄யைப் பண்ணி அநர்த்த₂ப்படுகிற ஸம்ஸாரிகளுக்கு ஈச்வரனுடைய பரத்வத்தை உபபாதி₃த்து அவர்கள் அநீச்வரர் என்கிறார்.

அநுப₄வபரீவாஹரூபமான * நடை விளங்கு தமிழாலே, ஸ்ரீமானான நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று அநுப₄ாவ்யமான பரவஸ்துவாஸ்தலத்தை நிஷ்கர்ஷித்தார்கள் மூன்று திருவந்தாதியாலும் அனந்தரம், ஆழ்வார் திருமழிசைப்பிரானும், ஸ்ரிய:பதியான எம்பெருமானுடைய ப்ரஸாத₃ விசேஷத்தாலே மயர்வறமதிநலங்களைக் குறைவற உடையராய், அவனுடைய தி₃வ்யாத்மஸ்வரூபத்தையும், ஸ்வரூபாஸ்ரிதங்களான கு₃ணங்களையும், தது₃ப₄ய ப்ரகாசகமான தி₃வ்யவிக்₃ரஹத்தையும், தலை நீர்ப்பாட்டிலே அந்த விக்₃ரஹகு₃ணங்களை அநுப₄விக்கக்கடவ தி₃வ்யமஹிஷிகளையும், அச்சேர்த்தியிலே கிஞ்சித்கரிக்கக்கடவ ஸூரிகளையும், கைங்கர்யத்துக்கு ஏகாந்தமான பரமபத₃த்தையும், லீலா

மற்றொரு பிரபந்தம் திருச்சந்த விருத்தமாகும். "ஸ்ரீமந் நாராயணனே பரதத்துவம்" என்று ஸ்தாபிப்பதிலேயே ஊற்றமுடையவர் இவ்வாழ்வார். ஸகல வேதார்த்தங்களையும் உட்பொதிந்து கொண்டிருப்பவை இவருடைய பாசுரங்கள். இப்பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமும் அப்பிள்ளை உரையும் அருளிச்செய்துள்ளனர். மற்ற திருவந்தாதி வியாக்கியானங்களைப் போல் இவையும் அதிஸங்க்ரஹமாயுள்ளன. திருவந்தாதி வியாக்கியானங்களை ஆச்சான்பிள்ளை மிகவும் முதிர்ந்த வயதிலேயே அருளிச் செய்தார் என்று கூறுவர். ஆச்சான்பிள்ளையின் வியாக்கியானம் அதிஸங்க்ரஹமாயிருக்கையால், அந்த வியாக்கியானத்தை விவரிக்கும் நோக்கத்துடன் இவ்வியாக்கியானம் எழுதப்படுகிறது. ஸாரக்₃ராஹிகளான பெரியார்கள் குற்றம் நீக்கிக் குணம் கொள்வார்களாக.

"வையம் தகளியா" என்றும் "அன்பே தகளியா...ஞானச்சுடர் விளக்கேற்றினேன்" என்றும் பொய்கை பூதத்தாழ்வார்கள் விளக்கேற்றிக்காட்ட, "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தாங்கள் எம்பெருமானை அனுபவித்தபடிக்குப் பாசுரமிட்டருளினர் பேயாழ்வார். முதலாழ்வார்களின் மூன்று அந்தாதிகளும் பகவ

* பெரு-திரு 1-11.

விபூ₄தியோக₃த்தையும் யதா₂வாக ஸாக்ஷாத்கரித்து அநுப₄வித்துக்கொண்டு மார்க்கண்டே₃யாதி₃களைப்போலே சிரகாலம் ஸம்ஸாரத்திலே காலம் சென்றதும் அறியாதே எழுந்தருளியிருந்தவர், நாட்டில் சேதனர் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே பிறந்த அந்யதா₂ஜ்ஞான விபரீதஜ்ஞானங்களாலே க்ஷேத்ரஜ்ஞராக ஸம்ப்ரதிபந்நரான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களை வசநாப₄ாஸயுக்த்யாப₄ாஸங்களாலே ஈஶ்வரர்களாக உபபாதி₃த்து வைதி₃கமார்க்க₃த்தை ஒடியெறிந்து, குத்₃ருஷ்டி மார்க்க₃த்தைப் பூண்கட்டி மந்த₃மதிகளான சேதனரை ப்₄ரமிப்பித்து ஸம்ஸார ப₃ந்த₄கராய்ப்போருகையாலே, சேதனர் ப₄க₃வத்₃விமுக₂ராய் அநர்த்த₂ப்படுகிறபடியைக்கண்டு, பராநர்த்த₂ம் பொறுக்கமாட்டாத க்ருபையாலே, நிர்தோ₃ஷ ப்ரமாணங்களாலும், ஸம்யங்ந்யாயங்களாலும் தே₃வதாந்தர பரத்வத்தை நிராகரித்து, ப₄க₃வத்பரத்வத்தை ஸ்தா₂பித்துச் சேதநரை ப₄க₃வத்பரராம்படி திருத்தியருளுகிறார்.

---

த₃னுப₄வபரமாயிருக்கும். நாராயணனைத் தாங்கள் அனுபவிப்பதின் மூலம் "அனுபவிக்கத்தக்கவன் அவனே" என்று காட்டினார்கள் அவர்கள். இவர் அவ்வநுபவமாகிற பயிருக்குக் களை பிடுங்குகிறார். பகவதநுபவத்திற்குக் களையாவது:— இதர தேவதைகளிடத்திலே பரத்வபுத்தி பண்ணுகை. விஷ்ணுபரத்வஜ்ஞானம் இல்லாதார்க்கு வைஷ்ணவத்வமே இல்லையாகையால், பகவதனுபவத்திற்கு யோக்யதையே இல்லாமலிருக்கும். ப்ரயோஜநாந்தரபரர்க்கும் பகவதனுபவத்திற்கு யோக்யதை உண்டு. தேவதாந்தரபரர்க்கு, இதர தேவதைகளின் ஸம்பந்தம் அறுகிறவரையில் பகவதனுபவத்திற்கு யோக்யதையே இல்லை. ஆகையால் இதுவே பகவதநுபவத்திற்கு ப்ரதா₄னமான களையாயிருக்கும். இதையே "ஓர் ஊனம்" (ஒப்பற்ற தோஷம்) என்றார் நம்மாழ்வாரும். இப்பிரபந்தத்தில் இக்களையைப் பிடுங்குகிறார் பக்திஸாரராகிற திருமழிசையாழ்வார். உருவின வாளை உறையிலிடாதே தே₃வதாந்தரபரத்வபுத்தியாகிய களையை வெட்டியெறியும்வரன்றோ இவர். "அதுக்குக் களை பிடுங்குகிறார்" என்ற ஆச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திக்கு "அநுப₄ாவ்ய வஸ்துவான நாராயணனுக்குக் களையாயிருக்கும் தே₃வதாந்தரங்களிடம் பரத்வ புத்தியை அழிக்கிறார்" என்றும் பொருள்கொள்ளலாம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# திருமழிசையாழ்வார் அருளிய

# நான்முகன் திருவந்தாதி

**1. நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்—
யான்முகமாய்
அந்தாதி மேலிட் டறிவித்தே னாழ்பொருளைச்
சிந்தாமற் கொண்மின்நீர் தேர்ந்து.**

**நாராயணன்**—ஸ்ரீமந் நாராயணன், **நான்முகனை படைத்தான்**—நான்கு முகங்களையுடைய பிரமனைப் படைத்தான்; **நான்முகனும்**—அப்பிரமனும், **தான்முகமாய்**—தானே முக்கியனாய்க்கொண்டு, **சங்கரனை**—உருத்திரனை, **தான்படைத்தான்**—தானே ஸ்ருஷ்டித்தான்; **யான் முகமாய்**-நான் முக்கியனாயிருந்துகொண்டு, **ஆழ்பொருளை**—அறிய அரிதான இவ்வர்த்தத்தை, **அந்தாதி மேல் இட்டு**—திருவந்தாதியான பிரபந்தத்திலே வைத்து, **அறிவித்தேன்**—உபதேசித்தேன்; **நீர்**—(இதைக் கேட்கும்) நீங்கள், **தேர்ந்து**—ஆராய்ந்து, **சிந்தாமல்**—இவ்வரும்பொருள் சிதறிவிடாமல், **கொள்மின்**—மனத்திற்கொள்ளுங்கள்.

**பெரி-அவ:— "ப்₃ரஹ்மாதி₃கள் ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பிக்க ப்ரதா₄நரானாற்போலே தந்நிவ்ருத்திக்கு ப்ரதா₄னனானேன் நான்" என்கிறார்.**

---

**அவ:**— மஹோபநிஷத் ப்ரஸித்₃த₄னான நாராயணனே ப்₃ரஹ்மருத்₃ரப்ரமுக₂ரான ஸகலஜக₃த்துக்கும் காரணபூ₄தன், ப்₃ரஹ்மாதி₃களடங்கலும் கார்யகோடிக₃டிசர் என்று அப்ரதிஹதமாக வேதா₃ந்தத்தைச் சொன்னேன். இத்தைத் தப்பவிடாதே கொள்ளுங்கோள் என்று பரோபதே₃ஶ ப்ரவ்ருத்தராகிறார்.

---

**முதற்பாட்டு-திவ்ய-அவ:— அதில், முதற்பாட்டிலே, பேசநின்ற சிவனும், அவனுக்கும் தகப்பனான பிரமனும் ஒரு காலத்தில் படைக்கப்பட்ட ஜீவர்கள் என்பதே மறைகளின் முடிவு என்பதை உபதேசித்து, "அவர்கள் ஸம்ஸாரத்தை விருத்திசெய்ய முக்கியர்களானாற்போலே, நான் ஸம்ஸாரத்தைப் போக்கடிக்கக் கங்கணங்**

வ்யா:— (நான்முகனை நாராயணன் படைத்தான்) ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டிக்கு உபகரணமாக நாலு முகத்தை யுடைய ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான். (நான்முகனும் தான்

---

உரை:— "एको ह वै नारायण आसीत्" (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) என்கிறபடியே கார்யரூபமான ஸகல பதார்த்தங்களும் நாமரூபவிபாகாநர்ஹமாம்படி தன் பக்க லிலே லயித்துத் தான் ஒருவனுமே காரணபூதனாய்க்கொண்டு உளனாய்நின்ற நாராயணன்; "बहु स्यां" (பஹு ஸ்யாம்) என்கிற அவ்யவஹிதமான தன் ஸங்கல்பத்தாலே மஹதாத் யண்டபர்யந்தமான ஸமஷ்டிபதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, இவ்வருகுண்டான வ்யஷ்டிபதார்த்தங்களைச் சதுர்முக முகேந ஸ்ருஷ்டிக்கைக்காக "यो ब्रह्माणं विदधाति पूर्वं" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்) என்கிறபடியே ப்ரதமம் ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்தான். "वेदांश्चेभ्य प्रवादो देवादीनां

---

கட்டிக்கொண்டவனாய் உங்களுக்கு இவ்வரும்பொருளை உபதேசிக் கிறேன். இதை அறிந்து உய்யுங்கள்" என்று பிறரை நோக்கிக் கூறுகிறார்.

திவ்ய-வ்யா:— (நான்முகனை நாராயணன் படைத்தான்) நாரங் கள் எனப்படும் நரஸமூஹங்களுக்கு (நித்யபதார்த்த ஸமூஹங் களுக்கு) இருப்பிடமாயிருப்பதாலும், அவைகளை இருப்பிடமாய் உடைத்தாயிருக்கையாலும், நாரங்களாகிற ஜீவஸமூஹத்திற்கு ப்ராப்யப்ராபகங்களாயிருப்பதாலும் நாராயணன் என்னும் அஸா தாரணமான திருநாமத்தையுடைய ஸர்வேஶ்வரன், நான்கு திக்கி லும் வியாபரித்து ஸ்ருஷ்டித்தொழிலை நடத்துகைக்கும், ஸ்ருஷ்டிக்கு உதவிசெய்யும் நாலு வேதங்களையும் ஒரே காலத்தில் உச்சரிப்பதற் கும் உபயோகியாயிருக்கும் நாலு முகங்களையுடைய பிரமனைப் படைத் தான். (நாராயணன்) ஸர்வவ்யாபியாகவும், ஸர்வதாரகனாகவும், மோக்ஷப்ராப்யனாகவும், ப்ராபகனாகவும் இருக்கும் நிலைகளைக் காட்டுவ தாய், பரமாத்மாவுக்கு அஸாதாரணமாயுள்ளதான திருநாமம். (நான் முகனை) ஸ்ருஷ்டித்தொழில் ஒன்றையே நடத்துமவன் என்பதையும், இந்த்ரியாதீனமான வியாபாரங்களை உடையவன் என்பதையும் காட் டும் பெயர். (படைத்தான்) அண்டத்தினுட்பொருள்கள் முழுவதையும்

முகமாய்) பின்பு ப்₃ரஹ்மாவும் தானே ப்ரத₄ானனாய் ருத்₃ரனை ஸ்ருஷ்டித்தான்.(யான்முகமாய் இத்யாதி₃) இப்படி து₃ரவக₃ாஹ மான பொருளை நானே அநுப₄வித்துப்போகில் ஸம்ஸாரிகள்

---

चकार सः" (வேத₃ஶப்₃தே₃ப்₄ய ஏவாதௌ₃ தே₃வாதீ₃நாம் சகார ஸ:) என்கிறபடியே ஸ்ருஜ்யபத₃ார்த்த₂ங்களினுடைய நாமரூபக்ருத்யங்களை ப்ரதிபாதி₃க்கிற பழவொழுக்கான நாலுவேத₃ங்களையும் யுக₃பதே₃வ உச்சரிக்கைக்கு உறுப்பானநாலுமுகத்தையுடையனான ப்₃ரஹ்மாவும்,எம்பெருமான் பக்கல் மறுத்துக் கேள்விகொள்ளவேண்டாதபடி தானே ப்ரத₄ானனாய்க்கொண்டு, "ब्रह्मणश्चापि संभूतश्शिवः"(ப்₃ரஹ்மண ஶ்சாபி ஸம்பூ₄த: ஶிவ:) என்கிறபடியே ருத்₃ரனை ஸ்ருஷ்டித் தான் — என்கிற, ஶ்ருதி ஸாக₃ரத்திலே பிறர்க்குத் தெரியாதபடி மறைந்துகிடக்கிற இப்பரமார்த்த₂த்தை,

---

ஸ்ருஷ்டிப்பவனையும் தான் ஸ்ருஷ்டித்தான். "நாராயணாத் ப்₃ரஹ்மா ஜாயதே" [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்] என்று நாராயணோபநிஷத்திலும், "தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ₂ ऽஜாயத" [அங்கு நான்முகனான பிரமன் பிறந்தான்] என்று ஸுபாலோபநிஷத்திலும், "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்" [எவனொருவன் பிரமனை முன் படைத்தானோ........] என்று நாராயணவல்லியிலும், "ப்₃ரஹ்மா தே₃வாநாம் ப்ரத₂மஸ் ஸம்ப₃பூ₄வ" [பிரமனே தேவர்களுக்குள் முதலில் பிறந்தான்.] என்று முண்டகோபநிஷத்திலும், "யஸ்ய நாபி₄ பத்₃மாத₃ப₄வன்மஹாத்மா ப்ரஜாபதி:" [எவனுடைய நாபிக்கமலத்திலிருந்து மஹாத்மாவான பிரமன் உண்டாயினனோ........] என்று மஹோபநிஷத்திலும், "ஸ ப்ரஜாபதிரேக: புஷ்கரபர்ணே ஸமப₄வத்" [ப்ரஜாபதியானவன் தாமரையிதழில் உண்டானான்.] என்று ஶ்ருத்யந்தரங்களிலும் ஸுப்ரஸித்தமான பிரமனின் பிறப்பை அருளிச்செய்கிறார். (நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்) அந்தப் பிரமனும் தானே முக்கியனாய் நின்று சிவனை ஸ்ருஷ்டித்தான். "விருபாக்ஷாய ப்₃ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டா₂ய" [ப்ரஹ்மாவின் ஜ்யேஷ்டபுத்திரனான விருபாக்ஷனுக்கு] "த்ர்யக்ஷ: ஶூலபாணி: புருஷோ ऽஜாயத"[சூலபாணியாய் முக்கண்ணனான புருஷன் பிறந்தான்] "ஸம்வத்ஸரே குமாரோ ऽஜாயத" [ஒரு ஸம்வத்ஸரத்தில் பிரமனுக்கு ருத்ரனாகிற குமாரன் பிறந்தான்.]

அநர்த்த₃ப்படுவரே என்று செம்பிலும் கல்லிலும் வெட்டுமா போலே ப்ரப₃ந்த₄த்திலே இட்டு இதுக்கு ப்ரத₄ாநனைய் அறி வித்தேன். (ஆழ்பொருளை) என்று நசிக்கிற பொருளை என்று

---

ப₄க₃வத்ப்ரஸாத₃ விசேஷத்தாலே தத்வஜ்ஞானத்தைக் குறைவறவுடைய நான், பரதத்வயாதா₂த்ம்ய வேத₃நத்தில் ப்ரத₄ானபூ₄தனைய்க்கொண்டு, கல்லிலும் செம்பிலும் வெட்டுமாபோலே ஒருவரால் அடைவு குலைக்கவொண்ணாத படி அந்தாதிரூபமான ப்ரப₃ந்த₄த்திலே ஏறிட்டு, உங்கள் அனர்த்த₂ங்கண்டு ஸஹிக்கமாட்டாமல் அர்த்தி₂த்வாதிர

---

முதலான வேதவாக்யங்களிற் சொன்ன அர்த்தத்தை அநுஸந்திக் கிறார். "நாராயணாத் ருத்₃ரோ ஜாயதே" [நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்] என்று நாராயணோபநிஷத₃ாதி₃களில் ருத்ரன் நாராயணனிடமிருந்தே உண்டானதாகச் சொல்லியிருக் கின்றதே எனில்: மற்ற வேதவாக்கியங்களை அனுஸரித்து, பிரமனை சரீரமாகக்கொண்ட நாராயணனிடமிருந்து சிவன் உண்டாகிறான் என்பதாகக் கொள்கிறோம். அடுத்துள்ளதான "நாராயணா இ₃ந்த்₃ரோ ஜாயதே" [நாராயணனிடமிருந்து இந்திரன் உண்டா கிறான்.] என்னும் வாக்யத்திற்கு இப்படியேயன்றோ பொருள் கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகையால் இங்கு "நான்முகனும் சங்கரனைத் தான்படைத்தான்" என்று ஆழ்வார் அருளியதே ஸகல ஶ்ருதிகளுக்கும் தாத்பர்யமாகும். அன்றிக்கே, ஒரு கல்பத்தில் நாராயணனிடமிருந்தும், மற்றொரு கல்பத்தில் பிரமனிடமிருந்தும் சிவன் பிறந்ததாகக் கொள்வதுமுண்டு. இதிஹாஸபுராணங்களில் ப்ரஹ்மருத்ரஸ்ருஷ்டியைச் சொல்லுமிடங்கள் நூற்றுக்கணக்காக உண்டு. ஆங்காங்கு கண்டுகொள்வது. (தான்முகமாய்ப் படைத் தான்) வேதங்களை உபதே₃ஶம் பெற்றபின்பு, எம்பெருமானிடமும் மறுபடியும் ஸந்தே₃ஹம் கேட்கவேண்டாதபடி தானே முக்கியனாய் நின்று படைத்தான். "லலாடாத் க்ரோத₄ஜோ ருத்₃ர:" என்கிறபடியே தன் நெற்றியிலிருந்து படைத்தான் என்றும் கொள்ளலாம்.

(யான்முகமாய் அந்தாதிமேலிட்டு அறிவித்தேன் ஆழ் பொருளை) பிரமன் ஸம்ஸாரவ்ருத்₃தி₄க்கு ப்ரத₄ானனாய் நின்று ஸ்ருஷ்டித்தாப் போலே, நான் ஸம்ஸார நிவ்ருத்திக்கு முக்கியனாய் நின்று, நீங்கள் கேளாமலிருந்தபோதிலும், என் செல்லாமையாலே இவ்வரும்

**மாம். (நீர் தேர்ந்து சிந்தாமல் கொண்மின்) ஸம்ஸாரத்தி னுடைய தண்மையையும் நான் சொன்ன அர்த்த,த்தினுடைய அருமையையும் உணர்ந்து இவ்வர்த்த₂ம் மங்காமல் பு₃த்₃தி₄ பண்ணுங்கோள்.** 1.

---

பேக்ஷமாக அறிவித்தேன். அறிகைக்கு யோக்₃யதையுடைய நீங்கள் ஸம்ஸாரத்தின் பொல்லாங்கையும், நான் சொல்லுகிற அர்த்த₂த்தின் அருமைபெருமையையும் யுக்தி யுக்தமாக விசாரித்து, அநவத₄ாநாதி₃களாலே நெஞ்சில் நின்றும் நழுவி மங்கிப்போகாதபடியாக மனஸ்ஸாலே த்₃ருட₄க்₃ருஹிதமாக வைத்துக்கொள்ளுங்கோள். இத்தனையும் செய்யவேண்டுமென்று தம் செல்லாமையாலே கால் கட்டி இரக்கிருர். ஆழ்பொருளை — நசிக்கிற பொருளை யென்றுமாம். 1.

---

பொருளை அறிவித்தேன். (அந்தாதி மேலிட்டு அறிவித்தேன்) செம்பிலும் கல்லிலும் வெட்டுமாபோலே அந்தாதித் தொடையாலமைந்த பிரபந்தத்திலே இட்டு அறிவித்தேன். (ஆழ்பொருளை அறிவித்தேன்) ஸ்ருதிஸ்ம்ருதிகளாகிற ஸமுத்ரத்திலே பொதிந்துகிடக்கும் ரத்தினங்கள் போன்ற இவ்வர்த்தங்களை, ஸம்ஸாரிகள் படும் அநர்த்தத்தைக் கண்டு பொருமல், தூளிதானம் செய்தேன். (ஆழ்பொருளை அந்தாதி மேலிட்டு அறிவித்தேன்) ரத்தினங்களைப் பொன்னிலே வைத்துப் பதித்தது போலேயிருக்கை. (ஆழ்பொருளை) நசிக்கிற பொருளை என்றும் பொருள்கொள்ளலாம். பிரமருத்திரர்களின் பிறப்பைச் சொன்னதிலிருந்தே அவர்கள் நசிக்கிறவர்கள் என்று சொல்லப்பட்டதாகிறபடியால், 'ப்ரஹ்மருத்ராதிகள் அனைவரும் அழியும் பொருள்களே என்பதை அறிவித்தேன்' என்கிருர். (நீர் தேர்ந்து சிந்தாமல் கொண்மின்) அறிவுடைய நீங்கள் ஸம்ஸாரத்தின் தாழ்வையும், நான் சொன்ன அர்த்தத்தின் அருமைபெருமையையும் ஆராய்ந்து, இவ்வர்த்தம் கவனக்குறைவாலே அழிந்துவிடாமல், இதைச் சிந்தியுங்கள். (சிந்தாமல் கொண்மின்) நான் தானம் செய்த ரத்தினத்தை நழுவவிடாதே கொள்ளுங்கள்! என்று தம் ஆற்றாமையாலே பால்குடிக்கக் கால்பிடிப்பாரைப்போலே பிரார்த்திக்கிருர். 1.

2. தேருங்கால் தேவ னொருவனே யென்றுரைப்பர்
ஆரு மறியா ரவன்பெருமை—ஒரும்
பொருள் முடிவு மித்தனையே யெத்தவம்செய் தார்க்கும்
அருள்முடிவ தாழியான் பால்.

**தேருங்கால்** — விசாரித்தால், **தேவன்** — பரதேவதை, **ஒருவனே என்று உரைப்பர்**—ஒருவனே என்று (ஞானிகள்) சொல்லுவர்கள். **அவன் பெருமை**—அந்த ஸர்வேஸ்வர னுடைய பெருமையை, **ஆரும் அறியார்**—ஒருவரும் அறியார்கள்; **ஓரும் பொருள் முடிவும் இத்தனையே**—(ஸ்ருதி ஸ்ம்ருதிகளிலே) ஆராயப்படும் அர்த்தத்தின் நிர்ணயமும் இவ்வளவே; **எத் தவம் செய்தார்க்கும்**—எவ்விதமான ஸாதநங்களை அனுஷ்டித்தவர்களுக்கும், **அருள் முடிவது**—அருளின் முடிவாகிற பலன் உண்டாவது, **ஆழியான் பால்**—சக்ரபாணியான எம்பெருமானிடமிருந்தே.

---

**அவ:**— ஸ்ருதிப்ரக்ரியையாலே நாராயணனே நிகில ஜகத்காரணபூதன், ப்ரஹ்மாதிகள் கார்யகோடிகடிதரென்னுமத்தை உபபாதித்தார் கீழ். இதில், இதிஹாஸ ப்ரக்ரியையாலே ஸர்வேஸ்வரனுடைய பரத்வத்தை உபபாதியாநின்றுகொண்டு ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்ருஷ்டிக்கு இப்பாலுள்ள நன்மைகளெல்லாம் அவனுடைய ப்ரஸாதாயத்தமென்கிறார்.

---

**திவ்ய-அவ:**— ப்ரஹ்மருத்ரர்கள் நாராயணனால் படைக்கப்பட்ட ஜீவர்களே என்று இவர் உரைத்ததும், ஸம்ஸாரிகளில் சிலர் "ப்ரஹ்மா விஷ்ணு சிவன் என்று ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யும் தேவர்கள் மூவர் என்று லோகப்ரஸித்தியுள்ளது. ஆகையால், இவர்கள் மூவருமே பரமாத்மா என்று கொள்ளுவதே பொருந்தியதாயிருக்க, நீர் நாராயணன் ஒருவனே பரமாத்மா என்னலாமோ" என்று கேட்க, இதிஹாஸங்கள் காட்டிய வழியில் அதற்குப் பதில் சொல்லுகிறார் இப்பாட்டில்.

**வ்யா:**— (தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர்) ப்ரமாண யுக்திகளைக்கொண்டு ஆராயும்போது பரதெய்வம் ஒருவனே என்

**பெரி-வ்யா—** (தேருங்காலித்யாதி,) **"तत्त्वं जिज्ञासमानानां हेतुभिस्सर्वतोमुखैः। तत्त्वमेको महायोगी हरिर्नारायणः स्मृतः॥"** (**தத்த்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபி,ஸ் ஸர்வதோமுகை,:। தத்த்வமேகோ மஹாயோகீ, ஹரிர் நாராயண: ஸ்ம்ருத: ||**)

---

**உரை:—** **"तत्सर्वं धर्मवीर्येण यथावत्संप्रपश्यति"** (**தத்ஸர்வம் த,ர்மவீர்யேண யதா,ாவத் ஸம்ப்ரபஶ்யதி**) என்கிறபடியே ஸ்வாநுஷ்டி,ததப:ப்ரப,ாவஸித்,த,மான ஜ்ஞாந விஶேஷத்தாலே தத்வஸ்தி,தியைக் கலந்தற நிரூபிக்கப்புக்கால், **"तत्त्वमेको महायोगी हरिर्नारायणः परः"** (**தத்வமேகோ மஹாயோகீ, ஹரிர் நாராயண: பர:**) என்கிறபடியே தே,வதாபார

---

றும், அவன் ஸ்ரீமந்நாராயணனே என்றும் ஞானிகள் உரைப்பார்கள். ஈஶ்வரர் பலர் இருந்தால் அவர்களுக்குள் பரஸ்பரம் ஆஜ்ஞாப,ங்க,ம் நேரிட்டு ஒருவருக்கும் ஈஶ்வரத்வம் ஸித்தியாமல் போகும். ஆகையால் ஈஶ்வரன் ஒருவனேயாகவேண்டும். அவன் யாரென்று ஶ்ருதிஸ்ம்ருதிகளைக்கொண்டு ஆராயும்போது ப்,ரஹ்ம ருத்,ராதி, ஸகல சேதனரையும் அசேதனப்பொருள்களையும் படைத்தளித்து அழிப்பவனும், அவற்றுக்கு அந்தர்யாமியாய் விளங்குமவனை நாராயணனே என்று விளங்கும். இப்படி ஆராய்ச்சி செய்த மஹர்ஷிகளும்,

**"தத்த்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபி,ஸ் ஸர்வதோமுகை,:।**
**தத்த்வமேகோ மஹாயோகீ, ஹரிர் நாராயண: ஸ்ம்ருத: ||"**

[பரதத்வத்தை அறியவிரும்புமவர்கள் மஹாயோகியாய், ஹரியென்று சொல்லப்படுமவனை நாராயணனையே பலவிதமான காரணங்களால் ஒரே பரம்பொருளாக எண்ணுகிறார்கள்.] என்று நிர்ணயித்தார்கள். ஆகையால் நீங்கள் தேவர் மூவர் என்பது தவறு என்கிறார். "தேவன் ஒருவனே என்றீர். அவன் பெருமை எப்படிப்பட்டது?" என்று கேட்கச் சொல்லுகிறார் (ஆரும் அறியார் அவன் பெருமை) அவன் பெருமையை ஒருவரும் அளவிட்டறியார்கள். (ஓரும் பொருள் முடிவும் இத்தனையே) ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே ஆராயப்படும் அர்த்தங்களின் நிர்ணயமும் இவ்வளவே. (தேவன் ஒருவனே ... இத்தனையே) "தி,வ்யோ தே,வ ஏகோ நாராயண:" [திவ்யனை நாராயணனாகிய தேவன் ஒருவனே] "ஏஷதே தே,வ

என்னும்படியே விசாரிக்கும்போது ஸர்வேச்வரன ஒருததனே என்று சொல்லுவர்கள். (ஆருமறியாரவன் பெருமை) ஒருத்தரும் அவனுடைய பெருமையைப் பரிச்சேதிக்க அறியார்கள். (ஒரும் பொருள் முடிவுமித்தனையே) ச்ருதிஸ்ம்ருதிகளெங்கும் ஆராயும் அர்த்தத்தினுடைய நிர்ணயம் இவ்வளவே. (எத்தவ

---

மார்த்யவித்துக்களான வ்யாஸபராசராதிகள். "दिव्यो देव एको नारायणः" (திவ்யோ தேவ ஏகோ நாராயண:) என்கிற தேவசப்தவாச்யனான நாராயணன் ஒருவனுமே ஸர்வஸ்மாத்பரன் என்று சொல்லாநிற்பர்கள். எத்தனையேனும் அதிசயிதஜ்ஞானராயிருக்குமவர்களும், அவனுடைய பெருமையைப் பரிச்சேதிக்க அறியார்கள். ச்ருதிஸ்ம்ருதிகளிலே எங்கும் ஆராயும் அர்த்தத்தினுடைய

---

ஏக:" [தேவன் ஒருவனே சிதசித்துக்களை நியமிக்கிறான்.] "ஏகோ தேவஸ் ஸர்வபூதேஷு கூட:" [எல்லா ஜீவராசிகளிலும் மறைந்து நிற்கும் தேவன் ஒருவனே] "ஏக: ஸ்வதந்த்ரோ ஜகதோ பபூவ" [ஜகத்துக்கு ஸ்வதந்த்ரஸ்வாமி ஒருவனே] "பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்" [பூதங்களுக்கு ஒரே ஸ்வாமியாய் இருந்தான்.] "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்" [நாராயணன் ஒருவனே (முதலில்) இருந்தான்.] முதலான நூற்றுக்கணக்கான வேத வாக்கியங்களிலும், "ஏக சாஸ்தா ந த்விதீயோऽஸ்தி கச்சித்" [ஈச்வரன் ஒருவனே; வேறொருவனுமில்லை.] "ஏக ஏவ ஜகத் ஸ்வாமீ சக்திமாநச்யுத: ப்ரபு:" [சக்திமானும், ப்ரபுவான ஜகத்பதி அச்யுதன் ஒருவனே.] "ஏகஸ் திஷ்டதி விச்வாத்மா ஸ ச நாராயண:" [விச்வாத்மாவான நாராயணன் ஒருவனே விஞ்சி நிற்கிறான்.] "ஏக ஏவ ஜநார்த்தந:" [முத்தொழிலையும் நடத்துமவன் ஜநார்த்தனன் ஒருவனே] முதலான ஆயிரக்கணக்கான ஸ்ம்ருதிவாக்கியங்களிலும் 'தேவன் ஒருவனே' என்னும் அர்த்தம் சொல்லப்பட்டதன்றோ. (ஆருமறியார் அவன் பெருமை ஒரும் பொருள் முடிவுமித்தனையே) "க இத்தா வேத யத்ர ஸ:" [அவனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை எவனறிவான்?] "ஸோ அங்க வேத யதி வா ந வேத" [(தன் பெருமையை) அவன் தானே அறிவானோ அறியானோ] "யஸ்யாமதம் தஸ்ய மதம்" [எவனுக்கு ப்ரஹ்மம் அறியப்பட்ட

தல்லவோ அவனுக்கு அது அறியப்பட்டதாகிறது.] "யதோ வாசோ நிவர்த்தந்தே" [எவனை அடையமுடியாமல் வாக்குகள் திரும்புகின்றனவோ...] "ந தே விஷ்ணோ ஜாயமானோ ந ஜாதோ தே₃வ மஹிம்ந: பரமந்தமாப" (பஹ்வ்ருசம்) [விஷ்ணுவே! பிறக்கின்றவனும், பிறந்தவனும், (பிறக்கப்போகுமவனும்) உன்னுடைய மஹிமையின் மேலெல்லையை அறிவதில்லை.] "ஏதாவா நஸ்ய மஹிமா, அதோ ஜ்யாயாம்ஸ்ச பூருஷ:" [இவ்வளவோ அவன் மஹிமை? இதைக் காட்டிலும் மேலானவனன்றோ பரமபுருஷன்.] என்று வேதங்களிலும்,

"த்வம் ஹி லோககதிர் தே₃வ ந த்வாம் கேசந ஜாநதே"

[தேவனே! நீயே லோககதியாவாய்; உன்னை எவரும் அறிவதில்லை.] என்று ஸ்ரீராமாயணத்திலும்,

"ப்ரஜாபதிஞ்ச ருத்ரஞ்சாப்யஹமேவ ஸ்ருஜாமி வை।
தௌ ச மாம் ந விஜாநீதோ மம மாயாப்ரமோஹிதௌ ॥"

[பிரமனையும் உருத்திரனையும் நானே ஸ்ருஷ்டிக்கிறேன். என்னுடைய மாயையினாலே மயக்கப்பட்ட அவர்களும் என்னை அறிவதில்லை.] என்றும்,

"ந ஸ ஶக்யஸ் த்வயா த்₃ரஷ்டும் மயாந்யைர் வாபி ஸத்தம।
ஸர்வேஷாம் ஸாக்ஷிபூ₄தோऽஸௌ ந க்₃ராஹ்ய: கேநசித் க்வசித் ॥"

[குழந்தாய் ருத்ரனே! அந்தப் பரமபுருஷன் உன்னாலும், (பிரமனாகிற) என்னாலும் மற்றெவராலும் அறியத்தக்கவனல்லன். எல்லாருக்கும் ஸாக்ஷியாய் நின்று அறிகிறானிவன், ஒருவராலும் ஒருபோதும் அறியக்கூடியவனல்லன் இப்பரமாத்மா.] என்றும் பாரதம் மோக்ஷதர்மத்திலும்,

"ந யஸ்ய ரூபம் ந ப₃லப்ரப₄ாவௌ
ந ச ஸ்வப₄ாவ: பரமஸ்ய பும்ஸ:।
விஜ்ஞாயதே ஶர்வபிதாமஹாத்₃யைஸ்
தம் வாஸு₁தே₃வம் ப்ரணமாம்யசிந்த்யம் ॥"

[எந்தப் பரமபுருஷனுடைய ஸ்வரூபமும், ப₃லப்ரப₄ாவங்களும், ஸ்வப₄ாவமும், ப்ரஹ்மருத்ராதிகளாலும் அறியப்படுவதில்லையோ,

அறியமுடியாதவனான அந்த வாஸுதேவனை வணங்குகிறேன்.] என்று விஷ்ணு தர்மத்திலும்,

**"யந்நாயம் ப₄க₃வாந் ப்₃ரஹ்மா ஜாநாதி பரமம் பத₃ம்।**
**தந்நதா꞉ ஸ்ம ஜக₃த்₃தா₄ம தவ ஸர்வக₃தாச்யுத ॥"**

[அச்சுதனே! பகவானான பிரமன் பரமப்ராப்யமாய், ஜக₃த்₃தா₄ரமாயிருக்கும் எந்த உன் ஸ்வருபத்தை அறியானோ, அதை வணங்குகிறோம்.] என்றும்,

**"யந் ந தே₃வா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர꞉।**
**ஜாநந்தி பரமேஶஸ்ய தத்₃ விஷ்ணோ꞉ பரமம் பத₃ம் ॥"**

[பரமப்ராப்யனாய், பரமேஸ்வரனான எவனை தேவர்களும், முனிவரும் (பிரமனான) நானும், சங்கரனும் அறியோமோ, அந்த விஷ்ணுவை வணங்குகிறோம்.] என்றும் ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும்,

**"அத்₃யாபி மாம் ந ஜாநந்தி ருத்₃ரேந்த்₃ராஸ் ஸபிதாமஹா꞉"**

[ப்ரஹ்மருத்திரேந்திரர்கள் இன்றும் என்னை அறிகிறார்களல்லர்.] என்று வராஹபுராணத்திலும்,

**"நாஹம் ப்ரகாஶஸ் ஸர்வஸ்ய யோக₃மாயாஸமாவ்ருத꞉।**
**மூடோ₄(அ)யம் நாபி₄ஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ॥"**

[யோகமாயையால் மூடப்பட்ட நான் எல்லாருக்கும் வெளியாக மாட்டேன். பிறப்பற்றவனாய் அழிவற்றவனான என்னை அறிவற்ற இவ்வுலகம் அறியாது.] என்றும், "மாம் து வேத₃ ந கஶ்சந" [என்னை ஒருவனும் அறியான்] என்றும் கீதையிலும், ப்₃ரஹ்மருத்₃ராதி₃களாலும், ஸநகாதி₃மஹர்ஷிகளாலும், வேதங்களாலும், இவையெல்லாவற்றுக்கும் நிர்வாஹகனான அவன் தன்னாலும் அவன் பெருமை அறியப்படமாட்டாது என்னுமர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றோ. "ப்ரஹ்மருத்ராதிகளும் தங்களைக் குறித்துத் தவம் செய்வார்க்கு அரும்பெரும் பலன்களை அளித்ததாகக் கேள்விப்படுகிறோம்; ஆகையால், அவர்களும் பரம்பொருளே என்று கொள்ளலாகாதோ" என்று கேட்க, சொல்லுகிறார்: (எத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவது ஆழியான் பால்) எப்படிப்பட்ட தவங்களைச் செய்தவர்களுக்கும் பலன் ஸுத₃ர்சநத₄ரியான பகவானிடமிருந்தே கிட்டுகிறது. ப்ரஹ்மருத்ராதிகளைக் குறித்துச் செய்யும் ஸாதநானுஷ்

மித்யாதி₃) எல்லா ஸாத₄நாநுஷ்ட₂ாநம் பண்ணினவர்க ளுக்கும் அவற்றுக்கும் ப₂லம் ஸர்வேஶ்வரன் பக்கலில் நின்றுமென்கை. 2.

---

நிர்ணயமும் இவ்வளவே. "யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:" (யுக₃கோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்₄ய பத்₃மபூ₄:) என்கிறபடியே கல்பகோடிஸஹஸ்ரகாலம் சலியாதே நின்று ப்₃ஹ்மமுக₂மான தபஸ்ஸைப்பண்ணின

---

டானங்களுக்கும் அவர்களுக்கு அந்தர்யாமியான நாராயணனிட மிருந்தே பலன் கிடைக்கிறது என்கிறார்.

"யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்ச்சிது மிச்ச₂தி।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்₃தா₄ம் தாமேவ வித₃தா₄ம்யஹம் ॥
ஸ தயா ஶ்ரத்₃த₄யா யுக்தஸ் தஸ்யாராத₄நமீஹதே।
லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥"

[யாவர் சிலர் என்னுடைய சரீரமாயிருக்கும் சில தேவர்களை ஶ்ரத்தையுடன் பூஜிக்க விரும்புகிறார்களோ, அவர்களுடைய அந்த ஶ்ரத்தையை நானே நிலைபெறச்செய்கிறேன். அந்த ஶ்ரத்தையுடன் கூடிய அந்த ஜீவன் தன் இஷ்டதேவதையை ஆராதிக்கிறான். அந்த ஆராதனத்தாலே என்னாலே கொடுக்கப்பட்ட அந்தந்தப் பலன் களை அடைகிறான்.] என்று கீதையில் தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்தானன்றோ. (அருள் முடிவு அது) அருளினால் ஏற் படுவதாகிற அந்தந்தப் பலன்கள். "எத்தவம் செய்தார்க்கும்" என்றவிடத்திலுள்ள உம்மையாலே (சகாரத்தாலே) யாரைக்குறித்துத் தவம் செய்யப்படுகிறதோ அந்த தெய்வங்களுக்கும் தாம் விரும்பும் பலன் ஸர்வேஶ்வரனிடமிருந்தே உண்டாகிறது என்று உணர்த்தப் படுகிறது. (எத்தவம்......ஆழியான்பால் ஒரும் பொருள் முடிவுமித் தனையே) ஶ்ருதிஸ்ம்ருதிகளெங்கும் ஆராய்ந்தால் ஸாதநாநுஷ் டானம் செய்வார்க்கெல்லாம் பலனுண்டாவது நாராயணனிட மிருந்தே என்பது விளங்கும். "அஸ்ய தே₃வஸ்ய மீடு₄ஷோ வயா விஷ்ணோரேஷ ப்ரஸ்ருதே₂ ஹவிர்ப்பி₄: விதே₃ஹி ருத்₃ரோ ருத்₃ரியம் மஹத்த்வம்" என்னும் ப₃ஹ்வ்ருச ஶ்ருதியில் விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்ததாலேயே ருத்ரன் தன் பெருமையைப் பெற்றான் என்று சொல்லப்பட்டது.

ப்₄ரஹ்மாதி₃களுக்கும் ஸ்வாநுஷ்டி₂தபஃப₂லஸித்₃தி₄யானது ரக்ஷணபரிகரமான திருவாழியைத் திருக்கையிலே உடைய ஞன ஸர்வேஶ்வரன் பக்கல் உண்டான க்ருபையிலே சென்று பர்யவஸிக்குமதாயிருக்கும். 2.

---

"யுக₃கோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்₄ய பத்₃மபூ₄: ।
புநஸ் த்ரைலோக்யதா₄த்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும:॥"

[ஆயிரங்கோடியுகங்கள் விஷ்ணுவை ஆராதித்து நான்முகன் மூவுலகிற்கும் பதியாயிருக்கும் தன்மையை மறுபடி அடைந்தான் என்று கேள்விப்படுகிறேம்.] என்றும்,

"மயா ஸ்ருஷ்ட: புரா ப்₃ரஹ்மா மத்₃யஜ்ஞமயஜத் ஸ்வயம் ।
ததஸ் தஸ்மை வராந் ப்ரீதோ த₃த₃ாம்யஹமநுத்தமாந் ॥
மத்புத்ரத்வஞ்ச கல்பாதௌ₃ லோகாத்₄யக்ஷத்வமேவ ச ॥"

[என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரமன் என் விஷயமான யாகத்தை முன்னொரு சமயம் அனுஷ்டித்தான். அதன்பிறகு அந்தால் பிரீதியடைந்த நான் 'கல்பாதியில் எனக்குப் புத்திரனாய்ப் பிறக்கை, லோகத்திற்குப் பதியாயிருக்கை' முதலான மேலான வரங்களை அயனுக்குக் கொடுத்தேன்.] என்றும்,

"மஹாதே₃வஸ் ஸர்வமேதே₄ மஹாத்மா
ஹுத்வாத்மாநம் தே₃வதே₃வோ ப₃பூ₄வ"

[மஹாத்மாவான மஹாதேவர் ஸர்வமேத₄யாக₃த்தில் தன்னையே ஹோமம் செய்து தேவதேவரானர்.] என்றும் மஹாபாரதத்திலும்,

"ப்₃ரஹ்மாத₃யஸ் ஸுராஸ் ஸர்வே விஷ்ணுமாராத்₄ய தே புரா ।
ஸ்வம் ஸ்வம் பத₃மநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாத₃த: ॥"

[பிரமன் முதலிய தேவர்களெல்லாம் ஆதிகாலத்தில் விஷ்ணுவை ஆராதித்துத் தங்கள் தங்கள் பதங்களை அக்கேசவனுடைய அருளாலே பெற்றனர்.] என்று நாரஸிம்ஹபுராணத்திலும் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றே. ஆக, இப்பாகரத்தில், ப்ரமாணயுக்திகளைக்கொண்டு ஆராயும்போது நாராயணன் ஒருவனே பரதெய்வமென்று ஏற்படுவதாலும், ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ப₂லப்ரத₃ன் அவனேயாகையாலும் நாராயணனே பரமாத்மா என்று நிர்ணயித்தாராயிற்று.

**3. பாலிற் கிடந்ததுவும் பண்டரங்கம் மேயதுவும்**
**ஆலில் துயின்றதுவும் ஆரறிவார்— ஞாலத்**
**தொருபொருளை வானவர்தம் மெய்ப்பொருளை அப்பில்**
**அருபொருளை யானறிந்த வாறு.**

**பதவுரை: — பாலில் கிடந்ததுவும்** — திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளியதுவும், **பண்டு அரங்கம் மேயதுவும்**— பழங்காலத்திலே திருவரங்கத்தில் பொருந்தியதுவும், **ஆலில் துயின்றதுவும்** — ஆலந்தளிரிலே பள்ளிகொண்டதுவும், (ஆக இப்படிப் பலபடியாக) **ஞாலத்து ஒரு பொருளை** — உலகத்துள் ஒரே காரணப்பொருளாய் நிற்பவனும், **வானவர்தம் மெய்ப்பொருளை**—நித்யஸூரிகளுக்கு நேரே பிரகாசிப்பவனும், **அப்பில் அரு பொருளை** (ஸ்ருஷ்டி காலத்தில்) ஜலத்திலே பள்ளிகொண்டருளினவனை அரும்பொருளாயிருக்கிற பெருமானை, **யான் அறிந்த ஆறு**— நான் அறிந்தபடி. **யார் அறிவார்**— யார் அறிவார்கள் ?

---

"எத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவது ஆழியான்பால்" என்றதுக்கு வேறுவகையாகவும் ஸங்கதி யோஜனைகள் உரைப்பதுண்டு. நாராயணனே பரதெய்வமென்றும், அவன் பெருமையை ஒருவரும் அளவிட்டறியார் என்றும் சொன்னவளவில், 'அவனை ஓரளவாவது அறிய உபாயமென்?' என்னும் கேள்விபிறக்க, 'அவனருளாலேயே அவனை அறியமுடியும் ?' என்ன, 'கர்மஜ்ஞான பக்திகளாகிற ஸாதநங்களாலும் அவனை அறியலாம் என்று சாஸ்திரங்கள் ஓதுகின்றனவே' என்று கேட்க, 'அவற்றுக்கும் பலனளிப்பவன் அவனேயாகையால் ஸாதகர்க்கும் உபாயம் அவனேயாகிறான்' என்கிறார் (எத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவது ஆழியான் பால்) என்னுமடியாலே. ஸாதனங்கள் தாமே பலனை யளிக்கவல்லவையல்லாமையால், அவனே பல ப்ரதனாகிறான் என்பதே ஸகல சாஸ்த்ர நிர்ணயம் என்றார். "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" "ராமோ விக்ரஹவாந் தர்ம:" முதலான ப்ரமாணங்களைப் படிப்பது. 2.

3. இவ்வவ:— "ஆருமறியார் அவன் பெருமை" என்று சொல்லும் நீர் அவனை அறிந்ததுபோல் பேசமுற்பட்டது பொருந்துமோ என்று சிலர் கேட்க, "'ஆருமறியார்' என்றது ஒருவரும்

பெரி-அவ:— (பாலில்) "வேறொருவர் அறிவாரில்லை. நானே என்றது. நான் அவன் காட்டக்கண்டேனாகையாலே" என்கிறார்.

வ்யா:— (பாலில் கிடந்ததுவும்) அவதாரத்துக்கு உறுப்பாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்ததுவும். (பண்டரங்க

அவ:—"ஆருமறியாரவன் பெருமை" என்று உம்மையல்லாதாரை அறியாதார் என்றீர். நீர்தாம் அவர்களிற்காட்டில் அறிந்தபடி எங்ஙனே? என்ன, அவன் ப்ரஸாத₃த்தாலே ப₄க₃வத்தத்வமுள்ள விடமெங்கும்புக்கு நான் கண்டாற்போலே. ஸ்வயத்னத்தாலே ஆர்தான் அவனை அறிய வல்லார்? என்கிறார்.

உரை:—"सदा पश्यन्ति सूरयः" (ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:) என்கிறபடியே எப்போதும் இமை கொட்டாமல் மண்டி

அளவிட்டு அறியார் என்றபடி. அவன் பெருமையில் ஒவ்வொரு திவலைகளை அறிந்தார் பலருமுண்டு. அவர்களில் என்னைப்போல் அறிந்தவர் ஒருவருமில்லை. தன் முயற்சியாலே அவனை அறிபவர்கள் அவன் பரத்துவத்திலே ஒரு சிறிது அறியப்பெறுவார்கள். அவன் தன் நிர்ஹேதுக கிருபையாலே காட்டக் கண்ட நானே அவனுடைய ஸௌலப்₄யாதி₃மஹாகு₃ணங்களை அறிவேன்" என்கிறார். அன்றிக்கே, "எத்தவம் செய்தார்க்கும்" என்று ஸாத₄நாந்தர நிஷ்டர்களைப்பற்றிய பேச்சு வந்தவளவில், "அவன் தன்னைக் காட்டக் கண்ட என்னைப்போலே காணமுடியுமோ தன் முயற்சியாலே அவனைக் காணலாமென்றிருப்பவர்களுக்கு?" என்கிறாராகவுமாம்.

வ்யா:— (பாலில் கிடந்ததுவும்) ஜகத்காரணனாய், நித்யஸூரி பரிஷத்திற்கு நிர்வாஹகனாயிருக்குமவன் சேதனர் சிலரைப் பெறுவதற்காகப் பல அவதாரங்கள் எடுக்க நினைத்து அதற்காகத் திருப்பாற்கடலிலே க்ஷீராப்₃தி₄நாத₂னாக அவதரித்து யோகநித்திரை செய்ததுவும். (பண்டரங்கமேயதுவும்) அவதாரங்களின் எல்லை நிலமான அர்ச்சாரூபியாய்த் திருவரங்கத்திலே பொருந்தி வாழ்வதும். (பண்டு) அபேக்ஷிப்பார் ஒருவருமில்லாமல் காடாய்க்கிடந்த காலத்திலேயே 'எக்காலத்திலேயாவது எவராவது நம்மைக்

மேயதுவும்) அபேக்ஷிப்பாரின்றிக்கேயிருக்கக் கோயிலிலே

அநுபவிக்கக்கடவ நித்யஸூரிகளுக்குப் பத்தும் பத்தாகத் தன்படிகளை அநுப₄வவிஷயமாக்கிக்கொண்டிருக்கும் பரம புருஷார்த்த₂பூ₄தனாய். கார்ய ரூபமான ஸகலப்ரபஞ்சங்களுக்கும், "ஏகமேவாத்விதீயம்" (ஏகமேவாத்₃விதீயம்) என்கிறபடியே

கொள்ளமாட்டார்களா' என்னும் நகையாலே படுகாடுகிடக்கிறபடி. ரக்ஷ்யவஸ்துவின் அளவன்றே ரக்ஷகனின் பாரிப்பு. "அத்யதிஷ்ட₂த்₃ த₃ஶாங்கு₃லம்' என்றும், 'புரஸ்தாத் ஸூக்ரமுச்சரத்' என்றும்,

"வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம்
பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினான்" என்றும்,

மறைகள் முறையிட்டனவன்றே. (அரங்கம் மேயதுவும்) பரம பதத்தைக்காட்டிலும் இவ்விடத்திலேயே பொருந்தியிருக்கை. 'மேவி யுறை கோயில்' அன்றே. பரமபதத்தில் ஸம்ஸாரிகள் படுகிற க்லேஶத்தை அநுஸந்தித்து 'இவை என் படுகின்றனவோ' என்று திருவுள்ளத்தில் வெதுப்போடேயாயிற்று எழுந்தருளி யிருப்பது. இவ்வர்த்தத்தை பட்டர் அருளிச்செய்ய, 'பரமபதத்திலே ஆநந்தபரிபூர்ணனாயிருக்குமிருப்பிலே ஒரு வ்யஸனத்தோடே இருந்தான் என்கை உசிதமோ' என்று ஒருவர் கேட்க, " 'வ்யஸனேஷு மநுஷ்யாணாம் ப்₄ருஶம் ப₄வதி து₃:கி₂த:' [மனிதர்கள் துன்புற்றால் அவர்களிலும் அதிகமாகத் துன்புறுகிறான் ராமபிரான்] என்றது குணப்ரகரணத்திலேயோ தோஷப்ரகரணத்திலேயோ என்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது குணமாகில் குணமென்று பேர் பெற்றவற்றில் அங்கு இல்லாததொன்றுண்டோ?" என்று அருளிச்செய்தார் என்பர். "தன் இச்சையொழியக் கர்ம நிப₃ந்த₃ன மாக வருமவை இல்லையென்னுமத்தனைபோக்கி, அநுக்₃ரஹகார்ய மாய் வருமவை இல்லையெனில், முதலிலே சேதனனன்றிக்கே யொழியுமிறே. 'ஸ ஏகாகீ ந ரமேத' [நாராயணன் (ஆதியில்) ஒருவனாய் இன்புறவில்லை] என்றது நித்யவிபூ₄தியும் குணங்களும் உண்டாயிருக்கச் செய்தேயிறே" என்று நம்பிள்ளை (4-10-2) ஈட்டிலே அருளிச்செய்வர். "அரங்கம் எய்ததுவும்" என்றும் பாடம் காண்கிறது. "அரங்கம் எய்தியதும்" என்றபடி. பரம பதநிலயன் சேதநலாபத்திற்காக நெடுந்தூரம் வந்ததுவும் என்கை.

வந்து கண்வளர்ந்தருளிற்றும். ஆலில் துயின்றதுவும்

அத்₃விதீயகாரணவஸ்துவாய், "अप एव ससर्ज" (அப ஏவ ஸஸர்ஜ) என்கிறபடியே காரண ஜலத்தைச் ஸ்ருஷ்டித்து "அதனுள் கண்வளரும்" என்கிறபடியே இவ்வருகுள்ள

(ஆலில் துயின்றதுவும்) இச்சேதனர்க்கு ஒரு ஆபத்து வந்த காலத்தில் இவர்களைத் தன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து, பாலன் தனதுருவாய் ஆலிலையிலே கண்வளர்ந்தருளியதும், (ஆரறிவார்) இப்படிப்பட்ட நீர்மையை உடையவன் எம்பெருமான் என்பதை யாரறிவார்? மேன்மையை ஒருபடி உணரலாம். நீர்மையை உணரப்போகாது என்கை. (யானறிந்தவாறு ஆரறிவார்) அவன் காட்டக்கண்ட நான் அறிந்த அவனுடைய ஸௌலப்₄யாதி₃களை, தம் முயற்சியாலே அவனைக்காண எண்ணியிருக்குமவர்கள் அறிவரோ? (பாலிற்கிடந்ததுவும் பண்டரங்கம் மேயதுவும் ஆலில் துயின்றதுவும் ஆரறிவார்) தங்கள் முயற்சியாலே அவனை அறிய நினைக்குமவர்கள் நமக்காக அவன் செய்யும் முயற்சிகளை அறியப்பெறுவரோ? (பாலிற்கிடந்ததுவும் ஆரறிவார்)

"பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்கிறபடியே

இதைக் கேட்டதும் உருகி நெஞ்சழியும் நாங்கள் அறியுமித்தனையொழிய, இதைக் கேட்டும் உருகாதே ஸாத₄நாநுஷ்டா₂நம் பண்ணவல்ல கல் நெஞ்சரோ அறியவல்லார்? (பண்டரங்கம் மேயதுவும் ஆரறிவார்)

"கருவரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கமேயான் திசை" என்று

கருவரங்கத்திலிருந்தே திருவரங்கத்தைத் தொழுத எங்களையொழிய "ப்ரஹ்மாஸ்வப்ரபு₄த்₃த₄நாம்" [அஜ்ஞானிகளுக்காக அர்ச்சையில் நிற்கிறான்] என்றிருப்பார் அறிவரோ? (ஆலில்துயின்றதுவும் ஆரறிவார்)

"ஆலன்று, வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு" என்று

ஆரறிவார்? (ஞாலத்தொருபொருளை) கார்யாகாரமெல்லாம் அழிந்து "सदेव" (ஸதே3வ) என்று நிற்கிறவனை. (வானவர் தம் மெய்ப்பொருளை) நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யனு யுள்ளவனை. (அப்பிலருபொருளை) "अप एव ससर्जादौ" (அப ஏவ ஸஸர்ஜாதௌ3) என்று ஜலஸ்ருஷ்டியைப்பண்ணி

---

வற்றை உண்டாக்குகைக்காக அதுக்குள்ளே ஸ்ருஷ்ட்யுந் முக2னுய்க்கொண்டு கண்வளரக்கடவ இணையில்லாத காரண வஸ்துவாயிருக்கிறவனை, அவன்தான் ப்3ரஹ்மாதி3களுக்கு ஸமாஶ்ரயணீயனுய்க்கொண்டு க்ஷீராப்3தி4யிலே முன்பு கண்வளர்ந்தருளினதும், இவ்வருகுள்ள ஸம்ஸாரிகளைத் தண்ணளிபண்ணி ரக்ஷிக்கைக்காகக் கோயிலிலே பள்ளி கொண்டருளினதும், ப்ரளயத்திலழியாதபடி ஜக3த்தைத்

---

இவ்வக4டிதக4டநாஸாமர்த்2யத்திலே ஆழங்காற்படும் நாங்களறி வோமேயொழியப் பிறர் அறிவரோ?

"இவனுக்கு நீர்மையேதான் உள்ளதோ" என்று கேட்க, "இவனுடைய மேன்மையும் எல்லையற்றதாயிருக்கும்" என்கிருர் அடுத்தபடியாக. மேன்மையும் நீர்மையும் கலந்திருந்தாலன்றோ பொன்னில் பதித்த வைரம்போலே பிரகாசிப்பது. (ஞாலத்தொரு பொருளை) "ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீதே3கமேவாத்3விதீயம்" [குழந்தாய்! இவ்வுலகம் ஸத்தாகிற ஒன்றாகவே முதலில் இருந்தது. இரண்டற்றதாயிருந்தது.] "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்3ரஹ்மா நேஶாந:" [நாராயணன் ஒருவனே முதலிலிருந்தான்; பிரமனுமில்லை, சிவனுமில்லை] என்று உபனிஷத்துக்களிலே சொல்லப் பட்ட ஒப்பற்ற ஜகத்காரணப்பொருளை, (ஞாலத்தொரு பொருளை) உலகமாய் நின்ற ஒரே பொருளை; முதலில் ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட மாயும், பிறகு ஸ்தூலசிதசித்விசிஷ்டமாயும் நிற்கும் ஒப்பற்ற பொருளை. (வானவர்தம் மெய்ப்பொருளை) நித்யஸூரிகளுக்கு ப்ராப்யனுயுள்ளவனை. "யோ தே3வேப்4ய ஆதபதி யோ தே3வாநாம் புரோஹித:" "ஸதா3 பஶ்யந்தி ஸூரய:" என்னும் வேதா3ர்த்த2ம் சொல்லுகிறது. (அப்பில் அருபொருளை) 'அப்பு' எனப்படும் ஜலத்தை முதலிலே ஸ்ருஷ்டித்து, அதிலே கண்வளர்ந்தருளிய ஜகத்காரணனை. "அப ஏவ ஸஸர்ஜாதௌ3" [முதலில் ஜலத்தையே ஸ்ருஷ்டித்தான்] என்று தொடங்கி,

அதிலே கண்வளர்ந்தருளுகிறவனை. (யானறிந்தவாறு) அவன் காட்டக் கண்ட நானறிந்தபடி ஸ்வயத்நத்தால் காண்பார்க்கு அறியப்போகாது. 3.

---

திருவயிற்றிலேவைத்து ஒரு பவனுன ஆலந்தளிரிலே கண் வளர்ந்தருளினதுவுமான இவற்றை அவன் அருளாலே நான் உள்ளபடிகண்ட ப்ரகாரத்தை ஸ்வயத்னபரராயிருக் கும் ஆர்தான் அறிவார்? ஞாலத்து ஒரு பொருளை என்றது- பூமியில் விலக்ஷணமான திருவவதாரங்களும் கோயில்களு மென்றுமாம். 3.

---

**"ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: |**
**தா யத,ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: ||"**

[ஜலம் நாரங்கள் எனப்படுகின்றது. நரனுகிற பரமாத்மாவினிட மிருந்து பிறப்பதன்றோ அது. அது அவனுக்கு இருப்பிடமா யிருக்கிறபடியால் அப்பரமாத்மா நாராயணனெனப்படுகிருன்.] என்று மநுஸ்ம்ருதியிலும்,

**"ஸ்ருஷ்ட்வா நாரம் தோயமந்த: ஸ்தி,தோऽஹம்**
**தேந ஸ்யாந்மே நாம நாராயணேதி"**

[நாரமாகிற ஜலத்தைப் படைத்து அதனுள்ளிருக்கையால் எனக்கு நாராயணனென்று பெயர்] என்று வராஹபுராணத்திலும், "அம்ப,ஸ்யபாரே" என்றும், "ஸமுத்,ரேந்தம்" என்றும், "யமந்தஸ் ஸமுத்,ரே கவயோ வயந்தி" [எவனை சமுத்திரத்தினுள்ளிருப்பவனுகக் கவிகள் அறிகின்றனரோ] என்றும் வேதத்திலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை அநுஸந்திக்கிருர். "நன்மைப் புனல் பண்ணி" "தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும்" என்றுரன்றோ நம்மாழ்வாரும். (யானறிந்தவாறு ஆரறிவார்) இவனை நானறிந்தபடி யாரறிவார். மேன்மையை அறிவார் நீர்மையை அறிவதில்லை; நீர்மையை அறிவார் மேன்மையை அறிவ தில்லை; இரண்டையும் அறிந்தவன் நானே என்கிருர். ஸாத,நாந்தர பரர்கள் நீர்மையறியார்கள்; தேவதாந்தரபரர்கள் மேன்மை யறியார்கள்; இரண்டையுமறிந்தவன் யானேயென்கிருர். 3.

**4. ஆறுசடைக் கரந்தான் அண்டர்கோன் தன்னோடும்**
**கூறுடைய னென்பதுவும் கொள்கைத்தே—வேறொருவ**
**ரில்லாமை நின்றானை எம்மானை எப்பொருட்கும்**
**சொல்லானைச் சொன்னேன் தொகுத்து.**

**பதவுரை:— ஆறு**—கங்காநதியை, **சடை**—தனது சடையிலே, **கரந்தான்**—மறையச்செய்து தாங்கிக்கொண்டிருக்கிற ருத்ரன், **அண்டர்கோன் தன்னோடும்**—தேவாதிதேவனை பகவானோடு, **கூறு உடையன் என்பதுவும்**—பங்குடையவன் என்று (பாமரர்) சொல்லுஞ்சொல், **கொள்கைத்தே**—அங்கீகரிக்கத்தகுந்ததோ? (அல்ல;) **வேறு ஒருவர் இல்லாமை நின்றானை**—வேறொரு தெய்வமும் தனக்கு ஒப்பாக இல்லாமல் வீறுபெற்றிருப்பவனும், **எப்பொருட்கும் சொல்லானை**—எந்தப்பொருளைச் சொல்லுகிற சப்தமும் தனக்கு வாசகமாம்படி (ஸர்வஶப்தவாச்யனாய்) உள்ளவனுமான, **எம்மானை**—எம்பெருமானை, **தொகுத்து சொன்னேன்**—சுருங்கப் பேசினேனித்தனை.

**பெரி-அவ:— தாமறிந்தபடியை உபபாதிக்கிறார்.**

---

அவ:—ஸர்வேஶ்வரனோடு ஒக்க வேறு சிலரை ஈஶ்வரர்களாகச் சொல்லுவதே! என்று ருத்ராதிகளுடைய ப்ரஸ்துதமான அநீஶ்வரத்வத்தை அருளிச்செய்கிறார்.

---

4. திவ்ய-அவ:— முதற்பாட்டில் ப்ரஹ்மருத்ரகாரணன் நாராயணனே என்றார். இரண்டாம் பாட்டிலே தேவன் ஒருவனேயாகையால் மூவரும் ஜகத்காரணராகமுடியாது என்றார். மூன்றாவது பாட்டிலே அவனுடைய மேன்மையையும் நீர்மையையும் நானேயறிவேன் என்றார். இவ்வளவிலே, சைவர்கள் சிலர் பின்வருமாறு கேட்கமுற்பட்டனர்:— "ஏகோ ஹி ருத்3ரோ ந த்3விதீயாய தஸ்த2:" [ருத்ரன் ஒருவனே; இரண்டாவதாகைக்கு ஒருவருமில்லை.] "யோ தே3வாநாம் ப்ரப4வஶ் சோத்3ப4வஶ்ச விஶ்வாதி4கோ ருத்3ரோ மஹர்ஷி:। ஹிரண்யக3ர்ப்ப4ம் ஜநயாமாஸ பூர்வம் ஸ நோ பு3த்3த்4யா ஶுப4யா ஸம்யுநக்து ॥" [எவனொருவன் தேவர்களுக்குக் காரணனாகவும் வர்த்த4கனாகவுமிருக்கின்றானோ, விஶ்வாதி4கனாய், ஸர்வஜ்ஞனான

வ்யா:—(ஆறித்யாதி,)ஜடையிலே க,ங்கை,யை த,ரித்து

என்னை அடிமைகொண்ட எம்பெருமானை ப்ரமாணோபபத்திகளாலே நிர்ணயித்துத் திரளச்சொன்னேனென்று தாம் அறிந்தபடியை உபபாதி,க்கிறாராகவுமாம்.

உரை:—"तदम्बु पतितं दृष्ट्वा दधार शिरसा हरः। पावनार्थं जटामध्ये" (தத,ம்பு, பதிதம் த்,ருஷ்ட்வா த,த,ார ஶிரஸா ஹர:।

எந்த ருத்ரன் முதலில் ஹிரண்யகர்ப்பனைப் பிறப்பிக்கிறனோ, அவன் எங்களுக்கு நல்லறிவைக் கொடுப்பானாக.] "தஸ்மாத் ஸர்வக,த: ஶிவ:" [ஆகையால் சிவன் ஸர்வகதன்] "ஸர்வஸ்ய ப்ரபு,மீஶாநம்" [எல்லாவற்றுக்கும் ஸ்வாமியான ஈசானனை] "மாயிநம் து மஹேஶ்வரம்" [மஹேஶ்வரனை மாயையுடையவனாக அறி] "ஜ்ஞாத்வா ஶிவம் ஶாந்திமத்யந்தமேதி" [சிவனை அறிந்து மேலான சாந்தியை அடைகிறன்.] "ஶிவம் ஸர்வபூ,தேஷு கூ,ட,ம்" [எல்லா பூதங்களிலும் மறைந்திருக்கும் சிவனை] "ஶிவ ஏவ கேவல:" [சிவனொருவனே இருந்தான்.] "ஈஶஸ் ஸர்வாதி,பத்யம் குருதே" [ஈசன் எல்லாருக்கும் அதிபதியாயிருக்கிறன்.] "ப,ாவாப,ாவகரம் ஶிவம்" [ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைச் செய்யும் சிவனை] "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்" [ஈஶ்வரருக்கெல்லாம் மேலான மஹேச்வரனான அவனை] "ஶிவ ஏகோ த்,யேய:" [சிவன் ஒருவனே தியானிக்கத் தகுந்தவன்.] "அஹமேக: ப்ரத,மமாஸம் வர்த்தாமி ச ப,விஷ்யாமி ச நாந்ய: கஶ்சிந் மத்தோ வ்யதிரிக்த:" [(சிவனாகிற நானொருவனே முதலிலிருந்தேன்; இருக்கிறேன்; இருப்பேன். என்னைத்தவிர வேறொருவனுமில்லை.] என்று பற்பல வேதவாக்யங்களிலே சிவனே ஸகலஜகத்காரணனென்றும், ஸர்வாந்தர்யாமியென்றும் கோஷிக்கப்பட்டிருக்க நீர் நாராயணன் ஒருவனே ஜகத்காரணன் என்று சொல்லலாமோ? சில வாக்யங்களில் நாராயணனும், தாம் மேலே காட்டிய வாக்யங்களில் சிவனும் பரம்பொருளாகப் படிக்கப்பட்டிருக்கையால் இருவரும் பரமாத்மாவே என்று கொள்ளுவதே பொருந்தியது. அப்படியிருக்க, 'அவன் பரத்துவத்தை நானே அறிவேன்' என்று நீர் உரைப்பது எப்படி ஒட்டும்? என்று சைவர்கள் கேட்க, அவனே பரதத்துவம் என்று தாமறிந்த படியை இப்பாசுரத்திலே விவரித்தருளுகிறார்.

வ்யா:—'சிவன்' என்னும் பெயருள்ள ஒருவனே ஜகத்காரணன் என்று சில வாக்கியங்களில் சொன்னது உண்மையே. ஆனால்

ஸாத₄கனை ருத்₃ரன் ஸர்வஶேஷியானவனோடொக்க ஶேஷித்

பாவநார்த்த₂ம் ஜடாமத்₄யே) என்கிறபடியே ஸர்வேஶ்வரன் திருவடிகள் விளக்கின க₃ங்கா₃நதி₃யை பாவநார்த்த₂மாக ஜடாமத்₄யையில் அடங்கும்படி த₄ரித்த ருத்₃ரனானவன், "பதிம் விஶ்வஸ்ய" (பதிம் விஶ்வஸ்ய) என்கிறபடியே அண்டா₃தி₃ ஸமஸ்தபதா₃ர்த்த₂ங்களுக்கும் நிருபாதி₄க ஶேஷியான

அந்த சிவன் நீங்கள் அபிமானித்திருக்குமவனோ என்று ஆராய்ந்தா லாகாதோ என்கிறார், — (ஆறு சடைக்கரந்தான்) பகவானுடைய ஸ்ரீ பாதத்தைப் பிரமன் கழுவ, அது கங்கையாகப் பிரவஹிக்கத் தன் அசுத்தியைப் போக்கிக்கொள்ளுவதற்காக அதைத் தன் தலையிலே தரித்தவன்.

"த்₃ரவீபூ₄தஶ் ததா₃ த₄ர்மோ ஹரிப₄க்த்யா மஹாமுநே ।
க்₃ருஹீத்வா த₄ர்மபாநீயம் பத₃ம் நாத₂ஸ்ய துஷ்டயே ॥
க்ஷாளிதம் பரயா ப₄க்த்யா பாத்₃யார்க்₄யாதி₃பி₄ரர்ச்சிதம்॥
தத₃ம்பு₃ பதிதம் த்₃ருஷ்ட்வா த₃த₄ார ஶிரஸா ஹர: ।
பாவநார்த்த₂ம் ஜடாமத்₄யே யோக்₃யோऽஸ்மீத்ய-
வத₄ாரணாத் ॥
வர்ஷாயுதாந்யத₂ ப₃ஹூநி ந முமோச ததா₃ ஹர: ॥

[ரிஷிஶ்ரேஷ்ட₂ரே! (பகவான் திருவுலகளந்தருளின) அச்சமயம் ஹரியினிடம் பக்தியினால் தர்மம் ஜலமாயிற்று. தர்மமாகிய அந்த ஜலத்தையெடுத்து, ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக (அவனுடைய) திருவடியானது (பிரமனாகிற என்னால்) மேலான பக்தியுடன் விளக்கப்பட்டது. பாத்யம், அர்க்யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப்பார்த்து 'நான் (பரிசுத்தப்படுத்தத்) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிச்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு, பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள் உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை] என்று ஈஶ்வர ஸம்ஹிதையில் பிரமனாலேயே சொல்லப்பட்டதை அநுஸந்திப்பது. (ஆறு சடைக்கரந்தான்) சிவைப்ததத்தாலே உரைக்கப்படும் ஸ்வாபா₄விகமான பரிசுத்தி ருத்ரனிடமுள்ளதோ என்பதை விசாரித்தா லாகாதோ என்கிறார். (சடை) ஸாத₄நாநுஷ்டானம் செய்பவன் என்பதை உணர்த்தும் சடையே இவன் பரதத்துவமல்லன் என்று

வத்திலே கூறுடையன் என்ற இதுவும் சேதனர்க்கு பு₃த்₃தி₄ பண்ணப்படுமோ ? (வேறித்யாதி) "अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा। मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय॥" (அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த꞉ ப்ரப₄வ꞉ ப்ரளயஸ்தத₂ா। மத்த꞉ பரதரம் நாந்யத் கிஞ்சித₃ஸ்தி த₄நஞ்ஜய॥) என்னும்படி

---

எம்பெருமானோடும் ஈஶ்வரத்வத்தில் கூறுடையன் என்று அறிவுகேடர் சொல்லுகிற இவ்வர்த்₃தம் பரீக்ஷகராலே கைக்கொள்ளப்படுமதோ ? அதுகிடக்க; "मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति" (மத்த꞉ பரதரம் நாந்யத் கிஞ்சித₃ஸ்தி)

---

கோட்சொல்லித்தருகிறதே. (சடைக் கரந்தான்) ஸ்ரீபாததீர்த்தத்தைத் தலையாலே தாங்கினான். (கரந்தான்) பெருந்தனத்தைப் பெட்டியிலே ஒளித்துவைப்பாரைப்போலே சடையிலே மறைத்து வைத்தான். (அண்டர்கோன் தன்னோடும்) திருவுலகளந்தருளிய இவ்விருத்தாந்தத்தாலேயே தான் தேவாதிதேவன் என்பது தோற்ற நிற்கும் நாராயணனோடு. (கூறுடையன் என்பதுவும் கொள்கைத்தே) கங்காதரன் கேசவனுடைய ஶேஷித்வம், ஜகத்காரணத்வம், ஸர்வவ்யாபித்வம், முமுக்ஷூபாஸ்யத்வம் முதலான ஏற்றங்களில் பங்கு கொண்டவன் என்பதும் ஒப்புக்கொள்ளத்தக்கதோ? (ஆறு சடைக் கரந்தான்......கொள்கைத்தே)

"ஏக꞉ ப்ராஸீஸரத் பாத₃ம் ஏக꞉ ப்ராசிக்ஷளந் முத₃ா।
அபரோ ऽப்யத₄ரந் மூர்த்₄நா கோऽதி₄கஸ் தேஷு கண்யதாம்॥"

[ஒருவன் திருவடியை உயர நீட்டினான்; ஒருவன் உகப்புடன் அதை விளக்கினான், மற்றொருவன் அதைத் தலையாலே தரித்தான். இவர்களிலே எவன் அதிகன் என்று எண்ணிப்பாருங்கள்.] என்று சொல்லிற்றன்றோ.

சிவன் நாராயணனுடன் ஶேஷித்வாதிகளில் பங்கில்லாதவன் என்று நிர்ப்பந்திக்க ஹேதுவென்? என்ன, உரைக்கிறார்; (வேறொருவர் இல்லாமை நின்றானை) தனக்கு ஒப்பாகவும் மேலாகவும் வேறொருவரும் இல்லாமலிருக்கும் பரமாத்மாவன்றோ இவன்.

"அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜக₃த꞉ ப்ரப₄வ꞉ ப்ரளயஸ் தத₂ா।
மத்த꞉ பரதரம் நாந்யத் கிஞ்சித₃ஸ்தி த₄நஞ்ஜய॥" [7-6,7]

நிற்கிறவனே. (எம்மானை) எனக்கு ஸ்வாமியானவனே. (எப்

---

என்கிறபடியே ஸ்வஸந்நிதியில் ஈச்வரர்களாக ஶங்கநீய ரான ஶங்கராதிகளான வேறொருவரும் ஆதித்யஸந்நிதியில் நக்ஷத்ரங்கள்போலே உண்டாய் அவற்றை இல்லாதார் கணக்காம்படி நின்றபெருமையை உடையனாய். ஸ்வ ப்ரகாரமான ருத்ராதித்ய ஸகல பதார்த்தங்களுக்கும்

---

[நானே இவ்வுலகெல்லாவற்றுக்கும் உத்பத்தி லயஸ்தானங்களாக இருக்கிறேன், என்னைக்காட்டிலும் மேலானது வேறொன்றுமில்லை.]

''யஸ்மாத் க்ஷரமதீதோ ऽஹமக்ஷராதபி சோத்தம: |
அதோ ऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:''
[15-18]

[க்ஷரபுருஷர்களையும், அக்ஷரபுருஷர்களையும்விட மேலானவனாயிருக்கையால் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் நானே புருஷோத்தமனெனப்படுகிறேன்.] என்று கீதையில் அவன் தன்னாலேயும், ''ந தைவம் கேஶவாத் பரம்'' [கேசவனைக்காட்டிலும் மேலானதொரு தெய்வமில்லை.] ''ந பரம் புண்டரீகாக்ஷாத்'' [புண்டரீகாக்ஷனைக்காட்டிலும் மேலானதில்லை.] என்று ரிஷிகளாலும், ''பரமம் ப்ரபும் நாராயணம்'' [தனக்கு மேலொருவரில்லாத நாராயணன்] ''ந தத் ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே'' [அவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் காணப்படுவதில்லை.] என்று வேதங்களிலும் இவ்வர்த்தம் உத்கோஷிக்கப்பட்டதன்றோ, ''இப்படியிருப்பவன் யார்'' என்று கேட்கச் சொல்லுகிறார்.—(எம்மானை) எனக்கு ஸ்வாமியாயிருப்பவனை. திருமழிசையாழ்வாருடைய மறந்தும் புறந்தொழாத் தன்மையிருக்கும் படி. ஈச்வரனையும் இவரையிட்டு நிருபிக்கவேண்டியிருக்கை. அன்றிக்கே, முன்னும் பின்னும் மேன்மையை உபபாதித்தாப்போலே 'எம்மானை' என்று நீர்மையை உபபாதிக்கிறார் என்றும் கொள்ளலாம். அதிநிஹீனனான என்னை மேல் விழுந்து ஆட்கொண்டவனை என்றபடி.

''சிவன், ருத்ரன், ஈசான், ஈச்வரன், மஹேச்வரன் முதலான சப்தங்களால் குறிக்கப்படுபவன் பரமாத்மா என்று பல வாக்கியங்களில் சொல்லப்பட்டிருக்க, நீர் நாராயணன் ஒருவனே பரமாத்மா என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்'' என்று கேட்க

பொருட்கும் சொல்லானை) ஸர்வஶப்₃த₃வாச்யனானவனை.

---

வாசகமான ஶப்₃த₃ங்கள் ப்ரகாரியான தன் பக்கலிலே பர்யவஸிக்கும்படி ஸர்வஶப்₃த₃வாச்யனாய், இவ்விவ ஸ்வப₄ாவம் காட்டி என்னை எழுதிக்கொண்ட ஸ்வாமியானவனை ப்ரதிபத்தி விஷயமாம்படி ப்ரமாணோபபத்திகளாலே

---

உரைக்கிறார்:—(எப்பொருட்கும் சொல்லானை) எல்லா சப்தங்களாலும் சொல்லப்படுமவனை. ஆகாஶம், ப்ராணன், ஜ்யோதி, இந்திரன், உருத்திரன், சிவன், ஈஶன், ஈஶ்வரன், மஹேஶ்வரன், புருஷன், புருஷோத்தமன், உத்தமபுருஷன், விஷ்ணு, ஹரி, அச்யுதன், அநந்தன் நாராயணன், த்ரிவிக்ரமன், வாமனன் முதலான எல்லா சப்தங்களாலும் வேதங்களில் சொல்லப்படும் பரம்பொருளாயிருப்பவன் இவனே யன்றோ என்கிறார். (எப்பொருட்கும் சொல்லானை) 'பொருள்' என்று பொருளைச்சொல்லும் ஶப்₃த₃த்தைக் காட்டுகிறது. எல்லா ஶப்₃த₃ங்களாலும் சொல்லப்படுபவனை — ஸர்வஶப்தவாச்யனை — என்றபடி. (எப்பொருட்கும் சொல்லானை) எல்லா ஶப்₃த₃ங்களாலும் ஸாக்ஷாத்தாகவும், அந்தந்த ஶப்₃த₃ங்களால் சொல்லப்படும் பொருள்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதாலும் சொல்லப்படுமவனை. 'சிவன்' என்னும் ஶப்தத்தை எடுத்துக்கொள்வோம். அந்த சப்தத்தினால் சொல்லப்படும் பரிசுத்தி நாராயணனிடமே இயற்கையாக அமைந்திருப்பதால், "ஶிவ ஏவ கேவல:" [ சிவன் ஒருவனே இருந்தான் ] முதலான வாக்கியங்களில் அவன் சிவன் என்று நேராகவே சொல்லப்படுகிறான். அத₂ர்வசிரஸ் முதலான உபநிஷத்துக்களில் ருத்₃ரபரமான லிங்க₃ங்கள் (அடையாளங்கள்) உள்ள வாக்கியங்களிலிருக்கும் சிவபதம் ருத்₃ரனைச்சொல்லி, அவனுக்கு அந்தர்யாமியாயிருக்கும் நாராயணனையும் குறித்து நிற்கிறது. ஆக, இப்படி இரண்டுவிதமாகவும் ஸர்வஶப்₃த₃ங்களுக்கும் பொருளாகிறான் நாராயணன். (எப்பொருட்கும் சொல்லானை) சிவருத்₃ராதி₃ ஶப்₃த₃ங்களைப்போலே ஆகாஶப்ராணேந்த்₃ராதி₃ ஶப்₃த₃ங்களாலும் வேதங்களில் சொல்லப்படுகிறான் இவன். சிவருத்₃ராதி₃ ஶப்₃த₃ங்களைக் கொண்டு சிவபரத்வம் சொல்லப்பார்க்கில், ஆகாஶாதிஶப்தங்களைக் கொண்டு ஆகாஶாதி பரத்வமும் சொல்லவேண்டிவரும். ஆகாஶாதிகளுக்கு அசுத்தியுண்டேயெனில், ஆறு சடைக்கரந்தானுக்கும் அசுத்தியுண்டு. ஆகையால் ஆகாஶாதி நாமங்களோடு, சிவாதி

**எல்லாப்பொருளுக்கும் சொல்லவேண்டும்படி நின்றவனை என்றுமாம். (தொகுத்துச் சொன்னேன்.) 4.**

---

நிஷ்கர்ஷித்துச் சுருக்கிச் சொன்னேன். அவன் திருவடி விளக்கின தீர்த்தத்தைத் தலையாலே சுமந்து பரிஶுத்தனானவனை எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து, ஸமாதிகதரித்ரனாய், ஸர்வஶப்தவாச்யனான ஸர்வேஶ்வரனோடு ஒக்கச் சொல்லுவதே! என்ன பாழரோ! என்று க்ஷேபித்தாராய்த்து. 4.

---

நாமங்களோடு வாசியற எல்லாம் நாராயணனைக் குறிக்கின்றன என்று கொள்வதே நல்வழியாகும். நாராயணாதி நாமங்களைத்தான் சிவபரமாகக் கொள்ளக்கூடாதோ எனில்: சிவாதி நாமங்களைக் காட்டிலும், நாராயணாதி நாமங்கள், ஶப்தத்தாலும் அர்த்தத்தாலும் ப்ரபலமாயிருக்கையால் கூடாது; அதாவது,—லோகப்ரஸித்த சிவன் பிறப்பிக்கப்படுபவனென்றும், பாபம் நீங்கப்பெறுதலனென்றும், மற்றும் பல தாழ்ச்சிகளை உடையவனென்றும் ஶ்ருதிஸ்ம்ருதிகளில் உத்கோஷிக்கப்படுகையால் நாராயணாதி நாமங்களைச் சிவபரமாகக் கொள்ளவழியில்லை. சிவாதி நாமங்களையே நாராயணபரமாகக் கொள்ளவேண்டும். "ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்" "விஶ்வாக்ஷம் விஶ்வஶம்புவம்" "ஸர்வஹரேதம் விரூபாக்ஷம்" "ய: பரஸ் ஸ மஹேஶ்வர:" என்று வேதங்களிலும், "ஈஶான: ப்ராணத: ப்ராண:" "ஸர்வ: ஶர்வ: ஶிவ: ஸ்தாணு:" "ஆதிதேவோ மஹாதேவ:" "ருத்ரோ பஹுஶிரா பப்ரு:" என்று ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம் முதலான உபப்ரும்ஹணங்களிலும் சிவருத்ராதி நாமங்கள் விஷ்ணுபரமாகப் படிக்கப்பட்டுள்ளன. ஆகையால், நாராயணனே ஸர்வஶப்தவாச்யனென்று கொள்ளவேண்டும்.

(எப்பொருட்கும் சொல்லானை) எல்லாப் பதார்த்தங்களுக்கும் ஸ்வாமியாகச் சொல்லப்படுபவனை என்றும் பொருள்கொள்ளலாம். அசேதன பதார்த்தங்களோடு, ப்ரஹ்மருத்ராதிகளோடு வாசியற ஸர்வபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியாக ஶ்ருதிஸ்ம்ருதிகள் இவனை ஓதியிருக்க, ருத்ரன் ஶேஷித்வத்திலே இவனோடு பங்குகொண்டவன் என்று சொல்லுவதும் ஒப்புக்கொள்ளப்படுமோ? என்கிறார். "பதிம் விஶ்வஸ்ய நாராயணம்" [எல்லாவுலகிற்கும் பதியானவன் நாராயணன்] முதலான ப்ரமாணங்களைப் படிப்பது. (தொகுத்

5. தொகுத்த வரத்தனாய்த் தோலாதான் மார்வம்
வகிர்த்த வளையுகிர்த்தோள் மாலே—உகத்தில்
ஒருநான்று நீயுயர்த்தி உள்வாங்கி நீயே
அருநான்கு மானாய் அறி.

**தொகுத்த வரத்தன் ஆய்**—(தவஞ்செய்து) ஸம்பாதி₁க்கப்பட்ட வரங்களையுடையவனாய், **தோலாதான்** — ஒருவரிடத்திலும் தோல்வியடையாதவனாயிருந்த இரணியனுடைய, **மார்வம்**—மார்பை, **வகிர்த்த**—இருபிளவாகப் பிளந்த, **வளை உகிர்** — வளைந்த நகங்களையும், **தோள்**—தோளையுமுடைய, **மாலே**—பிரானே! **நீ**—நீ, **உகத்தில்**—பிரளயகாலத்தில், **உள்வாங்கி**—(உலகங்களையெல்லாம்) ஸம்ஹரித்து உள்ளேயிட்டுவைத்து, **ஒரு நான்று**—(மீண்டும் ஸ்ருஷ்டிகாலமாகிற) ஒரு ஸமயத்தில், **உயர்த்தி**—(அவ்வுலகங்களையெல்லாம்) வெளியிட்டு வளரச்செய்து, **நீயே**—இப்படிப்பட்ட நீயே, **அரு நான்கும் ஆனாய்**—(தே₃வ மநுஷ்ய திர்யக் ஸ்தா₂வர ரூபங்களான) நால்வகைப் பொருள்களிலும் அந்தராத்மாவானாய், **அறி**—இதனை அறிவாயாக.

---

அவ:— 'நாம் ஸர்வஶப்₃த₃வாச்யராம்போது ஸர்வமும் நமக்கு ப்ரகாரமாகவேணுமிறே. அது கூடுவதொன்றோ' என்ன, நீயே ஸகலஜக₃த்துக்கும் உபாதா₃ன காரணமாகையாலே ஸர்வமும் உனக்கு ப்ரகாரமாகத் தட்டில்லை என்கிறார்.

---

துச்சொன்னேன்) இவனுடைய பரத்துவத்தையும் ஸௌலப்₄யத்தையும் சுருங்கச்சொன்னேன். விரிவு வேண்டுமாகில், இப்பிரபந்தத்தில் மேலேயும், திருச்சந்தவிருத்தத்திலும் காணலாம் என்று ப₄ாவம். 4.

5. **திவ்ய-அவ:**— ஆழ்வார் இவ்வளவு தெளிவாக பகவானுடைய பரத்துவத்தை உபதேசித்தும் ஸம்ஸாரிகள் கலங்கியேயிருந்தார்கள். அவ்வளவிலே "பிரானே! உன்னுடைய பரத்துவத்தைப் புத்தியிற்கொள்வாரைக் காண்பது இவ்வுலகிலே அரிதாயிருக்கிறது. ஆகையால் நான் உபதேசிக்க, நீரே கேட்டறிய வேணும்" என்கிறார்.

பெரி-வ்யா:—(தொகுத்த வித்யாதி,) திரட்டின வரத்தை யுடையவனாகையாலே வரங்கொடுத்தவர்களுக்கும் தோலாத ஹிரண்யனுடைய மார்பைப் பிளந்து வளைந்த உகிரையும் தோளையுமுடையையாய், ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே

---

உரை:— நெடுங்காலம் தபஸ்ஸு பண்ணி தத்பலமாக ப்ரஹ்மாதிகள் பக்கலிலே திரட்டிக்கொண்ட வரபலத்தை யுடையனாய், வரம் தந்த ப்ரஹ்மாதிகளுக்கும் தோலாத படி பெருமிடுக்கனான ஹிரண்யனுடைய முரட்டு மார்வை இரண்டு கூறாக இடந்து பொகட்ட வளைந்த திருவுகிரோடே கூடின திருத்தோளையுடையனாய், சிறுக்கனான ப்ரஹ்லாதன் பக்கலிலே மதகுதிறந்து பாய்கிற வ்யாமோஹத்தையுடைய

---

வ்யா:— (தொகுத்த வரத்தனாய்) திரட்டிய வரத்தையுடைய வனாய், உலகத்திலே எவ்வளவு வகையான வரங்களுண்டோ, அவ்வளவு விதமான வரங்களையும் தான் ஒருவனே திரட்டினான். தேவர், மனிதர் முதலான ப்ரஹ்மஸ்ருஷ்டமான ஜாதிகளாலும், பகலிலும் இரவிலும், வானத்திலும் பூமியிலும், வீட்டின் உள்ளும் புறமும், அஸ்த்ரசஸ்த்ரங்களனைத்தினாலும், ஈரமுள்ளதினாலும் ஈர மில்லாததினாலும் தனக்கு மரணமில்லை என்று இப்படிப் பலபடி யாக இரணியன் பெற்ற வரங்களை நினைக்கிறார். (தோலாதான்) இப்படி வரபலமுடையவனாகையாலே, தனக்கு வரங்கொடுத்த ப்ரஹ்மாதிகளுக்கும் தோற்காதவனானான். (மார்வம் வகிர்த்த) மார்வைப் பிளந்த. (வளையுகிர்த் தோள்) வளைந்த நகங்களையும், தோளையுமுடைய. கடுங்கோபத்தாலே மார்பைப் பிளக்கையாலே தோள்களும், நகங்களும் வளைந்து விடுகின்றன. 'தோள்' என்று திருக்கைகளைச் சொல்லுவதாகக்கொண்டு, 'வளைந்த நகங்களைக் கொண்ட திருக்கைகளையுடைய' என்று கொள்வாருமுண்டு. (மாலே) இப்படிக் கடுங்கோபம் கொண்ட காலத்திலும் ப்ரஹ்லாதாழ்வானிடத்திலே பேரன்புகொண்டவனே! "சீற்றத் தோடருள் பெற்றவன்" என்றார் நம்மாழ்வாரும், 'அன்பும் கோப மும் ஒரே காலத்திலிருக்குமோ' என்னில்: 'யானை சிங்கத்தோடு சண்டைசெய்யும் காலத்திலும் குட்டிக்குப் பால்கொடுக்குமா போலே இதுவும் பொருந்தும்' என்று உடையவர் அருளிச்செய்வர் என்பர். (மாலே) ஸர்வேச்வரனே! என்றும் கொள்ளலாம்.

வ்யாமுக்,த,ஞனவனே! (உள்வாங்கி நீயே யுகத்தில் ஒரு நான்று நீயுயர்த்தி) ஜக,த்தடைய ஸம்ஹரித்த நீயே ஸ்ருஷ்டி காலத்திலே *"आतपवत्" (ஆதபக,தம்) என்னும்படி நிற்கிற

வனே! இவை அதிப்ரவ்ருத்தமான ஒரு காளிலே; ஸகல ஜக,த்தையும் உன் பக்கலிலே உபஸம்ஹரித்து இட்டுவைத்த நீ, மீளவும் ஸ்ருஷ்டி காலத்திலே உபாத,ானகாரணமாய்க் கொண்டு கார்யரூபமான ஜக,த்தாய்ப் பரிணமியாநிற்றி; அநந்தரம் தே,வாதி,ரூபேண சதுர்வித,ரான ஆத்மாக்களும் 'நீ' என்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாய் அந்வயிக்கும்படி அவற்றுக்கு ப்ரகாரியாய், அவைதான் என்னலாம்படி நிற்கிற

இச்செயலாலேயே நீ ப்ரஹ்மாதிகளுக்கும் ஈஶ்வரனென்று தோற்றியிருக்க, பலரும் அதில் கலங்குகிறபடியென்! (மாலே) வரங்களைக் கொடுத்துவிட்டுத் துன்புற்றவர்கள் பரதெய்வமோ, அல்லது அவர்கள் துன்பத்தைத் துடைத்தவன் பரதெய்வமோ என்று ஆராய்ந்தாலாகாதோ?

"ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை ப்ரஹ்மருத்ரர்கள் பண்ணுவதாகச் சிலர் உரைக்கின்றனரே" என்ன, 'அவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து நீயேயன்றோ ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் செய்வது' என்கிறார் அடுத்தபடியாக: (உள் வாங்கி நீயே உகத்தில் ஒரு நான்று நீயுயர்த்தி) ப்ரளயகாலத்தில் ஸகல வஸ்துக்களையும் உள்ளொடுக்கிவைத்தவனாய், ஸ்ருஷ்டிகாலத்தில் அவற்றை வெளிவிடுகிறவனாய். * "ஆதபக,தம்" [(ஸூர்யனாலே இழுக்கப்பட்டு) ஸூர்யனுடைய கிரணங்களிலே ஒடுங்கிக்கிடக்கும் நீர் (மழை காலத்திலே) வெளியாவதுபோலே] என்றாற்போலே, ஸூர்ய

* இப்பிரமாணம் எங்குள்ளதென்று தெரியவில்லை. ப்ரமாணத்தின் மற்ற பகுதிகளும் தெரியவில்லை. ஆச்சான்பிள்ளை இவ்வளவே உத,ாஹரித்துள்ளார். அரும்பதவுரையில் "(ஆதபக,தம்) வெய்யிலானது எங்குமொக்க வியாபிக்குமாபோலே அந்தராத்மாவாக எங்கும் வ்யாபித்தாயென்றபடி — நான்கிலும் அருவாய் நின்றாய்" என்று எழுதப்பட்டுள்ளது. இது வியாக்கியானத்திற்கும் 'ஆதபக,தம்' என்னும் பதத்திற்கும் பொருந்தவில்லை. பொருத்தியுள்ள பொருளொன்றை மேலே காட்டினோம்.

உயர்த்தியென்று, அவதரித்தி என்னவுமாம். (அருநான்கு மானாய்)தே₃வதிர்யங் மநுஷ்யஸ்தா₂வராதி₃களிலே அந்தராத்ம

---

வனே! இவ்வர்த்த₂த்தை ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை நீயே அறிந்தருளவேணும். இப்படி தேவர் திருவுள்ளத்துக்கு கற்க ஸர்வமும் ப்ரகாரமாயற்ற பின்பு ஸர்வலோகப்₃த₄வாச்யத்வம் தேவர்க்கே கூடுவதொன்றென்கை. "உகத்தில் ஒருநான்று நீயுயர்த்தி" என்று — ஒரு நாளாக வந்து க்ருதத்ரேதாதி₃ யான யுகா₃ந்தோறும் தத்தத்யுக₃வர்த்திகளான சேதனர்க ளுடைய ருச்யநுரூபமான விக்₃ரஹங்களைப் பரிக்₃ரஹித்துக்

---

னுடைய கிரணஸ்தா₂னத்திலே ப்₃ரஹ்மருத்₃ரர்களும் ஸூர்யனுடைய ஸ்தா₂னத்திலே நீயுமிருந்துகொண்டு உலகங்களாகிற நீரை, அவர்களை உபகரணமாகக் கொண்டு உள்வாங்குவதும், வெளி யிடுவதும் செய்கிறாய். இப்படி நீயே ஸ்ருஷ்டிஸ்தி₂திஸம்ஹாரங்க ளாகிற முத்தொழிலையும் செய்கிறாய் என்பதை உன்னுடைய ஸர் வாத்மபா₄வத்திலிருந்தே அறியலாம் என்கிறார் அடுத்தபடியாக: (அருநான்கும் ஆனாய்) தே₃வர், மனுஷ்யர், திர்யக், ஸ்தா₂வரம் என்னும் நாலுவகைப்பட்ட சரீரங்களிலுமிருக்கும் அருபியான ஜீவனாகவும் ஆனாய் நீயன்றோ என்றபடி. சரீராத்மபா₄வத்தைக் காரணமாகக்கொண்டது ஸாமாநாதி₄கரண்யம் (ஒரே வேற்றுமை யில் படிப்பது). 'நான்கும்' என்கிறவிடத்திலேயுள்ள உம்மையால் அசித்தாகவுமிருப்பவன் இவனே என்று உணர்த்தப்படுகிறது. "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்₃தி₄" [(சரீரமும்) ஜீவனும் நானே யென்றறி] என்றாப்போலே, "நான்கும் அரு ஆனாய்" என்று கொண்டு, தே₃வமனுஷ்யதிர்யக் ஸ்தா₂வரங்களாகிற நான்கிலும் அந்தராத்மாவானாய் என்று பொருள்கொள்வாருமுண்டு. ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் செய்வதுபோலே அந்தர்யாமியாயிருந்து ரக்ஷிப் பவனும் நீயேயென்கை. "அந்தராத்மதயா ப்ரகாசித்து நின்ற" என்று ஆச்சான்பிள்ளை வியாக்கியானம் காண்கிறது. "ப்ரவேசித்து நின்ற" என்று பாட₂மிருந்தால் நன்று. (அருநான்குமானாய்) "விச்வாத்மாநம் பராயணம்" "அந்தர்ப₃ஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:" [அவையெல்லாவற்றையும் உள்ளும் புறமும் வியாபித்து நிற்கிறான் நாராயணன்] "ஸர்வபூ₄தாந்தராத்மா நாராயண:" என்று உபநிஷத்துக்கள் ஓதியது உணரத்தக்கது.

துயா ப்ரகாசித்து நின்ற, (நீயே அறி) இவ்வர்த்த₂ம் வேறொருவர் அறிவாரில்லை. தேவரீரே அறிந்தருளவேணும் என்கை. 5.

---

கொண்டு வந்து அவதரியாநிற்றி என்னவுமாய், உன் பரத்வத்தைப் பொருதவர்கள் உன் கையிலே ஹிரண்யன் பட்டது படுவர் என்று அறிவிக்கைக்காக ஹிரண்யவத₄ வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார். 5.

---

(நீயே அறி) இவ்விருள்தருமா ஞாலத்திலே இவ்வர்த்தத்தை உபதேசித்தாலும் அறிவாரில்லை. தேவரீரே அறிந்தருளவேணும் என்கிறார். "நீயே அருநான்குமானாய்" "நீயே அறி" என்று இரண்டுவிதமாகவும் அந்வயிக்கலாம். "உன் பரத்வத்தைப் பொருதவர்கள் உன் கையிலே ஹிரண்யன் பட்டது படுவர் என்று அறிவிக்கைக்காக ஹிரண்யவத₄ வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார்" என்று அப்பிள்ளையுரை.

'உயர்த்தி என்று—அவதரித்தி என்றுமாம்' என்னும் ஸ்ரீஸூக்தி களிலிருந்து பாசுரத்தின் பிற்பகுதிக்கு வேறொரு யோஜனையும் உண்டென்று தோற்றுகிறது. அதாவது:— முந்திய பாட்டிலே பகவானுடைய பரத்துவத்தை ஆழ்வார் பேசியவுடன் "பல பிறவிகளெடுத்துப் படாதன பட்ட நாராயணன் எப்படிப் பரம் பொருளாவான்" என்று சிலர் க்ஷேபிக்க, "ஆஸ்ரிதவ்யாமோஹத் தாலே இவனெடுக்கும் பிறவிகளும் இவனுக்குப் பெருமையைத் தருமேயொழிய, தாழ்வைத் தராது" என்கிறார் இப்பாட்டில். (உகத்தில்) ஒவ்வொரு யுக₃த்திலும், "ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃" [ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கிறேன்] என்று தானே கீதையில் அருளினானன்றோ. (ஒரு நான்று) ஒவ்வொரு ஸமயங்களில். "யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர் ப₄வதி பா₄ரத. அப்யுத்தா₂நம த₄ர்மஸ்ய" [எப்போது த₄ர்மத்திற்கு வாட்டமும், அத₄ர்மத்திற்கு எழுச்சியும் ஏற்படுகிறதோ (அப்போது அவதரிக்கிறேன்)] என்று உன்னாலேயே சொல்லப்பட்ட சமயங்களில், (நீ உயர்த்தி) நீ அவதரிக்கிறாய். அவதரிப்பதே அவனுடைய ஸ்வரூபாதி₃களுக்கு உயர்வாகிறது. "ஸ உ ஸ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [அவன் பிறந்த பின்பே மேன்மையை அடைகிறான்.] "பலபிறப்பாய் ஒளிவரு முழுநலம்" என்றதன்றோ. (உயர்த்தி அருநான்குமானாய்) அவதரிக்கும்போது தே₃வமநுஷ்யதிர்யக்ஸ்தா₂வரமாகிற எல்லா யோனிகளும் ஆகிறாய். (உள்வாங்கி) அவதாரப்ரயோஜனம்

5. அறியார் சமண ரயர்த்தார் பவுத்தர்
சிறியார் சிவப்பட்டார் செப்பில்- வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார்
ஈனவரே யாதலா லின்று.

**சமணர்**—ஜைநர்கள், **அறியார்**—உண்மையை அறிய மாட்டார்கள்; **பவுத்தர்**—பௌத்தர்கள், **அயர்த்தார்**—பிரமித்தார்கள்; **சிவப்பட்டார்**—சைவமதஸ்தர்கள் **சிறியார்**—மிகவும் தாழ்ந்தவராகியொழிந்தனர்; **செப்பில்**—(இவர்களுடைய தன்மைகளைச்) சொல்லப்புகுந்தால், **வெறி ஆய**—பரிமளமே வடிவெடுத்தது போன்றுள்ளவனும், **மாயவனை**—ஆஶ்சரியமான குணசேஷ்டிதங்களையுடையவனும், **மால் அவனை**—(அடியார்திறத்தில்) அன்புள்ளவனும், **மாதவனை**—திருமகள் கொழுநனுமான எம்பெருமானை, **ஏத்தாதார்**—(இவர்கள்) துதிக்கமாட்டாதவர்களாயிராநின்றார்கள்; **ஆதலால்**—ஆகையினாலே, **இன்று**—இப்போது, **ஈனவரே**—(இவர்கள்) நீசர்களேயாவர்.

**பெரி-அவ:-(அறியார்) 'வேறொருத்தர் அறிவாரில்லையோ?' என்ன, 'பாஹ்யகுத்ருஷ்டிகளால் அறியப்போமோ' என்கிறார்.**

---

**அவ:**—"நீயே அறி" என்கைக்கு நம்மையொழிய வேறொருவரும் இவ்வர்த்தம் அறிவாரில்லையோவென்ன,

---

முடிந்ததும் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளுகிறாய். (நீயே அறி) "நாவேதவிந்மநுதே" [வேதமறியாதவன் (அவன் பிறப்பின் பெருமையை) அறியான்] "அவஜாநந்தி மாம் மூடா:" [மூடர்கள் (மனிதவுருவுடனிருக்கும்) என்னை அவமதிக்கிறார்கள்] என்று சொல்லப்பட்டவர்கள் இவ்வர்த்தத்தை அறியார்கள். "தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்" [அவனுடைய பிறப்பை தீரர்களே அறிவார்கள்] என்று சொல்லப்பட்டவர்கள் அரியராயுள்ளனர். ஆகையால் இவ்வர்த்தத்தை நீயே அறியவேணும் என்கிறார். முந்தின யோஜனை பரத்துவத்தை விவரிப்பது; பிந்தியது ஸௌலப்யத்தை விவரிப்பது. 5.

6. திவ்ய-அவ:—"நீயே அறி" என்று ஆழ்வார் அருளியவுடன், "இப் பரந்தவுலகிலே வேறொருவரும் இதை அறிவாரில்லையோ?"

வ்யா:— (அறியார் சமணர்) "स्यादस्ति स्यान्नास्ति" (ஸ்யாத₃ஸ்தி ஸ்யாந்நாஸ்தி) என்று அநேகாந்தமாகக்

---

நிர்தோ₃ஷ ப்ரமாணமான வேத₃த்தை இல்லைசெய்தும், வேத₃வேத்₃யரான தேவரை இல்லைசெய்தும் போருகிற பா₃ஹ்யகுத்₃ருஷ்டிகளாலே தேவரை அறியப்போமோ? என்கிறார்.

உரை:—"स्यादस्ति स्यान्नास्ति"(ஸ்யாத₃ஸ்தி ஸ்யாந்நாஸ்தி) இத்யாதி₃யான ஸப்தப₄ங்கி₃குஸ்ருதியை அங்கீ₃கரித்துக் கொண்டு த்₃ரவ்யபர்யாயரூபமான ஸத்துமாய், அஸத்துமாய், நித்யமுமாய், அநித்யமுமாய், ஏகமுமாய், அநேகமுமாய்க் கொண்டு ஸமஸ்தஜக₃த்தும் அநேகாந்தமாயிருக்குமென்று

---

என்று ப₄க₃வான் திருவுள்ளமாக. "அறியாத சமணரும், அயர்த்த பவுத்தரும், சிறியாரான சிவப்பட்டாருமாக, இப்படி வேத₃பா₃ஹ்யரும் குத்₃ருஷ்டிகளும் மலிந்துகிடக்கும் இவ்வுலகில் உன்னை உள்ளபடி அறிவார் யார்?" என்கிறார் இப்பாட்டில். "முதலாழ்வார்களைப்போலே ப₄க₃வத்பரர்கள் பலரும் இருந்திருக்கக்கூடுமே. அப்படியிருக்க ஒருவருமில்லைபோல் இங்கு இவர் பேசுகைக்குக் காரணமென்?" எனில்: "பரமபுருஷஜ்ஞானிகள் முதலாழ்வார்களைப்போலே ஒருவரிருவர் உண்டாகிலும், அறியாரும், அயர்த்தாரும், சிறியாருமே மிகுந்திருக்கிறார்களே" என்னும் வயிற்றெரிச்சலாலே பேசுகிறாராகையாலே விரோத₄மில்லை.

வ்யா:— (அறியார் சமணர்). "ஸ்யாத₃ஸ்தி, ஸ்யாந்நாஸ்தி, ஸ்யாத₃ஸ்தி ச நாஸ்தி ச, ஸ்யாத₃ஸ்தீதி வக்தவ்யம், ஸ்யாந்நாஸ்தீதி வக்தவ்யம், ஸ்யாத₃ஸ்தி ச நாஸ்தி சேதி வக்தவ்யம், ஸர்வதா₂ அவக்தவ்யம் ச" [(பதா₃ர்த்த₂ங்கள்) 1. இருக்கவும் இருக்கலாம்; 2. இல்லாமலும் இருக்கலாம். 3. இருப்பதாகவும், இல்லாததாகவுமிருக்கலாம். 4. இருக்கலாமென்றும் சொல்லலாம்; 5. இல்லாமலிருக்கலாமென்றும் சொல்லலாம். 6. இருக்கலாமென்றும், இல்லாமலிருக்கலாமென்றும் சொல்லலாம். 7. எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம்.] என்று ஸப்தப₄ங்கி₃கள் எனப்படும் ஏழு வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு எல்லா வஸ்துக்களும் எப்படிவேண்டு

கொள்கையாலே ஆர்ஹதர் தத்வம் உள்ளபடி அறியார். (அயர்த்தார் பவுத்தர்) ப்ரதிஸந்தா,நம் பண்ணுகைக்கு ஓர் அநுப,விதாவைக் கொள்ளாமையாலும், ஜ்ஞாநத்தை க்ஷணிக

தோற்றிற்றுச் சொல்லுகிற ஆர்ஹதர் தத்வஸ்தி,தியை முதலிலே அறியார்கள். ஜ்ஞாத்ருஜ்ஞேயங்கள் க்ஷணிகமென்றும், 'ஸ்தி,ரனாயிருப்பானோராத்மா இல்லை; க்ஷணிகஜ்ஞான ஸந்ததியே ஆத்மா' என்றும் பேய்க்கத்துக் கத்துகிற

மானாலும் இருக்கலாம் என்றுரைக்கும் சமணர் ஒரு தத்துவத்தையும் உள்ளபடி அறியார்கள். "ஒரு சமயத்தில் 'குடம் இருக்கிறது' என்று தோன்றுவதால் இருக்கிறதாகவும் இருக்கலாம்; ஒரு சமயம் 'குடம் இல்லை' என்று தோன்றுவதால் இல்லாததாகவுமிருக்கலாம்; இரண்டுபடியாகவுமிருக்கலாம்; இப்படிப் பலபடியாகவும் உலக வழக்கு காண்கிறதாகையால் எப்படிவேண்டுமானாலும் சொல்லலாம்" என்று இப்படிக் குதர்க்கம் செய்யும் தர்க்கச் சமணரன்றோ இவர்கள். (அறியார் சமணர்) 'என் தாய் மலடி' என்னுமாப் போலே பரஸ்பரவிருத்,த,மாகப் பேசும் ஜைநர்கள் அறிவுகேடர் என்னுமிடம் சொல்லவும் வேண்டுமோ? இவ்விடத்தில்,

அங்கீ,க்ருத்ய து ஸப்தப,ங்கி,குஸ்ருதிம் ஸ்யாத,ஸ்தி-
நாஸ்த்யாத்மிகாம்
விஸ்வம் த்வத்,விப,வம் ஜக,ஜ் ஜிநமதே நைகாந்தமாசக்ஷதே|
பி,ந்நாபி,ந்நமித,ம் தத,ா ஜக,து,ஷே வந்த்,யா
மமாம்பே,திவத்
தாத்நப்,ரஹ்மவிதே, ரஹ: பரமித,ம் ரங்கே,ந்த்,ர!
தே சக்ஷதாம் ||

[ஸ்ரீரங்க,நாத,ரே! "ஸ்யாத,ஸ்தி, ஸ்யாந்நாஸ்தி' இத்யாதி,யான ஸப்தப,ங்கி, என்னும் து,ர்மார்க்க,த்தை அங்கீ,கரித்து, தேவரீருடைய விபூ,தியான எல்லாவுலகையும் ஜைநமதத்தில் அநேகாந்தமாகச் (பலபடிப்பட்டதாகச்) சொல்லுகின்றனர். அதுபோலவே 'என் தாய் மலடி' என்றாற்போலே இவ்வுலகை பி,ன்னமாகவும் அபி,ன்னமாகவும் சொன்ன நவீன ப்,ரஹ்மஜ்ஞானியான பே,தா,பே,த, வாதி,யிடம், அந்த ஜைநர்கள் (தங்களுடைய ஸப்தப,ங்கி,யாகிற) இந்தப் பரமரஹஸ்யத்தை உபதேசிக்கட்டும்.] என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளியது அநுஸந்திக்கத்தக்கது. (அயர்த்தார் பவுத்தர்) பௌத்தரும் அறிவுகெட்டவர்களே.

மாகக் கொள்ளுகையாலும், பௌத்தரும் தத்வஜ்ஞாநத்தில் அறிவுகெட்டிருப்பர்கள். (சிவப்பட்டார் சிறியார்) ப்ரமாணத்தை ஒருபடி கொண்டு, ப்ரமேயத்தை உள்ளபடி கொள்ளாமை யாலே ருத்ரஸம்பந்திகளானவர்களும் எளியார். (செப்பில்)

---

பௌத்தர், "நேற்றுக் கண்டதை இன்று நான் காணு நின்றேன்" என்கிற அபாதிதப்ரத்யபிஜ்ஞாபக ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தாலே ஸ்திரனைத் தோற்றுகிற ஆத்மாவை யும், தத்தர்மமான ஜ்ஞானத்தையும், தத்விஷயமான ஜகத்தையும், உள்ளபடி அறியாமல் மறந்தார்கள். வேதத்தை ஒரு வகையாலே ப்ரமாணமாக அங்கீகரியா நிற்கச்செய்தேயும், ஸ்ருஜ்யத்வாதிகளினாலே அநீஶ்வரனாக ஸம்ப்ரதிபன்னனான ருத்ரனைப் பரதத்வமாக உபபாதிக்கிற ஶைவமதநிஷ்டரானவர்கள் அதிக்ஷுத்ரராயிருப்பார் சிலர். இங்ஙன் பிரித்துச் சொல்லுகையின்றிக்கே இவர்களைத்

---

ஏனெனில்; அவர்கள் அறிபவனான ஜீவனையே ஒப்புக்கொள்ள வில்லை. அறிவையும் க்ஷணிகமாகக் கொண்டார்கள், இப்படிப் பட்டவர்கள் ஈஶ்வரனை அறிய ப்ரஸக்தியேயில்லையன்றோ. (சிவப் பட்டார் சிறியார்) சிவனிடத்திலே ஈடுபட்டவர்கள் அறிவில் சிறியா ராயினர். ப்ரமாணத்தை ஒருவிதமாக அங்கீகரித்தனர் இவர்கள். பௌத்தர்களையும், ஜைநர்களையும் போலன்றிக்கே வேதத்தை ப்ர மாணமாக அங்கீகரித்தனர். ஆனால் அத்துடன் கூட மோஹந ஶாஸ்த்ரங்களான ஆகமங்களையும் ப்ரமாணமாகக் கொள்ளுகை யாலே ப்ரமாணத்தால் அறியப்படும் ப்ரமேய வஸ்துவை உள்ளபடி அறியமாட்டாதவராயினர். நிமித்தகாரணமும், உபாதான காரணமுமாயிருப்பவன் ஸர்வேஶ்வரனே என்று எல்லா வேதங் களும் ஓதியிருக்க, அவன் நிமித்தகாரணம் மட்டுமேயென்றனர். ஸர்வேஶ்வரன் யாரென்று நிர்ணயிக்கும் விஷயத்திலும், நாராயணனை விட்டு நரன் ஒருவனைப் பிடித்தனர்; ராஜாதிராஜனிருக்க பிக்ஷு வைப் பற்றினர்; புண்டரீகாக்ஷனிருக்க விரூபாக்ஷனைக்கொண்டனர். ஆகையால் இவர்களும் சிற்றறிவினரேயாயினர்.

(செப்பில்) இவர்களைப் பேசப்புகுந்தால், அதிநிஹீனர்களான இவர்களைப்பற்றிப் பேசுவதும் வெறுக்கத்தக்கதாயுள்ளது.

இவர்களைப்பேசில். (வெறியித்யாதி,) நிரதிஶயபோ₄க்₃யனாய், ஆஶ்சர்யபூ₄தனாய், வ்யாமுக்₃த₄னாய், ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனை. (ஏத்தாதாரீனவரே) அவர்கள் ஏத்தாமையாலே தண்ணி

---

திரளச் சொல்லப்பார்க்கில், "ஸர்வக₃ந்த₄:" (ஸர்வக₃ந்த₄:) என்னும்படி பரிமளம் ஒருவடிவுகொண்டாற்போலே நிரதிஶய போ₄க்₃யனாய், கு₃ணசேஷ்டிதங்களாலே ஆஶ்சர்யபூ₄தனாய், ஆஶ்ரிதவ்யாமுக்₃த₄னாய், ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனை இவ்விவ ஸ்வபா₄வங்களைச் சொல்லி ஸ்துதிக்கமாட்டார்கள். நிர்பா₄க்₃யரான இவர்கள் இப்படி ஏத்தப் பெருமையாலே

---

ஸாத்விகர்களையும் கோபமடையச்செய்யும் வார்த்தைகளையும் ஆசாரங்களையும் உடைய இவர்களைப்பற்றிப் பேசுவதும் பகவத்பக்தர்களுக்குப் பரிஹரணீயமாகவேயுள்ளது. ஆயினும் உண்மையைப் பிறர்க்கு உணர்த்தவேண்டி இவர்களைப் பேசப்புகுந்தால், (வெறி ஆய) "ஸர்வக₃ந்த₄:" [எல்லா க₃ந்த₄ங்களையுமுடையவன்] என்று வேதங்களும் புகழ்ந்தபடியே ஸுக₃ந்த₄ங்களெல்லாம் ஓர் வடிவெடுத்ததுபோலேயிருப்பவன். இத்தால் இவனுடைய நிரதிஶய போ₄க்₃யத்வம் [அநுப₄விக்கத் தகுந்தவைகளில் மிகச்சிறந்ததாயிருக்கும் தன்மை] சொல்லப்பட்டது "புஷ்பாதி₃களுக்குக்கூட க₃ந்த₄முள்ளதே; அதுகொண்டு ஏற்றமுண்டோ ?" என்ன,— (மாயவனை) ஆஶ்சர்யபூ₄தனை; ஆஶ்சர்யத்தை விளைக்கும் ஸ்வரூபரூப கு₃ணவிபூ₄திகளை உடையவனை. ஆஶ்சர்யகரமாயிருப்பதால் மாயை எனப்படும் ப்ரக்ருதியை நியமிப்பதால் மாயவன் எனப்படுபவனை என்றும் கொள்ளலாம். "மாயாம் து ப்ரக்ருதிம் வித்₃யாந்மாயிநம் து மஹேஶ்வரம்" [ப்ரக்ருதியை மாயையென்றும், மஹேஶ்வரனை மாயியென்றும் அறியக்கடவன்] என்னும் வேத₃வாக்யத்தை நினைப்பது.

ஆஶ்சர்யபூ₄தனாயிருந்தாலும், இரக்கமற்றவனாயிருப்பனோ? என்ன, (மாலவனை) அடியாரிடத்தில் அன்பே வடிவெடுத்தவனாயிருப்பவனை. (மாதவனை) இவ்வளவுக்கும் மேலே லக்ஷ்மீநாத₂னாயிருப்பவனை. ஆஶ்ரிதவ்யாமோஹத்திற்கு கு₃ருகுலவாஸம் பண்ணினவிடம். (ஏத்தாதார்) துதிக்காதவர்களாயுள்ளனர். (ஆதலால் ஈனவரே இன்று) இவர்கள் ஏத்தாமையாலே இப்போது நிஹீனர்களாகவே யுள்ளனர். (வெறியாய...ஏத்தாதார் ஈனவரே) ஒப்பற்ற போ₄க்₃ய

யரே. ஹீநரென்றும், அஹீநரென்றும் நான் ப்ரதிபாதி,க்க வேணுமோ ? என்கிறார். 6.

7. இன்றாக நாளையே யாக இனிச்சிறிது
நின்றாக நின்னருளென் பாலதே - நன்றாக
நானுன்னை யன்றி யிலேன்கண்டாய் நாரணனே
நீயென்னை யன்றி யிலை.

நாரணனே - நாராயணனே! இன்று ஆக—இன்றைக்காகவுமாம்; நாளையே ஆக — நாளைக்காகவுமாம்; இனி சிறிது நின்று ஆக - இன்னம் சிறிது காலம் கழித்தாகவுமாம்; (என்றைக்கானாலும்) நின் அருள்— உன்னுடைய கிருபை. என் பாலதே — என்னையே விஷயமாக உடையதாகும்; நன்று ஆக - நிச்சயமாக, நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நான் உன்னையொழியப் புகலில்லாதவன்காண்; நீ — நீயும், என்னை அன்றி இலை—என்னையொழிய வேறொரு ரக்ஷ்யனை உடையையல்லைகாண்

இப்போது ஹேயராயிருக்குமவர்களே; இதில் ஒரு ஸம்ஶய மில்லை என்கை. 6.

அவ:— " ஈனவரே " என்று அவர்களை நிக்ரஹித்து வார்த்தை சொல்லாநின்றீர். உமக்குத் தான் ஏற்றமென்?

வஸ்துவைத் துதிக்காதார் உயர்ந்தோராவரோ? (மாயவனை ஏத்தாதார் ஈனவரே) ஆஶ்சர்யபூதனைப் புகழாதவர் அறிவிற் சிறந்தோராவரோ? (மாலவனை ஏத்தாதார் ஈனவரே) அன்புருவனைப் போற்றாதார் நன்னெஞ்சராவரோ? (மாதவனை ஏத்காதார். ஈனவரே) காருண்யரூபையான இவள் ஸம்பந்தத்தைப் பார்த்தும் புகழாதவர் ஹீனர்கள் என்பதைச் சொல்லவும் வேணுமோ? (இன்று ஈனவரே) காலாந்தரத்திலே இவர்கள் பகவத்பரர்களாகி உத்க்ருஷ்டராவதற்கு யோக்யதையுண்டாகையாலே 'இப்போது ஹீனராகவேயுள்ளனர்' என்கிறார். 6.

7. திவ்ய-அவ:— "எவர் எக்கேடுகெட்டாலென்ன? பிரானே! நான் உன் அருளைப் பெறுவது நிஶ்சயம்" என்று ஸந்துஷ்டராகிறார் இப்பாட்டில்.

பெரி-வ்யா:— (இன்றாக இத்யாதி,) இன்றாகவுமாம்; நாளையாகவுமாம்; சிறிது காலம் கழித்தாகவுமாம். காலவிளம்பமே. உன் ப்ரஸாதம் என் பக்கலிலே. (நன்றாக இத்யாதி,) கால விளம்பமென்றும், என் பக்கலிலென்றும்

---

என்று எம்பெருமான் கேட்க "ஒருவரையொழிய ஒருவர்க்குச் செல்லாதபடியான இரண்டு தலைக்கும் உள்ள உறவையுணர்ந்து ஸர்வகாலமும் உன்னுடைய க்ருபைக்குப் பரிபூர்ணபாத்ரமான என்னுடைய ஏற்றம் தேவர்க்குத் தெரியாதோ?" என்கிறார்.

உரை:— இன்று ஆகவுமாம், நாளை ஆகவுமாம், இன்னமும் சிறிதுகாலம் சென்று ஆகவுமாம், எப்போதாகிலும், வகுத்த ஶேஷியான உன்னுடைய க்ருபையானது ஶேஷபூதனான என்னிடத்திலே,வ்யக்த்யந்தரத்திலே பாலிபாய்தல்,

---

வ்யா:— (இன்றாக நாளையேயாக இனிச்சிறிது நின்றாக நின்னருள் என் பாலதே) இன்றே, நாளையோ, அல்லது இன்னம் சில நாள் கழிந்தபின்போ உன்னுடைய அருள்வெள்ளம் என் மேல் ஏறிப்பாயவே போகின்றது. காலதாமதமேயொழிய, உன்னுடைய அருள் என்னிடத்திலே வெள்ளமிடப்போகிறதென்பது திண்ணம். இப்படிச் சொல்லக் காரணமென்? என்ன,— (நன்றாக நானுன்னையன்றியிலேன் கண்டாய்) நிச்சயமாக நான் உன்னையொழிய வேறொரு கதியற்றவன். அன்றிக்கே, 'நன்றாக நான்' என்றது 'நன்றாகவுள்ள நான்' என்றதாகவுமாம்; உன்னையொழிய வேறொரு கைம்முதலற்றவனாயிருக்கையாகிற நன்மையையுடைய நான் என்றபடி. உன்னையும் வேறொன்றையும் நான் பற்றியிருந்தாலன்றோ "ஏஷ பந்தா விதர்ப்பாணும் ஏஷ யாதி ஹி கோஸலாந்" [இது விதர்ப்பதேசம் போகும் வழி; இது கோஸல தேசத்திற்குச் செல்லும் வழி.] என்று நளன் தமயந்திக்கு வழி காட்டிப் போகவிட்டாற்போலே 'இது கர்மயோகம், இது ஜ்ஞாநயோகம், இது பக்தியோகம்' என்று நெறிகாட்டி நீக்குவது. 'நானே உபாயமாகிறேன் என்பதற்கு ப்ரமாணமுண்டோ?' என்ன,— (நாரணனே) நரஸமூஹமாகிற ஜீவர்களுக்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருப்பவன் என்பதைக் காட்டும் உன் திரு

சொல்லிற்று எத்தாலே யென்னில்; அகிஞ்சனனுக ஸம்ப்ரதி யன்னனுன எனக்கு உன்னையொழிய வேறொரு அபாஶ்ரய மில்லாமையாலே. (நாரணனே நீ என்னையன்றியிலை) பூர்ண

கதாாசித்கமாக ஊற்றுமாறுதல் செய்கையன்றிக்கே ஒரு படிப்பட்டுக் குறைவற உண்டாயிராநின்றதே. ஆகையாலே, அழகிதாக வெறுவியனாய் உனக்கு ஶேஷபூதனுன நான், பரிபூர்ணனாய் ஶேஷியான உன்னையொழிய ஸத்தையோடே

நாமமே இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் என்கிறர். நாராயண ஶப்தார்த்தம் இப்படியன்றே இருப்பது:—

"நாரஶப்தேந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே புதை: |
கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ||"

[நாரஶப்தத்தாலே ஜீவர்களுடைய ஸமூஹம் சொல்லப்படுகிறது. அவர்களுக்கு ப்ராப்யமாகவும், ப்ராபகனுகவுமாகிருனைகயால் நாராயணனென்று சொல்லப்படுகிறுன்.] (தானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே) "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:க்கித:" [மனிதர்கள் துன்புறும்போது அவர்களிலும் அதிகமாகத் துன்புறுகிறுன் ராமன்] என்று து:க்கியான என்னைக் காட்டிலும் என் துக்கத்தைப் பொறுக்கமாட்டாத உன்னையொழிய வேறொரு நாதனை உடையவனல்லேன். "உம்மிடம் ஓர் கைம்முதலில்லை என்கைக்காக உம்மிடம் நான் அருள்சுரந்தேயாக வேண்டுமோ?" என்ன,— (நாரணனே நீ என்னையன்றியிலை) உடையவனுன நீ உடைமையாகிற என்னை ஏற்றுக்கொண்டாலொழியப் பூர்ணனுகமாட்டாய். யாசகனைப் பெற்றாலன்றே கொடையாளிக்குப் பூர்த்தியுண்டாவது. அப்படியே குறைவாளனுகிற என்னை விஷயீகரித்தாலொழிய நீ நிறைவாளனுகமாட்டாய். (நாரணனே...) உன்னுடைய நாராயணத்வம் ஜீவிக்கவேண்டில் என்னிடம் நீ அருள்சுரந்தேயாகவேண்டும். ஆகையால் 'இன்றாக, நாளையேயாக இனிச்சிறிது நின்றாக நின்னருளென்பாலதே' என்று நான் சொன்னது பொருந்தியதேயாகும்.

"நதாஹம் த்வத்ருதே ந நாதவாந்
மத்ருதே த்வம் தயநீயவாந் ந ச |
விதிநிர்மிதமேததந்வயம்
பகவந் பாலய மா ஸ்ம ஜீஹப: ||"

ருன உனக்கு அபூர்ணனுன என்னையொழிய அபாஶ்ரயமில்லை. உன்னுடைய ஶேஷித்வஸ்வரூபத்தாலும் என்னுடைய ஶேஷத்வ ஸ்வரூபத்தாலும் விடப்போகாது. 7.

---

கூடிப் பிழைத்திருக்குமவனல்லேன்; நீயும் என்னையொழிய ஶேஷியுமாய்ப் பரிபூர்ணனுமாய்க்கொண்டு உளனுமவனல்லை. இப்படியிருப்பதொன்று உண்டோ? என்னில், உன்னையொழிந்த வஸ்துக்களடங்கலும் உனக்கு ப்ரகாரமாய், நீ ப்ரகாரியாயிருக்கையாலே நாராயணனென்னும் திருநாமத்தையுடையவனே! நீ ப்ரகாரியும் நான் ப்ரகாரமுமாகிற இஸ்ஸம்பந்தத்தை அறிவிக்கிற நாராயண பதமே இதில் ப்ரமாணமென்னுமிடத்தைப் பார்த்துக்கொள்கிடாய். 7.

---

[ஆகையால் நான் உன்னையொழிய வேறொரு நாதனை உடையேனல்லேன்; நீயும் என்னையொழிய வேறொரு தயாபாத்திரத்தை உடையையல்லை. இந்த ஸம்பந்தம் உன்னுடைய கேவலக்ருபையாலே ஏற்பட்டது. ஸர்வஜ்ஞனே! இதை ரக்ஷித்தருளுவதாக. கைவிடவேண்டாம்.] என்று ஆளவந்தார் இப்பாட்டில் சொன்ன அர்த்தத்தை அநுஸந்தித்தருளினர். 7.

[இப்பாட்டுக்கு வேறொரு வகையாகவும் அவதாரிகையும் வியாக்கியானமுமுண்டு. கீழே காண்க.]

அவ:— "ஆழ்வீர்! பிறர் இருக்கும்படிக்கு ஒரு பாசுரம் சொன்னீர்! நீருள்ளபடியை ஒரு பாசுரமிட்டுப் பேசலாகாதோ?" என்று எம்பெருமான் கேட்க, "பிரானே! நான் மேல்வீடு பெறுவது என்றேனுமாக. உன் அருளை இன்றே பெற்றுவிட்டேன். உன்னைப் பிரிந்தால் நான் ஸத்தையை இழக்கும்படியாகவும், என்னைப் பிரிந்தால் நீ ஸத்தையை இழக்கும்படியாகவும், இப்படிப் பரஸ்பரம் அன்புடையரானோம். இனி, எனக்கென்ன குறைவு?" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (இன்றாக நாளையேயாக இனிச்சிறிது நின்றாக நின்னருளென்பாலதே) நான் பரமபதத்திலே உன்னைக் கிட்டுவது இன்றேயாகவுமாம், நாளையேயாகவுமாம், இன்னும் சிறிது காலம்

கழித்தாகவுமாம்: அதைப்பற்றி எனக்கொரு கவலையில்லை. ஏனெனில்: (நின்னருள் என்பரலதே) உன்னுடைய அருளை நான் பெற்றுவிட்டேன். 'இதை எப்படி அறிந்தீர்' என்ன, (நன்றாக நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே) பிரானே! உன்னைப் பிரிந்தால் ஆத்மநாசம் அடையும்படியான தசையை அடைந்தேன் நான். (நீ என்னையன்றியிலை) என்னைப் பிரிந்தால் 'இல்லை' என்னும்படியான தசையை நீயும் அடைந்தாய். ஆகையால் உன் அருள் என்னிடம் பரிபூர்ணமாகப் பாய்ந்து விட்டது. இனி பரமபதத்தை நான் இன்று பெற்றாலென்ன? என்று பெற்றாலென்ன? என்று ஸந்துஷ்டராகிறார்.

"என்னதாவிமேலையாய் ஏர்கொளேழுலகமும்
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய்
உன்னதென்னதாவியும் என்னதுன்னதாவியும்
இன்னவண்ணமேநின்றாய்! என்றுரைக்கவல்லலேனே"
[திருவாய் 4-3-8]

என்ற பாட்டிலே நம்மாழ்வாருக்குள்ள நிலை இப்பாட்டிலே இவ ருக்கு ஓடுகிறது. "நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னையன்றியிலை" என்னுமடிகள் "உன்னதென்னதா வியும் என்னதுன்னதாவியும்" என்னுமடிகளுடன் பொருந்தியிருப் பதைக் காண்பது. "உன்னதென்னதாவியும்" என்றவிடத்தை ஆளவந்தார் நிர்வஹிக்கும்போது, 'இவ்வாத்மாவின் ஸ்வரூபம் அவனிட்டவழக்கென்றால் கூடும். அவன் ஸ்வரூபம் இவ்னிட்ட வழக்காகையாவது என்?" என்று சிலர் கேட்க "இவன் (ஜீவன்) தன்னை அவனுக்காக்குவன் என்றவன்று கர்மம் தகையவும் கூடும். ஸர்வேஸ்வரன் தன்னை இவனிட்ட வழக்காக்குமன்று நிவாரகர் (தடுப்பார்) இல்லை; ஆனபின்பு அதுவே நிலைநிற்பது. இன்னமும் இவன் (ஜீவன்) ஸ்வரூபம் அவனிட்ட வழக்காகக் கூடுமோ? என்று இதிலே காணும் ஸந்தேஹிக்கவேண்டுவது" என்றருளின் றென்னும் ஐதிஹ்யம் இங்கும் அநுஸந்திக்கத்தக்கது "நீயென்னை யன்றியிலை" என்றவிடத்தில் "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" [ஞானியோவெனில், எனக்கு ஆத்மாவாகவேயிருக்கிறான் என்று என் ஸித்தாந்தம்] என்றும், "மம ப்ராணா ஹி பாண்டவா:"[பாண்ட வர்கள் எனக்கு ப்ராணனாகவேயிருக்கின்றனர்.] என்றும் பகவான் தானே அருளிச்செய்த பாசுரங்கள் அநுஸந்திக்கத்தக்கவை.

8. இல்லை துணை மற்றென் னெஞ்சே ஈசனை வென்ற
சிலைகொண்ட செங்கண்மால் சேரா—குலைகொண்ட
ஈரைந் தலையா னிலங்கையை யீடழித்த
கூரம்ப னல்லால் குறை.

என் நெஞ்சே—எனது மனமே!, ஈசனை வென்ற—ருத்ரனை ஜயித்த. சிலைகொண்ட—வில்லை தரித்த. செம் கண் மால்—புண்டரீகாக்ஷனாகிய தன்னை. சேரா—பணிந்து உய்வுபெற மாட்டாதொழிந்த. குலைகொண்ட ஈரைந்தலையான்—கொத்துப்போலே நெருங்கிக்கிடந்த பத்துத் தலைகளையுடையவனான இராவணனுடைய. இலங்கையை—லங்காபுரியை. ஈடு அழித்த—சீர்கெடுத்த. கூர் அம்பன் அல்லால்—கூர்மை தங்கிய அம்புகளையுடையவனான இராமபிரானைத் தவிர்த்து. குறை—(நாம்) குறைபடும் காலங்களில், மற்று துணை—வேறொரு துணைவன். இலை—நமக்கு இல்லை.

---

"நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே" என்றவிடத்தில் "நாராணாம் அயநம் ய: ஸ:" [நரஸமூஹங்களுக்கு இருப்பிடமாயிருப்பவன்] என்னும் தத்புருஷஸமாஸார்த்தமும், "நீ என்னையன்றியிலே" என்றவிடத்தில் "நாரா: அயநம் யஸ்ய ஸ:" [நரஸமூஹங்கள் எவனுக்கு இருப்பிடமோ அவன் நாராயணன்] என்னும் பஹுவ்ரீஹி ஸமாஸார்த்தமும் சொல்லப்படுவதாகவும் உரைப்பர். நாரணனே! என்னும் பதத்திற்கு முன்னும் பின்னும் நாராயணஶப்தத்திற்குள்ள பொருள்களெல்லாம் அனுஸந்திக்கப்படுகின்றன. "நாரணனே நீ என்னையன்றியிலே" என்றதாலே "நானாகிற உன்னிடம் ஸம்பந்தம் பெற்ற என்னையே நீ இருப்பிடமாகவும், ப்ராப்யமாகவும் கொண்டிருக்கிறாய்; அதனாலேயே நாராயணனாகிறாய்" என்பதோர் பொருளும் தோற்றுகிறது. "நண்ணித்தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா" என்று பெரியாழ்வாரும் நாராயணஶப்தத்திற்கு இப்படி பொருள் கொண்டாரன்றோ. 7.

8. அவ:—"(தம் வீட்டுச் சமையலறையில்) புகைந்தால் (அதாவது,—சமைக்கப்பட்டால்) உண்பது, இல்லையேல் பட்டினிகிடைப்பது"—என்னும் கொள்கையுடைய சில அறிவிலர்களைப்போல் நீரும் "நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே" என்று சொல்லலாமோ? வேறு சிலரைக்கொண்டு காரியங் கொள்ளலாகாதோ?

பெரி-அவ:— (இலே துணை) "புகையில் உண்பன் என்று கொண்டு சொல்லி, உனையொழிய வேறொன்று அறியேன் என்கிறதென்" என்னில், "வேறுள்ளது கழுத்துக் கட்டியாகையாலே" என்கிறார்.

வ்யா:— (இலே துணை மற்று) ஸர்வேச்வரன் துணையென்கையன்று ஸாத்₄யம்; மற்றுள்ளார் துணையன்றென்கை. (என்னெஞ்சே) இவ்வர்த்த₂ம் சொல்லுகைக்குப் பாங்கான

அவ:-அவனையொழிய வேறோரபாஶ்ரயத்தை உடையேனல்லேன் என்கிறதென். வேறு சிலரைத் துணையாகப் பற்றினேலோ? என்று திருவுள்ளத்துக்குக் கருத்தாக. "த₃ஶரத₂ாத்மஜனையொழிய வேறு துணையாக வல்லாரில்லை காண்! உண்டாகில் கழுத்துக் கட்டிறுருண்டித்தனை காண் நெஞ்சே!" என்கிறார்.

உரை:—பண்டு ருத்ரனைத் தான் வென்ற வில்லை ஸ்ரீபரசுராமாழ்வான் கையினின்றும் தபஶ்ஶக்தியோடேகூட வாங்கிக் கொண்டவனாய், தே₃வவிரோதி₄களான ராவணாதி₃கள்

என்ன, செங்கண்மாலைத் தவிர வேறொருவரும் ரக்ஷகரல்லர்; ரக்ஷகரல்லாததோடன்றியில், அவன் செய்யும் ரக்ஷணத்திற்குத் தடையையும் செய்வர்' என்று தம் நெஞ்சை நோக்கிச் சொல்லுகிறார்.

வ்யா:— (இலைதுணை மற்று) எம்பெருமான் துணையென்று அறிவதுகூட அவ்வளவு முக்கியமன்று; மற்றவர்கள் துணையன்றென்று அறிகையே மிகவும் முக்கியமாகும். திருவடிதன் நாமம் மறந்தும் புறந்தொழாதிருப்பார்களாகில் வைஷ்ணவத்வஸித்₃தி₄யுண்டன்றோ. இத்தை அடியொற்றியன்றோ பிள்ளையுலகாசிரியரும் "அதிலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரத₄ாநம்" என்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்தார். (என் நெஞ்சே) இவ்வர்த்த₂த்தை நான் உபதேசிக்கக்கேட்கும்படி அநுகூலமாயிருக்கும் நெஞ்சே! (என் நெஞ்சே) "சஞ்சலம் ஹி மந:" [மனம் சஞ்சலமானது] என்னும் பிறர் நெஞ்சுபோன்றதன்றே நீ. "வேறொருவரும் துணையல்லரென்று சொல்லக்காரணமென்?" என்ன, "இவன்

நெஞ்சே! (ஈசனேயித்யாதி) வேறொருத்தர் துணையல்லர் என்றது—வேறொரு பூர்ணரில்லாமையால் என்கிறது. ருத்₃ரனை வென்ற த₄நுஸ்ஸைப் பிடித்தபுண்ட₃ரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன்

---

பக்கல் சீற்றத்தாலே சிவந்த திருக்கண்களையுடைய ஸர்

---

ஒருவனே பரமாத்மாவாகையால்" என்ன, "இவன் ஒருவனே பரமாத்மாவென்று நிர்ப்பந்திக்கலாமோ? ருத்₃ராதி₃களும் பரமாத்மாவாகச் சொல்லப்படுகின்றனரே" என்ன, 'ருத்₃ராதி₃களின் பரமாத்மத்வமிருந்தபடி கண்டீரே!" என்கிறார் அடுத்தபடியாக:—(ஈசனை வென்ற சிலை கொண்ட செங்கண்மால்) ருத்₃ரனை வென்ற வில்லைப் பிடித்த புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரன். இவ்விருத்தாந்தம் ஸ்ரீ ராமாயணத்தில் பா₃லகாண்ட₃த்தில் பரசுராமனால் ராமனுக்கு விவரிக்கப்பட்டுள்ளது.

"இமே த்₃வே த₄நுஷீ ஶ்ரேஷ்டே₂ தி₃வ்யே லோகாபி₄விஶ்ருதே |
த்₃ருடே₄ ப₃லவதீ முக்₂யே ஸுக்ருதே விஶ்வகர்மணா ||
அதிஸ்ருஷ்டம் ஸுரைரேகம் த்ர்யம்ப₃காய யுயுத்ஸவே |
த்ரிபுரக்₄நம் த₄நு: ஶ்ரேஷ்ட₂ம் ப₄க்₃நம் காகுத்ஸ்த₂ யத்
இத₃ம் த்₃விதீயம் து₃ர்த₄ர்ஷம் விஷ்ணோர் த₃த்தம் [த்வயா ||
ஸுரோத்தமை: |
தத்₃த₃ம் வைஷ்ணவம் ராம த₄நு: பரபுரஞ்ஜயம் ||
ஸமாநஸாரம் காகுத்ஸ்த₂ ரௌத்₃ரேண த₄நுஷா த்வித₃ம் ||
தத₃ா து தே₃வதா: ஸர்வா: ப்ருச்ச₂ந்தி ஸ்ம பிதாமஹம் |
ஶிதிகண்ட₂ஸ்ய விஷ்ணோஶ்ச ப₃லாப₃ல நிரீக்ஷயா ||
அபி₄ப்ராயம் து விஜ்ஞாய தே₃வதாநாம் பிதாமஹ: |
விரோத₄ம் ஜநயாமாஸ தயோ: ஸத்யவதாம் வர: ||
விரோதே₄ ச மஹத் யுத்₃த₄மப₄வத் ரோமஹர்ஷணம் |
ஶிதிகண்ட₂ஸ்ய விஷ்ணோஶ்ச பரஸ்பரஜிகீ₃ஷிணோ: ||
தத₃ா து ஜ்ரும்பி₄தம் ஶைவம் த₄நுர் பீ₄மபராக்ரமம் |
ஹுங்காரேண மஹாதே₃வ: ஸ்தம்பி₄தோ$த₂$ த்ரிலோசந: ||
தே₃வைஸ் தத₃ா ஸமாக₃ம்ய ஸர்ஷிஸங்கை₄ஸ் ஸசாரணை: |
யாசிதௌ ப்ரஶமம் தத்ர ஜக்₃மதுஸ் தௌ ஸுரோத்தமௌ ||

வந்து அவதரித்தவிடத்திலும் "ந நமேய்" (ந நமேயம்) என்று

---

வேஸ்வரனுய் — "ந நமேய்" (ந நமேயம்) என்கிற ஸ்வா தந்த்ர்யத்தில் உறைப்பாலே தன்னுடன் சேராதானுய்.

---

ஜ்ரும்பி₄தம் தத்₃த₄நுர் த்₃ருஷ்ட்வா ஶைவம்
விஷ்ணுபராக்ரமை: ।
அதி₄கம் மேநிரே விஷ்ணும் தே₃வாஸ் ஸர்ஷிக₃ணாஸ் ததா₃ ॥"

[ராம! தேவலோகத்தைச் சேர்ந்தவையாய், உலகமெங்கும் புகழ் பெற்றவையாய், சிறந்தவையாய், உறுதியுள்ளவையாய், ப₃லமுள்ள வையாய், ப்ரதா₄னமானவையான இவ்விரண்டு விற்களும் விஸ்வ கர்மாவினுல் நன்ருக நிர்மாணம் செய்யப்பட்டன. இவைகளில் ஒன்று (த்ரிபுர த₃ஹனகாலத்தில்) போர் செய்ய விரும்பிய முக்கண்ணனிடம் கொடுக்கப்பட்டது. திரிபுரங்களையும் எரிப்பதற்கு உபகரணமா யிருந்ததும், சிறந்ததுமான அந்த வில்லே உன்னுல் (ஜநகஸபை யில்) முறிக்கப்பட்டது. அணுகவும் முடியாததான இவ்விரண்டாவது வில் தே₃வஶ்ரேஷ்ட₂ர்களால் விஷ்ணுவுக்குக் கொடுக்கப்பட்டது. பர புரங்களை ஜயிக்கவல்ல இந்த வைஷ்ணவ த₄நுஸ்ஸானது சிவத₄நுஸ்ஸுடன் ஸமமான ப₃லத்தையுடையது. அப்போது தேவதைகள் அனைவரும் விஷ்ணு ஶங்கரர்களுடைய ப₃லாப₃லத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று பிரமதேவனை வினவினர்கள். ப்₃ரஹ்மஜ்ஞானிகளுள் சிறந்தவரான அந்த ப்₃ரஹ்மதே₃வர் விஷ்ணு ருத்₃ரர்களுக்குள் விரோத₄த்தை உண்டுபண்ணினுர். விரோத₄ முண்டாகிவிடவும், ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பிய சிவனுக் கும் விஷ்ணுவுக்கும் மயிர்க்கூச்செறியும்படியான பெரும் போர் விளைந்தது. அப்போது (திரிபுரமெரித்தல் முதலான) ப₄யங்கரமான செயல்களைச் செய்த சிவனுடைய வில் (விஷ்ணுவினுடைய) ஒரு ஹுங்காரத்தினுலேயே சிறிது முறிந்துவிட்டது. மஹாதே₃வனுன முக்கண்ணனும் (மூர்ச்சையடைந்து) கம்பமாய் நின்ருர். ருஷி ஸமூஹங்களோடும், சாரணர்களோடும் கூடிய தே₃வர்களால் ஒன்றுகூடி யாசிக்கப்பட்ட அவ்விரு தே₃வஶ்ரேஷ்ட₂ர்களும் ஸமா தா₄னத்தையடைந்தனர். அப்போது விஷ்ணுவின் பராக்ரமத்தால் சிவத₄நுஸ்ஸானது முறிபட்டதைக் கண்ணுலே கண்ட ரிஷிக₃ணங்க ளோடு கூடிய தே₃வர்கள் விஷ்ணுவே ஸர்வாதி₄கனென்று அறிந்தனர்.] என்பவை ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திலுள்ள சுலோகங்கள். இந்த

விருத்தாந்தத்தை நினைத்தே இங்கு "ஈசனை வென்ற சிலை கொண்ட செங்கண்மால்" என்று ஆழ்வார் அருளிச்செய்திருக்கிறார்.

இங்கு ஒரு சிறிய விசாரம்: சிவனுடைய வில் வலியுள்ளதா, விஷ்ணுவினுடைய வில் வலியுள்ளதா என்பதை அறிவதற்காகவே சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் சண்டை மூட்டப்பட்டதாகச் சிலர் கருதுகின்றனர். அக்கருத்து வால்மீகிராமாயண வாக்கியங்களுக்குப் பொருந்தாது. "ஶிதிகண்ட₂ஸ்ய விஷ்ணோஶ்ச ப₃லாப₃லநிரீக்ஷயா" [சிவனுடையவும், விஷ்ணுவினுடையவும் ப₃லாப₃லங்களை அறிவதற்காக] என்று ஸ்பஷ்டமாகவே ஆரம்பத்தில் சொல்லப்பட்டது. "ஸமாநஸாரம் காகுத்ஸ்த₂ ரௌத்₃ரேண த₄நுஷா த்விதₒம்" [விஷ்ணுவின் வில்லும் ருத்₃ரத₄நுஸ்ஸோடு ஒத்த ப₃லத்தையுடையது] என்று தெளிவாகவே சொல்லப்பட்டிருப்பதால் விற்களின் ப₃லாப₃லத்தைப் பற்றிய விசாரம் வர ப்ரஸக்தியில்லை. கடைசியிலும் "அதி₄கம் மேநிரே விஷ்ணும் தே₃வாஸ் ஸர்ஷிக₃ணாஸ் தத₃ா" [ரிஷிகணங்களோடு கூடிய தேவர்கள் விஷ்ணுவை ஸர்வாதி₄கனென்று அறிந்தார்கள்.] என்று விஷ்ணுவினுடைய ஸர்வாதி₄கத்வத்தைப்பற்றி ஸித்₃த₄ாந்தம் செய்யப்பட்டது. ஆகையால், விற்களின் ப₃லாப₃லத்தையறிவதற்காக யுத்தம் மூட்டப்பட்டது என்னும் கருத்து வால்மீகியுகந்ததல்ல. [அக்கருத்து வேறு சில ராமாயணங்களிலுண்டு] நிற்க, வியாக்கியானத்தைத் தொடர்வோம். (ஈசனை வென்ற சிலை) "ஈஶோஹம்" என்னும் அபி₄மானத்தையுடைய ருத்ரனை வெற்றிகொண்ட சிலை. "கூருகிரேயறிந்ததல்லால் கோவே நீயறியாயால்" என்றாப்போலே இச்சிலையே அவனை ஜயித்தது என்று சொல்லும்படி அவ்வளவு விளையாட்டாக ருத்₃ரனுடன் போர்புரிந்தபடியை உணர்த்துகிறார். அன்றிக்கே "ஈசனை வென்ற செங்கண்மால்" என்றும் கூட்டலாம். (சிலை கொண்ட) வில்லை த₄ரிக்கும் காரியத்தையே எம்பெருமான் செய்தது. ஜயிக்கும் காரியத்தை வில்லே செய்துவிட்டது என்னும்படியிருக்கை. (செம் கண் மால்) ஈஶ்வரத்வத்தைக் காட்டும் சிவந்த கண்களையுடைய ஸர்வேஶ்வரன். "கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ" [ஸூர்யனால் மலர்ந்த செந்தாமரைபோன்ற இரு கண்கள் (அவனுக்குண்டு)] என்று புண்ட₃ரீகாக்ஷனன்றோ ஸர்வேஶ்வரனாக உத்₃கே₄ாஷிக்கப் பட்டான். (செம் கண் மால்) சிவந்த கண்களையுடையவனாய், ஆஶ்ரிதரிடத்தில் அன்பையுடையவனான ராமபிரான் என்றும் பொருள்கொள்ளலாம். "ராமோ ராஜீவலோசந:" "ராம: கமலபத்

"கொத்துத்தலைவன்" என்னும்படி பத்துத் தலையையுடைய ராவணனுடைய லங்கையை மூலையடியே வழிபோக்கின அம்பின் கூர்மையையுடைய சக்ரவர்த்தித் திருமகனையொழிய

---

"கொத்துத் தலைவன்" என்னும்படி திரண்ட பத்துத் தலையையுடைய ராவணன் உணர்ந்து நோக்குகிற — திக்பாலகர்களும் நெஞ்சுளுக்கும்படியான லங்கையை மூலையடியே வழிபோம்படி மிடுக்கறுத்த கூரிய திருச்சரங்களையுடைய

---

ராமஃ:" என்று செந்தாமரைக்கண்ணனுகச் சொல்லப்பட்டானன்றோ இவன். 'செம் கண்' ஐஶ்வர்யத்தையும் அன்பையும் காட்டும். 'மால்' என்னும் பதம் 'பெரியோன்' என்றும், 'அன்பன்' என்றும் பொருள்படும். (இலை துணை மற்றென்னெஞ்சே ஈசனை வெனு சிலைகொண்ட செங்கண்மால்) வெற்றிகொண்ட ஸர்வாதிகன் துணையாவனே. வெல்லப்பட்ட ஈசன் துணையாவனே என்று விசாரித்தாலாகாதோ? (செங்கண்மால் சேரா) ராமனும் அவதரித்த புண்டரீகாக்ஷனுகிய அந்த ஸர்வேஶ்வரனை வணங்காத.

"த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயந்து கஸ்யசித் ।
ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம: ॥"
[ரா-யு 36-11]

[இரண்டாகப் பிளக்கப்பட்டாலும் படுவேனே யொழிய இப்படி ஒருவருக்கும் வணங்கமாட்டேன். இது என்னுடன் பிறந்ததான தோஷம். (அவரவர்களுடைய) ஸ்வபாவம் மீறமுடியாதன்றோ.] எனறான்றோ அவன் சொல்லுவது. (செங்கண்மால் சேரா) அன்புடைக் கமலக்கண்ணனைக் கண்டபின்பும் அவன் திருவடியிலே முடியைச் சாய்க்காதவொரு வ்யக்தியிருக்கும்படியென்? (ஈசனை வென்ற.....செங்கண் மால் சேரா) அநுகூலராயிருக்குமவர்களும் தாமஸகுணத்தின் ஆதிக்யத்தாலே ஒவ்வொரு சமயம் எதிரம்பு நோக்கும்போது, ப்ரதிகூலர் எதிரம்புநோக்கச் சொல்லவேணுமோ வென்கை. இப்படி எம்பெருமானோடு பொருந்ாதவன் யாரெனில்: (குலைகொண்டஈரைந்தலையான்) கொத்துப் போலேயிருக்கும் பத்துத் தலைகளைக்கொண்ட ராவணன். 'கொத்துத்தலைவன் குடிகெடத் தோன்றிய" [பெரியாழ் (1-9-3)] என்றாரன்றோ பெரியாழ்வாரும். (ஈரைந்தலையான் இலங்கையை ஈடழித்த) 'லங்காம் ராவணபாலிதாம்' [இராவணனால் ரக்ஷிக்கப்படும் இலங்கையை] என்கிறபடியே அத்தகைய வலிமையை உடைய ராவணன் குறிக்கொண்டு ரக்ஷிக்கும்

நம்முடைய குறையில் வேறொருவர் துணையில்லை. * எம்பெருமானார் ஸ்ரீ பாதத்தை ஆஶ்ரயித்தவர்கள் அசேதநமான க்ரியா கலாபத்தினுடைய கூர்மையை விஶ்வஸித்திரார்கள். சக்ரவர்த்தித் திருமகன் அம்பின் கூர்மையையேயாயிற்றுத் தஞ்சமாக நினைத்திருப்பது. 8.

9. குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினான்
அண்டத்தான் சேவடியை யாங்கு.

---

சக்ரவர்த்தித்திருமகனையொழிய நம்முடைய குறைதீர்க்கைக்கு—எனக்குப் பாங்கான நெஞ்சே! வேறொரு துணை இல்லை. உபாஸகர் அசேதன க்ரியாகலாபத்தைத் தஞ்சமாக நினைத்திருப்பர்கள். ப்ரபன்னர் சக்ரவர்த்தித் திருமகன் கையில் அம்பின் கூர்மையைத் தஞ்சமாக நினைத்திருப்பர்கள். 8.

---

லங்காபுரியைக் கட்டுக்கோப்பு குலைந்து போகும்படி செய்த. (கூர்ம்பனல்லால் குன்ற இலை துணை) கூர்மையையுடைய அம்பைக்கொண்ட ராமபிரானையொழிய நம்முடைய குறைதீர்க்க வேறொருவரும் துணையில்லை. ருத்ராதிகளான சேதனரோடு அசேதனமான க்ரியாகலாபங்களோடு வாசியற நமக்குத் துணையாகமாட்டா. சக்கரவர்த்தித் திருமகனுடைய அம்பின் கூர்மையே பிராட்டிக்குப் போலே நமக்கும் தஞ்சமாகும். ஆழ்வார்கள் முடிவுகட்டின இவ்வரும்பொருள் சிறிது காலம் மங்கிக் கிடந்து, பிறகு எம்பெருமானார் அவதரித்தபின்பு மிகவும் விளங்கிற்று. இன்றளவும், எம்பெருமானார் ஸம்பந்தமுடையார் க்ஷணத்வம்ஸியான கர்மாதிகளையும், தேவதாந்தரங்களையும் ஸாதநமாகக் கொள்ளார்கள். 8.

---

*"எம்பெருமானார்.... நினைத்திருப்பது" என்னும் ஸ்ரீஸூக்திகள் அச்சுப்பிரதிகளில் பின்வருமாறு பிழையாய்க் கிடக்கின்றன.—"எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அசேதனமான க்ரியா கலாபத்தினுடைய கூர்மையை விச்வஸித்திருப்பர்கள். இவர்கள் சக்ரவர்த்தித் திருமகன் அம்பின் கூர்மையைத் தஞ்சமாக நினைத்திருப்பர்கள்" என்று. இது பிழையென்பது தெளிவு. பல ஓலைச்சுவடிகளில் நாம் மேலே அச்சிட்டிருக்கிறபடியுள்ளது.

நான்முகன் — பிரமதேவன். குறைகொண்டு — அபேக்ஷிதங்களைப் பெற்று. குண்டிகைநீர்—கமண்டல தீர்த்தத்தை. பெய்து—வார்த்து, மறைகொண்ட—வேதங்களிலுள்ள, மந்திரத்தால்—புருஷஸூக்தம் முதலிய மந்திரங்களினால். வாழ்த்தி—மங்களாசாஸநம் பண்ணி. ஆங்கு—( எம்பெருமான் உலகளந்தருளின ) அக்காலத்தில். அண்டத்தான் சேவடியை—அந்த ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளை கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேல் ஏற—விஷகண்டனான ருத்ரனுடைய தலையில் ( ஸ்ரீபாத தீர்த்தம் ) விழும்படியாக. கழுவினான்—விளக்கினான்.

பெரி-அவ:— ( குறை ) வேறொருத்தர் துணையில்லையென்றது—பூர்ணராக ஸம்ப்ரதிபந்நரானவர்களும் தந்தாம் குறையை இவனுக்கு அறிவித்துத் தங்கள் அபேக்ஷிதம் பெறுகையாலே என்கிறார்.

---

அவ:— வேறொருத்தர் துணையில்லை என்கிறது—நாட்டார் துணையாகப் பற்றுகிற ப்ரஹ்மாதிகளும் தங்கள் வெறுமையை முன்னிட்டு அவனை ஆஶ்ரயித்துத் தந்தாமுக்கு அபிமதமான பலம் பெறுகைக்கு அவன் கைபார்த்திருக்கையாலே என்கிறார்.

---

9. அவ:— சென்ற பாட்டிலே "நமக்குக் குறைபடும்போது வேறு தஞ்சமில்லை" என்றார். "பூர்ணராக நினைக்கப்படுகிற ப்ரஹ்மருத்ராதிகளும் குறைபடும்போது பகவானைப் பற்றியே தங்கள் குறைகள் தீரப்பெறுகிறார்கள்' என்று காட்டுவதன் மூலம் முன்பாட்டிலே சொன்ன அர்த்தத்தை த்ருடீகரிக்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:—(குறை கொண்டு) அபேக்ஷிதங்களைப் பெற்று, மஹாபலியானவன் இந்த்ராதி தேவர்களை நலிந்து அவர்களுடைய ராஜ்யங்களை அபஹரித்துக்கொண்டவளவில், பிரமன் முதலான தேவர்கள் ஸர்வேஶ்வரனிடம் தாங்கள் இழந்த ராஜ்யங்களை மீட்டுத்தர வேண்டும் என்று அபேக்ஷிக்க, எம்பெருமானும் வாமனவுருக்கொண்டு மஹாபலியிடம் சென்று மூவடி மண் யாசித்துப் பெற்று,

வ்யா:—(குறைகொண்டித்யாதி) சதுர்முகனான தான் குண்டிகையிலே த₄ர்மத்தை ஜலமாக உண்டாக்கி. (மறை யித்யாதி) ஸ்ரீபுருஷஸூக்தாதி₃களாலே மங்க₃ளாஶாஸநம் பண்ணி. (அண்டத்தான் சேவடியைக் கறைகொண்ட

---

உரை:— நினைவற திருவடிகள் தலையிலே வந்திருக்கக் கண்ட ப்ரீதியாலே செய்வதறியாமல் தன் வெறுமையைப் பச்சையாகக்கொண்டு ப்₃ரஹ்மாவானவன், ப₄க்தியாலே உருகித் தன் கமண்ட₃லுவிலே ப்ரவேஶித்த த₄ர்மமயமான திருமஞ்சனத்தைப் பணிமாறி "इदं पुरुषसूक्तं हि सर्ववेदेषु पठ्यते" (இத₃ம் புருஷஸூக்தம் ஹி ஸர்வவேதே₃ஷு பட்₂யதே) என்கிறபடியே ஸகலவேத₃ங்களாலும் ப்ரப₃லப்ரமாணமாகக் கைக்கொள்ளப்பட்ட ஸ்ரீபுருஷஸூக்தாதி₃களான மந்த்ரங்களாலே நாலு முக₂மும் ஸப்ரயோஜனமாம்படி மங்க₃ளாஶாஸநரூபேண ஸ்துதித்துக்கொண்டு அக்காலத்திலே தான

---

திரிவிக்ரமனாக வளர்ந்து தேவர்களுக்குக் குடியிருப்பைக் கொடுத்தானன்றோ. அத்தை நினைக்கிறார். "உங்கள் குறை யாது" முதலான விடங்களிலே 'குறை' என்னும் பத₃ம் அபேக்ஷிதங்களைக் குறித்தும் பிரயோகிக்கப்படுவதைக் காண்க. "தந்தாம் குறையை இவனுக்கு அறிவித்துத் தங்கள் அபேக்ஷிதம் பெறுகையாலே" என்னும் ஆச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு இப்பொருளே பொருந்தியிருப்பது. அரும்பதவுரையிலோவெனில் "குறைகொண்டு — ஆகிஞ்சந்யாதி₃களை முன்னிட்டுக்கொண்டு" என்று பொருள் காண்கிறது. தன்னுடைய நைச்யத்தை அநுஸந்தி₄த்துக்கொண்டு என்றபடி. இப்பொருளிலும் விரோத₄மொன்றுமில்லையாயினும் ஆச்சான்பிள்ளை திருவுள்ளம் பற்றியதன்றிது. (அப்பிள்ளை திருவுள்ளம் பற்றியது இப்பொருள்.) (குண்டிகை நீர்பெய்து) அபேக்ஷிதம்பெற்ற க்ருதஜ்ஞதையாலும், வதத்தவிஷயமாகையாலும்—தன்னுடைய கமண்ட₃லத்திலே த₄ர்மம் ஜலமாயுருக, அத்தாலே எம்பெருமானுடைய திருவடிகளைக்கழுவினன். (நான்முகன் மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி) ஸுகுமாரமான திருவடிகளால்காடுமேடையெல்லாம் அளந்தருளிற்றே! என்று வயிறு பிடித்து புருஷஸூக்தாதி₃களான வேத₃மந்திரங்களாலே தன் நாலு முகங்களும் பயன்பெறும்படி மங்க₃ளாஶாஸனம் பண்ணி. (கறை கொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினன்) தகப்பனின்

கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினன்) திருவுலகளந்தருளின ஸர்வேஶ்வரன் திருவடிகளை அக்காலத்திலே நீலகண்டனுடைய ஶிரஸ்ஸிலே படுமபடியாகக் கழுவினன். ஸாஹஸிகரான ப்ரஜைகள் வழியே போய் வழியே வரவேணுமென்று தீர்த்தத்தை மேலே தெளிப்பாரைப்போலே. 9.

---

கண்டனுன ருத்ரன தலையிலே சென்று விழும்படியாக அண்டாவகாஶமடங்கலும் விம்ம வளர்ந்தவனுடைய சிவந்த திருவடிகளை விளக்கினன். அவிநீதனுன புத்ரன் தலையிலே ஶ்ரீ பாததீர்த்தங்கொண்டு தெளிக்கும் பிதாவைப்போலே விஷபாத்ரமான ருத்ரன் தலையிலே பிதாவான தன்னுடைய ஸ்நேஹம் தோற்றத் திருவடிகளை விளக்கினன் என்கை. 9.

---

தலையைக் கிள்ளியதாலுண்டான ப்ரஹ்மஹத்திபாபம் தீருவதற்காக விஷகண்டனான சிவனுடைய தலையிலே படும்படி திருவடியை விளக்கினன். (கறைகொண்ட கண்டத்தான்) ஆலகால விஷத்தை அருந்தி தேவர்களை ரக்ஷித்தோம் என்னும் மதிப்புடனிருக்கும் நீலகண்டன். (சென்னிமேல் ஏறக் கழுவினன்) அவனுடைய தலையிலே எம்பெருமானுடைய ஶ்ரீ பாததீர்த்தம் படும்படியாக விளக்கினன். (அண்டத்தான் சேவடியை) அண்டம்முழுவதும் விம்ம வளர்ந்தவன், அல்லது அண்டக் குலத்துக்கு அதிபதியானவன் திருவடியை ஓரண்டத்துக்குப் பதியாயிருக்குமவன் அண்டத்திலுள்ளோயிருக்கும் தன் பிள்ளையினுடைய பாபம் தீருவதற்காகக் கழுவினன். அவனிப்படிச் செய்தது—தீம்பு செய்வதையே இயல்வாகக்கொண்ட பிள்ளைகளின் தலையிலே ஶ்ரீபாததீர்த்தத்தைத் தெளிக்கும் தந்தையரின் செயலை ஒத்திருந்தது. இப்பாட்டுக்கு ஸம்வாதமாக

"த்ரவீபூதஸ் ததா தர்மோ ஹரிபக்த்யா மஹாமுநே।
க்ருஹீத்வா தர்மபாநீயம் பத்ம நாதஸ்ய துஷ்டயே॥
க்ஷாளிதம் பரயா பக்த்யா பாத்யார்க்யாதிபிரர்ச்சிதம்॥
தத்அம்பு பதிதம் த்ருஷ்ட்வா ததார ஶிரஸா ஹர:।
பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோऽஸ்மீத்யவதாரணாத்॥
வர்ஷாயுதாந்யத பஹூந் முமோச ததா ஹர:॥

(ரிஷிஶ்ரேஷ்டரே! (பகவான் திருவுலகளந்தருளின) அச்சமயம் ஹரியினிடம் பக்தியினால் தர்மம் ஜலமாயிற்று. தர்மமாகிய அந்த

10. ஆங்கார வார மதுகேட்டு அழலுமிழும்
பூங்கா ரரவணையான் பொன்மேனி—யாங்காண
வல்லமே யல்லமே? மாமலரான் வார்சடையான்
வல்லரே யல்லரே வாழ்த்து.

ஆங்கு—அத்திரிவிசகிரமாவதார காலத்தில், ஆரவாரம் அது கேட்டு-ப்₄ரஹ்மாதி₃களுடைய ஸ்தோத்ர கோ₄ஷத்தைக் கேட்டு. (அஸுரர்கள் வந்து ஆரவாரம் செய்வதாக பிரமித்து) அழல் உமிழும்—விஷாக்₃நியைக் கக்குகின்ற. பூ கார் அரவு அணையான்—அழகிய சீற்றத்தையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய எம்பெருமானது. பொன் மேனி—அழகிய திருமேனியை. யாம்—(அநந்யப₄க்தரான) நாம். காண-ஸேவிப்பதற்கு. வல்லம் அல்லமே-ஸாமர்த்திய முடையோமல்லோமோ? (நாம் ஸமர்த்த₂ரேயாவோம்), மா மலரான்—சிறந்த பூவிற் பிறந்த பிரமனும். வார் சடையான்—நீண்ட ஜடையையுடைய ருத்₃ரனும். வாழ்த்து—(எம்பெருமானை) வாழ்த்துவதில். வல்லர் அல்லரே—அஸமர்த்த₂ர்களே.

---

அவ:— அகிஞ்சனரான நமக்கு ஸுலப₄னித்தனை போக்கி, து₃ர்மானிகளான ப்₃ரஹ்மாதி₃களுக்கு மிகவும் து₃ர்லப₄னென்கிறார்.

---

ஜலத்தையெடுத்து, ஜக₃ந்நாத₂னுடைய ஸந்தோஷத்திற்காக (அவனுடைய) திருவடியானது (பிரமனாகிற என்னால்) மேலான ப₄க்தியுடன் விளக்கப்பட்டது. பாத்₃யம், அர்க்₄யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப்பார்த்து நான் (பரிசுத்தப்படுத்த) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிச்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு, பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள் உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை] என்னும் ஈஶ்வரஸம்ஹிதாவசனம் அநுஸந்தி₄க்கத்தக்கது. 9.

10. அவ:— "ப்₃ரஹ்மருத்₃ரர்களோடு உம்மோடு வாசியறத் தங்கள் தங்கள் குறையிலே ஸர்வேஶ்வரனே தஞ்சமென்றிர்.

பெரி-வ்யா:— (ஆங்காரவாரமது கேட்டு) "திசை வாழிஎழ" என்னும்படி திருவுலகளந்தருளினபோதுண்டான வார்த்தை கேட்டு. (அழலுமிழும்) "விடங்காலும் தீவா

உரை:— திருவுலகளந்தருளின அச்சமயத்தில் "திசை வாழி எழ" என்கிறபடியே அநுகூலவர்க்கமடங்கலும் "என்னசத்தேடுகிறதோ" என்று வயிறெரிந்து திக்குக்கள் தோறும் நின்று மங்களாசாஸனம் பண்ணுகிற பெரிய கோஷத்தைக் கேட்டுத் தன் பரிவாலே ப்ரதிகூலரான நமுசிப்ரப்ருதிகள்மேலே அக்னியை உமிழாநிற்பானாய்.

அப்படியாகில, உமக்கும் ப்ரஹ்மருத்ரர்களுக்கும் வாசியே யில்லையோ?" என்று கேட்க, "நெடுவாசியுண்டு. அவனருளாலே அவனைக் கண்ட நான் அவனை ஸாக்ஷாத்கரிக்கவும வல்லேன். தம் முயற்சியாலே அவனைக் காணவிருக்கும் ப்ரஹ்மருத்ரர்கள் அவனைத் துதிக்கவும் வல்லரல்லர்" என்கிறார் இப்பாட்டில்.

வ்யா:— (ஆங்கு) "கழுவினன்...ஆங்கு" என்று முன் பாசுரத்தில் சொன்ன திரிவிக்கிரமாவதாரகாலத்தில். (ஆரவாரம் அது கேட்டு) "மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி" என்கிறபடியே ப்ரஹ்மாவும் "திசை வாழியெழ" [திருவாய் 7-4-1] என்றும்,

"ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ்
ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை:।
ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா
மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி:॥"
[விஷ்ணுதர்மம்]

[எல்லாவுலகிலுமுள்ள தேவமனுஷ்யாதி ஸர்வபூதங்களாலும் துதிக்கப்பட்டவனாய், எவன் திருவுலகளந்தருளினனோ, அந்த ஹரி எனக்கு மங்களத்தை விருத்திபண்ணட்டும்.] என்றும் சொன்னபடியே எல்லாவுலகும் செய்த துதி வார்த்தைகளைக் கேட்டு.

(அழலுமிழும்) எல்லாத் திக்கிலுமுள்ளாரும் திரிவிக்ரமனைத்துதிக்கும் சப்தத்தைக் கேட்டு, எம்பிரானுக்கு யாரேனும் தீங்கிழைக்க முற்படுகின்றார்களோ என்று அஸ்தாநே (தகாதவிடத்தில்) பயசங்கை பண்ணி ஆதிசேஷன் தீயை உமிழ்கிறபடி. "விடங்காலும் தீவா

யரவணை " என்னும்படியே. (பூங்காரரவணையான்) அழகிய சீற்றத்தையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவனுடைய. மேஷிபக்கல் பரிவாலே வந்த சீற்றமாகை யாலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியிருக்கிறபடி. (பொன் மேனி யாங்காணவல்லமே யல்லமே) அவனுடைய ஸ்ப்ருஹ ணீயமான திருமேனி ஸ்வரூபத்துக்கு மேல் ஒன்றில்லையென் றிருக்கிற நமக்குக் காணக்-குறையுண்டே? (மாமலராணித்

---

பரிவின் கார்யமாகையாலே அடிக்கழஞ்சுபெறும்படியா யிருக்கிற அழகிய சீற்றத்தையுடையனுன திருவனந்தாழ் வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய பொன் போலே ஶ்லாக்₄யமான திருமேனியை அகிஞ்சனரான நாம் கண்ணாரக்கண்டு அநுப₄விக்கத்தக்க ஸாமர்த்₂யமுடையோயா

---

யரவணைமேல் தோன்றல் திசையளப்பான் பூவாரடி நிமிர்த்த போது" [இர-திருவ 71] என்று பூதத்தாழ்வாரும் அருளினான்றே. இவ்வர்த்தம், "ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே" [நித்யஸூரிகள் அதிஜாக₃ருகர்களாய் விளங்குகிறார்கள்.] என்று வேதத்திலும். "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" "உறகலுறகலுறகல் ஒண் சுடராழியே சங்கே" என்று பெரியாழ்வாராலும், "ஸ்நேஹா தஸ்தா₂நரக்ஷா வ்யஸநிபி₄:" [அன்பினாலே அஸ்தா₂நே ரக்ஷிக்க முயலுமவர்களால்] என்று பட்டராலும் அருளிச்செய்யப்பட்டது. (பூங்காரரவணையான்) அழகிய சீற்றத்தையுடைய ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவன். (பூங்கார் அரவு) ஸ்வாமியினிடத்தி லுள்ள அன்பாலேயுண்டான சீற்றமாகையாலே அழகியதாயிருக் கிறபடி; இச் சீற்றம் மாறாதே செல்லவேணும் என்று ஆழ்வாரும் மங்க₃ளாஶாஸநம் செய்யவேண்டும்படியுள்ளது. (பொன்மேனி யாங்காணவல்லமே யல்லமே) அவனுடைய அழகிய திருமேனிக்கு மேலே ஒரு ப்ராப்யப்ராபக வஸ்துவில்லையென்றிருக்கிற நாம அத்திருமேனியைக் காணவல்லோமல்லோமோ? நன்றாகக் காண வல்லோம் என்கை. "மூர்த்தம் ப்₃ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யத₃த்யத்₃பு₄தம்" [ஸ்வரூபத்தைக் காட்டிலும் பகவானுக்குப் பிரிய மானதாய், ஆத்யத்₃பு₄தமானதான ரூபம்] என்று பகவானுக்கும் ஸ்வரூபத்தைக் காட்டிலும் பிரியமாயிருப்பதன்றே ரூபம். (மாமல ரான்) எம்பெருமானுடைய நாபிக்கமலத்திலே இருக்கும் நான்முக

யாதி) திருநாபி4கமலத்திலே அவ்யவதா4நேந பிறந்தேனென்றும் ஜடை தரையிலே தாழும்படி ஸாத4நாநுஷ்டா2நம் பண்ணினேனென்றும் ஸ்வஶக்தியில் குறைய நினையாத ப்3ராஹ்மருத்3ராதி3கள் வாழ்த்தமாட்டாரே. 10.

---

*மல்லேமே? ஶ்லாக்4யமன திருநாபீ4கமலத்தைப் பிறப்பிடமாகவுடையோமென்று அபிமானித்திருக்கிற ப்3ரஹ்மாவும், நீண்ட சுரையிலே தாழ ஜடைகட்டி ஸாத4நாநுஷ்டா2னம் பண்ணினேனென்று அபி4மானித்திருக்கிற ருத்3ரனும் அவனை வாழ்த்துகைக்குத் தக்க ஶக்தியை உடையரல்லரே. 10.*

---

னும். (வார் சடையான்) தாழ்ந்த சடையையுடைய ருத்3ரனும். (வாழ்த்து வல்லரேயல்லரே) அப்பெருமானை வாழ்த்தவும் வல்லரல்லர். (மாமலரான்...) திருநாபிக்கமலத்திலே நேரே பிறந்தேனென்றும் சடை தரையிலே தாழும்படி நின்று ஸாத4நாநுஷ்டா2னம் பண்ணினேனென்றும் அபி4மானித்திருக்கும் அவர்கள் வாழ்த்தவும் வல்லரல்லர். அவனுடைய திருமேனியே ப்ராப்யமும் ப்ராபகமும் என்றிருக்கும் நாம் காணவும்வல்லோம் என்கிறார். (வல்லமே யல்லமே...வல்லரேயல்லரே) அவனிடத்திலே பரிவுள்ளார்க்கு மங்க3ளாஶாஸநம் செய்யும் நாம் அடையவல்லோமேயல்லது. தங்கள் சக்தியைப் பெரிதாக நினைத்திருக்கும் அவர்கள் துதிக்கவல்லரல்லர். (வல்லரேயல்லரே வாழ்த்து)

"யந்ந தே3வா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர:।
ஜாநந்தி பரமேஶஸ்ய தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம் ॥" [வி-பு]

[யாதொன்றை தேவர்களும், முனிவர்களும், (பிரமனாகிற) நானும், சங்கரனும் அறியமாட்டோமோ, அதுவே பரமேஶனான விஷ்ணுவினுடைய மேலான ஸ்வரூபம்.] என்றும்,

"ந ஸ ஶக்யஸ் த்வயா த்3ரஷ்டும் மயாந்யைர் வாபி ஸத்தம।
ஸர்வேஷாம் ஸாக்ஷிபூ4தோஸௌ ந க்3ராஹ்ய:
கேநசித் க்வசித் ॥" [பா4ரதம்]

[குழந்தாய் ருத்ரனே! அந்தப் பரமபுருஷன் உன்னாலும், என்னாலும் பிறராலும் காணத்தக்கவனல்லன்: எல்லாருக்கும் ஸாக்ஷியாயிருந்து காண்கிறானவன். ஒருவராலும், ஒருசமயத்திலும் காணப்

11. வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி மகுடம்
தாழ்த்தி வணங்குமின்கள் தண்மலரால்—சூழ்த்த
துழாய்மன்னு நீண்முடியென் தொல்லைமால் தன்னை
வழாவண் கைகூப்பி மதித்து.

சூழ்ந்த — சுற்றப்பட்ட. துழாய் — திருத்துழாய்மாலை. மன்னு —பொருந்தியிருக்கப்பெற்ற நீள் முடி—நீண்ட திரு வபி₄ஷேகத்தையுடையவனும். என் தொல்லை மால் தன்னை— என்னிடத்தில் நெடுநாளாக வியாமோஹமுடையவனுமான ஸர்வேஶ்வரனை. வழா—ஒரு நொடிப்பொழுதும் விடாமல். வண் கை கூப்பி மதித்து—உதா₃ரமான கைகளைக் கூப்பி த்₄யானம்பண்ணி. மகுடம் தாழ்த்தி—தலையைவணக்கி தண் மலரால்—குளிர்ந்த புஷ்பங்களைக்கொண்டு. வணங்குமின் கள்—ஆஶ்ரயியுங்கள்; வாய்—(உங்களுடைய) வாய். வாழ்த்துக—(அவனைத்) துதிக்கட்டும்; கண்—கண்கள். காண்க—(அவனையே) ஸேவிக்கட்டும்; செவி—காதுகள். கேட்க—(அவனது சரிதங்களையே) கேட்கட்டும்.

---

அவ:— இப்படி அகிஞ்சனர்க்கு ஸுலப₄னான பிலவு நிரதிஶயபோ₄க்₃யனான எம்பெருமானை ஸர்வகரணங்களாலும் ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

---

படுகிறனல்லன்.] என்றுமனரே அவர்கள பேசுவது. முதலடிக்கு வேறொரு வகையாகவும் பொருள்கொள்வதுண்டு. அதாவது:— (ஆங்கு) "விஶ்வத: ப்ருஷ்டே₂ஷு ஸர்வத: ப்ருஷ்டே₂ஷு அநுத்தமேஷு உத்தமேஷு லோகேஷு" என்கிறபடியே எல்லாவுலகையும் கடந்துநிற்கும் பரமபத₃த்தில். (ஆரவாரம் அது கேட்டு)"ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே ஹாவு ஹாவு ஹாவு" என்றும், "விபந்யவ:" [துதி சிலர்களான ஸூரிகள்] என்றும், "சூழ்ந்திருந்தேத்துவர்" என்றும் ஶ்ருத்யாதிகளில் ப்ரஸித்₃த₄மான நித்யமுக்தர்களின் மங்க₃ளா ஶாஸநத்₄வனியைக் கேட்டு. (அழலுமிழும்) அஸுரராக்ஷஸர்கள் இவ்விபூ₄தியிலும் வந்து கூச்சலிடுகிறார்கள்போலும் என்று ப்ரேமமடியாகக் கலங்கி விஷாக்₃னியைக் கக்குகிறபடி. மற்றவை முன்போல். 10.

11. அவ:— பரமபுருஷனுக்குப் பணிசெய்ய ஏற்பட்ட உங்களுடைய இந்திரியங்களை—இப்படி நமக்கு ஸுலப₄னான அவன் விஷயத்திலே ஈடுபடுத்துங்கள் என்று பிறரை நோக்கி உபதே₃ஶிக்கிறார்.

பெரி-வ்யா:— (வாழ்த்துக வாயித்யாதி) ஸர்வேஶ்வரனை வாழ்த்தக்கண்ட வாயும், காணக்கண்ட கண்ணும், அவனுடைய குணங்களைக் கேட்கக்கண்ட செவியும், தந்தாமுக்கு வகுத்த தொழிலைச் செய்க. (மகுடந்தாழ்த்தி) அவன் திருவடிகளிலே வணங்கக்கண்ட தலையை அங்கே தாழ்த்தி. (வணங்குமின்கள் தண்மலரால்) புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அவன் திருவடிகளிலே உங்கள் தலையைத் தாழ்த்தி

---

உரை:— வளையமாக வைக்கப்பட்ட திருத்துழாய் பொருந்தி வர்த்தியாநிற்பதாய், ஆதிராஜ்ய ஸூசகமான

---

வ்யா:— (வாழ்த்துக வாய்) "ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி" [எது ஹரியைத் துதிக்கின்றதோ அதுவே நாவாகும்] என்றுப்போலே அவனை வாழ்த்துவதற்காகவே ஏற்பட்ட வாயைக் கொண்டு அவனை வாழ்த்துங்கள். (காண்க கண்) அவனுடைய திருவுருவைக் காண்பதற்காகவே ஏற்பட்ட கண்களைக்கொண்டு அவனைக் காணுங்கள். (கேட்க செவி) அவனுடைய திருக்குணங்களைக் கேட்பதற்காகவே படைக்கப்பட்ட செவியைக்கொண்டு அவனுடைய குணநாம சேஷ்டிதங்களைக் கேளுங்கள். (மகுடம் தாழ்த்தி வணங்குமின்கள்) அவன் திருவடிகளிலே வணங்குவதற்கே உண்டான தலையை அங்கே தாழ்த்தி வணங்குங்கள். (வணங்குமின்கள் தண்மலரால்) அவனுடைய ஸௌகுமார்யமான திருமேனிக்குத் தகுந்த குளிர்ந்த புஷ்பம் முதலிய உபகரணங்களைக் கொண்டு வணங்குங்கள். (மலரால்) புஷ்பத்திலே இது ஆகும், இது ஆகாது என்னும் நியமமில்லை. "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் கண்டக்கால்" அவனுக்கென்று எண்ணித் திருவடிகளிலே இடுகையே வேண்டியது.

"பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
ததஹம் பக்த்யுபஹ்ருதம் அஶ்நாமி ப்ரயதாத்மந: ॥" [கீதை]

[ஏதேனுமொரு இலையையாவது, பூவையாவது, பழத்தையாவது, தண்ணீரையாவது, எவனொருவன் எனக்கு பக்தியுடன் கொடுக்கிறானோ, தன்னெஞ்சையுடைய அவனால் பக்தியுடன் அளிக்கப்பட்ட

வணங்குங்கோள். (சூழ்த்த வித்யாதி) வணங்குவித்துக் கொள்ளுகைக்கு லக்ஷணம் சொல்லுகிறது. சூழப்பட்ட திருத்துழாய் வர்த்தியாநின்ற ஆதி₁ராஜ்யஸூசகமான முடியை யுடைய ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை மாருமல் நினைத்து உதா₃ரமான கையைக்கூப்பி. (மகுடம் தாழ்த்தி வணங்கு

---

நீண்ட திருவபி₄ஷேகத்தையுடையனுய். ஆஶ்ரிதரான எங்கள் விஷயத்திலே பழையதாக வ்யாமுக்₃த₄னைவனை மனஸ்ஸாலே அநுஸந்தி₄த்து. க்ஷணகாலமும் நழுவாதே உதா₃ரமாயிருக்கிற கைகளைக்கொண்டு அஞ்ஜலிப₃ந்த₄த்தைப்பண்ணி.

---

அதை நான் (விருப்புடன்) புசிக்கிறேன்.] என்று அவனும், "புரிவதுவும் புகை பூவே" என்று ஆழ்வாரும் அருளிச்செய்தன ரன்றோ. தலையை அவனிடத்திலே வணங்குவித்துகொள்ளுகைக்காக அவனுடைய லக்ஷணம் சொல்லுகிருர் அடுத்தபடியாக: (சூழ்த்த துழாய் மன்னு) திருத்துழாயை அணிந்திருக்கையே ஸர்வாதி₄கவஸ்துவுக்கு லக்ஷணமாயிருக்கிறபடி. (சூழ்த்த துழாய் மன்னு) சுற்றப்பட்ட திருத்துழாய் விளங்காநிற்கிற. (துழாய் மன்னு) தன்னிலத்தைக் காட்டிலும் இவனுடைய திருமேனியிலே விளங்கிநிற்கிறபடி. (துழாய் மன்னு நீண்முடி) "தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" அன்றோ இவன். (நீண்முடி) நீண்ட கிரீடத்தையுடைய. ஸர்வாதி₄க வஸ்துவின் மற்ருெரு லக்ஷணம்.

"ஆதி₄ராஜ்யம்தி₄கம் பு₄வநாநாம்
ஈஶ! தே பிஶுநயந் கில மௌலி:"

[ஈசனே! பு₄வனங்களுக்கெல்லாம் ஒரே ஸர்வாதி₄கனுயிருக்கும் தன்மையை உன்னுடைய கிரீடமே கோட்சொல்லித்தருகிறது.] என்ருரன்றோ கூரத்தாழ்வான். (என் தொல்லை மால்தன்னை) என்னுல் வணங்கப்படும் ஆதி₃புருஷனை ஸர்வேஶ்வரனை. திருமழிசையாழ்வாராலே வணங்கப்படுகை ஸர்வாதி₄கவஸ்துவுக்கு மற்ருெரு லக்ஷணம். மால்—பெரியோன். (என் தொல்லை மால் தன்னை) என்னிடத்திலே அறியாக்காலத்திலிருந்து அன்பு செய்தவனை என்றும் கொள்ளலாம். மால்—அன்பன். (வழா) மாருமல்.

மின்கள் தண்மலரால் ) புஷ்பாத்₃யுபகரணங்களைக்கொண்டு அவன் திருவடிகளிலே உங்கள் தலையைத் தாழ்த்தி வணங்குங்கோள். 11.

---

அபி₄மானத்தின் கனத்தாலே முடிசூடினாற்போலே இறுமாந்திருக்கிற தலையைத் தாழ்த்தி. குளிர்ந்த புஷ்பாத்₃யுபகரணங்களைக்கொண்டு ப₄க்₃னாபி₄மானராய் வணங்குங்கோள். உங்களுடைய வாகிந்த்₃ரியமானது அவன் வடிவழகைக்கண்டு ஸ்துதிப்பதாக. சக்ஷுரிந்த்₃ரியமானது அவன் வடிவழகைக்கண்டு அநுபவிப்பதாக. அவன் தி₃வ்ய கு₃ணசேஷ்டிதங்களை ஶ்ரோத்ரேந்த்₃ரியமானது கேட்டு க்ருதார்த்த₂மாவதாக. வழா—வழுவாதே என்றபடி. 11.

---

(வண் கை கூப்பி) உதா₃ரமான கைகளைக் கூப்பி. (வண் கை) "உதா₃ராஸ் ஸர்வ ஏவைதே" [என்னை வணங்கும் இவர்களெல்லாரும் உதா₃ரர்கள்] என்னும் அவன் நினைவாலே சொல்லுகிறார். ஸம்ஸாரத்திலே அவனை வணங்குவார் அரிதாயிருக்கையாலே கொண்டாடுவதாகவும் கொள்ளலாம். (தொல்லைமால் தன்னை மதித்து வணங்குமின்கள்) ஸர்வேஶ்வரனை நினைக்கக்கண்ட நெஞ்சாலே அவனை நினைத்து வணங்குங்கள். "ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை மாறாமல் நினைத்து" என்னும் ஆச்சான்பிள்ளை ஸூக்தியிலிருந்து "தொல்லை மால் நாமம்" என்று பாட₂மிருந்திருக்குமோவென்று தோன்றுகிறது. "திரு நாமம் அத்₄யாஹார்யம்" என்னும் அரும்பதவுரை உள்ள பாட₂த்தைக்கொண்டே உபபத்தி சொல்லிற்று. (மகுடம் தாழ்த்தி வணங்குமின்கள்) அஹங்காரத்தின் மிகுதியாலே முடிசூடினாற்போலே க₃ர்வம்கொண்டிருக்கும் உங்கள் தலையை—அஹங்காரம் அழிந்தது தோற்றத் தாழ்த்தி வணங்குங்கள். (வாழ்த்துக வாய்...வணங்குமின்கள்)

"விசித்ரா தே₃ஹஸம்பத்திரீஶ்வராய நிவேதி₃தும் |
பூர்வமேவ க்ருதா ப்₃ரஹ்மந் ஹஸ்தபாதா₃தி₃ஸம்யுதா ||"

[ப்₃ராஹ்மணரே! விசித்ரமானதாய் கைகால்கள் கூடியதான தேஹச்செல்வம் ஈஶ்வரனுக்கு அர்ப்பணம் செய்வதற்காகவே ஆதியில் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ளது.] என்று ரிஷிகளும்,

12. மதித்தாய்போய் நான்கின் மதியார்போய் வீழ
மதித்தாய் மதிகோள் விடுத்தாய்!—மதித்தாய்
மடுக்கிடந்த மாமுதலை கோள்விடுப்பான் ஆழி
விடற்கிரண்டும் போயிரண்டின் வீடு.

போய்—எல்லா சாஸ்திரங்களிலும் சென்றாராய்ந்தும். மதியார்—உன்னை அறியாதவர்கள், நான்கில்—நால்வகைப் பட்ட யோநிகளில். போய் வீழ—சென்று விழும்படியாக. மதித்தாய்—ஸங்கல்பித்தாய்; மதி—சந்திரனுடைய. கோள்—துன்பத்தை. விடுத்தாய்—போக்கியருளினவனே!. மடு—ஒரு மடுவில். கிடந்த—(சாபத்தினால்) வந்து சேர்ந்திருந்த, மா முதலை—பெரிய முதலை. கோள்—(கஜேந்திராழ்வானைப் பற்றிய) பற்று, விடுப்பான்—விடுவிப்பதற்காக, ஆழி—திருவாழியை. விடற்கு—(அந்த முதலையின் மேல்) பிரயோகிப்பதற்கு. மதித்தாய்—நினைத்தருளினாய். இரண்டும்—முதலையும் கஜேந்திராழ்வானுமாகிற இரண்டும், போய்—பழைய நிலையை விட்டுப்போய், இரண்டின்—அவ்விரண்டு ஜந்துக்களுக்கும். வீடு—சாபமோக்ஷமும் மோக்ஷஸாம்ராஜ்யமும் உண்டாம்படி, மதித்தாய்—ஸங்கல்பித்தாய்.

---

அவ:— என்னை ஆஶ்ரயியுங்கோள் என்று சொல்லுகிறதென்னென்ன. நீ உன்னை ஆஶ்ரயியாதாரைக்கெடுத்து ஆஶ்ரயித்தாரை வாழ்விக்கையாலே என்கிறார்.

---

"வாயவனையல்லது வாழ்த்தாது கையுலகம்
தாயவனை யல்லது தாம் தொழா—பேய்முலைநஞ்
சூணாகவுண்டான் உருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி"

என்று முதலாழ்வாரும் அருளிச்செய்த அர்த்தத்தை அனுஷ்டித்து உய்யுங்கள் என்கிறார். 11.

12. அவ:— அவனை மதியாதார் படும் பாட்டையும், "ஸ து நாக₃வர: ஶ்ரீமாந் மநஸாऽசிந்தயத் ஹரிம்" [ஶ்ரீமானான அந்த கஜேந்திராழ்வான் ஹரியை மனத்தினாலே எண்ணினான்.] என்கிற

பெரி-வ்யா:— (மதித்தாயித்யாதி) (நான்கின்மதியார் போய் வீழ மதித்தாய்) வேதத்தாலும் எங்கும்புக்கு உன்னை உணராதவர்கள் அத₄:பதிக்கும்படியாக மதித்தாய். (மதியார் நான்கில்போய் வீழ மதித்தாய்) உன்னை மதியாதவர்களை "क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु" (க்ஷிபாம்யஜஸ்ரமஶுப₄ாநா ஸுரீஷ்வேவ யோநிஷு) என்னும்படியே சதுர்வித₄யோநிகளி

---

உரை:— ஸர்வாதி₄கனை உன்னை நிரந்தராநுப₄வம் பண்ணி ஆஶ்ரயியாதவர்கள் உன்னையகன்று தே₃வாதி₃ சதுர்வித₄ யோனிகளிலே கர்மாநுகு₃ணமாகப்போய் விழும்படி ஸங்கல்பித்கருளினாய். அங்க தே₃வயோனியிலே

---

படியே மனத்தாலே எண்ணரிய கஜேந்திராழ்வான் பெற்ற நன்மையையும் ஆராய்ந்தாலாகாதோ? என்கிறார். இப்பாட்டு எம்பெருமானை நோக்கி அருளிச்செய்யப்பட்டதாகிலும், முன்னும் பின்னும் போலே பரோபதே₃ஶத்திலேயே நோக்கு.

வ்யா:— (நான்கில் போய் மதியார் வீழ மதித்தாய்) நாலு வேதங்களிலெல்லாம் சென்று ஆராய்ந்தும் உன்னை அறியாதவர்கள் கீழே விழும்படி ஸங்கல்பித்தாய். (நான்கில் மதியார்)

"சதுர்வேத₃த₄ரோ விப்ரோ வாஸுதே₃வம் ந விந்த₃தி।
வேத₃பா₄ரபா₄ராக்ராந்தஸ் ஸ வை ப்₃ராஹ்மணக₃ர்த₃ப₄:॥"

[நாலு வேத₃த்தையும் தரித்தும் வாஸுதே₃வனை அறியாமலிருக்கும் விப்ரன், வேத₃பா₄ரமாகிற (குங்கும) மூட்டையைச் சுமந்த ப்ராஹ்மணக் கழுதையேயாவான்.] என்று இகழப்பட்டவர்களன்றோ இவர்கள். (மதியார் நான்கில் போய் வீழ மதித்தாய்) உன்னை அறியாதவர்களை தே₃வமனுஷ்யதிர்யக்ஸ்தா₂வரமாகிற நால்வகை யோனிகளிலும், சென்று விழும்படி ஸங்கல்பித்தாய்.

"தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத₄மாந்।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுப₄ாநாஸுரீஷ்வேவ யோநிஷு॥"

[கீ₃தை 16-19]

[என்னை த்₃வேஷிப்பவர்களும், கொடியவர்களும், நராத₄மர்களும், பாபிகளுமான அவர்களை ஆஸுரயோனிகளிலேயே தள்ளுகிறேன்.]

லும் போய் விழும்படிக்கீடாக நினைத்தாய். (மதிகோள் விடுத் தாய்) சந்த்ரனுக்கு வ்யஸநத்தைப் போக்கினவனே! (மடு வித்யாதி) பொய்கையிலே கிடந்த பயாவஹமான முதலை ஸ்ரீ கஜேந்த்ராழ்வானைப் பற்றின பற்று விடும்படிக்கீடாக ஸங்கல்பமின்றிக்கே திருவாழியை விடுகைக்கு நினைத்தாய்.

---

உள்ளாரொருவனான சந்த்ரனுடைய க்ஷயரோகத்தால் வந்த வ்யஸனத்தைப் போக்கியருளினாய். உத்க்ருஷ்டயோனியில் உள்ளார்க்கேயன்றிக்கே திர்யக்யோனியிலே பிறந்த ஆஸ்ரிதனான கஜேந்த்ராழ்வானுக்கு மடுவிலே அவஸரப்ரதீக்ஷமாய்க் கிடந்து நலிந்த பெரிய வடிவையுடைய முதலையாகிற விரோதியை விடுவிக்கைக்காக ஸங்கல்பமன்றிக்கே திருவாழியை விட்டருளுகைக்கு நினைப்பிட்டருளினாய். முதலை

---

என்கிறபடியே. (மதிகோள் விடுத்தாய்.) உன்னை மதித்த மதி (சந்திர)னுடைய க்ஷயரோகத்தைப் போக்கினவனே! உன்னை மதிக்காதார் துன்பமும், உன்னை மதித்தார் இன்பமும் பெறுகிறார்களென்பது ப்ரஸித்தமன்றோ. இவ்வர்த்தத்தை வேறு எங்காவது கண்டதுண்டோ என்ன,— (மடுக்கிடந்த மாமுதலை கோள் விடுப்பான் ஆழிவிடற்கு மதித்தாய்) பொய்கையிலே கிடந்த பயங்கரமான முதலை பற்றிய பற்று விடுவிக்கைக்காக, சக்கரத்தாழ்வானை விட நினைத்தாய். (மாமுதலை) யானையைக்காட்டிலும், உருவத்திலும், பலத்திலும் பெரிதாயிருக்கும் முதலை. (கோள்) பற்றின பற்று. (ஆழி விடற்கு மதித்தாய்) முதலையை ஸங்கல்பத்தாலே கொன்றுவிடலாமாயினும், கையும் திருவாழியுமாய் நீ நிற்கும் நிலையைக் காண ஆசைப்பட்டிருக்கும் கஜேந்திராழ்வானை தரிக்கச்செய்வதற்காகத் திருவாழியைவிட ஸங்கல்பித்தாய். துஷ்ட நிக்ரஹத்தை ஸங்கல்பத்தாலும் செய்யலாம். சிஷ்டபரிபாலனத்தைத் திருவாழியைக் காட்டியே செய்யமுடியும். அவனுடைய திவ்யமங்களவிக்ரஹமும், ஆயுதபூஷணாதிகளும் பக்தர்களுக்காகவே ஏற்பட்டவையன்றோ.

"ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம்" [ஜிதந்தே] [உன்னுடைய ஸ்வரூபமும், திருமேனியும், ஆயுதங்களும், இருப்பிடமும் உனக்காவன்று. பக்தர்களுக்காகவே ஏற்பட்டவை] என்றன்றோ சாஸ்திரங்கள் முறையிடுவது.

(இரண்டும் போயிரண்டின் வீடு மதித்தாய்) பூர்வாகாரங்களை விட்டு முதலை கந்தர்வனாய் ஆனை திருவடிகளைப் பெறும் படிக்கீடாகவும் நினைத்தாய். 12.

---

யும் ஆனையுமாகிற இரண்டும் ஒன்றையொன்று விட்டுப் போய் இரண்டுக்கும் ஶாபமோக்ஷமும் ஸாக்ஷான்மோக்ஷமும் உண்டாம்படி அருளாலே திருவுள்ளம் பற்றியருளினாய். நான்கின்மதியார்—நாலு வேதத்தினுட்புக்கு உன்னை உணராதவர்கள். அசம்பதிக்கும்படி நினைத்தாய் என்றுமாம். 12.

---

"மழுங்காத வைந்நுதிய சக்கர நல் வலத்தையாய்
தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே
மழுங்காத ஞானமே படையாக மலருலகில்
தொழும்பாயார்க் களித்தால் உன்சுடர்ச்சோதி மறையாதே?"

என்றன்றோ நம்மாழ்வாரும் [திருவாய் 3-1-9] அருளிச்செய்தது.

(இரண்டும் போய் இரண்டின் வீடு மதித்தாய்) முதலை யானை ஆகிய இரண்டு பழையவுருவமும் போய், முதலை தன்னுடைய பழைய கந்தர்வஸ்தானத்தையும், யானை தன் ஸ்வரூபானுரூபமான மோக்ஷஸ்தானத்தையும் அடையும்படி ஸங்கல்பித்தாய். வீடு—ஸ்தானம். அன்றிக்கே, வீடு என்று மோக்ஷமாய், முதலைக்கு சாபமோக்ஷத்தையும், யானைக்கு ஸம்ஸாரமோக்ஷத்தையும் ஸங்கல்பித்தாய் என்றுமாம்.

முன்னொருகாலத்தில் தேவலன் என்னும் முனிவர் ஒரு நீர்நிலையில் நின்று தவஞ்செய்தபோது "ஹூஹூ" என்னும் கந்தர்வன் அம்முனிவருடைய காலைப் பற்றி இழுத்ததினால் 'காலையிழுக்கும் முதலையாகக்கடவாய்' என்று சபிக்கப்பட்டு முதலையாயிருந்தான் என்றும், விஷ்ணுபக்தனான இந்த்ரத்யும்நன் என்பவன் தியானத்தில் ஈடுபட்டிருந்தபோது அகஸ்திய முனிவர் வந்ததைக் காணாமலிருந்ததினால், "செருக்குற்றிருந்ததனால் யானையாகக்கடவாய்" என்று சபிக்கப்பெற்று, யானையானபின்பும் விஷ்ணுபக்தி குன்றாமலிருக்க, ஒருநாள் ஒரு மடுவிலே எம்பெருமானுக்குப் பூவெடுக்க இறங்கும்போது முன்சொன்ன முதலையால் பிடிக்கப்பட்டு, நெடுநாள் போர் செய்து களைத்து, 'ஆதிமூலமே' என்று கதற,

13. வீடாக்கும் பெற்றி யறியாது மெய்வருத்திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர்!—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான்
நற்பொருள்தான் நாராயணன். [விண்ணவர்க்கு

வீடு ஆக்கும் பெற்றி அறியாது—மோக்ஷத்தைப் பெறுவிக்கும் வழியைத் தெரிந்துகொள்ளாமல், மெய்—ஶரீரத்தை, வருத்தி—(உபவாஸாதிகளாலே) க்லேஶப்படுத்தி, கூடு ஆக்கி—எலும்பே மிகுந்த கூடாக அஸாரமாக்கி, நின்று—இப்படி நெடுங்காலம் தவம் புரிந்தும், உண்டு கொண்டு—பிறகு புஜித்தும், உழல்வீர்—திரிகின்றவர்களே!, வீடு ஆக்கும்—மோக்ஷத்தைத் தரக்கூடிய, மெய் பொருள்தான்—உண்மையான உபாயமாயிருப்பவனும், வேதம் முதல் பொருள்தான்—வேதங்களினால் முழுமுதற்கடவுளாகப் பிரதிபாதிக்கப்படுபவனும், விண்ணவர்க்கு—நித்யஸூரிகளுக்கு, நல் பொருள்தான்—போக்யமான வஸ்துவாயிருப்பவனும், நாராயணன்—ஸ்ரீமந் நாராயணனேயாவன்.

அவ:— மோக்ஷஸாதனத்திலிழியாதே — சரீரத்தைப் பசையறவுலர்த்தித் சட்டித்திரிகிற நீங்கள் ஸர்வேஶ்வரனே ப்ராபகமும் ப்ராப்யமும் என்று அநுஸந்தித்து அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

எம்பெருமான் வந்து சக்ராயுதத்தாலே முதலையைக் கொன்று, முதலைக்கு சாபமோக்ஷத்தையும், யானைக்கு ஸம்ஸாரமோக்ஷத்தையும் அளித்தான் என்றும் புராணங்களில் ப்ரஸித்தம். 12.

13. அவ:— 'அவனை மதித்தார் பேறு பெறுகிறார்கள்' என்று ஆழ்வார் அருளிச்செய்ய, "யஜ்ஞேந தாநேந தபஸாऽநாஶகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி" [யஜ்ஞத்தினாலும், தானத்தினாலும், தவத்தினாலும் பட்டினிகிடப்பதனாலும் ப்ராஹ்மணர்கள் அவனை அறிய விரும்புகிறார்கள்] என்று வேதங்களில் சொல்லியபடியே அவனை அடைவது மிகவும் சிரமஸாத்யமாயிருக்க, நீர் மிக எளிது போல் சொல்லலாமோ? என்று மற்ற ஸாதனங்களைப்பற்றியவர்கள் கேட்க அருளிச்செய்கிறார் இப்பாசுரத்தை.

பெரி-வ்யா:— (வீடாக்கும் பெற்றியறியாது) மோக்ஷத்தைத் தருவிக்கும் ப்ரகாரம் அறியாது. (மெய்வருத்தி) சிர காலம் உண்ணுதே நின்று, பின்பு ஜீவித்து. இப்படி அநுஷ்டிப்போமென்று நெஞ்சிலே கொண்டு உழல்வீர்! "கொன்றுழல்வீர்" என்னில், உங்களை ஹிம்ஸித்து உழல்வீர்

---

உரை:— மோக்ஷத்தை உண்டாக்கித்தரும் ஸாதந ப்ரகாரத்தை உள்ளபடி அறியமாட்டாதே, ஶரீரத்தை 'ஊன்வாடவுண்ணுது' என்னும்படி உபவாஸாதிகளாலே ரக்தமாம்ஸங்கள் நாரும் நரம்பும் எலும்புமேயாய் பீர்க்கங் கூடுபோலேயாம்படி பண்ணி நெடுங்காலம் சலியாதேநின்று, "உயிர்காவலிட்டு" என்கிறபடியே ப்ராணதாரணார்த்தமாகப் பின்பு மிதமாக ஜீவித்து, இப்படி உபாயாந்தரங்களை அநுஷ்டிப்போமென்று நெஞ்சிலே வ்யவஸிதராய்க்கொண்டு

---

வ்யா:— (வீடாக்கும் பெற்றி அறியாது) மோக்ஷத்தை அளிக்கும் உபாயம் யாதென்பதை அறியாமல், பரமசேதனனை அவனே பல ப்ரதனுகிருன் என்பதை அறியாமல், அசேதனமாய் க்ஷணத்வம்ஸியான கருமங்களை மோக்ஷோபாயமாக நினைத்திருக்கும் அறிவுகேடு இருந்தபடியே! என்று ஆஶ்சரியப்படுகிருர். (மெய் வருத்திக்கூடாக்கி) உடம்பை வருந்தச்செய்து எலும்புக்கூடாக ஆக்கி, "தபஸாऽநாஶகேந" [உண்ணுவிரதமாகிற தவத்தினுல்] என்னும் வாக்கியத்தை அனுஷ்டிப்பவர்களன்றே. (நின்று) இப் படிப் பலகாலம் நின்று, (உண்டு) இந்தக் தவத்தின் பலனைப் பிறகு சிலகாலம் வாழ்ந்து அனுபவித்து, (கொண்டு உழல்வீர்) இப்படியே மேலும் கருமங்களை அனுஷ்டித்து மோக்ஷமாகிற பெரும் பலனையும் பெற்றுவிடலாம் என்று நெஞ்சிலே கொண்டு திரிகிறவர்களே! "கொன்று உழல்வீர்" என்று பாடமானபோது உங்களையே ஹிம்ஸித்துத்திரிகிறவர்களே என்று பொருள். (அறியாது மெய்வருத்தி...உழல்வீர்) "வம்மின் புலவீர்! நும் மெய்வருத்திக் கைசெய்து உய்ம்மினே" என்கிறபடியே, கைங்கரியம் செய்வதற்கு மெய்வருத்தினுல் உய்வுபாயமாகவும் "ஸுஸுகம் கர்த்தும்" [கீதை 9-2] [செய்வதற்கு இனிமையாயிருப்பது] என்கிறபடியே பரமபோக்யமாகவும் இருக்குமே. மோக்ஷோபாய

என்றுமாம். (வீடாக்கும் மெய்ப்பொருள்தான்) மோக்ஷத்தை உண்டாக்கும் அவ்யவஹிதஸாத₄நம். (வேத முதற்பொருள் தான்) மோக்ஷப்ரத₃னென்று வேத₃த்திலே ப்ரதிபாதி₃க்கப்படு

---

பரிப்₄ரமிக்கிறவர்களே! உங்களுக்கு மோக்ஷத்தை உண் டாக்கித்தரும் வ்யவத₄ாநவிளம்ப₃மில்லாத பரமார்த்தோ₂ பாயபூ₄தனாய். "न्यास इति ब्रह्म" (ந்யாஸ இதி ப்₃ரஹ்மா) என்ற வேத₃த்தாலே ஸர்வோபாய ஶ்ரேஷ்ட₂மான ஸித்₃தோ₄பாயமாக ப்ரதிபாதி₃க்கப்பட்டிருக்குமவனாய், "स्वा

---

மாக நினைத்து உடம்பை ஒடாக்கித் துன்புறுமிது என்ன அறிவு கேடு! என்கிறார்.

"மோக்ஷோபாயத்தை நாங்கள் அறியவில்லையென்கிறீர்; அறிந்த நீர்தான் அருளிச்செய்யலாகாதோ?" என்ன, (வீடாக் கும் மெய்ப்பொருள்தான் நாராயணன்) இவனுடைய பெயரே இவனே மோக்ஷோபாயம் என்பதை அறிவிக்குமே. இப்பெயரை யும் கேட்டிலீரோ என்கிறார்.

"நாரமப்₃தே₃ந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே பு₃தை₄: |
க₃திராலம்ப₃நம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ||"

[நாரஶப்₃த₃த்தினால் நரர்களாகிற ஜீவர்களின் ஸமூஹம் சொல்லப் படுகிறது. அந்தச் சேதனஸமூஹத்திற்கு ப்ராப்யமாகவும் உபாய மாகவும் இருக்கையால் இவன் நாராயணனாகிறான்] என்னும் ப்ரமாணம் உங்கள் செவியில் பட்டதில்லையோ என்கிறார். (வீடாக்கும் மெய்ப்பொருள்தான்) நீங்கள் அனுஷ்டி₂க்கும் கருமங் களும் இவனை உகப்பித்தால்தான் பலனை அடைவிக்கும். ஆகை யால் அவை நேரே உபாயங்களன்று. இவன் ஒருவனே நேரே பலனைத்தரும் உபாயமாகிறான். இக்கருமங்களை அநுஷ்டிக்கும் உங்களைப்போலே, இக்கருமங்களும் நேரே உபாயமாகாமையாலே உண்மையுபாயங்களன்று; இவன் ஒருவனே உண்மையுபாய மாவான். ஆகையால் அக்கருமங்களில் உபாயத்வபு₃த்₃தி₄யை விட்டுக் கைங்கர்ய பு₃த்₃தி₄யைக் கொள்ளுங்கள் என்கிறார். 'இவனே மோக்ஷோபாயம்' என்னும் விஷயத்தில் வேறு ப்ரமாணமுண்டோ? என்று கேட்க,— (வேத முதற்பொருள்தான்) "நாராயணம்...... பராயணம்" [மேலான உபாயமாயிருப்பவன் நாராயணன்]

மவன். (விண்ணவர்க்கும் நற்பொருள்தான்) நித்யஸூரிகளுக் கும் ப்ராப்யனானவன். (நாராயணன்) ஸர்வேச்வரன். 13.

---

पश्यन्ति सूरयः" (ஸதா பச்யந்தி ஸூரய:) என்கிறபடியே பரமபதவாஸிகளான ஸூரிகளுக்கு விலக்ஷணபுருஷார்த்த பூதனாயிருக்குமவன் நாராயணசப்தவாச்யனான ஸர்வேச்-வரனாயிருக்கும். இத்தால். "शरणं सुहृद्गतिर्नारायणः" (சரணம் ஸுஹ்ருத்கதிர்நாராயண:) என்கிற ச்ருத்யர்த்தத்தை அருளிச்செய்தாராய்த்து. பெற்றி—ப்ரகாரம். 13.

---

" உதாம்ருதத்வஸ்யேசாந: " [மோக்ஷத்திற்கு ப்ரபுவாயிருப்பவன் பரமபுருஷனே] " அம்ருதஸ்யைஷ ஸேது: " [இவனே மோக்ஷத் திற்குச் செல்லும் அணையாவான்] என்று பரமப்ரமாணமான வேதங்களிலே மோக்ஷப்ரதனாகச் சொல்லப்பட்டவன் நாராயணனே யன்றோ 'என்கிறார்.

'அடைவிப்பவன் (உபாயம்) இவனாகில், அடையப்படும் பொருள் (உபேயம் அல்லது ப்ராப்யம்) வேறென்றுண்டோ' என்ன,— (விண்ணவர்க்கும் நற்பொருள் தான்) பரமபதத்திலேயிருக்கும் நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யவஸ்துவாயிருப்பவன் இவனேயன்றோ என்கிறார். (வேதமுதற்பொருள்தான் விண்ணவர்க்கு நற்பொருள் தான்) "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதாபச்யந்தி ஸூரய:"[விஷ்ணு வினுடைய ப்ரமப்ராப்யமான ஸ்வரூபத்தை நித்யஸூரிகள் எப் போதும் காண்கிறார்கள்.] "யோ தேவேப்ய ஆதபதி । யோ தேவா நாம் புரோஹித:"[எவன் விண்ணவர்க்காக விளங்குகின்றானோ,எவன் அநாதி காலமாக விண்ணவர்க்கு நற்பொருளாயிருக்கிறானோ....] "சரணம் கதிர் நாராயண:" [ஸுபால] [ப்ராபகமாகவும், ப்ராப்ய மாகவுமிருப்பவன் நாரணனே.] முதலான வேதவாக்கியங்கள் இவ்விஷயத்தில் ப்ரமாணம் என்றபடி. இப்படி ப்ராப்யப்ராபகங் களாயிருப்பவன் தான் யாரென்னில்: (நாராயணன்) நாராயணன் என்னும் தனிப்பெயரை உடையவனே அவன் என்கிறார். நர ஸமூஹங்களுக்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவும் இருப்பவன் இவனே என்பதை இவன் பெயரே காட்டுகிறதன்றோ என்று கருத்து. 'இண்–கதௌ' என்னும் தாதுவிலிருந்து தோன்றிய அயநசப்தம் மோக்ஷமடைவதற்கு ஸாதனத்தையும், மோக்ஷத்தில் அடையப்படும் ஸாத்யத்தையும் குறிக்கும். ப்ராப்யப்ராபகங்கள் இவனே என்றபடி. "எண்பெருக்கந்நலத் தொண்பொருள் ஈறிலவண்புகழ் நாரணன்"

14. நாராயணனென்னை யாளி நரகத்துச்
சேராமல் காக்கும் திருமால் தன்—பேரான
பேசப்பெறாத பிணச்சமயர் பேசக் கேட்டு
ஆசைப்பட் டாழ்வார் பலர்.

நாராயணன் — நாராயணனென்னும் திருநாமமுடையவனும், என்னை ஆளி—(விசேஷித்து) அடியேனை ஆட்கொள்பவனும் நரகத்து சேராமல் காக்கும்—(அடியார்களை) ஸம்ஸாரத்தில் சேராமல் காத்தருள்பவனுமான, திருமால் தன்—திருமாலுடைய, பேர் ஆன—திருநாமங்களை, பேச பெறாத—ஸங்கீர்த்தநம் பண்ணும் பாக்கியமற்றவர்களான, பிணம்—நடைபிணம் என்னலாம்படியுள்ள சமயர்—பாஹ்ய குத்ருஷ்டி மதஸ்தர்கள், பேச—(அவப்பொருள்களை) பிதற்ற, கேட்டு—அவற்றைக்கேட்டு. பலர்—பலபேர்கள், ஆசைப்பட்டு—தாங்களும் அப்படியே பாஹ்ய குத்ருஷ்டிகளாயிருக்க விரும்பி, ஆழ்வார்—அதோகதியை அடைந்தொழிவர்.

---

அவ:— நீர் சொன்னவர்களும் நாட்டிலே சிலர் உளரோவென்ன, இருந்ததே குடியாக தேவதாந்தரபரரும் உபாயாந்தரபரருமன்றோ நாடடங்கக் கிடக்கிறதென்கிறார்.

---

"நாரணன முழுவேழுலகுக்கும் நாதன்" "காராயின காளநன் மேனியினன் நாராயணன்" "நாராயணனே நமக்கே பறை தருவான்" "நண்ணித்தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா" "நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீயென்னையன்றியிலை" என்று ஆழ்வார்கள் நாராயணசப்தத்திற்கு முன்னும் பின்னும் அதன் பொருள்களை அநுஸந்திப்பதொரு நியதியுண்டு. அப்படியே இவரும் இப்பாட்டின் பின்னடிகளிலும் அடுத்தபாட்டின் முன்னடிகளிலும் நாராயணசப்தத்தின் சில பொருள்களை அநுஸந்திக்கிறார். 13.

14. அவ:— "நாராயணனே ப்ராப்யப்ராபகவஸ்துவென்றீர். உலகிற் பலரும் இதை நம்புவதில்லையே; இதுக்குக் காரணமென்?" என்ன, "அவன் திருநாமத்தைப் பேசவும் பாக்கியமற்ற சில பிணச் சமயர்கள் படுத்தும்பாடு இது" என்கிறார்.

பெரி-வ்யா:— (நாராயணனென்னையாளி) "अखिल जगत्स्वामिन् अस्मत्स्वामिन्" (அகி₂லஜக₃த்ஸ்வாமிந் அஸ்மத் ஸ்வாமிந்). (நரகத்து இத்யாதி) பிராட்டிக்கு ப்ரியமாக ஆஶ்ரிதரை ஸம்ஸாரத்தில் ப்ரவேஶியாமல் காக்குமவன்.

---

உரை:— "அனைத்துலகுமுடையான்" என்கிறபடியே நாராயண₃ஶப்₃த₃வாச்யரான ஸகலசேதனர்க்கும் நிருபாதி₄க ஸ்வாமியானவனாய். "என்னையாளுடையான்" என்கிற படியே இவர்கள் எல்லாரும் ஒரு தட்டும் நான் ஒரு தட்டுமாம்படி விஶேஷித்து என்னை ஆண்டுகொண்டு போருகிற ஸ்வாமியானவனாய், ஆஶ்ரிதரான என்போல்வாரை ஸம்ஸாரமாகிற நரகத்திலே ப்ரவேஶியாதபடி ரக்ஷிக்கும்

---

வ்யா:—(நாராயணன் என்னையாளி) எவர் எப்படிப்போனாலென்ன; அவன் என்னை ஆட்கொண்டான் என்கிறார். (நாராயணன் என்னையாளி) அகி₂லஜக₃த்ஸ்வாமியாயிருப்பவன். என்னையொழிந்த நாரங்கள் எல்லாம் ஒருதட்டும், நான் ஒருதட்டும் ஆகும்படியாக என்மேல் அன்புவைத்தான். அப்படியிருக்கும்போது உலகில் எவர் எப்படியிருந்தால் எனக்கென்ன? (நாராயணன் என்னையாளி) இந்த ஸ்ரீஸூக்தியை அடியொற்றிய எம்பெருமானார் "அகி₂லஜக₃த் ஸ்வாமிந் அஸ்மத்ஸ்வாமிந்" என்று க₃த்₃யத்திலே அருளிச்செய்தார். 'உம்மை எப்படி ரக்ஷித்தான்' என்ன,—(நரகத்துச் சேராமல் காக்கும்) இந்த ஸம்ஸாரமாகிற வெந்நரகத்திலே சேராமல் காப்பதன் மூலம் என்னை ரக்ஷித்தான் என்கிறார். யோகீ₃ஶ்வரரான திருமழிசையாழ்வார் ரௌரவாதி₃நரகத்தை அடைவோமோ என்று ஸந்தே₃ஹிக்கவும் ப்ரஸக்தியில்லையாகையால், இங்கு 'நரகம்' என்றது ஸம்ஸாரமாகிற இவ்வெந்நரகத்தை. உண்மையில் ரௌரவாதி₃ நரகங்களைக் காட்டிலும் இந்த ஸம்ஸாரமே கொடியது. அவை துன்பத்தைத் தருகின்றவை என்பது பிரஸித்தமாகையால் அவைகளுக்கு அஞ்சி, அவைகளை அடையாதபடி வாழ முற்படுவர் மனிதர். இந்த ஸம்ஸாரமோவெனில் தேன் தடவின பொறி போலே வெளிப்பார்வைக்கு இன்பமளிப்பது போல் தோன்றுவதால், இதைப் போக்கிக்கொள்ளவேணும் என்னும் அறிவேற்படுவதும் அரிது. ஆகையால், இதுவே கொடிது; நரகம் என்னவும், வெந்நரகம் என்னவும் தகுந்தது. நாராயணனே உபாயம் என்னும்

இப்படி ஸர்வரக்ஷகனானவனுடைய திருநாமங்களைப் பேசப் பெறாதே ஜீவியாநிற்கச்செய்தே ம்ருதப்ராயராயிருக்கும்

---

ஸ்வபாவனாய் ஆச்ரிதஸம்ரக்ஷணம் பண்ணப்பெற்றால் உகக்கக்கடவ பெரியபிராட்டியார்க்கு வல்லபனானவன் தன்னுடைய ஸ்ரிய:பதித்வாதிகளான இவ்வோ ஸ்வபாவங் களுக்கு வாசகமான திருநாமங்களானவற்றை வாயாலே சொல்லுகைக்கு பாக்யஹீனராய். வ்யபகதப்ராணராகை யாலே ஸவகல்பராயிருக்கிற விபரீதஸமயநிஷ்டரானவர்கள்

---

அர்த்தம் சென்ற பாட்டிலும் இப்பாட்டிலும் அறிவிக்கப்படுகிறது. ஆனால் சிறிது வித்தியாசமுண்டு. உபாயமானது இஷ்டப்ராப் தியையும், அநிஷ்டநிவ்ருத்தியையும் செய்து கொடுப்பது. அதில், "வீடாக்கும் மெய்ப்பொருள்தான் நாராயணன்" என்று சென்ற பாட்டில் இஷ்டப்ராப்தியைச் செய்பவன் நாராயணனே என்று கோஷிக்கப்பட்டது. "நாராயணன் என்னையாளி நரகத்துச் சேராமல் காக்கும்" என்று அநிஷ்ட நிவ்ருத்தியையும் செய்துகொடுப் பவன் அவனேயென்கிறது இங்கு.

'அநாதிகாலமாக இந்த ஸம்ஸாரத்திலே உம்மை இட்டுப் போந்த அவன், இன்று வந்து நரகத்துச் சேராமல் காக்ககாரண மென்?' என்ன— (திருமால்) புருஷகாரபூதையான பிராட்டி ஸம்பந்தத்தாலே என்னை ஆட்கொள்பவனானன் என்கிறார். (திருமால்) திருவிடம் (லக்ஷ்மியிடம்) மயக்கங்கொண்டவன். இவன் நாராயணனானாலும் அவளுக்கு ப்ரேம பரதந்திரனன்றோ. அவள் முகஞ்சுளிக்கப் பொறுப்பனோ? அவளுடைய பரிகரமான என்னை விலக்கி விட்டு அவள் முகத்திலே விழிப்பதெப்படி? (நாராயணன் திருமால் தன் பேரான) அவனுடைய பரத்வத்தை யும், அவன் பிராட்டிக்குத் தோற்றிருக்கும்படியையும் சொல்லும் திரு நாமங்களை. (பேரான) 'தேவோ நாமஸஹஸ்ரவாந்' "பேராயிரங் கொண்டதோர் பீடுடையன் நாராயணன்" "பேரும் ஓராயிரம் பிறபல உடைய எம்பெருமான்" என்று சொல்லப்பட்ட திரு நாமங்களை, (பேசப் பெறாத பிணச்சமயர்) அத்திருநாமங்களைப் பேச ப்ராக்கியம் செய்யாதவர்களாய், அத்தாலேயே பிணத்தை யொத்தவர்களான புறமதஸ்தர்கள். (பிணச்சமயர்) பிணம் போன்ற மதங்களைப் பற்றினவர்கள் என்றும் கொள்ளலாம்.

பா₂ஹ்யகுத்₃ருஷ்டிகள் 'வேறே ஓரர்த்தமுண்டு' என்று சொல்லக் கேட்டு அநர்த்தப்படுவார் சிலருண்டென்றும் பரமப்ராப்யன் நாராயணனென்றும் உபபாதி₃க்கிறார். 14.

---

ஸ்வகபோல கல்பிதங்களாகக் கத்துகிற வேத₃விருத்த₄ார்த்த₂ங்களை ஸாத₃ரமாகச் செவிமடுத்துக்கேட்டு. அவ்வர்த்த₂ம் நமக்குக் கைவரவேணுமென்று ஆசைப்பட்டு அத₄:பதித்துப் போவார் அநேகர் உளர். ஆழ்வார்—ஆழுவார்; அவற்றைக் கேட்டு "காலாழும்நெஞ்சழியும்" என்று ப₄க₃வத்₃ விஷயத்தில் உட்புக்கவர்கள் ஆழங்கால்படுமாபோலே ஈடுபடுவர் என்றுமாம். *14.*

---

(நாராயணன்...பேரான பேசப்பெறாத பிணச்சமயர்) உலகங்கட்கெல்லாம் ஒருயிராயிருப்பவனை அறியாத இவர்களையும், அறிவிக்காத இச்சமயங்களையும் உயிரற்ற பிணமெனக் கூறத்தட்டில்லையன்றோ. (பிணச்சமயர்)

"யா வேத₃பா₃ஹ்யா: ஸ்ம்ருதயோ
யாம்ஶ்ச காம்ஶ்ச குத்₃ருஷ்டய: ।
ஸர்வாஸ்தா நிஷ்ப₂லா: ப்ரேத்ய
தமோநிஷ்டா₂ ஹி தா:ஸ்ம்ருதா: ॥" *[மநு12-95]*

[வேதத்திற்குப் புறம்பான நூல்களும். (வேதத்தையொப்புக்கொண்டபோதிலும்) பொய்ந்நின்ற ஞானத்தைப் பரப்பும் நூல்களும் பரலோகத்தில் நிஷ்ப₂லங்களாகவும், தாமஸநூல்களாகவும் சொல்லப்படுகின்றன.] என்று நிஷ்ப₂லங்களாகச் சொல்லப்பட்டவையாகையாலே பிணத்தை யொத்தவையன்றோ பா₃ஹ்யகுத்₃ருஷ்டிமதங்கள். (பேசக்கேட்டு) 'வேத₃வைதி₃கர்கள் சொல்வதைக்காட்டிலும் வேறுபட்டதே உண்மை' என்று சொல்லுவதைக் கேட்டு. (ஆசைப்பட்டு) 'இதுவே உண்மை' என்று இவற்றை விரும்பி. (ஆழ்வார் பலர்) ஸம்ஸாரத்திலே கீழ்நோக்கி விழுவார் இவ்வுலகில் பலர் இருக்கின்றனர். "காலாழும் நெஞ்சழியும்" [பெரியதிருவ 34] என்கிறபடியே ப₄க₃வத்₃விஷயத்தில் ஆழ்ந்து போகும் சிலரான ஆழ்வார்களைப்போலே, பலர் பிணச்சமயர் பேச்சில் ஆழ்ந்து போகின்றனர் என்றுமாம். (நாராயணன் என்னையாளி—ஆழ்வார் பலர்) பலர் கீழ்விழுகின்றனர். என்னைப்போலே சிலர் அவனையே பரமப்ராப்யனாக அறிந்து உய்கின்றனர். 14.

15. பலதேவ ரேத்தப் படிகடந்தான் பாதம்
மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்த—வலராகில்
மார்க்கண்டன் கண்ட வகையே வருங்கண்டீர்
நீர்க்கண்டன் கண்ட நிலை.

பல தேவர்—பல தேவர்கள். ஏத்த—துதிக்கும்படியாக, படி—பூமியை. கடந்தான்—அளந்தவனை ஸர்வேஶ்வரனுடைய, பாதம்—திருவடிகளிலே மலர்—புஷ்பங்களை, ஏற இட்டு—ஸமர்ப்பித்து. இறைஞ்சி—வணங்கி. வாழ்த்த வலர் ஆகில்—மங்களாஶாஸநம் பண்ணவல்லவர்களானால். நீர்க்கண்டன் கண்ட நிலை—விஷநீர்க்கண்டனாகிய ருத்ரனிடத்தில் காணத்தக்க நிலைமை. மார்க்கண்டன் கண்ட வகையே—மார்க்கண்டேயன் நேராகக் கண்டவிதமாகவே, வரும் கண்டீர்—ஸித்திக்குங்கிடீர்.

பெரி-அவ:— (பலதேவரித்யாதி) வேறு ஆஶ்ரயணீயர் இல்லையென்று தோற்றிநின்றவன் திருவடிகளிலே வேறுஆஶ்ரயணீயராக நினைத்தவர்கள் செய்கின்ற தொழிலே அவ்யவஹிதமாகத் தாங்கள் செய்யவல்லார் சிலர் என்கிறார்.

அவ:— ஈஶேஶிதவ்யவிபாகமற எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்து. தானே ஆஶ்ரயணீயன் என்னுமிடத்தைக் காட்டின ஸர்வேஶ்வரன் திருவடிகளை நீங்கள் பற்றியிருக்கிற தேவதைகள் ஆஶ்ரயிக்கிற ப்ரகாரத்திலே நீங்களும் ஆஶ்ரயிக்கவல்லீர்களாகில் தேவர் வழியாக ஸ்ரீ மார்க்கண்டேயன் பெற்ற பேறு உங்களுக்கு அவ்யவதாநேந வந்து கிட்டும் என்கிறார்.

15. அவ:—அநர்த்தப்படுவார் பலரென்றார் சென்ற பாட்டில். அப்படி அநர்த்தப்படாதே ஆஶ்ரயிக்கத்தகுந்தவன் இவனேயென்று அறிந்து, ஆஶ்ரயிக்கத்தகுந்தவராகப் பலரால் நினைக்கப்படும் தேவர்களும் இவனிடத்திலே செய்யும் கைங்கர்யத்தை நேரே செய்யவல்லவர்கள் சிலர் என்று உணர்த்தி, நீங்களும் அப்படியாகுங்கள் என்கிறார் இப்பாட்டில்,

வ்யா:— (பலவித்யாதி) பலதேவர் ஏத்தப் படிகடந்தான் பாதமென்கையாலே ஆஸ்ரயணீயவஸ்து இவன் என்று அறுதியிட்டு. (மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்தவலராகில்) என்கை

உரை:— ப்ரஹ்மாதிகளான தேவர்களெல்லாரும் வாய்விட்டுப் புகழும்படியாக பூம்யாதிகளான லோகங்களை அநாயாஸேந அளந்துகொண்ட ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளிலே செவ்விப்பூக்களை விழும்படியாக கைகளாலே பணிமாறி. தலையாலே வணங்கி. வாயாலே மங்களாஸாஸநம் பண்ணித் துதிக்க வல்லார்களாகில் விஷஜலத்தைக் கண்டூக்

வ்யா:—(பல தேவரேத்தப் படி கடந்தான்) தேவஸமூஹம் முழுவதும் துதிக்கும்படியாக உலகளந்தவன்.

> "ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ்
> ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை:|
> ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா
> மமாஸ்து மாங்கள்ய விவ்ருத்தயே ஹரி:||"

[ஸ்வர்க்கத்தில் தேவஸமூஹங்களாலும், அப்படியே பூமிப்ரதேஸத்திலிருக்கும் மநுஷ்யர்களாலும், ஆகாயத்தில் ஆகாஸஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்டவனாய் எந்த பகவான் திருவடிகளை வைத்தருளினானோ, (திரிவிக்கிரமாவதாரம் செய்த) அந்த ஹரி எனக்கு எப்போதும் மங்களங்களை விருத்திசெய்யட்டும்.] என்று ஸ்ரீ விஷ்ணுதர்மம் மாங்கள்யஸ்தவத்தில் கோஷிக்கப்பட்டதன்றோ.

(பல தேவரேத்த) "குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி" என்று பிதாமஹனான நான்முகனே வாழ்த்தியபோது மற்ற தேவர்கள் வாழ்த்தச் சொல்லவேணுமோ? (பல தேவரேத்தப் படிகடந்தான் பாதம்) திருவடிகளின் கீழே துகையுண்கையாலே "ஈஸ்வரோऽஹம்" என்பவர்களும் ஸ்வரூபத்தை உணர்ந்து துதிக்கிறார்கள். (பாதம் மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்த வலராகில்) அவனுடைய திருவடித்தாமரைகளிலே கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் முதலான பூக்களைச்சொரிந்து

யாலே தாங்கள் ஆஶ்ரயணீயராக நினைத்தவர்கள் செய்கிற செயலைத் தாங்களும் செய்யவல்லராகில். (மார்க்கண்டனித்யாதி) மார்க்கண்டேயன் தேவனை மோக்ஷார்த்தமாகச்சென்று ஆஶ்ரயிக்க. மோக்ஷப்ரதன் ஈஶ்வரனே என்று ருத்ரன்

---

நிலே உடையனான ருத்ரன் ஸர்வேஶ்வரனைக்கண்டு ஆஶ்ரயித்து, தந்நிஷ்டனாய் நின்றநிலையை அவன் புருஷகாரமாக ஸ்ரீ மார்க்கண்டேயன் கண்டு, தத்ஸமாஶ்ரயணம் பண்ணிப்பெற்ற ப்ரகாரத்திலே அவ்யவதாநேந வந்து கிட்டும்கிடீர். இத்தால்—தேவதாந்தரங்களைப் பற்றினாலும்

---

வாழ்த்தவல்லீர்களானால். (படிகடந்தான் பாதம்...வாழ்த்த வலராகில்) இப்போதும் நீங்கள் இச்செயலைச் செய்து தான் வருகிறீர்கள். ஆனால் படிகடந்தானிடம் செய்வதில்லை. அவனை அக்காலத்திலே ஆதித்த தேவர்களிடம் செய்கிறீர்கள். சரீரியான அவனை வாழ்த்தாமல், அவனுடைய சரீரபூதராய் ரஜஸ்தமோ குணம் நிறைந்தவர்களான தேவர்களை வாழ்த்துகிறீர்கள். அவிதிபூர்வமாகச் செய்வதை விதிபூர்வகமாகச் செய்தாலாகாதோ என்கிறார். (பல தேவரேத்தப் படிகடந்தான் பாதம் வாழ்த்தவலராகில்) அவர்கள் அவனிடத்திலே செய்யும் செயலை, நீங்கள் அவர்களிடத்திலே செய்யாமல், நேரே அவனிடத்திலேயே செய்தாலாகாதோ? (வலர் ஆகில்) இப்படிப்பட்ட அதிகாரிகள் மிகவும் துர்லபர் என்கிறார். "ஆழ்வார்பலர்" என்ற அவர்களைப்போலேயல்லாமல் இந்த கோஷ்டி மிகவும் சிறந்திருக்கிறது. (வலர் ஆகில்) இக்குழுவிலே சேரவல்லீர்களாகில். (மார்க்கண்டன்...) "நீர்க்கண்டன் கண்ட நிலை மார்க்கண்டன் கண்ட வகையே வரும் கண்டீர்" என்று அந்வயம். விஷஜலத்தைக் கழுத்திலே தரித்திருக்கும் ருத்ரனிடத்தில் கண்ட நிலையானது மார்க்கண்டேய பகவான் கண்ட விதமாக நீங்களும் காணலாகும். மார்க்கண்டேயன் நீண்ட ஆயுளையும் அதற்குப்பின் மோக்ஷத்தையும் ருத்ரனைக் கேட்க, மோக்ஷம் தருபவன் ஜநார்த்தனனே என்று ருத்ரன் காட்டக்கண்ட அர்த்தத்தை நீங்களே நேரே காணலாம்.

"நீர்க்கண்டன் கண்ட நிலை மார்க்கண்டன் கண்ட வகையே வருங்கண்டீர்" என்று மார்க்கண்டேய வ்ருத்தாந்தத்தை நினைக்கிறார். இவ்விருத்தாந்தம் ஸ்ரீ பாகவதம் பன்னிரண்டாவது

காட்டக்கண்டு, 'இதுவே இவனுக்குள்ளது' என்று மார்க்கண்டேயன் கண்ட வகையே அநுஸந்திக்கும். அவ்யவஹிதமாக ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயிக்கவல்லவராகில் மார்க்கண்டேயன் கண்ட வகையே ஸித்திக்கும். 15.

---

*அவர்கள் அவன் கையிலே காட்டிக்கொடுத்து ரக்ஷிக்குமதொழியத் தாங்களாக ரக்ஷிக்கமாட்டார்கள். ஆனபின்பு அவர்களைவிட்டு அவன் றன்னையே அவ்யவதாநேந பற்றினால் அவனைப் பெற்றுப் பிழைத்துப்போகலாமென்றதாயிற்று. 15.*

---

ஸ்கந்தத்திலும், மஹாபாரதம் ஆரண்யபர்வத்திலும், "புக்கடிமையினால் தன்னைக் கண்ட மார்க்கண்டேயனவனை நக்கபிரானுமன்று உய்யக்கொண்டது நாராயணனருளே" [திருவாய் 4-10-8] "மார்க்கண்டேயனும் சரியே" [திருவாய் 5-2-7] "கண்டும் தெளிந்தும் கற்றார் கண்ணற்காளன்றியாவரோ? வண்டுண் மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழுநாள், இண்டைச் சடைமுடியீசனுடன் கொண்டுசாச்செல்லக் கொண்டங்குத் தன்னொடுங்கொண்டுடன் சென்றதுணர்ந்துமே" [திருவாய் 7-5-7] "மன்னு நான்மறை மாமுனி பெற்ற மைந்தனை மதியாத வெங்கூற்றம் தன்னையஞ்சி, நின் சரணெனச் சரணாய்த் தகவில் காலனையுக முனிந்தொழியாப், பின்னையென்றும் நின் திருவடி பிரியா வண்ணமெண்ணிய பேரருள்" [பெரியதிரு 5-8-6] என்று ஆழ்வார்களாலும் அநுஸந்திக்கப்பட்டது. "கண்டும் தெளிந்தும்" வியாக்கியானத்திலேயும் விவரிக்கப்பட்டுள்ளது.

அதாவது:— ம்ருகண்டு மஹாமுனிவரும், அவர் பத்தினியும் தம் அருமைப் பிள்ளையான மார்க்கண்டேயன் சிறுவனாயிருக்கும் போது அவனை அலங்கரித்து விளையாடவிட, அப்போது ஓர் அசரீரிவாக்கியம் "இவனுக்கு மரணம் அணுகிற்று" என்று சொல்ல, அத்தைக் கேட்டுத் தாய்தந்தையர் பதறிநிற்க, "நீங்கள் பயப்படவேண்டாம்; நான் எப்படியாவது நீண்ட ஆயுளைப் பெற்றுவருகிறேன்" என்று கூறி, மார்க்கண்டேயன் ருத்ரனை ஆஶ்ரயித்து நெடுநாள் அடிமைசெய்து தாய்தந்தையருக்குச் சொல்லிவந்தபடியே நீண்ட ஆயுளையும் நற்குலத்தில் பிறந்தவனாகையாலே, ஆத்மஹிதார்த்தமாக மோக்ஷத்தையும் தர

16. நிலைமன்னு மென்னெஞ்ச மன்றான்று தேவர்
தலைமன்னர் தாமே மாற்றாக—பலமன்னர்
போர்மாள வெங்கதிரோன் மாயப்பொழில் மறையத்
தேராழியால் மறைத்தாரால்.

---

வேணுமென்று சிவனைக்கேட்க, அவனும் தலைக்கடையையும் புழக்கடையையும் மூடிக்கொண்டு தனியிடத்துக்கு அழைத்துப்போய், தன் இண்டைச் சடைமுடியைக்காட்டி, "நானும் உன்னைப்போலே ஒரு ஸாத₄நாநுஷ்டானம் செய்பவனே; உன் விருப்பம் நிறைவேற வேண்டுமாகில் ஜநார்த்தனனை அடையவேண்டும்" என்று கூறித் தானே அவனைக் கூட்டிக்கொண்டு, நாராயணனுடைய மோக்ஷப்ரத₃த்வாதி₃கு₃ணங்களை அவனுடன் உசாவிக்கொண்டு சென்று ஸர்வேஶ்வரனிடம் அவனைக் காட்டிக்கொடுத்து அவன் விருப்பங்களை நிறைவேற்றிவைத்தான். "ஆராத்₄யந் ஹ்ருஷீகேஶம் ஜிக்₃யே ம்ருத்யும் ஸுது₃ர்ஜயம்" [இருடீகேசனை ஆராதித்து வெல்லவரிய ம்ருத்யுவை மார்க்கண்டேயன் ஜயித்தான்] என்று ஸ்ரீபா₄க₃வதத்தில் மார்க்கண்டேயன் ம்ருத்யுவெனப்படும் யமனையும் ஸம்ஸாரத்தையும் ஜயித்தவிதம் உணர்த்தப்பட்டது. மஹாபாரதத்திலும் மார்க்கண்டேயன் விஷ்ணுப₄க்தனாகவே உத்₃கோ₄ஷிக்கப்பட்டான். ஸாத்விகஶாஸ்த்ரங்களான இவற்றில் சொல்லியிருப்பதற்கு விரோத₄மாகச் சிவபுராணங்களில் வேறுவிதமாகச் சொல்லப்பட்டிருந்தால் அவை அநாத₃ரிக்கத்தக்கவேயே. நிற்க; மார்க்கண்டேயன் அபேக்ஷித்தது ஆயுளேயொழிய, மோக்ஷமல்லவே என்னும் ஸந்தேஹம் ஏற்படக்கூடும். "நக்கபிரானும் அன்றுய்யக்கொண்டது" "இண்டைச் சடைமுடி ஈசனுடன் கொண்டுசாச்செல்லக் கொண்டங்குத் தன் னொடுங்கொண்டு" எனறும் ஆழ்வார்கள் அருளியிருப்பதாலும், "மார்க்கண்டேயன் தேவனை மோக்ஷார்த்த₂மாகச் சென்று ஆஶ்ரயிக்க, மோக்ஷப்ரத₃ன் ஈஶ்வரனே என்று காட்டுமிதுவேயுள்ளதென்று..." என்று பெரியவாச்சான்பிள்ளை இரண்டிடங்களில் மோக்ஷாபே₃த₃த்தைப் பிரயோகித்திருப்பதாலும், நம்பிள்ளையீட்டில் (7-5-7) "மோக்ஷப்ரத₃த்வாதி குணங்களையும் உசாவிக்கொண்டு" என்றிருப்பதாலும், மார்க்கண்டேயன் தாய்தந்தையரின் விருப்பத்திற்காக ஆயுளையும் ஆத்மஹிதார்த்த₂மாக மோக்ஷத்தையும் ருத்₃ரனிடம் விரும்பினன் என்பதையும், ருத்₃ரனும் அவற்றை ஸர்வேஶ்வரன் மூலமாகப் பெறுவித்தான் என்பதையும் உணரலாம். 15.

அந்நான்று—பாரதயுத்தம் நடந்த அக்காலத்து, தேவர் தலை மன்னர் தாமே–தேவாதிதேவனான தானே மாற்று ஆக–எதிரியாய் இருந்துகொண்டு பல மன்னர்—பல அரசர்கள். போர்—யுத்தகளத்தில். மாள—மடிந்துபோம்படியாகவும். வெம் கதிரோன்—ஸூர்யன். மாய—(அகாலத்தில்) அஸ்தமிக்கும்படியாகவும். பொழில் மறைய—பூமண்டலம் முழுதும் இருள் மூடும்படியாகவும். தேர் ஆழியால்—சக்கராயுதத்தினால். மறைத்தாரால்—(ஸூர்யனை) மறைத்த பெருமானாலே. என் நெஞ்சம்—எனது (சஞ்சலமான) மனமானது. நிலை மன்னும்—நிலை நிற்கும்.

பெரி-வ்யா:—(நிலைமன்னுமென்னெஞ்சம்) ஸர்வேச்வரனை ஆச்ரிதார்த்தமாகக் கண்டதென்று அறிந்தபடியாலே,பறக்கிற

---

அவ:— உமக்குத் தரிப்பு எத்தாலே பிறந்ததென்ன. அவனுடைய ஆச்ரித பக்ஷபாதத்தை நினைத்துத் தரித்தேன் என்கிறார்.

---

16. அவ:—தன்னை அடைந்தாரைத் தான் ரக்ஷிக்கமாட்டாமல் காட்டிக்கொடுப்பாரைப் பேசினார் சென்ற பாட்டில். தன் ஸ்வரூபத்தை அழித்தாவது அடியாரை ரக்ஷிக்குமவனைப் பேசுகிறார் இப்பாட்டில்.

வ்யா:—(நிலை மன்னுமென் நெஞ்சம்) 'சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் । தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ॥'' [கீதை 6-34] [கிருஷ்ணா! மனம் (நல் விஷயங்களில்) நிலையற்றதாகவும், நிலைகலங்கச் செய்வதாயும், பலமுள்ளதாகவும், (கீழான விஷயங்களில்) நிலையானதாகவும் இருக்கின்றதன்றோ. வாயுவைப்போல் அதை அடக்குவதையும் மிகவும் செய்தற்கரிதாக எண்ணுகிறேன்.] [பெரியதிரு 1-1-4] என்றும் ''நின்றவா நில்லா நெஞ்சு'' என்றும் சொல்லுகிறபடியே மிகவும் நிலையற்றதான என் நெஞ்சும் நிலைபெற்றது. (தேராழியால் மறைத்தரால்... நிலைமன்னும் என்னெஞ்சம்)

''ந தே ரூபம் ந சாகாரோ நாயுதானி ந சாஸ்பதம் ।
ததாபி புருஷாகாரோ பக்தானாம் த்வம் ப்ரகாசஸே॥''

[(உன்னுடைய) திவ்யாத்மஸ்வரூபம், திவ்யமங்கள விக்ரஹம், திவ்யாயுதங்கள், இருப்பிடமான வைகுண்டம் முதலியவை

தொன்றிலே ப₄ாரம் வைத்தாற்போலே "சஞ்சலம் ஹி மந:"(சஞ்சலம் ஹி மந:) என்று சொல்லப்படுகிற நெஞ்சம் நிலைபெற்றது. ப்ராப்திதஶையில் பிறக்குமது இங்கேயிருக்கப்பிறந்தது. (அந்நான்று) ப₄ாரதஸமரத்திலே. (தேவர் தலைமன்னர்)

---

உரை:— ப₄ாரத ஸமரம் ப்ரவ்ருத்தமான அந்நாளிலே நித்யஸூரிகளுக்குத் தலைவராய், ராஜாதி₄ராஜனை

---

உனக்காயிருக்கவில்லை. பக்தர்களுக்காகவே உள்ளன. (இப்படி) ப₄க்தபராதீ₄னனாயிருந்தும், நீ பரமபுருஷனை ப்ரகாசிக்கிறாய்] என்று ஜிதந்தேயிலும்,

"பரிஜநபரிப₃ர்ஹா பூ₄ஷணாந்யாயுதா₄நி
ப்ரவரகு₃ணக₃ணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாத₃யஸ்தே!
பரமபத₃மத₂ாண்ட₃ாந்யாத்மதே₃ஹஸ் ததா₂த்மா
வரத₃! ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்த₂ம் சகர்த்த₂||"

[வரத₃னே! (விஷ்வக்ஸேனர், ஆதி₃ஶேஷன் முதலிய) பரிஜனங்களும், (சத்ரம் சாமரம் முதலிய) பரிச்ச₂த₃ங்களும், ஆப₄ரணங்களும், ஆயுத₄ங்களும், ஜ்ஞானம் ஶக்தி முதலிய அந்தச் சிறந்த கு₃ண ஸமூஹங்களும், ஸ்ரீவைகுண்ட₂மும், அண்ட₃ங்களும், உன்னுடைய தி₃வ்யமங்கள விக்₃ரஹமும், தி₃வ்யாத்ம ஸ்வரூபமுமாகிய இவை யெல்லாவற்றையும் அடியவர்களுக்கு ஆக்கிவைத்தாய்.] என்று வரத₃ராஜஸ்தவத்திலும் சொல்லியபடியே ஸர்வேஶ்வரன் தன் ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திகள் முதலானவற்றை அடியார்க்காகவே ஆக்கி வைத்திருக்கிறான் என்பதை அறிந்தவுடன் பறக்கும் பஞ்சிலே பாரம் வைத்தாப்போலேயாகி, நிலையற்றதான என் நெஞ்சமும் நிலை பெற்றது. (நிலைமன்னுமென் நெஞ்சம்) பரமபதத்திற்குச் சென்ற பின்பு வரும் நிலை இவ்வுலகிலிருக்கும் போதே ஏற்பட்டது. இதற்குக் காரணம் யாதென்பதைப் பின்வரும் அடிகளாலே விவரிக்கிறார். (அந்நான்று) ப₄ாரதயுத்₃த₄ காலத்திலே. பரமபுருஷன் பெண்ணுக்கும் பேதைக்கும் காணலாம்படி வந்து, அடியார்க்காக அரும்பாடுபட்ட அதுவும் ஒரு காலமே! என்று கொண்டாடுகிறார். (தேவர் தலை மன்னர் தாமே) தே₃வாதி₃தே₃வனன்றோ இது செய்தான்.

"தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்
தம் தே₃வதாநாம் பரமஞ்ச தை₃வதம்" [ஶ்வே 6-7]

“राजाधिराजस्सर्वेषां” (ராஜாதி₄ராஜஸ்ஸர்வேஷாம்) என்று சொல்லப்படுகிற *அயர்வறுமமரர்களதிபதி. (தானே மாற்றுக வித்யாதி) “द्विषदन्नं” (த்₃விஷத₃ந்நம்) இத்யாதிப்படியே பாண்டவஶத்ருக்கள் தனக்கு ஶத்ருக்களாகவும், பல மன்னர்

---

பெருமையையுடைய தாமே “द्विषदन्नं न भोक्तव्यं” (த்₃விஷ த₃ந்நம் ந போ₄க்தவ்யம்) என்கிறபடியே ஆஶ்ரிதரான பாண்ட₃வர்களுக்கு ஶத்ருவான து₃ர்யோத₄நாதி₃களுக்கு ஶத்ருவாய்க்கொண்டு பலவகைப்பட்ட ராஜாக்கள் யுத்₃த₄த்

---

[ஈஶ்வரருக்கும் மேலான மஹேஶ்வரனும், தே₃வதைகளுக்கும் மேலான தே₃வதையுமான அவனை] என்று வேத₃ங்களும்,

“ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்₃ரஹ்மமயோ மஹாந்।
ஈஶ்வரம் தம் விஜாநீமஸ் ஸ பிதா ஸ ப்ரஜாபதி:॥”

[ப்₃ரஹ்மமயராய்ப் பெரியவரான விஷ்ணு அனைவர்க்கும் ராஜாதி₄ ராஜராய் விளங்குகிறார். அவரை ஈஶ்வரராக அறிகிறோம். அவரே தந்தை, அவரே ப்ரஜாபதி] என்று மஹாபா₄ரதமும் முறையிடும் படியான மகிமையையுடைய அயர்வறுமமரர்களதிபதியன்றோ இக் காரியம் செய்தான்; என்ன நீர்மை! என்று உருகுகிறார். (தாமே மாற்றுக) துரியோதனுதியரை எம்பெருமான் பாண்டவவிரோதி₃க ளாக நினைத்திலன்; தன் விரோதிகளாகவே நினைத்தான்;

“த்₃விஷத₃ந்நம் ந போ₄க்தவ்யம்
த்₃விஷந்தம் நைவ போ₄ஜயேத்।
பாண்ட₃வாந் த்₃விஷஸே ராஜந்
மம ப்ராணா ஹி பாண்ட₃வா:॥” [பார-உத் 24-27]

[த்₃வேஷிப்பவனின் அன்னம் பு₄ஜிக்கத்தக்கதன்று. த்₃வேஷிப்ப வனை பு₄ஜிப்பிக்கவும் கூடாது. அரசனே! நீ பாண்ட₃வர்களை த்₃வேஷிக்கிறாய். பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ.] என்று தானே சோதிவாய்திறந்து அருளிச்செய்தானன்றோ. (தாமே மாற்றுக) ஶரீரத்தை த்₃வேஷிப்பவன் ஶரீரிக்கும் எதிரி யன்றோ. “ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்” [ஞானியோவெனில் எனக்கு ஆ₃த்மா என்று என் நினைவு] எனப்படுமவர்களன்றோ இவனடியார். (பல மன்னர் போர் மாள) அஹங்காரம் மிக்க

கள் முடியும்படியாகவும். "भीषोदेति सूर्यः" (பீ₄ஷோதே₃தி ஸூர்ய:) என்று தன்னுஜ்ஞையாலே ஒரு முஹூர்த்தம் தப்பாமல் உதிப்பதஸ்தமிப்பதாகிற ஆதி₃த்யன் மறையவும், எதிரிகளுக்கு இவ்விடத்தில் அஸ்தமித்ததில்லை என்று குறை சொல்லப்போகாதபடி பூ₄மியடைய மறையவும், ஆதி₃த்யனை ப்ரகாசகமான திருவாழியாலே மறைத்தாரானவராலே

---

*திலே நசிக்கும்படியாகவும். "भीषोदेति सूर्यः" (பீ₄ஷோதே₃தி ஸூர்ய:) என்கிறபடியே தன் ஆஜ்ஞையாலே முப்பது வட்டத்திலே உதிப்பது அஸ்தமிப்பதாகக்கடவ உஷ்ண கிரணனை ஆதி₃த்யன் அஸ்தமிக்கும்படியாகவும் இவ்விடத்தில் அஸ்தமித்ததில்லையென்று குறைசொல்ல இடமறும் படி பூ₄மியடைய மறையும்படியாகவும் ஆதி₃த்யனிலும் அதி ப்ரகாசமான திருவாழியாலே மறைத்துப் பகலை இரவாக்கி*

---

வர்களான பல அரசர்களும் யுத்தத்திலே முடியும்படியாகவும். (வெங்கதிரோன் மாய) ஒரு வஸ்துவாலும் மறைக்கமுடியாத வெம்மையுள்ள கிரணங்களுடன் கூடிய ஸூர்யனும் மறையும்படி யாகவும். (வெங்கதிரோன மாய) "பீ₄ஷோதே₃தி ஸூர்ய:" [பரமபுருஷனிடம் ப₄யத்தினால் சூரியன் உதிக்கிறான்.] [தை-ஆ 7] என்கிற ப₄க₃வதா₃ஜ்ஞையைப் பின்பற்றிச் சிறிது நேரமும் தப்பாமல் உதிப்பதும் அஸ்தமிப்பதும் செய்கையாகிற வெம்மையை உடைய சூரியனும் காலமில்லாக்காலத்தில் மறையும்படியாக. (பொழிப் மறைய) பூ₄மி முழுவதும் மறையும்படியாக. சூரியன் பூ₄மியிலே ஓரிடத்தில் அஸ்தமிப்பதும் மற்றோரிடத்தில் பிரகாசிப்பதும் உண்டே. அப்படியாகவாகில் ஜயத்₃ரதன் முதலான எதிரிகள் தாங்களிருந்தவிடத்தில் ஸூர்யன் மறையவில்லை என்று சொல்லக் கூடும். அதற்காக பூ₄மிமுழுவதும் ஸூர்யன் அஸ்தமித்து இருளடையும்படி செய்தான். (தேராழியால் மறைத்தாரால்) கோடி ஸூர்யப்ரகாசமான சக்ராயுத₄த்தால் ஸூர்யனை மறைத்தவராலே என் நெஞ்சம் நிலைமன்னும் என்று அந்வயம். தேராழி—ரதா₂ங்க₃ம்: சக்ரம். கோடிஸூர்ய ப்ரகாசமாயிருப்பதாலே கண்ணை மழுங்கச் செய்வதன் மூலம் ஸூர்யனைச் சக்ரம் மறைத்தது என்று ஆசாரி யர்கள் நிர்வஹிப்பர்கள். அம்ப₃ரீஷனிடம் அபசாரப்பட்ட துர் வாஸருடைய சாபத்தை ஏற்றுக்கொண்டு கருநிறத்தையடைந்து

என் நெஞ்சம் ஸ்தி2தித்தது. நித்யஸூரிகளுக்கு அவ்வருகாய், "सत्यकामस्सत्यसङ्कल्पः" (ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்ப:) என்றோதப்படுகிற தாமே தமக்குத் தகாதபடியான பொய்யைச் செய்கையாலே என் நெஞ்சு ஸ்தி2தித்தது. ஈஶ்வரன் அஸத்ய ப்ரதிஜ்ஞனாய் ரக்ஷிப்பானான பின்பு நம்முடைய ஸத்யதபஶ் ஶமாதி3களைக்கொண்டு என்னென்கை. * "न्यासो नाम भगवति" (ந்யாஸோ நாம ப4க3வதி). இஸ்லோகத்தில் நினைத்த உரம் இப்பாட்டால் சொல்லுகிறது. 16.

---

*ஆயுதமெடேன் என்று ஆயுதமெடுத்து ஆஶ்ரிதரைப் பக்ஷபதித்தருளினவராலே என்னுடைய மனஸ்ஸானது பரபரப்பற்று இவ்வாஶ்ரித பக்ஷபாதத்தை அநுஸந்தி4த்து, பறக்கிற பட்டையிலே பா4ரம்வைத்தாற்போலே த4ரித்து நிற்கப்பெற்றது. 16.*

---

ஸூர்யனை மறைத்தது என்று நிர்வஹிப்பாருமுளர். தன் புத்திரனான அபி4மன்யுவை வஞ்சித்துக் கொன்ற ஜயத்3ரத2னை ஸூர்யன் அஸ்தமிப்பதற்குமுன் கொல்வதாகவும் இல்லையாகில் அக்3னிப்ரவேஶம் செய்வதாகவும் அர்ஜுனன் ப்ரதிஜ்ஞை செய்ய, து3ர்யோத4னாதியர் ஜயத்3ரதனை ஒளித்து வைத்து ரக்ஷித்துவர, அர்ஜுனன் வார்த்தையை மெய்யாக்குவதற்காக, 'ஆயுதமெடேன்' என்று ப்ரதிஜ்ஞை செய்திருந்த கண்ணன் தன் வார்த்தையைப் பொய்யாக்கிக்கொண்டு சக்ராயுத4த்தை எடுத்து ஸூர்யனை மறைத்த விருத்தாந்தம் மஹாபாரதத்தில் ப்ரஸித்தம்.

(தேவர் தலைமன்னர் தாமே தேராழியால் மறைத்தாரால்—நிலைமன்னும் என் நெஞ்சம்) நித்யஸூரிகளுக்கும் அதி4பதியாயிருப்பவன் "ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:" [சாந் 8-1] [ஸத்யமான குணங்களையும், ஸத்யமான ஸங்கல்பங்களையும் உடையவன்] என்று வேதங்களிலே ஓதப்படுகிற தன்னுடைய ஸங்கல்பத்தையும் பொய்யாக்கிக்கொண்டு தன் அடியானொருவன் வார்த்தையை மெய்யாக்கினான் என்பதை அறிந்தும் என் மனம் நிலைபெற்றது. ஸத்யஸங்கல்பனான ஈஶ்வரன் அடியார்க்காக அஸத்யஸங்கல்பனாகியும் ரக்ஷிப்பதை அறிந்த

---

* இந்த ஶ்லோகம் பூர்ணமாகத் தெரியவில்லை. அறிந்தவர்கள் அறிவித்தால் க்ருதஜ்ஞராயிருப்போம்.

17. ஆல நிழற்கீ ழறநெறியை நால்வர்க்கு
மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞால
மளந்தானை யாழிக் கிடந்தானை ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு.

மெய் தவத்தோன்—உண்மையான தவநெறியையுடையனை ருத்ரன். ஞாலம் அளந்தானை—உலகளந்தவனும், ஆழி கிடந்தானை—க்ஷீராப்₃தி₄ஶாயியும். ஆல் மேல் வளர்ந்தானை—ஆலிலைமேல் வளர்ந்தவனுமான பெருமானை. தான் வணங்கும் ஆறு—தான் வழிபடும் மார்க்கமாகிய. அறம் நெறியை—நல்வழியை, மேலே யுகத்து—முன் யுக₃த்திலே. ஆல நிழல் கீழ்—ஓராலமரத்தின் நிழலிலே நால்வர்க்கு—நான்கு மஹர்ஷிகளுக்கு. உரைத்தான்—உபதே₃ஶித்தான்.

பெரி-அவ:— (ஆலநிழல் கீழ்) ஜ்ஞாநாதி₄கனன ருத்₃ரனும் தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு இவ்வர்த்த₂த்தையிறே சொல்லிற்று என்கிறார்.

---

அவ:— நானேயன்றிக்கே. ஜ்ஞாநாதி₄கனன ருத்₃ரனும் தன்னை ஆஶ்ரயித்து ஆப்தரான ஶிஷ்யர்களுக்கு இவ்வர்த்த₂த்தையிறே சொல்லிற்று என்கிறார்.

---

பின்பு, வேதா₃ந்தங்களிலே மோக்ஷஸாத₄நமாக ஓதப்படும் ஸத்யம், தபஸ், ஶமம், த₃மம், தா₃னம், த₄ர்மம் முதலானவை [தை—நா 49.50] நம்மிடமில்லையேயென்று ஏங்குவதை விட்டு என் மனம் நிலைபெற்றது. 16.

17. அவ:— "ருத்₃ரனும் தன்னையடைந்தவர்களை ரக்ஷித்த தில்லையோ?" என்று சிலர் கேட்க, "அறிவிற்சிறந்தவனை ருத்₃ரனும் எம்பெருமானுடைய கு₃ணங்களையும், தானும் அவனையே வணங்கும்படியையும் சொல்லியன்றோ தன்னை அடைந்தவர்களை ரக்ஷிப்பது" என்று அருளிச்செய்கிறார்.

வ்யா:—(ஆலநிழற்கீழறநெறியை நால்வர்க்கு மேலையுகத்துரைத்தான்) ருத்ரன் ஓர் ஆலமரத்தின் கீழிருந்து கொண்டு. அக₃ஸ்த்யர், த₃க்ஷர், புலஸ்த்யர், கஶ்யபர் என்னும் நாலு மஹர்ஷிகளுக்கும் உபாஸநத₄ர்மமார்க்க₃த்தை முன்னொரு யுக₃த்திலே உபதேசித்து

வ்யா:— (ஆலநிழற்கீழித்யாதி) ப4க3வத்3ப4ஜனத்தில் அநுஷ்டி2தமான அநுஷ்டா2னத்தையுடைய ருத்3ரன் ஆல நிழலிலே அக3ஸ்த்யாதி3களுக்கு த4ர்மமார்க்3த்தைப் பண்டு சொன்னான். (ஞாலமித்யாதி) சொன்னபடி எங்ஙனே யென்னில்; அவதாரத்துக்கு அடியாகத் திருப்பாற்கடலிலே வந்து கண்வளர்ந்து சிறியார் பெரியார் என்று வாசியையாதே எல்லார் திருவடிகளிலும் ஒக்கத்திருவடிகளை வரையாதே வைத்துப் பவனுயிருப்பதொரு ஆலிலையிலே கண்வளர்ந்து

உரை:— ரஜஸ்தம:காலுஷ்யமற்று ஸத்வகு3ண ஸம்பந்நனுய்க்கொண்டு இருக்கிற த3[illegible]யிலே ப4க3வத் தத்வ யாதா2த்ம்ய ஜ்ஞான ஸித்3த்4யர்த்த2மாக அநுஷ்டி2த்த ஸத்யமான தபஸ்ஸையுடையனுன ருத்3ரன், அந்த தப: ப2லமாகப்பெற்ற யதா2ஜ்ஞானத்தாலே அவதாரத்துக்கு அடியாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனுய், யோக்3யாயோக்3யவிபா4க3ம் பாராமல் எல்லார் தலையிலும் திருவடிகளைவைத்து பூ4மி முதலான லோகங்களை அளந்து கொண்டவனுய், வரையாதே எல்லாரையும் திருவயிற்றிலே வைத்து, பவனுயிருப்பதோராலந்தளிரின்மேலே கண்வளர்ந்தருளின ரக்ஷகனுன ஸர்வேஶ்வரனைத் தான் ஆஶ்ரயித்த ப்ரகாரமான உபாஸன த4ர்மமார்க்3த்தை அக3ஸ்த்ய

அவர்களை ரக்ஷித்தான். (மெய்த்தவத்தோன்) "இதுவே உண்மைத் தவம்; இனி வேறு தவமில்லை' என்று சொல்லும்படி அரிதான தவங்களை அனுஷ்டி2த்த ருத்3ரன். 'இவன் என்ன விஷயத்தைச் சொல்லி இவர்களை ரக்ஷித்தது?' என்னில்: (ஆழிக்கிடந்தானை) அர்த்த2க்ரமத்திற்காகப் பாட2க்ரமத்தை மாற்றிக் கொள்ள வேணும். (ஆழிக்கிடந்தானை) அநந்தமான அவதாரங்களை எடுப்பதற்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுமவனை. (ஞாலம் அளந்தானை) அதற்குப் பின் திரிவிக்கிரமனுக அவதரித்து, வஸிஷ்ட2சண்டா3ள விபா4க3மற பூமியிலுள்ள எல்லாரையும் திருவடிகளாலே தடவிக்கொடுத்தவனை. (ஆல்மேல் வளர்ந்தானை) ப்ரளயாபத்தில்போது எல்லாப் பிராணிகளையும் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து ஆலந்தளிரொன்றிலே கண்வளர்ந்தருளிய

ரக்ஷிக்குமவனைத் தான் வணங்கும் ப்ரகாரத்தைச் சொன்னான். 17.

18. மாறாய தானவனை வள்ளுகிரால் மார்விரண்டு
கூறாகக் கீறிய கோளரியை—வேறாக
ஏத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தி யிருப்பார் தவம்.

மாறுஆய—எதிரிட்டு நின்ற. தானவனை—ஹிரண்யாஸுரனுடைய. மார்வு—மார்வை. வள் உகிரால்—கூர்மையான நகங்களினால், இரண்டு கூறு ஆக கீறிய—இருபிளவாகப் பிளந்த. கோள் அரியை—பெருமிடுக்கனான நரசிங்கமூர்த்தியை. வேறுஆக—விலக்ஷணமாக. ஏத்தி இருப்பாரை—துதித்து இருப்பவர்களை. மற்று அவரை சாத்தி இருப்பார் தவம் வெல்லுமே—அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயித்திருக்கும் சரமாதிகாரிகளின் புண்ணியம் வென்றுவிடும்.

---

புலஸ்த்யதக்ஷமார்க்கண்டேயாதிகளாகிற நாலு ஶிஷ்யர்களுக்கு ஆகமப்ரஸித்தமான வடவ்ருக்ஷச்சாயையிலேயிருந்து பூர்வயுகத்திலே உபதேஶித்தான். 17.

அவ:— ஆஶ்ரிதவத்ஸலனான எம்பெருமானை ஆஶ்ரயிப்பதிலும் அவனை ஆஶ்ரயித்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஆஶ்ரயிக்கையே மிகவும் நன்று என்கிறார்.

---

அற்புதனை. (தான் வணங்குமாறு) தானும் இவனுடைய இக்குணங்களிலே ஈடுபட்டு வணங்குவதையே அவர்களுக்கு உபதேசித்து ரக்ஷித்தான். "ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சேத் மோக்ஷமிச்சேத் ஜநார்த்தநாத்" [சிவனிடமிருந்து ஞானத்தையும், ஜநார்த்தனனிடமிருந்து மோக்ஷத்தையும் விரும்பக்கடவன்] என்னுமர்த்தத்தை இம்மூன்று பாட்டுக்களாலும் அருளினாராயிற்று. 17.

18. அவ:—"ஆல்மேல் வளர்ந்தானைத் தான் வணங்குமாறு...உரைத்தான்" என்றதும் "எம்பெருமானை ஆஶ்ரயிப்பது தான் மேலான உபாயமோ" என்று சிலர் கேட்க, "அவனடியார்களைப் பற்றியிருப்பது அதிலும் சிறந்தது" என்கிறார்.

பெரி-அவ:— (மாறாயவித்யாதி) குறிக்கொண்டு பகவானையே பூஜிக்குமதிலும் ததீயரைப் *(புருஷகாரமாகக் கொண்டு) பற்றுகை சீரியதென்கிறார்.

வ்யா:— (மாறாயவித்யாதி) ஈஶ்வரனென்று பாராமே தனக்கு எதிரியான ஹிரண்யனைக் கூரிய உகிராலே மார்

---

உரை:— ஸர்வேஶ்வரன் என்று பாராதே தனக்கும் ஶத்ருவாய்க் கொண்டு வந்த அஸுரப்ரக்ருதியான ஹிரண்யனை, கூரிய உகிராலே வரபலாதிகளாலே பூண்

---

வ்யா:— (மாறாய தானவனை) எதிரியான ஹிரண்யாஸுரனை. ஸர்வேஶ்வரனான தனக்கும் எதிரியாய், தன்னையே ஸர்வேஶ்வரனாக நினைத்துவந்தவனை. (மாறாய தானவனை) கடைசிவரையில் எதிரியாகவே நிலைநின்ற ஹிரண்யாஸுரனை. "கச்சாநுஜாநாமி" [ரா-யு 59-114] [போய்வா; அநுமதிக்கிறேன்] என்று முயன்று பார்த்துக் கடைசிவரையில் எதிரியாகவே நிலைநிற்பவர்களையன்றோ இவனழிப்பது. (மாறாய தானவனை) மநோவாக்காயங்கள் மூன்றினாலும் எதிரியாய் நின்ற ஹிரண்யாஸுரனை. இவற்றில் ஒன்றிரண்டினால் மட்டும் எதிரியாயிருப்பவர்களை இவன் அழிப்பதில்லையே. மந:பூர்வகமாக எதிரிடுமவர்களையே அழிப்பது. "உன்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன் அகல்மார்வம் கீண்ட என் முன்னைக் கோளரியே" [திருவாய்2-6-6] என்றாரன்றே. கைக்கொள்ளும்போது உக்திமாத்ரமும் போதும்; கைவிடும் போது நெஞ்சார த்வேஷித்தாலொழிய விடான். (மாறாய தானவனை) தன் உயிர்நிலையிலே நலிந்த அஸுரனை. "ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" [ஞானியானவன் எனக்கே ஆத்மாவாயிருப்பவன் என்று என் ஸித்தாந்தம.] என்றும், "மம ப்ராணா ஹி பாண்டவா:" [பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ] [பார-உத்24-23] என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுக்கு ப்ராணன் போன்ற ப்ரஹ்லாதனிடம் அபசாரப்பட்டவனன்றோ இரணியன். (மாறாய தானவனை) தன்னை விரோதிப்பவர்களையும் எதிரிகளாக நினைப்பதில்லை எம்பெருமான். தன் அடியாரை விரோதிப்பவர்களையே "த்விஷதந்நம்" என்றாப்போலே தனக்கு த்வேஷிகளாக நினைப்பது. தன்மேல் அம்புபட்டபோது "க்ரோதமாஹாரயத் தீவ்ரம்" [கடுங்கோபத்தை வரவழைத்துக் கொண்டான் ராமபிரான்] [ரா-ஆ24-34] என்று கோபத்தை வர

---

* குண்டலிதபதங்கள் பல ஓலைச்சுவடிகளில் இல்லையென்பர்.

விரண்டு பிளவாகக் கீண்ட நரஸிம்ஹத்தை. (வேருக வித்யாதி) வேருகவேத்தியிருப்பாராகிருர் "அந்தியம் போதி லரியுருவாகி அரியையழித்தவனைப் பல்லாண்டு" என்று

*கட்டின மார்பானது இருபிளவாம்படியாக வாடின கோரை கிழிக்குமாபோலே அநாயாஸேந கிழித்துப்பொகட்ட மிடுக்கையுடைத்தான நரஸிம்ஹத்தை. "அந்தியம் போதிலரி யுருவாகி அரியையழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டு"*

வழைத்துக்கொள்ளவேண்டியிருந்தது. திருவடியின் மேல் அம்பு பட்டபோது,

"அத₂ ராமோ மஹாதேஜா ராவணேந க்ருதவ்ரணம் ।
த்₃ருஷ்ட்வா ப்லவக₃ஶார்த்தூ₃லம்
கோபஸ்ய வஶமேயிவாந் ॥" [ரா-யு 59-136]

[மஹாதேஜஸ்வியான ராமன் ராவணனால் காயமடைந்த வாநர ஶ்ரேஷ்டனை ஹநுமானைப் பார்த்ததும் கோப பரவசனானான்.] என்று ஸர்வேஶ்வரனை தானே கோபவசப்பட்டானன்றே. (வள்ளுகிரால் கீறிய) "கூருகிரேயறிந்ததல்லால் கோவே நீயறியா யால்" என்று அரித்தால் தன்னையறியாமல் சொரிந்து கொள்வது போல் இவனுடைய நகங்களே இக்காரியம் செய்தனவென்று சொல்லும்படி அவலீலையாக அவனை அழித்தான் என்கை. (மார் விரண்டு கூருகக்கீறிய கோளரியை) 'இவனை அழிக்கைக்கு மார்வை இரண்டாகப் பிளக்கவும் வேணுமோ? ஒரு ஹுங்காரம் பண்ணரி னல் போராதோ' என்னில்: "இவன் நெஞ்சிலேயாவது சிறிது ஈரம் (ஆநுகூல்யம்) உள்ளதோ" என்று ஆராய்வதற்காகவே மார்வைப்பிளந்து துழாவினன் என்பர். "உளந்தொட்டு இரணியன் ஒண்மார்வகலம் பிளந்திட்ட கை" [பெரியாழ் திரு 1-6-9] என்று ரன்றே பெரியாழ்வார். (வள்ளுகிரால் கீறிய) 'ஆயுத₄த்தால் சாவில்லை' என்று பிரமன் கொடுத்த வரத்தைப் பொய்யாக்காமல் காரி யம் செய்தபடி. (கீறிய) வாடின கோரைப்புல்லைக் கிழிப்பதுபோலே விளையாட்டாகக் கிழித்தபடி. (கோளரியை) மஹாப₃லவானான நரஸிம்ஹனை. (வேருக ஏத்தியிருப்பாரை) விலக்ஷணமாகத் துதித் திருப்பாரை. வைலக்ஷண்யமாவது:—ரக்ஷிக்கப்படுமவனை தான், பரமபுருஷன் பண்டைக்காலத்திலே செய்த செயல்களை அநு ஸந்தி₄த்து. 'என் வருகிறதோ?' என்று கலங்கி ரக்ஷகத்வத்தை ஏறிட்டுக்கொண்டு பகவானுக்குப் பல்லாண்டு பாடித் துதிக்கை.

ரக்ஷகனுக்குத் தீங்குவருகிறதென்று திருப்பல்லாண்டுபாடும் பெரியாழ்வார் போல்வார். (மற்றித்யாதி) சாத்தியிருப்பாராகிறார். "வல்லபரிசு வருவிப்பரேல்" என்று பெரியாழ்வார் பக்கலிலே ந்யஸ்தபரராயிருக்கும் ஆண்டாள் போல்வார். தவம்—ஸுக்ருதம். 18.

---

என்ற பெரியாழ்வாரைப்போலே மங்களாஶாஸநபரராய்க் கொண்டு வ்யாவ்ருத்தமாக ஏத்தியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களை ஜயிக்குமே. "வல்லபரிசு வருவிப்பரேலது காண்டும்" என்ற ஆழ்வார் திருமகளாரைப்போலே அப்படி வ்யாவ்ருத்தரான அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களை தங்களுக்குத் அபாஶ்ரயமாகப்பற்றி அங்கே ந்யஸ்தபரராயிருக்கும் சரமாதிகாரிகளுடைய இவ்வபிமாந நிஷ்டைக்கு அடியான பாகவதவிஷயீகாரமாகிற தபஸ்ஸு. 18.

---

"அந்தியம்போதில் அரியுருவாகி அரியை அழித்தவனைப்
பந்தனை தீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று
பாடுதுமே"

என்ற பெரியாழ்வாரைப்போல்வார் இங்கு சொல்லப்படுமவர்கள். (மற்றவரைச் சாத்திருப்பார்) அப்படித் திருப்பல்லாண்டு பாடும் ஸ்ரீ வைஷ்ணவர்களே நமக்கு ப்ராப்யப்ராபகங்கள் என்று அவர்களைப்பற்றியிருப்பவர்கள். (மற்று) "தேவுமற்றறியேன்" என்கிற படியே பகவானிடத்திலே நேராகக் கண்வைக்கமாட்டார்கள் இவர்கள். நம் ஸ்வாமிகளான ஸ்ரீ வைஷ்ணவர்கள் உகந்த விஷயம் என்றே எம்பெருமானிடம் கண் செலுத்துவர்கள்.

"வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை
வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே"

[நாச்-திரு 10-10]

என்றஆண்டாளைப்போல்வார் இங்கு சொல்லப்படுமவர்கள். (ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்திருப்பார் தவம்) பகவானுக்கு மங்களாஶாஸனம் பண்ணுமவர்களின் புண்ணியத்தை பாகவதர்களைப்பற்றியவர்களின் புண்ணியம் வென்றிருக்கும்; கையைப்பற்றி அபேக்ஷித்தால் மறுக்கலாம்; காலைப்பற்றி வேண்டினால்

19. தவம்செய்து நான்முகனால் பெற்ற வரத்தை
அவம்செய்த வாழியா னன்றே – உவந்தெம்மைக்
காப்பாய்நீ காப்பதனை யாவாய்நீ வைகுந்த
மீப்பாயு மெவ்வுயிர்க்கும் நீ.

பதவுரை:—தவம் செய்து—தபஸ்ஸை அநுஷ்டித்து. நான்முகனால்—பிரமனிடத்திலிருந்து, பெற்ற—(ஹிரண்யன் முதலானவர்கள்) பெற்றுக்கொண்ட, வரத்தை—வரங்களை, அவம் செய்த—பழுதாக்கின, ஆழியான் அன்றே—திருவாழிக் கையனான பெருமானன்றோ நீ; எம்மை—அடியோங்களை, உவந்து—திருவுள்ளமுவந்து, காப்பாய் நீ—காத்தருள்பவன் நீயே; காப்பதனை ஆவாய் நீ—ரக்ஷண ஸங்கல்பமும் உன்னதே; எவ்வுயிர்க்கும்—(உன்னை ஆச்ரயித்த) எல்லாச்சேதனர்க்கும், வைகுந்தம்—பரமபதத்தை, ஈப்பாயும்—அளிப்பவனும், நீ—நீயே.

---

மறுக்கமுடியாதன்றோ. அப்படியே ஸ்வதந்த்ரனான எம்பெருமானை நேராகப் பற்றியவர்களுக்கு பல ஸித்தியில் ஸந்தேஹமுண்டு. அவனுக்குத் திருவடி போன்றவர்களான அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களையே பற்றினார்க்குப் பலஸித்தி நிச்சயமாகும்.

"ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோऽச்யுதஸேவினாம் ।
ந ஸம்சயோऽஸ்தி தத்பக்த பரிசர்யாரதாத்மநாம் ॥

[பலஸித்தி உண்டாகுமோ இல்லையோவென்ற ஸந்தேஹம் பகவானைப் பற்றியவர்களுக்கு உண்டு. அவனுடைய (அந்த) பக்தர்களுக்குக் கைங்கரியம் செய்யுமவர்களுக்கு அம்மாதிரியான ஸந்தேஹமில்லை.] என்ற ப்ரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. பகவந் நிஷ்டையைக்காட்டிலும் பாகவதநிஷ்டை சிறந்தது என்னும் பரமார்த்தமும் இப்பாசுரத்தின் பரமதாத்பர்யமாகும். இங்கு 'தவம்' (புண்ணியம்) என்பது பாகவதனால் விரும்பப்படுகையைக் குறிக்கிறது. 18.

19. அவ:— 'எனக்கு பக்தர்களாய் தேவர் தலைவர்களான ப்ரஹ்மாதிகளும் உத்தேஶ்யராகலாமே' என்று இவரைச் சோதிப்பதற்காக எம்பெருமான் கேட்க, இப்பாட்டை அருளிச்செய்கிறார்.

பெரி-அவ—ப்ரதா4னரானவர்களும் அறிவுகெடுமிடத்தில் ரக்ஷிக்கும் நீயே எனக்கு எல்லா அபி4மதஸித்3தி4யும் செய்வாய் என்கிறார்.

வ்யா:—(தவமித்யாதி) தபஸ்ஸைப் பண்ணி ப்3ரஹ்மாவின் பக்கலிலே ஹிரண்யாதி3கள் பெற்ற வரத்தை அழித்து

---

*அவ:—அளவுடையரான ப்3ரஹ்மாதி3களும் அறிவுகெடு மிடத்தில் அவர்களை ரக்ஷிக்கக்கடவ நீ எனக்கு எல்லா அபேக்ஷிதங்களையும் பண்ணித்தருவாய் என்கிறார்.*

*உரை:—ஹிரண்யனானவன் நெடுங்காலம் தபஸ்ஸை பண்ணி சதுர்முக2னாலே பெற்ற வரமெல்லாவற்றையும் ஆஶ்ரிதபக்ஷபாதத்தாலே நிஷ்ப்ரயோஜனமாம்படி பண்ணினவனாய். வரங்கொடுத்த ப்3ரஹ்மாதிகளைப் பழுதற ரக்ஷிக்*

---

*ப்3ரஹ்மாதிகள் ஸத்வம் தலையெடுத்தபோது ப4க3வத்3ப4க்தர்களாயிருந்தபோதிலும், ரஜஸ்தமோ கு3ணங்கள் மேலிட்டபோது ஈஶ்வரத்வாபி4மானம் கொண்டு ஹிரண்யராவணாதி3களுக்கு வரங்களைக் கொடுத்துவிட்டு அவதிப்படுமவர்களாகையால் அவர்கள் உத்3தே3ஶ்யரல்லர். அந்தந்த ஆபத்துக்களிலிருந்து அவர்களை ரக்ஷிக்கும் தேவரீரே எனக்கு ஸர்வவித4ரக்ஷகரும் ஆவீர் என்கிறார். இப்பாட்டிலிருந்து இருபத்தாறும் பாட்டு வரையில் ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் ஸம்வாத3மாகவும் பகவானுடைய ரூபகு3ணங்களின் அனுப4வமாகவும் செல்லுகிறது.*

*வ்யா:—(தவம் செய்து நான்முகனால் பெற்ற வரத்தை அவம் செய்த ஆழியானன்றே) ஸர்வலோகஸ்ரஷ்டாவாய், உன் திருநாபி4 கமலத்திலிருந்து தோன்றியவனாயிருந்தும், 'நாம் கொடுக்கும் வரத்தினால் விளையக்கூடிய கேடுகள் எத்தனை' என்று ஆராயாமல் 'நாமும் வரப்ரதா3தாவாகவேணும்' என்னும் அபி4மானத்துடன் வரங்கொடுத்துவிட்டு அவதிப்பட்ட அவன் உத்3தே3ஶ்யனோ? அல்லது, அவ்வரங்களையும் பொய்யாக்காமல், அவற்றை நிஷ்ப2லமாகும்படி நரசிங்க உருவைக்கொண்டு, அந்திவேளையில் நகத்தாலே அவனைக்கொன்றொழித்த நீ உத்3தே3ஶ்யனோ என்பதை—பிரானே!*

வரம் கொடுத்தவர்களுக்கும் குடியிருப்புக்கொடுத்த நீயே. (உவந்தித்யாதி) உன் பேருக ரக்ஷிப்பாய் நீ; ரக்ஷணம்தான் நீ;

---

கைக்குப் பரிகரமான திருவாழியையுடையவனல்லையோ? ஆனபின்பு ஆஶ்ரிதரான எங்களை உன்னதுபேருக உகந்து ஸம்ஸாரதுரிதம் தட்டாதபடி ரக்ஷித்தருளவேணும் நீ. அப்படி ரக்ஷிக்கவேணுமென்னும் அபிஸந்தியை திருவுள்ளத்திலே உடையையாயிருப்பானும் நீ. உன்னை

---

நீயே உரைக்கவேணும். (தவம் செய்து...) ராவண வ்ருத்தாந்தத்தை நினைப்பதாகவும் கொள்ளலாம். ராவணனுக்கு வரத்தைக் கொடுத்துவிட்டுத் துன்புற்ற ப்ரஹ்மாதிகள் உத்தேஶ்யரோ? அல்லது, அவர்கள் வரங்களைப் பொய்யாக்காமல் மனிதவுருக்கொண்டு ராவணாதிகளை அழித்து அவர்களுக்கும் குடியிருப்புக்கொடுத்த நீ உத்தேஶ்யனோ என்பதை அருளிச்செய்யவேணும் என்கை. (ஆழியானன்றே) தங்களையும் ரக்ஷித்துக்கொள்ள வல்லமையற்ற அவர்களோ உத்தேஶ்யர்? அடியாரை ரக்ஷிப்பதற்காகவே எப்போதும் கையும் திருவாழியுமாயுள்ள நீயன்றோ உத்தேஶ்யன் என்கை. (உவந்தெம்மைக் காப்பாய் நீ) எங்களை ரக்ஷிக்கும்போது எங்களுடைய காரியம் ஒன்றைச் செய்ததாக நினைத்திராமல், உன் காரியம் கைகூடியதுபோல் ஸந்தோஷப்பட்டுக்கொண்டு ரக்ஷிப்பவனன்றோ நீ.

அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் |
க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ ||

[லங்கையில் ராக்ஷஸர்தலைவனாக விபீஷணனை அபிஷேகம் செய்வித்த பின்பு ராமபிரான் தன் காரியம் செய்து முடிக்கப்பெற்றவனாய், துன்பம் நீங்கப்பெற்று ஆநந்தமெய்தினான்.] என்றானன்றோ வால்மீகி பகவான். (உவந்தெம்மைக் காப்பாய் நீ...தவம்செய்து நான்முகனால் பெற்ற) அருந்தவங்கள் செய்தபின்பும் அழியத்தக்க வரங்களைக் கொடுக்கும் ப்ரஹ்மாதிகள் உத்தேஶ்யரோ, அடிவணங்கியவுடன் தன்பேருக உகந்து அடியார்க்கு அழியாத்தன்மையுமளிக்கும் நீ உத்தேஶ்யனோ என்பதை விவரிக்கவும் வேணுமோ? என்றபடி. (காப்பதனையாவாய் நீ) ரக்ஷணமும் நீயே; ரக்ஷணஸங்கல்பமும் உன்னுடையதே என்கை. ப்ரஹ்மாதிகள் தங்களடியார்களைச் சிலவிடங்களில் ரக்ஷிப்பதும் அவர்களுக்கு அந்தர்யாமியாயுள்ள உன் ஸங்கல்பத்தாலேயே என்கை.

புநராவ்ருத்தியில்லாத மோக்ஷத்தை எவ்வுயிர்க்கும் ஈப்பாய் நீ. 19.

---

*ஆஶ்ரயித்த ஸகலாத்மாக்களுக்கும், உன்னை "सदा पश्यन्ति" (ஸதா₃பஶ்யந்தி)பண்ணி அநுப₄விக்கைக்கு ஏகாந்தமான ஸ்ரீவைகுண்ட₂த்தைக் கொடுத்தருளுவாயும் நீ. 19.*

---

"யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்ச்சிதுமிச்ச₂தி|....
லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ||"

[எந்த எந்த மனிதர்கள், என்னுடைய ஶரீரங்களான தேவர்களை ஶ்ரத்₃தை₄யுடன் பூஜிக்கவிரும்புகிறார்களோ அவர்கள் என்னாலேயே கொடுக்கப்பட்ட இஷ்டங்களை அந்த தே₃வதைகளிடமிருந்து பெறுகின்றார்கள்] [கீதை 7-22] என்று தேவரீரே அருளிச்செய்திலிரோ என்கை. (காப்பதனை யாவாய் நீ) ரக்ஷணதர்மந்தான் வேறொருவரிடம் கிடக்கமுடியுமோ?

"ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் |
ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாபா₄க₃ ப₄வத்யந்யஸ்ய கஸ்யசித் ||"

[ரக்ஷணத்திலே நிலைநிற்கும் ஸர்வேஶ்வரனை ஹரியைத் தவிர வேறொருவனுக்கும் ரக்ஷணஸாமர்த்₂யம் இல்லையன்றோ] [வி-பு 1-22-21] என்று பராஶரப₄க₃வானும் அருளினர். (வைகுந்தமீப்பாயும் எவ்வுயிர்க்கும் நீ. மற்றதெல்லாம் கிடக்கட்டும்; திரும்பி இங்கு வந்து துன்புறுதபடி வைகுண்ட₂மாகிற மோக்ஷத்தை அளிப்பதற்கு உன்னைத்தவிர வேறு எவராலாகும்? "உதாம்ருதத்வஸ்யேஶாந:" [மோக்ஷத்திற்கும் ப்ரபு₄ பரமபுருஷனே] "தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே" [அவனை இப்படி அறிபவனே இங்கு மோக்ஷமடைகிறான், மோக்ஷமடைய வேறு வழியில்லை] "அம்ருதஸ்யைஷ ஸேது:" [மோக்ஷத்திற்குச் செல்லும் அணை இவனே] "மோக்ஷமிச்சே₂த் ஜநார்த்த₃நாத்" [மோக்ஷத்தை ஜநார்தனனிடமிருந்தே விரும்பவேண்டும்] என்று ஶாஸ்த்ரங்கள் உத்₃கோ₄ஷித்தனவன்றோ. ஆக, இப்பாசுரத்தால், ப்₃ரஹ்மாதி₃கள் தங்களைத் தாங்கள் ரக்ஷித்துக்கொள்ளவும் வல்லரல்லராகையால் உத்₃தே₃ஶ்யரல்லரென்றும், எல்லாவுயிர்க்கும் ஸர்வ ரக்ஷணங்களையும் செய்யும் ப₄க₃வானே உத்₃தே₃ஶ்யனென்றும் அருளிச்செய்தாராயிற்று. *19.*

20. நீயே யுலகெல்லாம் நின்னருளே நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும்—நீயே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும் அண்டத்
திருசுடரு மாய விவை.

**உலகு எல்லாம் நீயே**—உலகங்கட்கெல்லாம் நிர்வாஹகன் நீயே; *நிற்பனவும்*—*நிலையான புருஷார்த்தமான மோக்ஷமும்.* **நின் அருளே**—உனது திருவருளினாலேயே; **தவம் தேவர் தேவனும் நீயே**—தவத்தினால் *தேவர்களான பிரமன் முதலியோர்க்குத் தலைவனும் நீயே;* **எரி சுடரும்**—ஜ்வலிக்கின்ற அக்நியும், **மால் வரையும்**—*பெரிய குலபர்வதங்களும்,* **எண் திசையும்**-எட்டு திசைகளிலுமுள்ள ஸகல பதார்த்தங்களும், **அண்டத்து**—அண்டத்திலுள்ள, **இரு சுடரும்**—*சந்த்ர ஸூர்யர்களும்,* **ஆய இவை**—ஆகிய இவைகளெல்லாம், **நீயே**—*நீயேகாண்.*

---

அவ:— *ஆஸ்ரிதரை ரக்ஷிக்குமளவன்றிக்கே ஆஸ்ரிதாநாஸ்ரிதவிபாகமற ஸர்வருடைய ஸத்தாதிகளும் நீயிட்ட* வழக்காம்படி நோக்குமவனல்லையோ என்கிறார்.

---

20. அவ:—"காப்பாய் நீ காப்பதனையாவாய் நீ வைகுந்தமீப்பாயுமெவ்வுயிர்க்கும் நீ" என்று ஆழ்வார் அருளிச்செய்ததைக் கேட்டு மிகவுகந்தான் எம்பெருமான். "கிம் ம்ருஷ்டம் ஸுதவசநம்" [எது இனிமையானது? தன் பிள்ளையின் பேச்சே இனிமையானது] "குழலினிது யாழினிது என்பர் தம் மக்கள் மழலைச்சொல் கேளாதவர்" என்றாப்போலே ஆழ்வாருடைய இன் சொற்களை இன்னும் சிறிது கேட்க வேணுமென்று அவாவுற்றவனாய், "ஆழ்வீர்! உம் பாசுரம் செவிக்கினிய செஞ்சொல்லாயிரா நின்றது. மற்றுமோர் பாசுரம் பாடியருள்வீர்" என்றான். ஸர்வேஸ்வரனுடைய ஸர்வாத்மபாவத்தைத் தேன்போன்ற தம் சொற்களிலே குழைத்து அளிக்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (நீயே உலகெல்லாம்) "விஸ்வம் நாராயணம் ஹரிம்" என்று நாராயணாநுவாகத்தில் சொல்லியபடியே எல்லாவுலகுக்கும் அந்தர்யாமியாயிருப்பதால் "உலகெல்லாம் நீயே" என்று சொல்ல

பெரி-வ்யா— (நீயே உலகெல்லாம்) உன்னையொழிய ஜக3த்துக்கு ப்ருத2க்ஸ்தி2தியும் ப்ருத2கு3பலம்ப4முமில்லை. (நின்னருளே நிற்பனவும்) உன் ப்ரஸாத3மடியாகப் பெறும் பேறு நிலை நிற்பது. (நீயே தவத்தேவதேவனும்) ஸாத4நாநுஷ்டா2நகம்

---

உரை:—நீ என்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாய் அன்வயிக்கும் உபாதா3நகாரணமாய்க்கொண்டு பூ4ம்யாதி3களான லோகங்களெல்லாவற்றையும் உண்டாக்கினாய் ஸூக்ஷ்மசித3சித்3விசிஷ்டனான நீயே. இந்த ஸ்ருஷ்டமான வஸ்துக்களெல்லாம் குறைவற ரக்ஷை பெற்றுச் செல்லுகின்றனவும் உன்னுடைய கருணையாலே. தபஸ்ஸை நெடுங்காலம்

---

லாயபடியிருப்பவன். "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" [எல்லாவற்றையும் வியாபித்திருப்பதால் நீ எல்லாமுமாகிறாய்] என்று கீதையிலும், "தத்ஸ்த2த்வாத3நுபச்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத4வ:" [அந்த ஜீவனுக்குள்ளே வியாபித்து நிற்பதால், இருவரையும் ஸாதுக்கள் ஒருவராகவே காண்கிறார்கள்] என்று மஹாபா4ரதமும், "அவஸ்தி2தேரிதி காசக்ருத்ஸ்ந:" என்று ப்3ரஹ்ம ஸூத்ரமும் இவ்வர்த்த2த்தை அறுதியிட்டன. இவனை விட்டுப் பிரிந்த நிலையும், பிரிந்து காணப்படுவதும் இவ்வுலகிலுள்ள எப்பதார்த்தத்திற்கும் என்றும் இல்லாமையால், இவனே உலகெல்லாம் என்று சொல்லத்தட்டில்லையன்றோ. "நான் மெலிந்தவன்" என்று தே3ஹாத்மவாசிசப்3த3ங்கள் ஒரே வேற்றுமையில் பிரயோகிக்கப்படுவதையும், 'குடம் கறுப்பு' என்று கு3ணவாசிசப்தங்களும் கு3ணிவாசிசப்தங்களும் ஒரே வேற்றுமையில் பிரயோகிக்கப்படுவதையும் நாம் உலகிலேயே காண்கிறோமன்றோ. எல்லாவுலகிற்கும் ஆத்மாவாகவும் கு3ணி அல்லது ப்ரகாரியாகவும் இருப்பவனன்றோ நாராயணன். (நின்னருளே நிற்பனவும்) நிலை நின்ற புருஷார்த்த2மாகிற மோக்ஷமும் உன் அருளாலேயே ஏற்படுவது. "எல்லாப்பொருள்களும் ஸத்தை பெற்று நிலைநிற்பதும் உன் அருளாலேயே" என்று பொருள் கொள்ளக்கூடுமாயினும், "நீயே உலகெல்லாம்" என்றதிலிருந்தே இவ்வர்த்த2ம் ஸித்3தி4க்குமாகையால் "நிலைநின்ற புருஷார்த்த2மும் உன் அருளாலேயே" என்னும் பொருள் பெரியவாச்சான்பிள்ளையால் ஆதரிக்கப்பட்டது. பரமபத3த்திலே பெறும் பேறு அபரிமிதமானதாகையால் 'நிற்பன' என்று பன்மையாகக் கூறப்பட்டது. (நீயே தவத்தேவதேவனும்) தவத்தி

பண்ணி அதி₄காரம் பெற்றவர்களுக்கும் உன்னையொழிய ஸ்தி₂தியில்லே. (நீயேயெரிசுடருமித்யாதி) பிரித்துச் சொல்லு

---

சலியாதே நின்று குறைவற அநுஷ்டி₂த்து, அத்தாலே ப்ரஜாபதித்வ பசுபதித்வாதி₃களான அதி₄காரம் பெற்றிருக்கிற ப்₃ரஹ்மாதி₃ தே₃வர்களுக்கு அவ்வவ்வதி₄காரங்களைக் குறைவற நிர்வஹித்துக்கொடுத்து ஆஶ்ரயணீயனாயிருக்கிறாயும் நீயே. இங்ஙன் பிரித்துச் சொல்லுகிறதென்?

---

னல் தே₃வரானவர்களுக்கும் தே₃வனாயிருப்பவனும் நீயே. ''தம் தே₃வதாநாம் பரமஞ்ச தை₃வதம்'' [ச்வே] என்றும்.

''யுக₃கோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்₄ய பத்₃மபூ₄: ।
புநஸ் த்ரைலோக்யதா₄த்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும:॥''

[ஆயிரங்கோடிக்கணக்கான யுகங்கள் விஷ்ணுவை ஆராதித்துப் பிரமன் மறுபடியும் மூவுலகிற்கும் பதியாயிருக்கும் தன்மையை அடைந்தான் என்று கேள்விப்படுகிறோம்] [பார•ஸபா 14-8] என்றும்,

''ப்₃ரஹ்மாத₃யஸ் ஸுராஸ் ஸர்வே விஷ்ணுமாராத்₄ய தே புரா।
ஸ்வம் ஸ்வம் பத₃மநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாத₃த: ॥''
[நாரஸிம்ஹபுராணம்]

[பிரமன் முதலிய எல்லா தேவர்களும் முன் விஷ்ணுவை ஆராதித்துத் தங்கள் தங்கள் பதவிகளைக் கேசவனுடைய அருளாலே பெற்றார்கள்] என்றும்,

''மஹாதே₃வஸ் ஸர்வமேதே₄ மஹாத்மா
ஹுத்வாऽऽத்மாநம் தே₃வதே₃வோ ப₃பூ₄வ'' [பா₄ரதம்]

[ஸர்வமேதயஜ்ஞத்தில் தன்னையே ஹோமம் செய்துகொள்வதன் மூலம் மஹாத்மாவான மஹாதேவன் தேவதேவனானன்] என்றும் தவத் தேவர்களுக்கும் தேவன் இவனே என்னுமர்த்த₂ம் அறிவிக்கப்பட்டதன்றே.

(நீயே எரிசுடரும் மால் வரையும்...) தனித்தனியாகச் சொல்ல வேணுமோ? எரியாநிற்கும் அக்நியும் பெரிய குலபர்வதங்களும்

கிறதென்? அக்₃நியும் குலபர்வதங்களும் எட்டுத்திக்கும் அண்டா₃ந்தர்வர்த்திகளான சந்த்₃ராதி₃த்யர்களுமான இப் பதா₃ர்த்தங்களுமெல்லாம் உன்னதீ₄னம். 20.

21. இவையா பிலவாய் திறந்தெரிகான்ற
இவையா வெரிவெட்டக் கண்கள்—இவையா
வெரிபொங்கிக் காட்டுமிமையோர் பெருமான்
அரிபொங்கிக் காட்டு மழகு.

திறந்து—விரிந்து. எரி கான்ற—நெருப்பை உமிழ்ந்த. பிலம்வாய் — குஹைபோன்ற பெரிய வாய். இவையா — இதுவோ!; எரிவட்டம்—கொள்ளிவட்டம்போலே உருண்டு சிவந்து ஜ்வலிக்கிற. கண்கள்—திருக்கண்கள். இவையா—இவையோ!; எரி-அக்நிபோல். பொங்கி-கிளர்ந்து காட்டும்-தோன்றின திருமேனியையுடையவனாய். இமையோர் பெருமான் — நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரன். அரி—நரசிங்கமூர்த்தியாய். பொங்கி—கிளர்ந்து. காட்டும்—காட்டின. அழகு—அழகு. இவையா—இதுவோ!

---

ஸர்த்₄வஜ்வலநஸ்வபா₄வமான அக்₃னியும். பூமிக்கு ஆதா₄ரங்களான பெரிய குலபர்வதங்களும். எட்டுதிக்கிலும் உண்டான ஸகலபதா₃ர்த்தங்களும். அண்டா₃ந்தர்வர்த்திகளான சந்த்₃ராதி₃த்யர்களிருவரும் ஆகிற இந்த ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாய் நின்று ஸத்தாதி₃களை நிர்வஹிக்கிறுயும் நீயே. 20.

---

எட்டு திக்குகளும், அண்டத்தினுள்ளேயிருக்கும் சந்திரசூரியர்களுமாகிற இவையெல்லாம் நீயே; இவையனைத்தும் உனக்கு வசப்பட்டவையே என்றபடி.

'ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் பு₄வநாநி விஷ்ணுர்
வநாநி விஷ்ணுர் கி₃ரயோ தி₃ஶஶ்ச' [வி. பு 2-12-38]

[சுடர்களும் விஷ்ணுவே; உலகெல்லாம் விஷ்ணுவே; வநங்களும் விஷ்ணுவே; மால்வரையும் எண்டிசையும் விஷ்ணுவே] என்று பராசரபகவான் அருளியதை அடியொற்றியிருக்கிறது, 20.

பெரி-அவ:— (இவையா) இப்படிப் பூர்ணனானவனுக்கு ஆஶ்ரிதார்த்த₂மாக வரும் சீற்றத்தைச் சொல்லுகிறது. நரஸிம்ஹத்தைத் தத்காலத்திலே அநுஸந்தி₄த்தாற்போலே பேசுகிறார்.

வ்யா:— (இவையித்யாதி) "अवाक्यनादरः" (அவாக்ய நாத₃ர:) என்ற தத்வம் இருக்கிறபடி. பி₃லம்போலே இருக்கிற வாயைத் திறந்து அக்₃நியை உமிழாநின்ற இவை.

---

அவ:— ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதாழ்வானைக் கண்ணற்று நலிந்த ஹிரண்யனை அழியச்செய்த நரஸிம்ஹத்தினுடைய அழகை அநுப₄விக்கிறார்.

உரை:— சிறுக்கனை நலிந்தது பொறுக்கமாட்டாமல் கிளர்ந்த சீற்றத்தாலே பி₃லத்₃வாரம் போலேயிருக்கிற பெரியதிருப்பவளத்தைத் திறந்து ஒழுக்கறாமல் உமிழாநின்றுள்ள அக்னிஜ்வாலை இவை இருக்கிற அழகு என்றான்

---

21. அவ:— ஆழ்வாருடைய செவிக்கினிய செஞ்சொல்லைக் கேட்டவுடன் பரமப்ரீதனான எம்பெருமான், அவனுடைய திருவாயும், திருக்கண்களும் திருமேனியும் மலர்ந்து சுடர்விட ஆரம்பித்தன. 'அவிகாராய' என்று சொல்லப்படும் தத்துவம் அடியேற்காக விகாரமடைந்தபடியென்! என்று ஆச்சரியமடைந்தார். உடனே, தன் அடியானான ப்ரஹ்லாத₃னை நலிந்தவுடன் கடுங்கோபங்கொண்டு விகாரமடைந்த வாயும் கண்ணும் மேனியும் நினைவுக்குவந்தது. நரஸிம்ஹத்தையும் மனக்கண்முன்னே காணலானார். இப்படியும் ஒரு மாறுபாட்டை அடைந்தபடியென்! என்று அவ்வுருவத்திலே ஈடுபட்டுப் பேசுகிறார்.

வ்யா:— (இவையாபிலவாய்) "அவாக்யநாத₃ர:" [ஒருவரிடமும் முகங்கொடுத்துப் பேசமாட்டாதவன்; வேண்டுதல் வேண்டாமையிலான.] [சா₂ந் 3-6] என்றும், "வ்ருக்ஷ இவ ஸ்தப்₃தோ₄ தி₃வி திஷ்ட₂தி" [விருக்ஷம்போலே வணங்காதவனாய் பரமபதத்தில் நிற்கிறான்] [முண்டக 1-1-7] என்றும் சொல்லப்படும் தத்துவம் அடியார்க்காகப்படும் பாட்டை ஒரு பாசுரத்தால் பேசமுடியுமோ? (இவையாபிலவாய்) "மாயனார் செய்ய வாய் ஐயோ! என்னைச் சிந்தை

அக்₃நியை உமிழாநின்று பி₃லம்போலே இருக்கிற வாய் இவை. (இவையாஎரிவட்டக்கண்கள்) "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணன்" என்கிற கண்கள் கொள்ளி வட்டம் போலேயிருக்கிற கண்கள். (இவையாவித்யாதி) அக்₃நிபோலே ஜாஜ்வல்யமானமான திருமேனியை உடைய

---

*கொள்ளிவட்டம் போலே உருண்டு சிவந்து இடைவிடாமல் ஜ்வலிக்கிற இந்தத்திருக்கண்களிருக்கிற அழகு என்றுன்! அக்₃னிபோலே சிவந்து கிளர்ந்து தோற்றுகிற வடிவை*

---

கவர்ந்ததுவே" [அமல-7] "வாலியதோர் கனிகொல் வினையாட்டியேன் வல்வினைகொல், கோலம் திரள் பவளத் துண்டங்கொலோ அறியேன், நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான் தொண்டைவாய்" [*திருவாய்7-7-3*] என்று அடியாரை ஈடுபடுத்தும் வாய் கு₃ஹை வாயிலைப்போலே *திறந்து நின்று நெருப்பைக்* கக்கின, என்ன ஆச்சரியம்! "*திறந்து எரிகான்ற* பிலவாய் இவை" "பிலவாய் இவை *திறந்து* எரி கான்ற" என்று இரண்டுவிதமாக அந்வயிக்கலாம். (இவையா) இவை ஆ; 'ஆ' என்றது 'என்ன ஆச்சரியம்!' என்றபடி. அன்றிக்கே, 'இவையா?' என்பதாகவும் கொள்ளலாம். "என் முன்னே அதிமனோஹரமாகக் காட்சியளிக்கும் இந்த வாயா *நரஸிம்ஹாவதாரகாலத்தில் பி₃லத்தின்* வாயைப்போலே *திறந்து நின்று அக்₃நியை உமிழ்ந்தது?*" என்றபடி. (இவையா எரிவட்டக் கண்கள்) "சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணே!" [*பெரியதிரு7-1-9*] என்றும், "சூழவும் தாமரை நாண்மலர்போல் வந்து தோன்றும் கண்டீர்" [*திருவாய் 7-7-1*] என்றும், "கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரிய வாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே" [*அமல-8*] என்றும் பா₄க₃வதரைப் பரவசப்படுத்தும் இக்கண்களா பா₄க₃வத் விரோதி₄ விஷயத்தில் கொள்ளிவட்டக் கண்களாக மாறின? கொள்ளிவட்டம் போன்ற கண்கள் இவையன்றோ. என்ன ஆச்சரியம்! என்றும் கொள்ளலாம். தமக்கு முன்னே தண்ணளியுடன் காட்சியளிக்கும் பெருமானுருவையும் நரசிங்கவுருவையும் மாறிமாறி அநுப₄விப்பதாக ஒரு பொருள். நரசிங்கவுருவையே நோக்கி ஆச்சரியப்படுவதாக ஒரு பொருள். (இவையா எரிபொங்கிக்காட்டும் இமையோர்

னாய். நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன். அன்றிக்கே, அக்நிகொடுக்கும் ஹவிஸ்ஸையுடைய இந்த்ராதிகளுக்கு நிர்வாஹகன். (அரியித்யாதி) நித்யஸூரிகள் பரிய இருக்குமவன் ஆஸ்ரிதார்த்தமாக நரஸிம்ஹமாய்ச் சீறிக் காட்டின அழகு. 21.

---

யுடையனாய், நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான ஸர்வேஸ்வரன் ஆஸ்ரிதார்த்தமாக நரஸிம்ஹமாய்க் கொண்டு சீறிக் கிளர்ந்து காட்டின அழகுகள் இருக்கிறபடி என்றான்! என்று வித்தராய் அநுபவிக்கிறார். இதுக்கென்ன ஒரு திருமொழி நேர வேண்டும்படியிறே நரஸிம்ஹத்தினுடைய அழகிருப்பது. எரிபொங்கிக்காட்டும் இமையோர் பெருமானென்று ஹோமகாலத்திலே வைதிகர் கொடுத்த ஹவிஸ்ஸை அக்னியானது ஸ்வீகரித்துக்கொண்டு பெரிய கிளர்த்தியோடேபோய் ஸமர்ப்பிக்கும்படியிருக்கிற கர்மாராத்யரான இந்த்ராதிதேவர்களுக்கு நிர்வாஹகனென்னவுமாம். 21.

---

பெருமான் அரிபொங்கிக் காட்டுமழகு) நெருப்பைப்போலே கிளர்ந்து காட்டும் திருமேனியை உடையவனாய், நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாயுள்ளவன் அடியான் ஒருவனுக்காக நரஸிம்ஹமாய்ச் சீறிக்காட்டின அழகு இதுவன்றோ என்றபடி. (எரிபொங்கிக் காட்டும்) சுடர்கள் எல்லாவற்றிலும் விஞ்சி விளங்கும் திருமேனியை உடையவன் என்றுமாம்.

ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்
நேமா வித்யுதோ பாந்தி குதோऽயமக்நி

[முண்ட 2-2-11]

[அப்பரமாத்மாவின் முன் சூரியனும் சந்திர நக்ஷத்திரங்களும் இந்த மின்னல்களும் ஒளிவிடுவதில்லை. இவ்வக்னியைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?] என்றதன்றோ சுடர்மிகு சுருதியும். (இமையோர் பெருமான்) நித்யஸூரிகளும் 'சன்மசன்மாந்தரங்காத்தோ' என்று பரிந்து பல்லாண்டு பாடும்படி ஆளாத்தொழில் செய்தபடி. (எரிபொங்கிக் காட்டும் இமையோர்) ஆஹுதியினாலே அக்னியால் கிளர்ந்தெழுந்து அந்தந்த தேவதைகளிடம் கொடுக்கும் ஹவிஸ்ஸை ஏற்றுக்கொள்ளும் இந்திரன் முதலிய தேவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். (இமையோர் பெருமான்)

22. அழகியான் தானே யரியுருவன் தானே
பழகியான் தாளே பணிமின்—குழவியாய்த்
தானே ழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே
மீனு யுயிரளிக்கும் வித்து.

வித்து தான்—ஜகத்காரணனுன தானே. ஏழ் உலகுக்கும்—ஏழுலகங்களுக்கும். தன்மைக்கும்—(ரூபம் ரஸம் கந்தம் முதலிய) குணங்களுக்கும். தன்மையன்—இருப்பிடமானவனுய். குழவி ஆய்—(ப்ரளயகாலத்தில்) சிறுகுழந்தையாய்க்கொண்டும். மீன் ஆய்—(பின்பொருகால்) மத்ஸ்ய ரூபியாய்க் கொண்டும். உயிர் அளிக்கும்—ஆத்மாக்களை ரக்ஷிக்கின்றவனுன. தானே—எம்பெருமான் தானே. அரி உருவன்—நரசிங்கவுருக்கொண்டவன்; தானே அழகியான்—அழகுக்கு எல்லை நிலமாயிருப்பவனும் அவன்றுனே; பழகியான்—புராணபுருஷனுகிய அப்பெருமானுடைய தாளே—திருவடிகளையே. பணிமின்—ஆஶ்ரயியுங்கோள்.

அவ:— அடியிலே ஜகத்தை. தானே காரணமாயக் கொண்டு ஸ்ருஷ்டித்து ஸ்ருஷ்டமான ஜகத்தை அவாந்தர ப்ரளயத்திலும். மந்வந்தர ப்ரளயத்திலும் வடதளஶாயி

தேவர்களுடைய ஸ்வாமியாகையாலே அவர்களுக்காக இக்காரியம் செய்தானென்றபடி. இச்செயலுக்குத் தோற்று அவர்கள் தங்களை எழுதிக்கொடுத்தபடியைச் சொல்லுகிறதாகவுமாம். (அரிபொங்கிக் காட்டுமழகு) பரமபதநாதனுயிருந்த இருப்பிலும், நரஸிம்ஹமாய்ச் சீறினவிடத்திலே அழகு விஞ்சியிருக்கிறபடி. நற்பாலும் கற்கண்டும் கலந்தாப்போலே நரங்கலந்தசிங்கமான இவ்வழகை அநுபவிக்கைக்கன்றோ, திருமங்கையாழ்வார் "அங்கண் ஞாலம்" [பெரியதிரு 1-7] திருமொழியை அருளினுர். ஆக, இப்பாசுரத்தால் அவிகாரமாய் [illegible] 21.
எல்லையில்லை என்று அருளிச் செய்தாராயிற்று.

22. அவ:—எம்பெருமானுடைய அரிபொங்கிக் காட்டுமழகை அநுபவித்த ஆநந்தத்தாலே 'இத்தைச் சிலர் இழப்பதே' என்று நினைத்து, "இந்த ஸௌந்தர்யமூர்த்தியை அடிபணிந்து உய்யுங்கள்' என்று பிறரை நோக்கி உபதேசிக்கிருர்.

பெரி-அவ:— (அழகியானித்யாதி) நரஸிம்ஹவ்ருத்தம் ப்ரஸ்துதமானது பின்னாட்டுகிறது.

வ்யா:— (அழகியான்) ஆபத்ஸகனானவனே அழகியான். (பழகியான் தாளே பணிமின்) த்யஜிக்கிற

யாயும் மத்ஸ்யரூபியாயும் அழியாதபடி ரக்ஷித்து, ப்ரஹ்லாதனை ரக்ஷிக்கைக்காகத் தூணிலே நரஸிம்ஹமாய்த் தோற்றி, தத்விரோதியான ஹிரண்யனைக் கிழித்துப் பொகட்டு. இப்படி ஸர்வாவஸ்தைகளிலும் தத்தத்வஸ்தாநுரூபமாக ஸகலாத்மாக்களையும் பழையதாக ரக்ஷித்துக் கொண்டு போருகிற ஸர்வேஸ்வரன் திருவடிகளை நீங்கள் ஆஸ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:—ஸர்வாதிகனான தான் பூமி முதலான லோகங்களுக்கும் உபாதானகாரணமாய். அவ்வளவன்றிக்கே தத்ஸ்வரூபமான பூததன்மாத்ராதிகார்யஜாதத்துக்கும் ததா

வ்யா:—(அழகியான் தானே...) சென்ற பாட்டில் அநுபவிக்கப்பட்ட நரஸிம்ஹவ்ருத்தாந்தம் மேலும் தொடர்கிறது. (அழகியான் தானே) அழகையுடையவன் இவனொருவனே. 'பரமபதநாதனோ அழகியான்?' என்ன,—(அரியுருவன் தானே) நரசிங்கமூர்த்தியாய் அவதரித்தவனே அழகியவன். பரமபதத்திலழகு பகல்விளக்குப் போன்றது. இவ்வழகு இருட்டிலே விளக்கேற்றிவைத்தாப்போலே ஒளிவிடுவது. அருளே அங்கு காணலாவது. "சீற்றந்தோடருள் பெற்றவன்" என்று அருள்மட்டுமன்றிக்கே சீற்றத்தையும் காணலாவது இங்கு. தன்னையொத்த ஸர்வஜ்ஞர்க்குக் காட்டுமழகு அது. அஜ்ஞர்க்குக் காட்டுமழகு இது அது கேட்டேகிடக்கும் அழகு. "இரணியனாகம் பிளந்தரியாய் உதிரமளைந்த கையோடிருந்தாளை உள்ளவா கண்டாருளர்" [பெரியாழ்-திரு4-1-1] என்று இவ்வழகை நேரே கண்டவர்கள் உண்டு. (அழகியான் தானே அரியுருவன் தானே) 'அழகிய சிங்கர்' என்று உலகம் புகழ நிற்பவனன்றோ இவன், (அழகியான் தானே அரியுருவன் தானே) 'நாரஸிம்ஹவபு: ஸ்ரீமாந்" என்று ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலேயுள்ள திருநாமங்களுக்கு மொழிபெயர்ப்பாய் அமைந்துள்ளது. (அழகியான் தானே ....பணிமின்) இவன் அழகைப் பார்த்தால் இவனடியிலேயே

ஶரீரத்திலும் வர்த்திக்கிற ஶரீரத்திலும் புதியிகோளா யிருந்துள்ள நீங்கள். உங்கள் கையில் உங்களைக் காட்டிக்கொடாதே காலத்ரயத்திலும் ஶரீரங்களில் ப்ரவேஶிக் கைக்கு நிதானத்தையும். அதுக்குப் பரிஹாரத்தையும் அறியு மவனை ஆஶ்ரயிக்கப்பாருங்கோள். ப்ரக்ருதிவாஸி அறிந்து

---

*கார விஶிஷ்டனுய்க்கொண்டு உபாதான காரணமான வனாய், அவாந்தர ப்ரளயத்தில் இவற்றை வயிற்றிலே வைத்து ஆலந்தளிரிலே கண்வளர்ந்த முக்தஶிஶுவான வனாய். மன்வந்தரப்ரளயத்திலே,* "मीनतनुस्त्वं नाचि निधाय स्थिर-चरपरिकरमनुमनु भगवन्" *(மீநதநுஸ்த்வம் நாவி நிதாய ஸ்திர சரபரிகரமநுமநு பகவந்) என்கிறபடியே சராசராத்மக மான ஸமஸ்தாத்ம வர்க்கத்தையும் தந்நிர்வாஹகனை மநுவையும் ஸ்வஸங்கல்பகல்பிதமான மரக்கலத்திலே வைத்து ரக்ஷித்தருளினவனாய். இப்படி ஸாமாந்யேந ரக்ஷித்தவளவன்றிக்கே ஆஶ்ரிதனை ப்ரஹ்லாதன்ப்ரதி ஜ்ஞாஸமகாலத்திலே நரஸிம்ஹமாய் வந்து ஆவிர்பவித்து.*

---

பணியவேண்டாவே? வெறும் அழகேயோ? ஆண்மையில்லையோ?' என்ன,—(அரியுருவன் தானே....பணிமின்) ஆண்மைக்கு எல்லை நிலமாயிருப்பவனாகிய இவனையே பணியவேண்டாவோ? ஆபத் ஸகனாகவுள்ளவனே அழகியவனாகவும் ஆனபின்பு விடலாமோ? 'அழகியானாகவும், ஆபத்ஸகனாகவும் இருந்தாலும் எங்களுடைய வியாதியையும், எங்களுக்கு அபேக்ஷிதமானதையும் அறியுமவனா யிருக்கவேணுமே' என்ன,—(பழகியான் தானே பணிமின்) உங்க ளுக்கு நீக்கவேண்டிய நோயாகிய இந்த ஶரீரத்தையும், பெறப் போகிற அப்ராக்ருத ஶரீரத்தையும் அறியாத உங்களைப்போலன் றிக்கே இவற்றிலே நெடுநாளாகப் பழகிப்போரும் புராணபுருஷனைப் பற்றுங்கள். (பழகியான் தானே பணிமின்) அவனுடைய திருவடி களையே உபாயமாகவும், உபேயமாகவும் நினைத்துப் பணிந்தீர் களானல், முக்காலத்திலும் நீங்கள் இச்சரீரத்தில் பிரவேசிப் பதற்குக் காரணமான கருமகதியையும், அதுக்குப் பரிஹாரம் தன் கேவலக்ருபையே என்பதையும் அறிந்தவனான அவன் உங்களை ரக்ஷித்தருள்வான். (பழகியான் தானே பணிமின்) தேஹத்தினுடைய

பழையனாய்ப் பரிஹரிக்கும் வைத்₃யனை வ்யாதி₄க்₃ரஸ்தர் பற்றுமாப்போலே. (குழவியித்யாதி) கார்யாகாரமான ஜக₃த்துக்கும் தந்மாத்ரையான ஜக₃த்துக்கும். (தானேயுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே) எல்லாச் சேதநாசேதநங்களுக்

தத்₃விரோதி₄யான ஹிரண்யனைப் பிளந்து பொகட்டவனாய். இப்படி பரஸ்பரவிருத்₃த₄மான நரத்வஸிம்ஹத்வங்களை ஒரு வடிவிலே சேர்த்துக்கொண்டு தோற்றினவளவில் வைரூப்யம் தோற்றியிருக்கையன்றிக்கே சேர்பாலும் கண்ட₃ சர்க்கரையும் சேர்ந்தாற்போலே அத்யந்தரஸாவஹமாய்க் கொண்டு தான் அழகியவனாயிருக்குமவனாய் இப்படி ஸர்வ

வும், மருந்தினுடையவும் ஸ்வபா₄வங்களை அறிந்த பழையனான வைத்₃யனை நோயாளிகள் பற்றுவது போல், "மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா" என்றும், 'வைத்₃யோ நாராயணோ ஹரி:' "பே₄ஷஜம் பி₄ஷக்" [விஷ்ணுஸஹஸ்ரநாமம்] [மருந்தும் மருத்துவனும் விஷ்ணுவே] என்றும் சொல்லப்படும் இவனைப் பற்றுங்கள். (பழகியான் தானே பணியின்) "எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்றும் ஒருத்தருமிப் பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா!" [பெரியாழ்-திரு5-3-6] என்று சொல்லப்பட்ட அவைத்₃யர்களான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களைப் பற்றாமல் வைத்₃யனான விஷ்ணுவைப் பற்றுங்கள். "அவைத்₃ய: ப்ராக்ருத: ப்ரோக்தோ வைத்₃யோ வைஷ்ணவ உச்யதே" [ஸம்ஸாரிகள் அவைத்₃யர்களென்றும், வைஷ்ணவன் வைத்₃யன் என்றும் சொல்லப்படுகின்றனர்.] என்று இவனுடன் ஸம்ப₃ந்த₄ம் பெற்றவர்களையே வைத்₃யராகச் சொல்லும்போது இவன் வைத்₃யஶ்ரேஷ்ட₂ன் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

'நாம் விடப்போகும் ஶரீரத்தையும், புகப்போகும் ஶரீரத்தையும் நன்கறிந்தவன் இவன் என்பது எப்படி ஒட்டும்' என்ன,—(தானேயுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே) ஸகலஜக₃த்துக்கும் ஶரீரியாயிற்றே இவன். இவனையல்லது வேறு எவரால் நோயையும், நோயாளியையும், மருந்தையும் அறிய முடியும்? (தானேயுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே) ப்ரக்ருதிஶரீரவிஶிஷ்டனான தன்னிடமிருந்து உண்டான மஹான், அஹங்காரம், பஞ்சபூ₄தங்கள் ஆகிய ஏழுவிதமான காரியப்பொருள்களுக்கும், இப்பஞ்ச

கும் இவற்றின் கு3ணத்துக்கும் கு3ணி. ( தன் வைக்கும் ) தன் பக்கலிலே வைக்கும. "ஸதே3வ" ( ஸதே3வ ) என்று

---

வஸ்தை2யிலும் ஸகலாத்மாக்களோடும் பழுதி தத்தச்சரீர ப்ரவேஶநிக3ானத்தையும், தத்தத்பரிஹாரத்தையும் அறிந்து ரக்ஷித்துக்கொண்டு [illegible]

---

பூ4தங்களுக்குக் காரணமான ஶப்த3 ஸ்பர்ஶ ரூப ரஸ க3ந்த4 தந் மாத்ரைகள் ஐந்துக்கும் இருப்பிடமானவன் இவனே. தன்மை யாவது தன்மாத்ரை; அதாவது பஞ்சபூ4தங்கள் ஒவ்வொன்றுக்கும் பூர்வாவஸ்தை2யாய், அந்தந்த பூ4தங்களில் அஸாதாரண கு3ணமாக வெளிப்படாமல் உள்ளடங்கி நிற்பது தன்மை. உதாரணமாக, ஆகாஶத்திற்கு ஶப்3த3கு3ணம் அஸாதாரணம். ஆகாஶத்தின் பூர்வாவஸ்தை2யான ஶப்3த3தந்மாத்ரையில் இந்த ஶப்3த3கு3ணம் உள்ளடங்கி நிற்கும். இப்படியே வாயு, அக்3நி ஜலம், பூ4மி என்னும் பூ4தங்களுக்கும் முறையே காரணமான ஸ்பர்ஶ ரூப ரஸ க3ந்த4 தந் மாத்ரைகளில் ஸ்பர்ஶ ரூப ரஸ க3ந்த4கு3ணங்கள் உள்ளடங்கிநிற்கும். அந்தந்த பூதங்களில் இவை வெளிப்படும். தன்மாத்ரைக்கும் கு3ணங்களுக்கும் மிகுந்த பே4த3முண்டு. தன்மாத்ரைகள் த்3ரவ்யங்களாகவும் அந்தந்த பூ4தங்களுக்குக் காரணமாகவும் இருப்பவை. கு3ணங்கள் அப்படியன்று. ஆக, "தானேழுலகுக்கும்...தன்மையனே" என்றதால் பரஸ்பரம் கார்யமாகவும் காரணமாகவுமிருக்கும் வஸ்துக்களுக்கெல்லாம் காரணமாயிருப்பவன் தானே என்றாராயிற்று. 'ஏழுலகு' என்னும் ஶப்3த3ம் காரியப்பொருள்களான மஹதா3ஹங்கார பூ4தங்களைக் குறிக்கிறது.

அன்றிக்கே, ( தானேழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே ) 'ஏழுலகு' என்று பூ4லோகம் பு4வர்லோகம், ஸுவர்லோகம் முதலான மேலேழு லோகங்களையும், அதலவிதலாதி3களான கீழேழு லோகங்களையும் உரைப்பதனமூலம் அவற்றிலுள்ள ஸகல சேதநா சேதநங்களையும் சொல்லுகிறது. 'தன்மைக்கும்' என்று அசேதனப் பொருள்களின் கு3ணங்களாகிற ஶப்3த3ஸ்பர்ஶாதி3களையும், சேதன கு3ணங்களையும் சொல்லுகிறது. ஆக, ஸர்வசேதநாசேதனங்களுக் கும், அவற்றின் கு3ணங்களுக்கும் இவனே கு3ணியாய்—ப்ரகாரியாய்—இருப்பிடமாய்—இருப்பவன் என்றாராகிறது. இவனுக்கு ப்ரகாரமாம்போது கு3ணியோடு கு3ணங்களோடு வாசியில்லை என்றதாயிற்று. " தன் வைக்கும் தன்மையனே " என்று பாட3மான

சொல்லப்படுகிறவனே தன்னை அழியமாறிச் சேதநரை ரக்ஷிக்கும் த்ரிவித₄காரணமும். 22.

---

வடிகளையே. வ்யாதி₄யையும் தந்நிதா₃னத்தையும் தத்தத் ப்ரக்ருதி விஶேஷங்களையும் அறிந்து பழையனைப் பரிஹரித்துப் போரும் வைத்₃யனை வ்யாதி₄க்₃ரஸ்தர் ஆஶ்ரயிக்குமா போலே ஸம்ஸாரவ்யாதி₄க்₃ரஸ்தரான நீங்களும் ஆஶ்ரயியுங்கோள். 22.

---

போது "ஏழுலகங்களையும் இயற்கையாகவே தன்னிடத்தில் கொண்டிருப்பவன்" என்று பொருள். 'இவன் நம்மை ரக்ஷித்த துண்டோ?' என்னில்,— (குழவியாய் மீனாய் உயிரளிக்கும் வித்து) இவன் நமக்குச் செய்யாத ரக்ஷணமும் உண்டோ? அவாந்தர ப்ரளயாபத்திலே ஆலிலையிலே சிறுகுழந்தையாகி நம்மை வயிற்றிலே வைத்து ரக்ஷித்தான்.

> மீநதநுஸ் த்வம் நாவி நிதா₄ய
> ஸ்தி₂ரசரபரிகரமநும் நு ப₄க₃வந்।
> வேத₃ஸநாபி₄ ஸ்வோக்தி விநோத₃-
> ரகலிதலயப₄யலவமமுமவஹ: ॥ [ர-ஸ்த 2-60]

[எம்பெருமானே! மீனுருக்கொண்டதேவரீர் ஒரு கப்பலில் மநுவினருகே ஸ்தா₂வரஜங்க₃மருபமான எல்லாப் பொருளையும் வைத்து, வேதத்தையொத்த தமது விநோத₃ வார்த்தைகளால் பிரளயபத்தைப் பற்றிய ப₄யமில்லாமல் இவற்றை ரக்ஷித்தீர்.] என்கிற படியே மந்வந்தரப்ரளயத்திலே, எல்லா உயிர்களையும், அவற்றுக்குத் தலைவனை மநுவையும், தன் ஸங்கல்பத்தால் ஏற்பட்டதொரு கப்பலிலே வைத்து, ஸர்வஜ்ஞனை தான் ஒரு ஜல(ட₃) ஜந்துவாகி, அக்கப்பலை ப்ரளயங்கொள்ளாதபடி இழுத்துச் சென்று ரக்ஷித்தான். பிரமனின் கள்ளுறா வேதங்களைத் திருப்பிக் கொடுத்து, அவனைக்கொண்டு ஸ்ருஷ்டி செய்யச் செய்ததன்மூலம் மீனாய் உயிரளித்தான் என்றுமாம். (வித்து) இவ்வளவேயன்றிக்கே "ஸதே₃வ ஸோம்ய" [சாந் 6-2-1] என்று உபநிஷத் ஓதுகிற படியே நமக்கு நிமித்த உபாதா₄ன ஸஹகாரிகாரணங்கள் மூன்றுமாயிருப்பவன் இவனே என்கிறார். 22.

23. வித்துமிட வேண்டுங் கொலோ விடையடர்த்த
பத்தி யுழவன் பழம்புனத்து—மொய்த்தெழுந்த
கார்மேக மன்ன கருமால் திருமேனி
நீர்வானம் காட்டும் நிகழ்ந்து.

விடை அடர்த்த—(நப்பின்னைப் பிராட்டிக்காக) ரிஷப₄ங்களை அடக்கினவனும். பத்தி உழவன்—(தன் விஷயத்தில் சேதநர்கட்கு) பக்தியுண்டாவதற்குத் தானே முயற்சி செய்பவனுமான எம்பெருமானுடைய. பழம் புனத்து—(ஸம்ஸாரமென்கிற) அநாதி₃யான க்ஷேத்ரத்திலே. வித்தும் இட வேண்டும் கொலோ—(ஸ்வப்ரயத்நமாகிற) விதையை நாம் விதைக்க வேண்டுமோ? [வேண்டா;] (போது போக்க வழியென்னென்னில்:) மொய்த்து எழுந்த—திரண்டு கிளர்ந்த. கார்மேகம் அன்ன—காளமேகம்போன்ற. கருமால்—கரிய திருமாலினது. திருமேனி—திருமேனியை. நீர்வானம் — நீர்கொண்டெழுந்த மேகமானது. நிகழ்ந்து—எதிரேநின்று, காட்டும்—காண்பிக்கும். (போலிகண்டு நாம் தரித்திருக்கலாமென்றபடி.)

பெரி-அவ:— (வித்தும்) அறிந்த த₃ஶையிலும், அறியாத த₃ஶையிலும் ஸர்வேஶ்வரனே ரக்ஷகனாக அறுதியிட்ட பின்பு தன் அபி₄மதஸித்₃தி₄க்கு இவன் செய்யவேண்டும் ஸுக்ருத

அவ:— யாத்₃ருச்சி₂காதி₃ஸுக்ருதங்களையும் தானே கல்பித்து ஸ்ருஷ்ட்யவதாராதி₃களிலே ஸ்வவிஷயப₄க்திக்கு ஸர்வேஶ்வரன் தானே கைதொட்டு க்ருஷிபண்ணிக்

23. அவ:— "பழகியான் தானே பணிமின்" என்று மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனைப் பணிவதே ஸம்ஸாரமாகிற வியாதி நீங்குவதற்கு வழியாகும் என்று அருளிச்செய்தவுடன் "சிறிய பலன்களைப் பெறுவதற்கே அரும்பாடுபடவேண்டியிருக்கிறது. அப்படியிருக்க, மோக்ஷமாகிற பெரும் பலனைப் பெற ஸர்வேஶ்வரன் அடிகளிலே பணிந்தால்மட்டும் போதுமா" என்று சிலர் கேட்க, "சென்றபாசுரத்திற் சொன்னபடியே, இச்சேதனன்

முண்டோ? ஸததா ப்ரயுக்தமான இச்சை இவனுக்குண்டாகில், மேலுள்ளதுக்கு அவன் கடவனுகில் இவன் செய்யும் அம்ஶம் என்னென்கிருர்.

வ்யா:— (வித்துமிட வேண்டுங்கொலோ) வித்தென்று சொல்லுகிறது ஸுக்ருதத்தை. (விடையடர்த்த பத்தியுழவன்) நப்பின்னைப்பிராட்டிக்கு உதவிற்றென்று வ்யாஜமாய், ஆஶ்ரி

---

*கொண்டு போராநிற்க, தன் அபிமதஸித்திக்கு இவன் செய்யவேண்டுவதுண்டோ? என்கிருர்.*

**உரை:—** *நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கு விரோதியான ருஷபங்களை முடித்துப் போகட்டவனுய், இது முதலான திவ்யசேஷ்டிதங்களைக் கைமொடுமானமாகக்கொண்டு ஸ்வவிஷயபக்திக்கு உத்தரோத்தரம்*

---

தன்னை அறிந்த தஶையிலே அரியுருவனுகவும் மீனுகவும் பிறந்து உயிரளித்தும், அறியாத (ப்ரளய) தஶையிலும் தானேமுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனுய் நின்று நோக்கியும் அவனே ரக்ஷித்தருளும்போது இவனிடத்தில் ஒரு கைம்முதலும் வேண்டுமோ? இவனுக்கு இயற்கையாகவேயுள்ள அறிவினுலேற்படும் இச்சையிருந்ததாகில், மேல் செய்யவேண்டியவற்றை ப்ராப்தாவும், ப்ராபகனும், ப்ராப்திக்கு உகந்து க்ருஷிசெய்வானுமான அப்பத்தியுழவன் பார்த்துக்கொள்வான். இச்சைக்கு மேற்பட இவன் செய்ய வேண்டிய அம்ஶம் என்னவிருக்கிறது?'' என்கிருர்.

வ்யா:— (பத்தியுழவன் பழப்புனத்து வித்துமிட வேண்டுங் கொலோ) பக்தியாகிற பயிருக்காகப் பாடுபடும் பரமபுருஷனுடைய பழையதான உலகமாகிற இவ்வயலில் நாம் புண்ணியங்களாகிற விதைகளை விதைக்கவும் வேண்டுமோ? (பத்தியுழவன்) ஒரு சேதனனிடத்திலே பக்தியாகிற பயிரென்று முளைப்பதற்காக இவ்வுழவன் பட்டிருக்கும் பாடுகள் கொஞ்சமோ? உழுவது, நீர்பாய்ச்சுவது, களைபிடுங்குவது, எருவிடுவது, விதைப்பது, நாற்றுநடுவது முதலிய பல காரியங்களை உழவன் பயிருக்காகச் செய்வதுபோல் இவன் பக்திப் பெரும்பயிருக்காகப் பட்ட பாடுகள் ஒரு கணக்கில் அடங்கா என்றபடி. த்ரிபாத் விபூதியாகிற பெருநிலம் செழிப்பாக

தருடைய ப₄க்திக்குக் கர்ஷகனானவனுடைய. (பழம் புனத்து) பழம்புனங்களிலே விதைக்க வேண்டாதே உதறி முளைக்குமாப்

---

*க்ருஷிபண்ணிக்கொண்டுபோரும் க்ருஷ்ணனுடையதாய். ப்ரவாஹரூபேண அநாதி₃யாய்ப் போருகிற விளைநிலத்திலே. எப்போதும் உழுவது விளைவது அறுப்பதாய்ப் போருகிற க்ஷேத்ரத்தில் வித்தை இடவேண்டாதே தன்னடையே உதிரி முளைக்குமாபோலே தன்னடையே விளையக்கடவ*

---

விளைந்துகிடக்கச் செய்தேயும், ஸேவாவிபூ₄தியாகிற இந்நிலம் தரிசாகக்கிடப்பதைக் கண்டு தாளாமல் ஜக₃த்ஸ்ருஷ்டியைப் பண்ணி, ஜீவர்களுக்கு தேஹேந்திரியாதிகளைக் கொடுத்து, அந்தர்யாமியாய் நின்று நோக்கியும் அவதாரங்களைச் செய்தும் ரக்ஷித்துப்போருவதையெல்லாம் நினைக்கிறது.

"ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னைசொல் நீர்மடுத்து
ஈர்நெல்வித்தி முளைத்த நெஞ்சப்பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த
காரமர் மேனி நம் கண்ணன்" [*திருவாய் 5-3-4*]

என்று நம்மாழ்வாரும் இவனைப் பத்தியுழவனாகவே பேசினாரன்றோ. (பழம் புனத்து) புதிதாகத் தரிசு திருத்தினதன்றிக்கே பழையதாக உழுவது நடுவது விளைவதாய்ச் செல்லும் நிலத்தில், பத்தியுழவன் நெடுங்காலமாக உழுதுவரும் இவ்வுலகமாகிற வயலில். ப்ரவாஹரூபேண அநாதி₃யாயிருப்பதன்றோ இவ்வுலகம். (பழம் புனத்து வித்துமிட வேண்டுங்கொலோ) பழையதான நன்செய் நிலங்களிலே நிலத்தின் வளத்தாலே, விதைகளை முறைப்படி முயற்சிசெய்து விதைக்கவும் வேண்டாதே உதறிவிட்டாலும் நன்கு விளைவதுபோலே, இப்பத்தியுழவனுடைய பழம்புனமாகிய பூமியிலுள்ளார்க்கு, இச்சைக்கு மேற்பட ஸ்வப்ரயத்நரூபமான வேறொரு முயற்சியும் வேண்டாவென்றபடி. பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தில் "பழம்புனங்களிலே விதைக்கவேண்டாதே உதறி முளைக்குமாப்போலே..." என்று காணும் பாட₂த்தின்படி மேற்கண்டவாறு பொருள்படுகிறது.

ஆயினும், "பழம்புனங்களிலே விதைக்கவேண்டாதே, உதிரி முளைக்குமாப்போலே யாத்₃ருச்சி₂கஸுக்ருதங்கள் தன்னடையே

போலே யாத்₃ருச்சி₂கஸு¬க்ருதங்கள் தன்னடையே பிறக்கும்

யாத்₃ருச்சி₂கதி₂ஸு¬க்ருதமாகிற விதையைக்கருதி இவன் விதைக்க வேணுமோ? இப்படி அவன் க்ருஷிப₂லமான

பிறக்கும்படியாகவிறே ஈஶ்வரன் ஜக₃த்ஸ்ருஷ்டியைப் பண்ணுவது". என்று பாடமிருந்திருக்கக்கூடுமென்று பின்வரும் நிருபணங்களால் விளங்கும். இப்பர்சுரத்தின் பொருளை ஒரு ஸூத்ரமாக ஸ்ரீவசந பூ₄ஷணத்திலே (ஸூ 389) அருளிச்செய்யாநின்ற பிள்ளைலோகா சார்யர் "பழையதாக உழுவது நடுவது விளைவதாய்ப்போரும் க்ஷேத்ரத்திலே உதிரி முளைத்துப் ப₂லபர்யந்தமாமாப்போலே, இவைதான் தன்னடையே விளையும்படியாய்த்து பத்தியுழவன் பழம் புனத்தை ஸ்ருஷ்டித்த கட்டளை" என்று அருளியிருப்பதிலிருந்தும், "புதிசாகத் தரிசு திருத்தினதன்றிக்கே பழையதாக உழுவது நடுவது விளைவதாய்க்கொண்டு செய்காலாய்ப் போரும் க்ஷேத்ரத் திலே கர்ஷகன் அதுக்கென்னவொரு க்ருஷியும் பண்ணாதிருக்க, உதிரியானது முளைத்து விளைந்து தலைக்கட்டுமாப்போலே" என்று மாமுனிகள் வியாக்கியானம் செய்திருப்பதிலிருந்தும் ஆச்சான் பிள்ளையும் "உதிரி முளைக்குமாப்போலே யாத்₃ருச்சி₂கஸு¬க்ருதங்கள் தன்னடையே பிறக்கும்படியாகவிறே..." என்றே அருளியிருப்பார் என்பது விளங்கும். "வித்துமிடவேண்டுங்கொலோ" என்ற மூல மும், "யாத்₃ருச்சி₂க ஸு¬க்ருதங்கள் தன்னடையே பிறக்கும்படி யாக" என்னும் வ்யாக்யானஸூக்தியும் "உதிரி முளைக்குமாப் போலே" என்ற பாடத்திற்கு மிகப்பொருந்தியிருக்கும். உதிரி முளைப்பதாவது:— சென்றவருடப் பயிரிலே நிலத்தில் உதிர்ந்த நெற்கள் தாமாகவே முளைக்கையைச் சொன்னபடி. பழையதாய் ஸாரமானதான பூமியிலே விதை விதைக்காவிடிலும் சென்ற பயிரிலே உதிர்ந்த நெற்கள் தாமாகவே முளைக்குமாப்போலே, இவ்வுலகிலும் யாத்₃ருச்சி₂கம், ப்ராஸங்கி₃கம், ஆநுஷங்கி₃கம் என் னும் புண்யங்கள் தானாகவே பிறக்கும்படியாகப் பத்தியுழவன் இப்பழம்புனத்தை ஸ்ருஷ்டித்து வைத்திருக்கிறானாகையாலே இச் சேதனன் தான் முயற்சி செய்து ஒரு புண்யமாகிற விதையை விதைக்கவேண்டிய அவசியமில்லை என்று பா₄வம். யாத்₃ருச்சி₂கம் முதலான ஸு¬க்ருதங்கள் (நற்காரியங்கள்) இச்சேதனனுக்குத் தானாகவே விளையுமோவென்றால்; அவற்றின் ஸ்வரூபத்தை ஆராய்ந்தால் தானாகவே விளையுமென்று அறியலாம். யாத்₃ருச்சி₂க ஸு¬க்ருதமாவது:—ஒருவன் கோடைகாலத்தில் தன் வயல்கள்

படியாகவிறே ஈஶ்வரன் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணுவது.

---

யாத்ருச்சிகாதி ஸுக்ருதம் தளமாக தத்விஷயருசி பிறந்த பின்பு திரண்டு கிளர்ந்த காளமேகம்போன்ற கறுக்க

---

காய்ந்துபோகாமலிருக்க, நெடுந்தூரத்திலுள்ள ஆற்றிலிருந்து ஏற்றமிட்டிறைத்து வாய்க்கால் வழியே வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சுமளவிலே, தண்ணீரில்லாமல் தவித்துக் கொண்டுவரும் பாகவதர் சிலர் அவனறியாமல் அத்தண்ணீரிலே இளைப் பாறினால், அதை 'என்னடியார் விடாயைத் தீர்த்தானிவன்' என்று ஒரு புண்யமாகக் கணக்கிட்டுவைப்பன் ஈஶ்வரன்; ஒருவன் தனக்குச் சூதுசதுரங்கமாடுகைக்கும் காற்றுட வீற்றிருக்கைக்குமாக வாசல் திண்ணையைக் கட்டிவைத்திருக்க மழை வெயில்களால் துன்புறும் சில பாகவதர்கள் அவனறியாமல் அதிலே சிறிது தங்கிப்போனார்களாகில் 'என் அடியார்க்கு ஒதுங்க நிழல் கொடுத்தானிவன்' என்று ஒரு ஸுக்ருதமாக எழுதிக் கொள்ளும் ஈஶ்வரன். இதுபோல் யத்ருச்சையால் ஏற்படும ஸுக்ருதங்கள் யாத்ருச்சிக ஸுக்ருதங்களாகும். ப்ராஸங்கிக ஸுக்ருதமாவது:— புத்தூர், தென்னூர் என்றுப்போலே பல ஊர்ப்பெயர்களைச் சொல்லி வரும்போது ப்ரஸங்காத் திருவரங்கம் என்று பகவத்ஸம்பந்தமுள்ள பெயரைச் சொன்னால் 'என்னூரைச் சொன்னான்' என்று ஸுக்ருதமாகக் கணக்கிடுவன் ஈஶ்வரன். அப்படியே நம்பி பிம்பி யென்று நாட்டுமானிடப்பேரைச் சொல்லிவரும்போது 'நாராயணா' என்று பகவந்நாமத்தையும் சொல்லிவைத்தால், இதுவேகொண்டு 'என்பேரைச்சொன்னான்' என்று புண்யமாகக் கணக்கிடுவன். இதுபோன்றவை ப்ராஸங்கிகஸுக்ருதமாகும். ஆநுஷங்கிக ஸுக்ருதமாவது:— ஒரு காட்டிலே சில பாகவதர்கள் வழிநடக்கும்போது சில திருடர்கள் அவர்களை வழிபறிக்கத் தொடங்க, தன் கார்யமாகச் செல்லும் சேவகனொருவன் பின் வருவதைக் கண்டு இவர்களை ரக்ஷிக்கவே வருகிறான் என்றெண்ணி திருடர்கள் பயந்தோடினால், 'என்னடியாரை நோக்கினானிவன்' என்று இதை அந்த ஸேவகனுடைய ஸுக்ருதமாக எழுதி வைப்பன். இதுபோல் ஒரு காரியத்தைச் செய்யும்போது ஆநுஷங்கிகமாக வருமவை ஆநுஷங்கிகஸுக்ருதமாகும். இப்படிப்பட்ட இந்த யாத்ருச்சிகாதி ஸுக்ருதங்கள் தானாகவே பிறக்குமென்பது தெளிவன்றோ. (பத்தியுழவன் பழம்புனத்து வித்துமிடவேண்டுங்கொலோ) உழவன் விதைத்த நிலத்திலே வேறொருவர் விதைக்கவேண்டுமோ?

(மொய்த்தெழுந்தவித்யாதி) ருசி பிறந்தபின்பு ப்ராப்தியளவும்

நிறத்தையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருமேனியை நீர் கொண்டெழுந்த காளமேகமானது கண்ணுக்கு விஷயமாய்க்கொண்டு முன்னே நின்று காட்டாநிற்கும். அவன் வடிவோடு போலியாம் தன் வடிவைக்காட்டி விளைந்த ருசியை வளர்த்து ப்ராப்தியளவும் இவனை தரிப்பியாநிற்கும் மேகமென்கை. அன்றிக்கே, ஸம்ஸாரமாகிற பழம்புனத்

"தேந சேதவிவாதஸ்தே மா கங்காம் மா குருந் கம:" [மநு 8-92]

[பரமாத்மாவுடன் விவாதமில்லையாகில் கங்காதி புண்யதீர்த்தங்களுக்கும், குருக்ஷேத்ராதி புண்யக்ஷேத்ரத்திற்கும் செல்லவேண்டா] என்ற மனுவைப்போலே ஸாதுநபுத்தியுடன் ஸுக்ருதம் செய்யவேண்டா என்று நிஷேதிக்கிறார். இப்பத்தியுழவன் செய்யும் உழுவது முதலான காரியங்கள் யாவை? என்னும் அபேக்ஷையிலே அருளிச்செய்கிறார் — (விடையடர்த்த பத்தியுழவன்) இவனுடைய அவதார சேஷ்டிதங்களே பக்திப்பெரும்பயிருக்கு இவன் செய்யும் க்ருஷியென்றபடி. இவன் ஏழு எருதுகளையும் வென்றது நப்பின்னைப்பிராட்டிக்காக என்பது வியாஜமாத்ரமேயாகும். இச்செயலாலே அடியார்களைத் தோற்பித்து அவர்களிடத்திலே பக்தியை விளைப்பிக்கவேண்டும் என்பதே உண்மையான கருத்து. (வித்துமிட...புனத்து) அவதாராதிகளாலே அவன் இதற்கு க்ருஷி பண்ணியிருக்கும்போது இவன் செய்யவேண்டியதென்?

"ந ஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" [3-5]

[இவ்வுலகில் ஒருக்ஷணப்பொழுதும் ஒரு காரியமும் செய்யாமல் ஒருவனும் நிற்பதில்லை] என்று கீதையில் கண்ணன் அருளியபடியே இவனால் ஒருக்ஷணமும் சும்மாயிருக்க முடியாதே. இவன் ஒரு ஸுக்ருதமும் செய்யாமலிருந்தால் பொழுது போவது எப்படி? என்ன, அருளிச்செய்கிறார் — (மொய்த்தெழுந்தகார்மேகமன்ன கருமால் திருமேனி நீர்வானம் காட்டும் நிகழ்ந்து) "நெருங்கியெழுந்த மழைகால மேகம்போன்ற கண்ணனின் கறுத்த திருமேனியை நீர் கொண்டெழுந்த மேகமானது காட்டும். பகவத் க்ருஷிபலமாக விளைந்த முற்கூறிய யாத்ருச்சிகம் முதலான ஸுக்ருதங்களாலே பகவத் விஷயத்தில் ருசிபிறந்த பின்பு,

நாம் த4ரிக்கைக்கு அவன் திருமேனிக்குப் போலியுண்டென்கை. செறிந்தெழுந்த கார்காலத்தில் மேக4ம்போலே ஶ்யாமமான திருமேனியையுடைய ஸர்வேஶ்வரனுடைய நிறத்தை நீர் கொண்டெழுந்த காளமேக4ம் காட்டும். 23.

---

*திலே "ஈரநெல்வித்தி" என்கிறபடியே தத்3விஷயருசியாகிற விதையைத்தான் தேடியிடவேணுமோ, அவன் வடிவோடு போலியாம் தன் வடிவைக்காட்டி தத்3விஷயருசியை வர்த்3த4கவலாஹகந்தானே முன்னின்று பிறப்பியாநிற்கு? என்னவுமாம்.* 23.

---

அவனை அடையும் வரையில் அதனைக் கண்டு தரித்திருந்து ருசி வளரப்பெற்றுப் பொழுதைப் போக்கலாம்" என்கிறார். இங்கு நீர் வானம் என்றது பகவானுடைய திருமேனிக்குப் போலியான—ஒப்பான—பொருள்களுக்கெல்லாம் உபலக்ஷணம்.

"கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்
வண்டறுப்பூவைதான் மற்றுத்தான்—கண்டநாள் [தான்
காருருவம் காண்தோறும் நெஞ்சோடும் கண்ணனூர்
பேருருவென்றெம்மைப் பிரிந்து" [பெரியதிருவ 49]

"பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலரென்றும் காண்தோறும்—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
யெல்லாம் பிரானுருவே யென்று" [பெரியதிருவ 73]

என்று நம்மாழ்வாரும் பொழுதுபோகைக்குத் திருமேனிக்குப் போலியான பொருள்களைப் பார்த்து த4ரித்துநின்றபடியை அருளிச்செய்தாரன்றோ. (நிகழ்ந்து காட்டும்) ப்3ரஹ்மாதி3களும் காணமாட்டாத திருமேனியை நம் கண்ணெதிரே காட்டும். இந்த முதல் நிர்வாஹத்தில் ப4லவத்க்ருஷிப2லமாக யாத்3ருச்சி2காதி3 ஸுக்ருதங்கள் விளைய, அதனாலே பிறந்த ருசியை வளர்த்துப் போதுபோக்கச் செய்வது மேக4ம் என்று கூறப்படுகிறது. இங்கு விதை ஸுக்ருதம்.

இனி, அப்பிள்ளை காட்டிய இரண்டாவது நிர்வாஹத்தில் "ஈரநெல்வித்தி" [திருவாய் 5-3-4] என்கிற ப4க3வத்3விஷய ருசி

24. நிகழ்ந்தாய் பால்பொன் பசுப்புக் கார்வண்ணம் நான்கும்
இகழ்ந்தா யிருவரையும் வீய—புகழ்ந்தாய்
சினப்போர்ச் சுவேதனைச் சேனாபதியாய்
மனப்போர் முடிக்கும் வகை.

பால் பொன் பசுப்பு கார் நான்கு வண்ணமும்-வெண்மை, சிவப்பு, பசுமை கறுப்பு ஆகிற நான்கு வர்ணங்களையு முடையவனாய்க்கொண்டு. நிகழ்ந்தாய்—(நான்கு யுகங்களி லும்) ப்ரகாசித்தாய்; இருவரையும்—மது₄கைடப₄ர்களாகிற இரண்டு அசுரர்கள், வீய—தொலையும்படி. இகழ்ந்தாய்—விலக்கினாய், சேனாபதி ஆய்—அர்ஜுநனுடைய ஸேனைக்கு ரக்ஷகனாய்க்கொண்டு, மனம்-(த்₃ரௌபதி₃யின் கூந்தலை முடிப் பிக்கவேணுமென்ற) மநோரத₂ங்கொண்டிருந்தபடியே, போர்—பா₄ரத யுத்₃த₄ம், முடிக்கும் வகை—முடியும்படி. சினம் போர் சுவேதனை—சீறிக்கொண்டு யுத்தத்தில் இழியும் சுவேதவாஹனனான அர்ஜுனனை, புகழ்ந்தாய்—கொண்டாடினாய்.

---

அவ:— 'நீர் சொன்னபடியே ப₄க்தியைப் பிறப்பித்து நாம் ரக்ஷியாநின்றோமோ?' என்று ப₄க₃வத₃பி₄ப்ராயமாக. யுக₃ம்தோறும் ஸத்வாதி₃கு₃ணயுக்தரான சேதனருடைய ருச்யநுரூபமான விக்₃ரஹத்தைப் பரிக்₃ரஹித்து அவர்களுக்கு உன் விஷயத்திலே ப₄க்தி விளையும்படி க்ருஷிபண்ணி ரக்ஷித்திலையோ? என்கிறார்.

---

விதையாகிறது. அவன் வடிவையொத்த தன் வடிவைக்காட்டி, மேக₄மே அவன் விஷயத்திலே ருசியை விளைக்கும்போது, அந்த ருசியாகிற விதையை நாம் விதைக்க வேண்டுமோ? என்று பாசுரத்தின் திரண்ட பொருள். 23.

24. அவ:— பத்தியுழவன் படும் பாடுகளை இப்பாட்டிலும் அடுத்த பாட்டிலும் அருளிச்செய்கிறார். அதில் இப்பாட்டிலே அவன் அடியார்க்காகத் தன்னை அழியமாறியும் உதவுவதைக்கண்டு உருகுகிறார்.

பெரி-வ்யா:— (நிகழ்ந்தாயித்யாதி) அவ்வோ யுக₃ங்களில்

---

உரை:— க்ருதாதி₃ யுக₃ங்களிலே சேதனருடைய ஸத்வாதி₃ கு₃ணாநுகு₃ணமாக பால்போலே வெளுத்தும், பொன்

---

வ்யா:— (நிகழ்ந்தாய் பால் பொன் பசுப்புக் கார் வண்ணம் நான்கும்) அந்தந்தக் கல்பங்களிலேயிருப்பவர்கள் தங்கள் குணத்திற்கேற்றவாறு ஒவ்வொரு நிறத்தை விரும்பியிருப்பார்கள். அவர்களுக்காகத் தன் இயற்கையான காளமேகத் திருவுருவையும் மாற்றியமைத்துக்கொண்டு காட்சியளிப்பான் ஸர்வேஶ்வரன் என்று சாஸ்திரங்கள் சொல்லுவதுண்டு. "காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி" என்கிறபடியே இவர்களுக்கு ப₄க்தியை விளைவிப்பது திருமேனியேயாகையாலே அதன் இயற்கை நிறத்தையும் இவர்களுக்காக மாற்றியமைக்கும் இம்மஹாகு₃ணத்திலே ஈடுபடுகிறார். (நிகழ்ந்தாய் பால் வண்ணம்) "க்ருதே ஶுக்லஶ்சதுர்பா₃ஹு:" என்கிறபடியே ஸத்வகு₃ணம் நிறைந்த க்ருதயுக₃த்திலிருப்பவர்கள் ஸத்வப்ரதா₄னராய் வெள்ளை மனத்தையுடையராகையாலே தம் கு₃ணத்திற்கேற்ப தூயவெள்ளை நிறத்தை விரும்பியிருப்பர்கள்; அப்போது பகவான் வெளுத்த நிறமுள்ளவனாகக் காட்சியளிக்கிறான். வண்ணம்—வர்ணம்; நிறம். "வளையுருவாய்த் திகழ்ந்தான்" என்றும் "சங்கவண்ணமன்ன மேனி" என்றும் சங்கைப்போல் வெளுத்திருந்தான் என்று சொல்லாமல் 'பால்போன்று வெளுத்திருந்தான்' என்று சொல்லுவதிலிருந்து நிறத்தில் வெளுத்ததோடல்லாமல் ரஸத்திலும் உயர்ந்திருப்பவன் என்று தோன்றுகிறது. "க்₄ருதமிவ பயஸி நிகூ₃ட₄ம்" [பாலினுள் மறைந்திருக்கும் நெய் போன்றவன்] என்றும், "ஸர்வரஸ:" [எல்லா ரஸங்களையும் உடையவன்] என்றும், "ரஸோ வை ஸ:" [ரஸமென்பது அவனே] என்றும் வேதங்களாலும், "தேனே பாலே கன்னலே அமுதே" "கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை" "கறந்த பாலுள் நெய்யேபோல்" என்று ஆழ்வார்களாலும் புகழப்பட்டவனன்றோ இவன். வண்ணம் என்னும் பத₃ம் ஸ்வபா₄வத்தையும் (தன்மையையும்) சொல்லும்.

(நிகழ்ந்தாய் பொன் வண்ணம்) "த்ரேதாயாம் ரக்தவர்ணோஸௌ" என்கிறபடியே த்ரேதாயுக₃த்தில் ரஜோகு₃ணத்தோடு கலந்த ஸத்வகு₃ணத்தையுடையவர்களாய் இருப்பர்களாகையாலே

சேதநர்க்கு ப்ரியமான வெண்மை தொடக்கமான நிறங்களை

---

போலே சிவந்தும், பாசியின் பசும்புறம்போலே பசுத்தும், மேகம்போலே கறுத்துமிருக்கிற நாலு வகைப்பட்ட நிறத்தையுடையையாய்க்கொண்டு க்ருதாதி யுகங்கள் நாலி

---

சிவப்பும் வெளுப்பும் கலந்ததான பொன்னிறத்தை விரும்பியிருப்பர்கள். அவர்களுக்காகப் பொன்னிறத்தையுடையவனாய்க் காட்சியளிக்கிறான் எம்பெருமான். "ரக்தவர்ண:" என்றும், "சேயன் என்றும் திரேதைக்கண்" என்றும் பொதுவாகச் சிவந்த நிறத்தையுடையவன் என்னுமல் "பொன்னிறம்" என்றதால் பொன்போலே விலையுயர்ந்தவனாயிருப்பவன் என்றும் உணர்த்தப் படுகிறது. "ஹிரண்மய: புருஷ:" [புருஷஸூக்தம்], என்று வேதங்களும் "ருக்மாபம்" [மநுஸ்ம்ருதி] என்றும், "ஹேமஸமாந வர்ணம்" [ராமாயணம்] என்றும் ரிஷிகளும், "சுட்டுரைத்த நன்பொன் உன்திருமேனி" என்று ஆழ்வார்களும் இவனைப்பேசும் போது பொன்மேனியனென்றே பாசுரமிட்டார்களன்றோ.

(நிகழ்ந்தாய் பசுப்புவண்ணம்) "த்வாபரே புகவாந் ஸ்யாம:" என்கிறபடியே, த்வாபரயுகத்தில் மனிதர்கள் ரஜஸ்தமோ குணங்களுடன் கலந்த ஸத்வகுணத்தையுடையவர்களாயிருக்கையாலே சிவப்பும் கறுப்பும், வெளுப்பும் கலந்ததான பசுமை நிறத்தை விரும்பியிருப்பர்கள்; அவர்களுக்காகப் பசுநிறத்தையுடையவனாகக் காட்சியளிக்கிறான் எம்பிரான். இங்கு 'பசுப்பு' என்னும் பதம் பாசியின் பசுமை நிறத்தைக் குறிப்பதாகக் கொள்ளுவது சிறந்தது. "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம் போலும் நீர்மை பொற்புடைத் தடத்து வண்டு விண்டுலா நீலநீர்மை யென்றிவை நிறைந்த காலம் நான்குமாய்" என்று இவரே திருச்சந்தவிருத்தத்திலே அருளிச்செய்திருக்கிறராகையாலும், பால், பொன், கார் என்று கீழும் மேலும் நிறத்தையுடைய வஸ்துக்களையே சொல்லும் நியமம் காண்கையாலும் இங்கு 'பசுப்பு' என்றது பாசியின் பசும்புறத்தைக் குறிக்கிறது. இப்படி விசேஷித்ததிலிருந்து பாசியின் பசும்புறத்தைப்போலே கண்டார் கண்களைக் குளிரச்செய்வது இவன் திருமேனி என்று உணர்த்தப்படுகிறது. "புருஷம் க்ருஷ்ண பிங்களம்" என்று வேதங்களும் "பச்சைமாமலை போல் மேனி" என்று ஆழ்வார்களும் புகழ்ந்தார்கள் இவ்வடிவை.

உகந்தாய். (இகழ்ந்தாய் இருவரையும் வீய) மது, கைடபர்கள் முடிய. அன்றிக்கே, "எல்லாச்சேனையும் இருநிலத்தவித்த" என்னுமாப்போலே பக்ஷத்வயத்தையும் முடித்த என்றுமாம்.

---

லும் வந்தவதரித்து வர்த்தித்தாய். "எல்லாச் சேனையு மிருநிலத்தவித்த" என்கிறபடியே இரண்டு பக்ஷத்திலு முள்ள ஆஸுரப்ரக்ருதிகளை முடியும்படி உபேக்ஷித்தாய்.

---

(நிகழ்ந்தாய் கார்வண்ணம்) "கலௌ க்ருஷ்ணம் த்விஷா க்ருஷ்ணம்" என்கிறபடியே, கலியுகத்திலே எந்த நிறங்கொண்டா லும் ஆஶ்ரயிப்பாரில்லாமையாலே "முழுதும் நிலைநின்ற பின்னை வண்ணம் கொண்டல்வண்ணம்" [பெரிய-திரு 4-9-8] என்கிறபடியே தனக்கு இயற்கையாயுள்ள நீலமேக ஶ்யாமளவர்ணத்தையே உடையவனுயிருக்கிறபடி. கலியுகத்திலே தம:ப்ரசுரராயிருப்ப ரென்றும், தமோநிஷ்டர்கள் கறுப்பு நிறத்தை விரும்பியிருப்ப ரென்றும் ப்ரஸித்தியிருக்கையால் கோல் விழுக்காட்டாலே இவ் வியற்கை நிறமே அவர்களையும் ஆகர்ஷிப்பதாயிருக்கிறது. 'கறுப்பு நிறம்' என்னுமல் 'கார்வண்ணம்' என்கையால் ப்ரயோஜந நிர பேக்ஷமாகவும், வரையாமலும், கொடுத்தோமென்னும் நினைவில்லா மலும் பிறர்க்கு அளிக்கை முதலான மேககுணங்களையும் உடையவ னிவன் என்று உணர்த்தப்படுகிறது. "நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" என்று வேதங்களும், "மேகஶ்யாமம்" என்று ரிஷிகளும், "கார்மேனி" என்று ஆழ்வார்களும் அருளிச் செய்தனரன்றோ.

இப்படி அவரவர்களுடைய குணநுகுணமாகத் தன் திரு மேனியை அமைத்துக்கொள்வதோடன்றியில் அவர்களுடைய விரோதிகளைப் போக்கிக்கொடுப்பதன்மூலமும் பக்தியான பாசனத் திற்குப் பெருமுயற்சி செய்கிருன் என்கிறர் அடுத்தபடியாக,— (இகழ்ந்தாய் இருவரையும் வீய) ஆச்ரிதனான ப்ரஹ்மாவின் வேதத்தை அபஹரித்த மதுகைடபர்கள் என்னும் இரண்டு அசுரர் களும் அழியும்படியாக ஸங்கல்பித்தாய். அன்றிக்கே, பாண்டவர்கள் கௌரவர்கள் ஆகிய இருவர் பக்ஷத்திலும் துர்மானிகளான அரசர் கள் திரண்டிருந்தார்களாகையாலே அவ்விரு பக்ஷத்திலுள்ளாரும் பெரும்பாலும் அழியும்படியாக உபேக்ஷித்திருந்தாய். "கொல்ஃச மாக்கோல கொலைசெய்து பாரதப்போர் எல்லாச்சேனையும் இரு

(புகழ்ந்தாயித்யாதி) சினத்த போரையுடைய ஸ்வேதவாஹன னான அர்ஜுனன் ஸேனைக்கு நிர்வாஹகனாய், த4ர்மபுத்ரன் முடி

---

*அர்ஜுனன் ஸேனைக்கு ரக்ஷகனாய்க்கொண்டு த4ர்மபுத்ரர்*

---

நிலத்தவித்த எந்தாய்'' என்று ஆழ்வார் அருளியபடியே பஞ்ச பாண்டவர்கள், அஸ்வத்தாமக்ருபாசார்ய க்ருதவர்மாக்கள் தவிர்ந்த மற்ற எல்லாரையும் அழித்தானன்றோ இவன்.

தன்னடியார்கள் கார்யத்தை முடிப்பதற்காகத் தன்னை அறிய மாறியும் கார்யம் செய்வான் என்பதை மேலும் ஒரு உதா3ஹரணத்தாலே காட்டுகிறார் மேலே. (புகழ்ந்தாய் சினப்போர்ச் சுவேதனை) கடுங்கோபத்துடன் போர்புரியவல்ல ஸ்வேதவாஹனனான அர்ஜுனனைப் புகழ்ந்தாய்! (புகழ்ந்தாய்) அவன் ''ஹே க்ருஷ்ண ஹே யாத3வ'' என்று கூப்பிடுவதையும் பொருட்படுத்தாமல் ''பரந்தப'' [எதிரிகளைத் தபிப்பவனே] ''அநக4'' [பாபமற்றவனே!] என்றும் மற்றும் பலவிதமாகவும் அவனைப் பதினெட்டு ஓத்தாலும் புகழ்ந்தாய். (புகழ்ந்தாய்) ''ஸ்தவ்ய:'' [புகழத்தக்கவன்] என்றும், ''ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும் சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை'' என்றும் புகழப்படுபவன் ஒருவனைப் புகழ்வதே! (சினப்போர்ச் சுவேதனை) யுத்3த4த்தில் ஓடும் கோழையன்றிக்கே, வீரனான அர்ஜுனனை. (சுவேதனை) ''அர்ஜுந: ப2ல்கு3ந: பார்த2: கிரீடீ ஸ்வேதவாஹந:। பீ3ப4த்ஸுர் விஜய: க்ருஷ்ணஸ் ஸவ்யஸாசீ த4நஞ்ஜய:॥'' என்று அர்ஜுனனுக்குள்ள பல பெயர்களில் சுவேதவாஹனன என்பதும் ஒன்றாகும். வெள்ளைக் குதிரை பூட்டப்பெற்ற தேரை வாஹனமாக உடையவன் என்று இப்பெயருக்குப் பொருள். ''வெள்ளைப் புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசை முன்பு நின்று' என்று பெரியாழ்வாரும் அருளிச்செய்தார். ''நாமைகதே3ஸக்3ரஹணே நாமக்3ரஹணம்'' [4-1-7] [பெயரின் ஒரு பகுதியை மட்டும் எடுத்தாலும் பெயர் முழுவதையும் எடுத்ததாகும்] என்னும் நியாயத்தின்படி 'ஸ்வேதவாஹனன்' என்ன வேண்டிய இடத்தில் 'சுவேதன்' என்கிறார் ஆழ்வார். (சேனாபதியாய்) அந்த அர்ஜுனனுடைய சேனைக்குத் தானே தலைவனாய் தேர்ப்பாகன் என்னும் வியாஜத்தில் சேனைத்தலைவனாகவேயிருந்து பல அருங்கார்யங்களையும் முடித்துப் போரை நடத்தினவன் எம்பெருமானே என்று பா4வம். ''யத்ர யோகே3ஸ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ த4நுர்த4ர:। தத்ர ஸ்ரீர் விஜயோ பூ4திர்'' [கீதை-18] [எங்கு யோகே3ஸ்வரனான

சூடவும், த்3ரௌபதி3 குழல் முடிக்கவும், து3ர்யோத4னாதி3கள் மடி

---

தலையிலே முடியை வைத்து த்3ரௌபதி3 குழலையும் முடிப்பித்து, து3ர்யோத4னாதி3களையுமழிக்கவேணுமென்று இரு

---

க்ருஷ்ணன் எழுந்தருளியிருக்கிறானே, வில்லேந்திய அர்ஜுனன் எங்குள்ளானோ அங்கேயே செல்வமும் ஜயமும் சிறப்பும் உண்டாகும்] என்று ஸஞ்ஜயனும் க்ருஷ்ணனை முதலில் வைத்துப் பின்பன்றோ அர்ஜுனனை வைத்துப் பேசினான். "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணப3லா: க்ருஷ்ணநாதா2ஸ்ச பாண்ட3வா:" [க்ருஷ்ணனை ஆஶ்ரயமாகவும், ப3லமாகவும், தலைவனாகவும் கொண்டவர்கள் பாண்டவர்கள்] என்றிருக்கும்போது, பாண்ட3வஸேனைக்குப் பதி க்ருஷ்ணனே என்று சொல்லவும் வேண்டுமோ?

இப்படி அர்ஜுனனைப் புகழ்ந்து யுத்3த4த்திலே ஈடுபடுத்தியது எதற்காகவெனில்: (மனப்போர் முடிக்கும் வகை) தான் மனத்தில் ஸங்கல்பித்தபடியே போரை முடிப்பதற்காகவே. அதாவது,

"கோ3விந்தே3தி யதா3க்ரந்த3த் க்ருஷ்ணா மாம் தூ3ரவாஸிநம் |
ருணம் ப்ரவ்ருத்3த4மிவ மே ஹ்ருத3யாந் நாபஸர்ப்பதி ||"

[தூ3ரதே3ஶத்திலிருந்த என்னை திரௌபதியானவள் 'கோவிந்தா' என்று கூப்பிட்டது, விருத்தியடைந்த கடன்போலே என் நெஞ்சை விட்டு அகலுகிறதில்லை.] என்று புண்பட்ட தன் நெஞ்சு ஆறுதலடையும்படி திரௌபதியானவள் குழல் முடிக்கும்படியாகவும், அவளுடைய கணவனான த4ர்மபுத்ரன் முடிசூடும்படியாகவும், அவளை அவமதித்த து3ர்யோத4னாதி3கள் முடியும்படியாகவும் தான் ஏற்கனவே தன் மனத்திலே நினைத்து வைத்தபடி போரை முடிப்பதற்காகவே அர்ஜுனனைப் புகழ்ந்தான் என்கை. (மனப்போர் முடிக்கும்வகை சுவேதனைப் புகழ்ந்தாய்) "மயைவைதே நிஹதா: பூர்வமேவ நிமித்தமாத்ரம் ப4வ ஸவ்யஸாசிந்" [இடது கையாலும் அம்புவிடக்கூடிய அர்ஜுனா! என்னாலும் இந்த து3ர்யோத4னாதி3யர் முன்னமே (ஸங்கல்பத்தால்) கொல்லப்பட்டுவிட்டனர். நீ ஒரு வியாஜமாத்ரமாக ஆவாயாக.] என்று தானே அருளிச்செய்தானன்றோ. ஆக, தன்னை ஶரணமடைந்தவளான திரௌபதிக்காகவே அர்ஜுனனைத் தானே புகழ்ந்து யுத்தத்திலே மூட்டினான் என்று சொல்லப்பட்டதாயிற்று; இவனுடைய செயல்களெல்லாம் அடியார்க்காகவே இருக்குமென்றபடி.

யும்படியும் நினைத்த போரை முடிக்க வல்லனாகப் புகழ்ந்தாய். 24.

---

வுள்ளத்தில் மநோரதித்தபடியே பாரதயுத்தமும் தலைக் கட்டும்படியாக, யுத்தமென்றால் பிற்காலித்து மீளும் கோழையன்றிக்கே சீறிக்கொண்டு யுத்தத்திலே ஒருப்படும் ஆண்பிள்ளையாய். ச்வேதவாஹநனான அர்ஜுனன் சௌர்யாதி குணங்களைச் சொல்லி வாய்விட்டுப் புகழ்ந் தாய். இகழ்ந்தாயிருவரையும் வீயவென்று மதுகைட பரிருவரையும் நசிக்கும்படி உபேக்ஷித்தாய் என்னவுமாம். 24.

---

"புகழ்ந்தாய் சினப்போர்ச் சுவேதனைச் சேனாபதியாய் மனப் போர் முடிக்கும்வகை" என்னும் இரண்டு அடிகளுக்கும் வேறொரு வகையாகப் பொருள்கொள்வதற்கும் பாரதத்தில் பீஷ்மபர்வத்திலே ஒரு இதிஹாஸமுண்டு. விராடராஜனின் புத்திரனான 'சுவேதன்' என்பவன் மஹாபலிஷ்டனாயிருந்தானாகையால், முதலில் அவனை ஸேநாபதியாக்க, சினப்போர்ச் சுவேதனை அவன் கடும போர் புரிந்து எண்ணிக்கையில் பாண்டவ சேனையைக்காட்டிலும் அதிக மாயிருந்த கௌரவஸைந்யத்தின் பெரும்பகுதியை அழித்து, இரண்டு ஸேனைகளையும் ஸமமாக்கிவிட்டுத் தானும் மாண்டான் என்பது அவ்விருத்தாந்தம். இதை ஆழ்வார் நினைப்பதாகவும் கொள்ளலாம். அப்போது "இகழ்ந்தாய் இருவரையும் வீய" என்று முந்தின அடியில் இரண்டு ஸேனைகளும் அழிந்துபோகும் படி உபேக்ஷித்தாய் என்று அருளிச்செய்ததுக்கு விவரணமா யிருக்கும் பின் இரண்டு அடிகளும். (சினப்போர்ச் சுவேதனைச் சேனாபதியாய்ப் புகழ்ந்தாய்) கடும்போர் புரியும் சுவேதனை ஸேநா பதியாகும்படி புகழ்ந்தாய். க்ருஷ்ணன் தானே புகழ்ந்து சுவேதனை சேநாபதியாக்கினதாக ஸ்ரீ பாரதத்திலில்லாவிடிலும், பாண்டவர் களுக்கு எல்லாக் காரியங்களையும் தானே முன்னின்று செய்யும் க்ருஷ்ணனே இதையும் செய்திருக்கவேண்டுமெனக் கொள்ளலாம். [இந்த அவ்வாரஸ்யத்தை நினைத்தே பெரியவாச்சான்பிள்ளை இப் பொருளை அருளவில்லை.] இப்படி அவனை சேநாபதியாக்கினது எதற்காகவென்னில்; (மனப்போர் முடிக்கும் வகை) "துர்யோத னாதியருடைய ஸேனையில் திரண்டுகிடக்கும் துஷ்டர்களும் அழிய வேண்டும்; சுவேதனைப்போலே பலிஷ்டர்களாகப் பாண்டவ ஸேனையிலிருக்கும் அஹங்காரிகளையும் அழியச்செய்யவேண்டும்" என்று கபடநாடகஸூத்ரதாரியான தான் தன் திருவுள்ளத்தில்

25. வகையால் மதியாது மண்கொண்டாய் மற்றும்
வகையால் வருவதொன் றுண்டே—வகையால்
வயிரம் குழைத்துண்ணும் மாவலி தானென்னும்
வயிர வழக்கொழித்தாய் மற்று.

மதியாது—இதை ஒரு பெரிய காரியமாக நினையாமல். வகையால்—யாசிப்பதாகிற வழியாலே. மண் கொண்டாய்—மாவலியிடத்திலிருந்து பூ4மியை வசப்படுத்திக்கொண்டாய்; மற்றும்—அதற்கு மேலும். வயிரம்—வயிரமாகிற ரத்னத்தை. வகையால் — ஔஷத4ாதி3 உபாயங்களாலே. குழைத்து—இளகச்செய்து. உண்ணும்—உண்பவனும். (அகனுல்) தான் என்னும்—தானே பு3லவான் என்று அஹங்காரங் கொண்டிருப்பவனுமான, மாவலி—மஹாப3லியினுடைய, வயிரம் வழக்கு—ஶத்ருத்வமுறையை. ஒழித்தாய்—போக்கி னய். வகையால்—இப்படிப்பட்ட உனது காரியங்களினுல். வருவது ஒன்று உண்டே—உனக்கு ஸித்3தி4ப்பதொரு ப2லன் உண்டோ? (எல்லாம் அடியார்க்காகச் செய்கிருயித்தனை.)

பெரி-அவ:— (வகையால்) ஆஶ்ரிதார்த்த2மான செயலொழியத் தனக்கென்ன ஒரு செயல் இல்லையென்கிருர்.

அவ:— ஆஶ்ரித ரக்ஷணர்த்த2மான ப்ரவ்ருத்தியொழிய உனக்கென்னவொரு ப்ரவ்ருத்தியுண்டோ என்கிருர்.

ஸங்கல்பித்துவைத்தபடி போரை முடிப்பதற்காகவே ஸ்வேதனை சேநாபதியாக்கினுன் என்றபடி. 24.

25. அவ:— இவனுடைய செயல்களெல்லாம் அடியார்க்காயிருக்குமேயொழியத் தனக்கென்று செய்யும் காரியம் ஒன்றுமில்லையென்கிருர்.

வ்யா:—(வகையால் மண்கொண்டாய்)'மஹாப3லியிடம் ஔதா3ர்யம் (வண்மை) என்னும் கு3ணமொன்று இருக்கையாலே அவனை அழியச்செய்யவும் கூடாது; இந்திரன் காரியமும் ஆகவேணும்; இதற்கென்செய்வது' என்று ஆலோசித்து, ஸகலப2லப்ரத3னை தன்னுடைய ஸ்வரூபத்தை அழித்துத் தன்னை யாசகனுக்கி வந்து

வ்யா:— (வகையாலித்யாதி) மஹாப3லி உகக்கும் ப்ரகாரத்தாலே பூ4மியை அநாயாஸேந கொண்டாய்.

---

உரை:— ஸ்ரிய:பதியான நமக்கு இரப்பிலே அதி4கரிக்கை போருமோவென்று பு3த்3தி4பண்ணுதே ஆஸுரப்ரக்ருதியான அவன் நெஞ்சு இளகி உகந்து தரும்படியாக வடிவழகு. முக்3த4ஜல்பிதம் முதலான ப்ரகாரங்களாலே ஆஸ்ரிதனான இந்த்3ரனுக்காக பூ4மியை அநாயாஸேந யாசித்து வாங்கி கொண்டாய்; இப்படி இழந்த ராஜ்யத்தை வாங்கிக்கொடுத்த வதுக்குமேலே இளக்கவொண்ணுதபடி அதிகடி2னமான வயிரமாகிற ரத்னத்தை ஔஷதா4த்3யுபாயங்களாலே இளக்கி பூ4ஜித்துக்கொண்டுபோருமவனாய் அத்தாலே மிடுக்கனாக ப்ரஸித்3த4னான மஹாப3லியுடைய ஸாத்ரவமான முறையைப் போக்கினாய். இப்படி ஆஸ்ரிதர் காரியம் செய்தாயித்தனையொழிய வெறும் இவ்வுபாயங்களால் உனக்கு வருவது ஒரு ப்ரயோஜனம் உண்டோ? மதியாது— ஆஸுரப்ரக்ருதியான அவனை ஒரு சரக்காக பு3த்3தி4 பண்ணுதே என்றுமாம். 25.

---

நல்லதோர் உபாயத்தாலே உலகையளந்து இந்திரனுக்குக் குடியிருப்புக் கொடுத்தாய். (வகையால்) அஸுரனை அவன் நெஞ்சு இளகி உகந்து மூவடி மண் தரும்படியான வாமனன் வடிவழகு பின்னைப்பேச்சு முதலான வகைகளைச் சொல்லுகிறது. (மதியாது மண் கொண்டாய்) இதை ஒரு பெருங்காரியமாக நினையாமல் அநாயாஸமாகத் திருவுலகை அளந்தருளினாய். 'அநாயாஸேந கொண்டாய்' என்ற வ்யாக்2யான ஸ்ரீஸூக்திக்குப் பொருந்திய பொருள் இதுவாகும். 'தன் மேன்மையைச் சிறிதும் நினையாமல் தன்னை யாசகனாக்கி மண் கொண்டான்' என்று பொருள் கொள்வாரு முண்டு. "ஆஸுரப்ரக்ருதியான அவனை ஒரு சரக்காக எண்ணாமல்" என்று பொருள் கொண்டார் அப்பிள்ளை. இரண்டாமடியைக் கடைசியில் கூட்டிக்கொள்வது. (மற்று) மேலும் இப்படித் தன்னை அழியமாறி இரப்பாளனாக்கியது இந்திரனுக்கு நன்மை செய்வதற்கு மட்டுமோ? மஹாப3லிக்கும் நன்மை செய்வதற்காக வன்றோ? ப4க்தியுள்ளவனாகையாலே ஆஸுர ப்ரக்ருதியான அவனையும் அடியானாகக்கொண்டு அவனுக்கும் நன்மை செய்தானன்றோ.

(மற்றித்யாதி) ஓர் உபாயத்தாலே வைரத்தை பு4ஜித்து அத்தாலே மிடுக்கனாக அபி4மானித்திருக்கிற மஹாப3லியுடைய ஶாத்ரவ முறையைத் தவிர்த்து, மஹாப3லிபக்கல் நின்றும் ராஜ்யம் மீட்டுக்கொடுத்தாய். (மற்றும் வகையால் வருவதொன்றுண்டே) இவற்றால் உனக்கு ப்ரயோஜநமாவதொன்று உண்டோ? 25.

26. மற்றுத் தொழுவா ரொருவரையும் யானின்மை
கற்றைச் சடையான் கரிக்கண்டாய்—எற்றைக்கும்
கண்டுகொள் கண்டாய் கடல்வண்ணா யானுன்னைக்
கண்டுகொள்கிற்கு மாறு.

---

(வகையால் வயிரம் குழைத்துண்ணும் மாவலி) அவன் தன் அஹங்காரத்திற்குப் பூண்கட்டியபடியைப் பேசுகிறார். நேரே வைரத்தை உண்டால் அது மரணத்துக்கே காரணமாகுமாகையாலே, ஔஷத4ங்களோடு சிறு அளவில் குழைத்து உண்பது முதலான உபாயங்களாலே வைரத்தை உண்டு, அத்தாலே அஹங்காரத்திற்கு அடியான தே3ஹத்தைப் பூண்கட்டித் திரிந்த மாவலி. (மாவலி தானென்னும் வயிரவழக்கு ஒழித்தாய்) இப்படிப்பட்ட மஹாப3லியுடைய 'நான்' என்னும் அஹங்காரமாகிற சத்ருத் தன்மையைப் போக்கடித்து, அவனைத் தலைவணங்கும்படி செய்து, முடியிலே அடிவைத்து அவனை அளித்தாய். (வயிர வழக்கு) வயிரம்—வைரம்; சத்ருத்தன்மை. வயிரவழக்கு—எதிரியாயிருக்கும் முறை. (தானென்னும் வயிர வழக்கு) வெளிப்பார்வைக்கு ஒரு வித4மான ப4க்தியை உடையவனாயிருந்தபோதிலும் அஹங்கார முடையவனாயிருந்தவனாகையாலே ப4க3வானுக்கு விரோதி4யாகவே யிருந்தான் இவன் என்று உணர்த்தப்படுகிறது. "ஆஜ்ஞாச்சே2தீ3 மம த்3ரோஹீ மத்3ப4க்தோऽபி ந வைஷ்ணவ:" [என் ஆஜ்ஞையை மீறுபவன் எனக்கு த்3ரோஹம் செய்பவனாவான்; எனக்கு ப4க்தனாயிருந்தபோதிலும் அவன் வைஷ்ணவனல்லன்.] என்று தானே அருளிச்செய்தானன்றோ. (மற்றும் வகையால் வருவதொன்றுண்டே) வகையால் வருவது மற்றும் ஒன்று உண்டோ என்று அந்வயம். நீ அநுஷ்டி2த்த இவ்வுபாயங்களால் அடியார்களுக்குள்ள பயனைத் தவிர வேறு உனக்கு ப்ரயோஜநம் ஏதாவது உண்டோ? ஆஶ்ரிதர்களுக்காகவே உன் செயல்கள் ஆகின்றனவேயொழிய உனக்காகவன்று என்றபடி. 25.

கடல்வண்ணா — கடல்போன்ற திருநிறமுடைய பெருமானே!, யான் தொழுவார் மற்று ஒருவரையும் இன்மை— அடியேனால் ஆஶ்ரயிக்கப்படும் தெய்வம் (நீ தவிர) வேறு ஒருவருமில்லையென்னும் விஷயத்தில், கற்றை சடையான்— சேர்த்துக் கட்டின ஜடையையுடையனான ருத்ரன், கரி கண்டாய்—ஸாக்ஷிகாண்; யான் — இப்படி உன்னையே தொழும் அடியேன், உன்னை —, எற்றைக்கும்—எப்போதும், கண்டுகொள்கிற்கும் ஆறு — ஸேவித்துக்கொண்டேயிருக்க வல்லேனும்படி, கண்டுகொள்—நோக்கியருளவேணும்.

பெரி-வ்யா:— (மற்றுத் தொழுவாரித்யாதி) நான் தேவதாந்தர ஸமாஶ்ரயணம் பண்ணேன் என்னுமிடத்துக்கு

---

அவ:— உன்னழகிலே அகப்பட்ட நான் ஸர்வகாலத்திலும் உன்னை அநுபவிக்கவல்லேனும்படி பார்த்தருளவேணும் என்கிறார்.

உரை:— உன்னையொழிய வேறு ஆஶ்ரயிக்கப்படுவார் ஒரு க்ஷுத்ரரான ருத்ராதிகளையும் நான் உடையேனல்லேன் என்னுமிவ்வர்த்தத்தில்—அறிவுகேடரைக்கும்பிடுகொள்ளக் கடவதாய் அறிவுடையரானார் ஈஶ்வரனன்றென்று கைவிடும்

---

26. அவ:— இவருடைய உறுதியை அறிந்திருந்தபோதிலும், இவர் வாயாலே சொல்ல அதைக் கேட்கவேணுமென்னும் ஆசையாலே, "மற்ற தேவதைகளும் அடியார்க்காகக் காரியம் செய்வதாகக் காண்கிறோமே! அவர்களையும் ஆஶ்ரயிக்கலாமோ" என்று எம்பெருமான் கேட்க, "நான் வேறு எந்த தெய்வத்தையும் தொழமாட்டேன் என்பதற்கும், மற்ற தெய்வங்கள் மோக்ஷபலனைக் கொடுக்கவல்லவையல்ல என்பதற்கும் ருத்ரன் ஸாக்ஷியாவான்!" என்கிறார்.

வ்யா:— (மற்றுத் தொழுவார் ஒருவரையும் யானின்மை கற்றைச் சடையான் கரிக்கண்டாய்) நான் வேறொரு தெய்வத்தையும் தொழமாட்டேன் என்பதற்கு சிவன் ஸாக்ஷியாவான். (கற்றைச் சடையான்) அறிவாளிகளுக்கு இவன் பரனல்லன் என்று காட்டித் தருவதாய், அறநெறியை உபதேஶிக்கத்தகுந்ததான வேஷமாகிற

ஆள்பிடித்துத் தொழுவித்துக்கொள்ளும் ருத்₃ரன் ஸாக்ஷி.

படி, அதுக்கு அடையாளமாகச் செறியக்கட்டின ஜடையும் தானுமாய், ஸாத₄நாநுஷ்ட₂ானம்பண்ணிப்போரும் ருத்₃ரன் ஸாக்ஷிகிடாய்! கடல்போலே இருண்டு குளிர்ந்த வடிவை

சடாமுடியைத் தரித்துநின்று அறிவிலிகளைத் தேடிப்பிடித்துத் தொழுவித்துக்கொள்ளும் ருத்₃ரன் ஸாக்ஷி. (கற்றைச்சடையான கரிக்கண்டாய்) ஸர்வஜ்ஞனை உனக்குத் தெரியாததில்லை. "கோத்ர ஸாக்ஷீ" என்று ஒருகால் ஸாக்ஷியை விரும்பினாயாகிலும் உன் பேரனான ருத்₃ரனைக் கேட்டுக்கொள். கரி—ஸாக்ஷி. நேரே கண்டவன்.

இவ்விடத்தில் தம் வாழ்வில் நடந்ததொரு விருத்தாந்தத்தையே ஆழ்வார் நினைக்கிறார் என்பது தெளிவு. அதாவது:— இவ்வாழ்வார் திருமழிசையில் யோக₃நிலையில் நின்று எம்பெருமானை த்₄யானித்துக்கொண்டிருக்கையில், ஒருநாள் ஆகாயமார்க்க₃த்தில் எருதின்மீது ஏறிக்கொண்டு ருத்₃ரன் பார்வதியுடன் செல்லுகையில், பார்வதியானவள் இவரது தவவொழுக்கத்தைக்கண்டு கொண்டாடித் தன் கணவனை நோக்கி 'இவன் ஆரோ?' என வினவ, 'இம்மஹாநுபா₄வன் நம்மைவிட்டு நாராயணனுக்கு அடிமைப்பட்டவன்' என்று ருத்₃ரன் சொன்னவளவிலே, அவள் 'இப்பெரியவனுக்கு நாமும் தரிசனம்தந்து ஏதேனும் வரமளித்துப்போவோம்' என்றுகூற, அவளது விருப்பத்தின்படி செய்ய ஸம்மதித்துச் சிவபிரான் இவரெதிரேவந்து தோன்றினன்; இவர் அச்சிவனைப் பார்த்தும் பாராதவர்போலே உபேக்ஷித்து ஒரு கந்தைத்துணியைத் தைத்துக்கொண்டு விமுக₂ராயிருக்க, அதுகண்டு சங்கரன 'உனக்கு அருள்செய்ய வந்த நம்மை நீ அநாத₃ரஞ்செய்தல் தகுதியோ?' என்ன, ஆழ்வார் 'உன்னால் ஆகவேண்டியது எனக்கு ஒன்றுமில்லை; ஆதலால நான் உதா₃ஸீநனாயிருந்தேன்' என்றார். பின்பும் சிவன் 'நம் வரவு வீணாகலாகாது; உனக்கு அபீ₄ஷ்டமான வரம்வேண்டிப் பெற்றுப்போவீர்' என்று நிர்ப₃ந்தி₄க்க, அநந்தரம் ஆழ்வார் 'மோக்ஷம் கொடுக்கமுடியுமாகில் கொடு' என்றார். அதற்கு ருத்₃ரன் 'அது நம்மால் தரத்தக்கதன்று: அது தருவதற்கு ஶக்தியுள்ளவன் ஸ்ரீமந்நாராயணனே; வேறு வரம வேண்டுவாயாக' என்ன, ஆழ்வார் புன்முறுவல் செய்து 'அம்முக்தியைப் பெறும் பொருட்டுப் பலகாலம் இவ்வுலகில் உயிர்த்திருந்து பெருந்தவம் புரிவதற்கு உபயோக₃மாக நீண்ட ஆயுளையேனும்

(எற்றைக்குமித்யாதி) ஸ்ரமஹரமான வடிவையுடைய நீயே

---

யுடையவனே! இப்படி அதிலோகமான அழகையுடைய
உன்னை இவ்வழகிலே ஆழங்கால்பட்ட நான் ஸர்வகாலத்தி

---

அளிப்பாயாக' என்றார். அதுகேட்டுச் சிவன் 'அது கருமாநு ஸாரமாக நடப்பதேயன்றி என்னாலாவதன்று; வேறு வேண்டுவதை விளம்புவாய்' என்றதும், திருமழிசைப்பிரான் புன்சிரிப்போடு இகழ்ச்சியாய் 'இவ்வூசியின் பின்னே நூல் வரும்படி வரம் தந்தருளீர்' என்று விநோதமாகச் செல்ல, அப்பரிஹாஸவார்த்தை செவிப்பட்டவுடனே கடுங்கோபங்கொண்ட நெற்றிக்கண்ணன் 'இச் செருக்குடையவனை இப்பொழுதே அநங்கனைப்போலாக்கி விடுகிறேன்' என்று தனது நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணைத் திறந்துவிட்டான்; அதில் நின்றும் புகையும் பொறியுமாகக் கிளர்ந்தெழுந்த காலாக்நியைக் கண்டு திருமழிசைப் பிரான் சிறிதும் கலங்காமல் 'இந்திரன்போல உடம்பு முழுவதும் கண்காட்டினாலும் அஞ்சுவேனல்லேன்' என்று சொல்லித் தமது வலத்திருவடியின் பெருவிரலிலுள்ளதொரு கண்ணைத் திறந்துவிட, அதில்நின்றும், ஒரு பெருந்தீ எழுந்து ஊழித்தீயினும் பன்மடங்கு மேலிட்டு அவ்வனலை அடக்கத்தொடங்கிற்று. அவ்வளவில் அரன் அக்கடு நெருப்பை அவிக்கும்படி தனது சடையிலுள்ள பல மேகங்களை ஏவிவிட, அவையும் ஊழி காலத்திற்போலப் பெருமழை பொழிந்து பெருவெள்ளங்கோக்கவும் ஆழ்வார் சிறிதும் சலியாமல் பகவத் பக்தியிலே ஊன்றியிருந்தார்; அதுகண்டு முக்கண்ணன் மிக வியந்து இவர்க்கு 'பக்திஸாரர்' என்று திருநாமஞ்சாத்தி இவரது வைபவத்தைக் கொண்டாடித் தன்னிடத்திற்குத் திரும்பிப் போயினன் என்ற விருத்தாந்தம். இவ்வளவையும் திருவுள்ளம் பற்றியே ஆழ்வார் இங்கு "கற்றைச்சடையான் கரி கண்டாய்" என்கிறார்.

'இப்படி அநந்யபக்தியை உடைய உமக்கு நான் செய்ய வேண்டியதென்ன?' என்று பகவான் திருவுள்ளமாகச் சொல்லுகிறார்,— (எற்றைக்கும் கண்டுகொள்கண்டாய் கடல்வண்ணா யானுன்னைக் கண்டு கொள்கிற்குமாறு) இப்படி தேவதாந்தரஸ்பர்ஸமற்றவனாய் என்றும் உன்னிடத்திலேயே பக்தியுடைவனாக என்னைச் செய்தருளவேண்டும். இதுவே யான் வேண்டுவது. (எற்றைக்கும்) இந்த ஜன்மத்தில் மட்டுமின்றி எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும

மேலும் இந்த தன்மை நிலைநிற்கும்படியாகப் பார்த்தருள வேணும். 26.

27. மாறன் புகுந்த மடநெஞ்சம் மற்றதுவும்
பேறாகக் கொள்வனோ பேதைகாள்—நீறாடி
தான்காண மாட்டாத தாரகலச் சேவடியை
யான்காண வல்லேற் கிது.

---

*னும் கண்ணாலே கண்டு அநுப$_4$விக்கைக்கு ஶக்தனாம்படி கடாக்ஷித்தருளவேணும் இடாய்* 26.

---

உன்னிடம் மறந்தும் புறந்தொழா ப$_4$க்தியிருக்கவேண்டுமென்பதொன்றே யான் விரும்புவது. (எற்றைக்கும் யானுன்னைக் கண்டுகொள்கிற்குமாறு கண்டுகொள்)

"து$_3$ர்க்க$_3$தாவபி ஜாதாயாம் த்வத்$_3$க$_3$தோ மே மநோரத$_2$:|
யதி$_3$ நாஶம் ந விந்தே$_3$த தாவதாஸ்மி க்ருதீ ஸதா$_3$||"
[ஜிதந்தே]

[தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற என்னுடைய மநோரத$_2$மானது மிகவும் கீழான நிலை ஏற்பட்டபோதிலும் அழியாதிருக்குமேயாகில் அவ்வளவாலே நான் க்ருதக்ருத்யனாகிறேன்] என்றும்,

"ந காமகலுஷம் சித்தம் மம தே பாத$_3$யோ: ஸ்தி$_2$தம் |
காமயே வைஷ்ணவத்வந்து ஸர்வஜந்மஸு கேவலம் ||"
[ஜிதந்தே]

[தேவரீருடைய திருவடிகளில் நிலைநின்ற அடியேனுடைய மனம் மற்ற ஆசைகளினால் கலங்கவில்லை; எல்லாப் பிறப்புகளிலும் வைஷ்ணவனாயிருக்கும் தன்மையை மட்டுமே ஆசைப்படுகிறேன்] என்று சொல்லப்பட்ட இப்பலனே யான் விரும்புவது. மோக்ஷத்தை நீ அளிக்கவேண்டும் என்னும் நிர்ப்பந்தம்கூட இல்லை. (எற்றைக்கும் கண்டுகொள்கிற்குமாறு) "ஸதா$_3$ பஶ்யந்தி" [நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்] என்று அங்கு சென்று பெறும்பேறு இங்கேயே ஸித்$_3$தி$_4$த்தால் அங்கு போகவேண்டுமென்று நிர்ப$_3$ந்த$_4$மென்ன? (கடல்வண்ணா கண்டுகொள்) ஸகலதாபஹரமான உன் வடிவைக்காட்டி அநந்யப$_4$க்தியை விளைவித்த நீயே மேலும் இந்தன்மை நிலைநிற்கும்படி செய்தருளவேண்டும். 26.

பேதைகாள்—மூடர்களே!, நீறுடி தான்—நீறு பூசின உடம்பையுடையவனுன ருத்ரனும், காண மாட்டாத—ஸேவிக்க முடியாததும், தார்—மாலை சூட்டப்பட்டதும், அகலம்—பரப்பையுடையதுமான, சே அடியை—திருவடியை, காண வல்லேற்கு—ஸேவிக்கும்படியான பாக்கியம் பெற்ற எனக்கு, மால்—எம்பெருமான், தான் புகுந்த—தானேமேல்விழுந்து வந்து புகுந்திருக்கப்பெற்ற மடநெஞ்சம் இது—(எனது) விதேயமான இந்த நெஞ்சைக்காட்டிலும், மற்றதுவும்—வேறொன்றை, பேறு ஆக—பயனுக, யான் கொள்வனே—நான கொள்வனே? [கொள்ளமாட்டேன்;].

பெரி-அவ:— (மாருன்) பார்த்தருளவேணும் என்று அபேக்ஷித்தபடியே அவன் பார்க்கப்பெற்றபடியைப் பேசுகிறார்.

---

அவ:— "பார்த்தருளவேணும்" என்று இவர் அபேக்ஷித்தபடியே அவன் பார்த்தருள, தான்பெற்ற ப்ரகாரத்தைப் பேசுகிறார்.

---

27. அவ:— "எற்றைக்கும் கண்டுகொள் கண்டாய் கடல் வண்ணு யானுன்னைக் கண்டுகொளிற்குமாறு" என்று ஆழ்வார் ப்ரார்த்தித்தவுடன எம்பெருமான் "அப்படியே ஆகுக" என்று விசேஷகடாக்ஷம் செய்தான். இவருடைய இப்ப்ரார்த்தனையைச் செவியுற்ற சிலர், "என்றும் வைஷ்ணவனுயிருந்தால் போதுமோ? மோக்ஷம் வேண்டாவோ?" என்ன, "அறிவுகேடர்காள்! மோக்ஷத்தில் சென்றடையும் அவ்வெம்பெருமானே அவ்விருப்பையும் இகழ்ந்து என் நெஞ்சிலே புகுந்திருக்கும்போது, நான் இந்நெஞ்சைக் காட்டிலும் வேறொன்றை விரும்புவதற்கு ப்ரஸக்தியேது?" என்கிறார்.

வ்யா:— (மால்தான் புகுந்தமடநெஞ்சம்) "யத்...அபி₂ஸம் விஶந்தி தத் விஜிஜ்ஞாஸஸ்வ தத் ப்₃ரஹ்மேதி" [முக்தியடையும் போது எதனுள் ஜீவராசிகள் நுழைகின்றனவோ அதுவே ப்₃ரஹ்மமென்று அறிவாயாக.] என்றும், "ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய: அஹமேவம் விதோ₄ர்ஜுந! ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப" [எதிரிகளைத் தவிக்கச்செய்யும் அர்ஜுனு!

வ்யா:— (மாறன் புகுந்த மடநெஞ்சம்) ஈச்வரன் வ்யா

உரை:—ஆஶ்ரிதவ்யாமுக்₃த₄னான ஸர்வேஶ்வரன் தானே மேல்விழுந்து அத்யபி₄நிவிஷ்டனாய்ப் புகுந்த ப₄வ்யமான

அநந்யமான ப₄க்தியினாலேயே இப்படிப்பட்ட நான் உள்ளபடி அறிவதற்கும், காண்பதற்கும், நுழைவதற்கும் தகுந்தவன்] என்றும். "ஏஷ ப்₃ரஹ்ம ப்ரவிஷ்டோऽஸ்மி க்₃ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரத₃ம்" [கடுங்கோடையில் குளிர்ந்த குளத்திலே மூழ்குவதுபோல் நான் ப்₃ரஹ்மத்தினுள் நுழைந்திருக்கிறேன்.] என்றும் பிறரால் புகுரப் படுமவன், தான் மேல்விழுந்து புகுந்திருக்கும்படியான ருசியை யுடைய என் நெஞ்சமன்றோ இது. (மால் தான் புகுந்த) மிகப் பெரியவனாயுள்ள ஸர்வேஶ்வரனன்றோ புகுந்தான்! மால்—பெரியோன். (மால் தான் புகுந்த) அன்பே வடிவுகொண்டவனன்றோ புகுந்தான். மால்—அன்பன். (மற்றதுவும் பேருகக் கொள்வனோ பேதைகாள்) இந்நெஞ்சையொழிய வேறொன்றான பரமபதத்தையும் ப்ராப்யமாகக் கொள்வேனோ? "என் அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றும், "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லா" என்றும், "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்றும், "ப₄ாவோ நாந்யத்ர க₃ச்ச₂தி" [என் நினைவு வேறொன்றிலும் செல்லுகிறதில்லை] என்றுமன்றோ அறிவுடையார் வார்த்தை இருப்பது. (மடநெஞ்சம் மற்றதுவும் பேருகக்கொள்வனோ) "நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ, நீயவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்" [பெரிய திருவ 53] என்றும், "மாயாப்பெருவிறலுலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும் கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே" [திருவாசிரியம்] என்றும் நம்மாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. (மால்தான் புகுந்த மடநெஞ்சம் மற்றதுவும் பேருகக் கொள்வனோ)

"வடதடமும் வைகுந்தமும் மதில் துவராபதியும்
இடவகைகளிகழ்ந்திட்டு என்பால் இடவகை கொண்டனையே"
[பெரியாழ்திரு 5-4-10]

என்கிறபடியே அவன் வைகுந்தத்தை இகழ்ந்து என்னெஞ்சில் வந்து புகுந்திருக்க, நான் இத்தை இகழ்ந்து அங்கே புகுரவோ? (பேதைகாள்) இத்தை அறியாத நீங்கள் அறிவுகேடர்களேயாவீர். "சிக்கென மற்றானும் உண்டென்பார் என்பது தானதுவும் ஓராமையன்றே உலகத்தார் சொல்லும் சொல்" [சிறிய திருமடல்] என்று

முக்₃த₄னைப் புகுரும்படியான நெஞ்சு. (நீறித்யாதி) ருத்₃ரன்

---

இந்த நெஞ்சையுடையேனைப் ட₄ஸ்மோத்₃தூ₄ளித ஸர்வாங்க₃னை ருத்₃ரன் தான் ஸ்வயத்னத்தால் காணமாட்டாத

---

திருமங்கையாழ்வாரும் இத்தை அறியாமை என்றே அருளிச்செய்தாரன்றே. (பேதைகாள்) இவ்வறிவையுடையார் 'தெள்ளியோர்' (தெளிந்தஅறிவையுடையவர்) ஆகவும், இதில்லாதார் பேதைகளாகவுமிருக்கும்படி. இப்படிப்பட்ட அத்₄யவஸாயம் உமக்கு எப்படி உண்டாயிற்று என்ன, அருளிச்செய்கிறார்,—(நீறுடி தான் காணமாட்டாத தாரலைச் சேவடியை யான் காண வல்லேற்கிது) சாம்பலைப் பூசி நிற்கும் ருத்₃ரனும் காணமுடியாததும், மாலையையும் பரப்பையும் உடையதுமான திருவடியைக் காணவல்ல நெஞ்சையுடையவனன்றோ யான். அப்படிப்பட்ட எனக்கு இந்த அத்₄யவஸாயம் உண்டானதில் என்ன ஆச்சரியம்? (நீறுடி தான் காணமாட்டாத) "ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த்" [ருத்₃ரனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன்.] என்று பிறருக்கு அறிவை அளிப்பவனாகச் சொல்லப்படும் அவனும் அறியமாட்டாத; ஸர்வஜ்ஞன் என்று பெயர்பெற்றிருப்பவனும் அறியமாட்டாத. (நீறுடி தான்) "ப₄ஸ்மச்ச₂ந்ந: முச்யதே ஸர்வபாபை:" என்கிறபடியே ஜ்ஞாநவிரோதி₄யான ப்₃ரஹ்மஹத்த்யாதி₃ பாபங்கள் போவதற்காக நீறு பூசி நிற்கை முதலான ப்ராயஶ்சித்தங்களை அநுஷ்டி₂த்து நிற்கும் அவன் தானும் அறியமாட்டான் என்கை. (நீறுடி தான் காணமாட்டாத)

"ந ஸ ஶக்யஸ் த்வயா த்₃ரஷ்டும் மயாந்யைர் வாபி ஸத்தம"

[அப்பரமபுருஷன் (பிரமனாகிய) என்னாலும், (உருத்திரனாகிய) உன்னாலும், வேறு எவராலும் காணமுடியாதவன்] என்று பா₄ரதத்தில் ப்₃ரஹ்மருத்₃ரஸம்வாத₃த்திலும்,

"யந்ந தே₃வா ந முநய: ந சாஹம் ந ச ஶங்கர: |
ஜாநந்தி பரமேஶஸ்ய தத் விஷ்ணோ: பரமம் பத₃ம் ||"

[எதை தேவர்களும், முனிவர்களும், (பிரமனாகிய) நானும், சங்கரனும் அறியமாட்டோமோ, அதுவே விஷ்ணுவின் மேலான ஸ்வரூபம்] என்று விஷ்ணுபுராணத்திலும் பேச நின்ற பிரமனாலும் பேசப்பட்டதன்றோ. "திருமால்! நான்முகன் செஞ்சடையான் என்றிவர்கள் எம்பெருமான் தன்மையை யாரறிகிற்பார் பேசியென்?" [திருவாய் 8-3-9] என்றன்றோ அறிவுடையார் வார்த்தையிருப்பது.

காணமாட்டாத தாரையும் அகலத்தையும் உடைத்தான திருவடிகளைக் காணவல்லேனான எனக்கு இதொழிய வேறே

---

மாலாலங்க்ருதமாய், பே₄ாக்₃யதாவிகாஸத்தையுடைத்தாய். சிவந்திருந்துள்ள அந்தத் திருவடிகளை. அவன் நிர்ஹேதுக க்ருபைக்கு நேரே பாத்ரபூ₄தனான நானே வருத்தமறக் கண்டநுப₄விக்கவல்லேனுமாயிருக்கிற எனக்கு — வேறே

---

(நீருடி தான் காணமாட்டாத தார்) அவனுடைய திருவடியைக் காணமாட்டாத அளவேயோ? அதிலணிந்திருக்கும் மாலையையும் காணமாட்டான். (தார் அகலச் சேவடியை) "தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடை அம்மான்" [திருவாய் 1-9-7] என்று துழாய்மாலை சூடியிருக்கும் திருவடியன்றோ இது. (அகலச் சேவடியை) படிக்களவாக நிமிர்த்தலாம்படியான பரப்பையுடையதா யிருக்கும் திருவடியை. அன்றிக்கே, படிக்களவாக நிமிர்த்தி நின்ற திரிவிக்கிரமாவதார நிலையை நினைப்பதாகவும் கொள்ளலாம். இனிமை விஞ்சி நிற்கையைப் பொருளாக அருளினர் அப்பிள்ளை. (நீருடி தான் காணமாட்டாத...அகலச்சேவடியை) "தத₃ம்பு₃ பதிதம் த்₃ருஷ்ட்வா த₃த₄ார ஶிரஸா ஹர:" [(பிரமனுடைய கமண்டலுவிலிருந்து பகவானுடைய திருவடிகளில் விடப்பட்ட) அந்த கங்காஜலம் விழுவதைக் கண்டு, சிவன் அதைத் தலையாலே தரித்தான்] என்கிறபடியே எம்பெருமான் திருவுலகளந்தருளிய போது ருத்ரன் ஸ்ரீ பாத₃தீர்த்த₂த்தைக் கண்டானேயொழிய அந்த ஸ்ரீ பாத₃த்தைக் காணப்பெற்றானில்லை என்றபடி. (நீருடி தான் காணமாட்டாத சேவடி)

"கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன்
அடிக்கமலந்தன்னை அயன்" [முதல்-திருவ 56]

என்கிறபடியே அருகிலிருக்கும் அவனே காணமாட்டாத விஷயத்தை தூ₃ரஸ்த₂னான இவன் காண்கையாவதென்? (தாரகலச் சேவடியை) மாலைபட்டாலும் கன்றிச் சிவந்து போம்படியான மார்த்₃த₃வத்தையுடைய திருவடியை. (காணவல்லேற்கு) நிர்ஹேதுக கிருபையாலே அவன் தானே காட்டக் காண்கையாலே, வருத்தமறக் காணவல்லவனான எனக்கு. மால்தான் புகுந்த மட நெஞ்சமாகிற இதைக் காட்டிலும் வேறொன்றைப் பலனாகக் கொள்ள மாட்டேன் யான் என்று கூட்டிப்பொருள்கொள்வது.

யொன்றைப் பேறாகக் கொள்வனோ? வேறொன்றைப் பேறாக நினைத்திருக்கும் அறிவுகேடர்காள்! 27.

28. இதுவிலங்கை யீடழியக் கட்டிய சேது
இதுவிலங்கு வாலியை வீழ்த்தது (வும்)—இதுவிலங்கை
தானொடுங்க வில்நுடங்கத் தண்டாரிராவணனை
ஊனொடுங்க வெய்தா னுகப்பு.

---

ஒன்றைப் பேறாக நினைத்திருக்கும்றிவு கேடர்காள்! அந்தத் திருவடிகளையொழிய வேறொன்றைப் புருஷார்த்தமாகக் கைக்கொள்ளுமவனோ? நெஞ்சம் — நெஞ்சையுடையோம், நெஞ்சையுடையேனென்றபடி. 'இது' என்கிற இத்தை நெஞ்சோடே கூட்டுவது. 'அது' என்கிற இத்தை திருவடிகளோடே கூட்டுவது. 27.

---

[இப்பாட்டுக்கு வேறொரு வகையாக அவதாரிகையும் உண்டு. அது கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கனுகுணமாக வ்யாக்யானத்தையும் யோஜித்துக்கொள்வது. "மால்தான் புகுந்த மடநெஞ்சம் இது—திருமால் தானே வந்து புகுந்திருக்கிற என் விதேயமான இந்தநெஞ்சத்திலே, மற்றதுவும்—(அவனுடைய திருவடியைக் காட்டிலும்) வேறொன்றை..." என்று பதவுரையில் பேதம். நெஞ்சம் என்றதற்கு நெஞ்சையுடையேன் என்றும் பொருள் கொள்ளலாம்.]

அவ:— "எற்றைக்கும் கண்டுகொள்கண்டாய் கடல்வண்ணா யானுன்னைக் கண்டுகொள்கிற்குமாறு" என்று ஆழ்வார் ப்ரார்த்தித்ததைச் செவியுற்ற சிலர் "ஸ்வர்க்கலோகப்ராப்தியென்றும், சிவலோகப்ராப்தியென்றும், ப்ரஹ்மலோகப்ராப்தியென்றும், ஸ்வாத்மாநுபவம் என்றும் சாஸ்திரங்களிலே பல பெரிய பலன்கள் சொல்லப்பட்டிருக்கும்போது, பரமது:க்கமயமான இவ்வுலகத்தில் வைஷ்ணவனாயிருந்தால் போதுமானது என்கிறீரே. இதென்ன அறிவுகேடு" என்று சொல்ல, "உயர்ந்ததைத் தாழ்ந்ததென்றும், தாழ்ந்ததை உயர்ந்ததென்றும் எண்ணும் நீங்களன்றோ அறிவு கெட்டவர்கள். நீங்கள் உயர்ந்த உலகங்களில் ஒன்றென்று நினைத்திருக்கும் சிவ லோகத்திற்கு அதிபதியான அச்சிவனும் காண மாட்டாத திருவடிகளை உடையவனன்றோ என் நெஞ்சில் புகுந்திருக்கிறான். அந்நெஞ்சிலே அத்திருவடியையொழிய வேறொன்றைப் பலனாக எண்ணமாட்டேன்" என்கிறார். 27.

இலங்கை—லங்காபுரியானது. ஈடு அழிய—சீர்குலையும் படியாக. கட்டிய—(வானரசேனையைத் துணைகொண்டு) கட்டின. சேது—திருவணையாகிய. இது—இதுவும். விலங்கு—திர்யக்யோனியிற் பிறந்தவனை. வாலியை—வாலியை. வீழ்த்ததுவும்—முடித்த செயலும். இலங்கைதான்—லங்கா புரியானது. ஒடுங்க—அழியும்படியாகவும். வில் நுடங்க—சார்ங்க வில் வளையும்படியாகவும். தண் தார் இராவணனை ஊன் ஒடுங்க—(அலங்காரமாகக்) குளிர்ந்த பூமாலையணிந்து கொண்டிருந்த இராவணனுடைய முதுகு வளையும்படியாக வும். எய்தான்—எய்த ராமபிரானுடைய. இது—இச்செய லும். உகப்பு—அவனுடைய விளையாட்டு.

பெரி-வ்யா:— (இதுவித்யாதி) லங்கைக்கு மூலையடியே வழிபோம்படியாகக் கட்டின திருவணை இது. கடல் அடை பட்டபோதே லங்கை அழிந்ததென்று நினைக்கும்படியாக.

---

அவ:— ஆச்ரிதார்த்தமான ப்ரவ்ருத்திகளை அவன் உகப்பதென்கிறார்.

உரை:—இந்த்ராதிகள் கேட்கவே மண்ணுண்ணும்படி யான லங்கை கட்டுக்குலைந்து ஶிதிலமாம்படியாக மலை களைக்கொண்டு கடலையடைத்த இந்த ஸேதுப்ரந்த ப்ர

---

28. அவ:— 'அவன் சேவடியைச் சிவன் காணமாட்டான் என்றும், நான் கண்டேன் என்றும் சொன்னீரே. எங்கே எப்போது கண்டீர்?'' என்று சிலர் வினவ, ''அவன் திருவடியை மட்டுமோ? அடியார்க்காக அவன் உகந்த லீலா வ்யாபாரங்களையெல்லாம் இப்போதே இங்கேயே மால்தான் புகுந்த மடநெஞ்சிலே காண் கிறேன்'' என்கிறார்.

வ்யா:— (இது இலங்கை ஈடழியக் கட்டிய சேது) லங்கை கட்டுக்கோப்பு குலையும்படியாக அதற்கு மார்க்கமாகக் கடலிலே எம்பிரான் கட்டின திருவணை இதோ என் கண்ணெதிரே தோற்று கின்றது. (இது இலங்கை ஈடழியக் கட்டிய சேது) ''தாமரைச் சேவடியை யான் காணவல்லேற்கு'' என்று அடியைக் கண்டேன் என்றார் கீழ்ப்பாட்டில். இங்கு அடிபட்ட அணையையும் காண்

(இது வலங்கு வாலியை வீழ்த்ததுவும்) திர்யக்கான வாலியை முடித்ததுவும். (இதுவித்யாதி) லங்கை நெருக் குண்ணவும். ஸ்ரீஶார்ங்கமும் வளையவும். மதிப்பனான ராவணன் முதுகு கூனவும் எய்தான் இது. (அவனுகப்பு) அவன்

---

வ்ருத்தியும். திர்யக்யோனியிலே பிறந்த பெருமிடுக்கனான வாலியைக்கொன்று விழவிட்டருளின இந்த ப்ரவ்ருத்தியும், லங்கையானது தான் நெருக்குண்ணவும், ஸ்ரீஶார்ங்கத் திரு வில்லும் வளையவும். அக்ருத்யம் செய்கைக்கிட்ட குளிர்ந்த மாலையையுடையனாய்ப் பெருமதிப்பனாயிருக்கிற ராவண னுடைய மாம்ஸளமான சரீரம் "ந நமேயம்" (ந நமேயம்)

---

கிறேன் என்கிறார். (ஈடழியக்கட்டிய) அணைகட்டியபோதே இலங்கை யழிந்தது என்று நினைக்கும்படியாக, இந்திரன் முதலான தேவர்கள் இவ்வரணைப்பற்றிக்கேட்கும்போதே நெஞ்சழியும்படி—இலங்கைக்கு வலிதான இயற்கையரணாகவன்றோ கடல் இருந்தது. (இது விலங்கு வாலியை வீழ்த்ததுவும்) மிருகமான வாலியை அம்பாலே அடித்து வீழ்த்தியதும் இதோ என் கண்ணெதிரே தோற்றுகிறது. (விலங்கு வாலியை) திர்யக்ஜாதியிற் பிறந்ததோடன்றியில் செயல்களிலும் மிருகமாயிருந்தவன். சுக்கிரீவனுடன் சண்டைசெய்யும்போது ராம பிரான் மறைந்து நின்று அவனையடித்தது அவன் விலங்காகை யாலே தோஷமாகாது என்று பூர்வம்.

"வாகுராபிஶ்ச பாஶைஶ்ச கூடைஶ்ச விவிதைர் நரா: |
ப்ரதிச்சந்நாஶ்ச த்ருஶ்யாஶ்ச க்ருஹ்ணந்தி ஸுபஹூந் 
ம்ருகாந் ||"

[மனிதர்கள் வலைகளாலும், பாசங்களாலும், விதவிதமான வஞ்சனை களாலும், மறைந்திருந்தும், நேரே நின்றும் பலவிதமான மிருகங்களைப் பிடிக்கிறார்கள்.] என்று எம்பெருமானும் அருளிச்செய்தானன்றோ. (இலங்கை தான் ஒடுங்க வில் நுடங்கத் தண் தார் இராவணனை எய்தான் இது) லங்கை நெருக்குண்ணவும், வில் வளையும்படி யாகவும், கர்வங்கொண்ட ராவணன் முதுகு வளையும்படியாகவும் எய்த அந்த ராமபிரானுடைய இச்செயலும். (இலங்கை தானொடுங்க) இலங்கை அழிவதையும் கண்முன்னே காண்கிறேன். (வில் நுடங்க) வில் வளைவதையும் காண்கிறேன். (தண் தார்...எய்தான் இது) குளிர்ந்த மாலையணிந்து கர்வங்கொண்டு நிற்கும் வணங்கலில்

லீலை. வாலியைக் கொன்ற ஐயமும், ராவணவதமும் புத்தி ஸ்தமானபடியாலே 'இது' என்கிறார். ஒரு முஷ்டியிலே நின்றெய்ய நெஞ்சழியும்படியாயிறே இருப்பது. 28.

29. உகப்புருவம் தானே யொளியுருவம் தானே
மகப்புருவன் தானே மதிக்கில்—மிகப்புருவம்
ஒன்றுக்கொன் றோசனையான் வீழ ஒருகணையால்
அன்றிக்கொண் டெய்தா னவன்.

மதிக்கில்—சிந்தித்தால், உகப்பு உருவம் தானே—அனைவரும் விரும்பும் திருமேனியை யுடையவன் தானேயாகவும், ஒளி உருவம் தானே—தேஜோமயமான திருமேனியை உடையவனும் தானேயாகவும், மகப்பு உருவம் தானே—மிகவும் ஆச்சரியமான வடிவையுடையவனும் தானேயாகவுமிருக்கும், அவன்—அவ்விராமபிரான், மிக—மிகவும், புருவம் ஒன்றுக்கொன்று ஓசனையான்—ஒரு புருவத்துக்கு ஒரு புருவம் காதவழி நீளமிருக்கப்பெற்ற கும்பகர்ணன், வீழ—ஒழியும்படியாக, அன்றிக்கொண்டு—சீறிக்கொண்டு, ஒருகணையால்—ஒரு பாணத்தினால், எய்தான்—அடித்து முடித்தான்.

---

என்று நிலைகுலைந்து வளையும்படியாகவும், எய்தருளினன். இந்த ப்ரவ்ருத்தியும் ஆஶ்ரிதவிஷயத்தில் உகப்புக்குப்போக்கு வீடாகச் செய்தருளின செயல்கள். 28.

அவ:— ஆஶ்ரித விரோதியான கும்பகர்ணனை அழியச் செய்த சக்ரவர்த்தித் திருமகனுடைய, ஸர்வாபிமதமாய்

---

அரக்கனான ராவணனுடைய கொழுத்த உடம்பு ஒடுங்கும்படியாக எம்பிரான் எய்வதையும் காண்கிறேன். (இது இது இது உகப்பு) என் கண்ணெதிரே தோற்றும் இச்செயல்கள் எல்லாம் அடியார்க்காக எம்பிரான் செய்த லீலாவ்யாபாரங்கள், (இது) வெகுகாலத்திற்கு முன் நடந்த செயல்களெல்லாம் நெஞ்சிலே ஓடுகையாலே 'இது, இது' என்கிறார். 28.

29. அவ:—"அப்படியாகில் ஸர்வேஶ்வரனுடைய திருமேனியை முற்றுமுணர்ந்தவரோ நீர்?" என்ன, "ஒருவராலும் முற்றும்

பெரி-வ்யா:— ( உகப்புருவமித்யாதி ) "इच्छागृहीताभिमत" ( இச்சா₂க்₃ருஹீதாபி₄மத ) என்னும்படி ஸ்வவ்யதிரிக்தர்க்கும் ப்ராப்யமாய்த் தனக்கும் அபி₄மதமாய் ரஜஸ்தமோ மிஶ்ரமன்

---

தேஜோரூபமாய் அத்யாஶ்சர்யமான தி₃வ்ய விக்₃ரஹ வைலக்ஷண்யத்தை அநுப₄வித்து வித்₃த₄ராகிறார்.

உரை:— மிகவும் ஒரு புருவத்துக்கொரு புருவம் ஒரு யோஜனை நீளமுடையனாய், விக்ருதவேஷனை கும்ப₄கர்ணன் மலைமுறிந்தாற்போலே பட்டுவிழும்படியாக ஸங்கல்பத்தா

---

உணரமுடியாதபடியான திருமேனியை உடையவனன்றோ அவன்" என்கிறார்.

வ்யா:— ( உகப்புருவம் தானே ) எல்லாரும் விரும்பக்கூடிய திருமேனியை உடையவனும் தானே.

"ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகோऽஸௌ
ஸ்வஶக்திலேஶோத்₃த்₄ருதபூ₄தஸர்க்க₃: ।
இச்சா₂க்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹஸ்
ஸம்ஸாதி₄தாऽஶேஷஜக₃த்₃தி₄தோऽஸௌ ॥"
[வி-பு 6-5-84]

[இந்த பகவான் ஸகல கல்யாணகுணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய சக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே தரிக்கப்பட்ட பூ₄தங்களை உடையவன்; இச்சை₂யினாலேயே எடுக்கப்பட்டவையும், இஷ்டமானவையுமான பல தே₃ஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜக₃த்துக்கும் நன்மையைச் செய்பவன்.] என்று பராஶரமஹர்ஷி அருளிச்செய்தபடியே அனைவரும் விரும்பும்படியான திருமேனியை உடையவன். ( உகப்புருவம் தானே ) பிறர் விரும்புகைரோயன்றிக்கே, தானும் தன் ஸ்வரூபத்தைக் காட்டிலும் மிகவிரும்பியிருக்கும் திருமேனியை உடையவன்.

"ஶாந்தாநந்தமஹாவிபூ₄தி பரமம் யத்₃ ப்₃ரஹ்ம ரூபம் ஹரே: ।
மூர்த்தம் ப்₃ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம ரூபம் யத₃த்₃யத்₃பு₄தம் ॥"

[ஷடூர்மிகளற்றதாய், ஆநந்த₃மயமாய், பெரிய விபூ₄திகளை உடையதாய், தனக்கு மேலானதற்றதாய், பெரிதாயிருப்பதாலும், (பிற

றிக்கே நிஷ்க்ருஷ்டஸத்வமாகையாலே. நிரவதிகதேஜோ

லன்றிக்கே கைக்கு எட்டிற்று ஓரம்பாலே—ஆஸ்ரிதவிரோதி கனைத் தனக்கு விரோதிகளாக நினைத்திருக்குமவனாகையாலே சிறிக்கொண்டு எய்தருளின சக்ரவர்த்தித்திருமகன் தானே நெஞ்சாலே அநுஸந்திக்குமளவில், “अतीव प्रियदर्शनं” (அதீவ ப்ரியதர்ஸநம்) என்னும்படி ஸ்வபரவிபாகமற ஸர்வர்க்கும் ப்ரியகரமான ரூபத்தை உடையனாயிருக்கும். “दीप्तेन स्वेन तेजसा” (தீப்தேந ஸ்வேந தேஜஸா) என்கிறபடியே அவன் றானே நிரவதிக தேஜோரூபமான வடிவையுடையனாயிருக்கு

ரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்ரஹ்மமப்தத்தாலே சொல்லப் படுவதாய் இருக்கும் ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, அதைக்காட்டிலும், அந்த பகவானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும், கண்ணால் காணக்கூடியதும், ப்ரஹ்மமப்தத்தால் சொல்லப்படுவதும், மிகவும் அத்புதமானதுமான யாதொரு ரூபம் உண்டோ] என்று ஆளவந்தாரும் அருளிச்செய்தாரன்றோ. (உகப்புருவம் தானே) அடியார்களுக்கு ப்ராப்யம் (அடையப்படும் வஸ்து) ஆகையாலே அவர்களுடைய உகப்புக்கு விஷயமாயிருக்கும். அவர்கள் உகந்திருக்குமதாகையாலேயே தனக்கும் மிகவும் இஷ்டமாயிருக்கும். (உகப்புருவம் தானே) ஸ்வரூபமும், விக்ரஹமும் ஒரே த்ரவ்யமோ என்று நினைக்கலாம்படி அந்தரங்கமாயிருக்கை. “உகப்புருவன் தானே” என்று பாடம் கொள்வாருமுண்டு.

எல்லாராலும் விரும்பப்படுகைக்குக் காரணம் சொல்லுகிறது அடுத்தபடியாக,— (ஒளியுருவம்தானே) “பரம் ஜ்யோதி:” என்றும், “நாராயணபரோ ஜ்யோதி:” என்றும், “ஆதித்யவர்ணம்” என்றும், “வித்யுத: புருஷாத்” என்றும் சோதியுருவனாகப் பேசப் படுபவனும் இவனே என்கை. (ஒளியுருவம் தானே) “தேஜஸாம் ராஸிமூர்ஜிதம்” [பெரியதோர் ஒளிக் குவியலாயிருப்பவனை] என்று சொல்லப்படுபவனன்றோ. (ஒளியுருவம் தானே) “பரஞ்சோதி நீ பரமாய் நின்னிகழ்ந்து பின் மற்றோர் பரஞ்சோதியின்மையின் படியோவி நிகழ்கின்ற பரஞ்சோதி” என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடியே தன்னைத் தவிர வேறொருவரும் ஒளியுருவுமுடையாரில்லை என்று சொல்லும்படியிருப்பவன். “ந தத்ர ஸூர்யோ பாதி” என்று ஸூர்யசந்திராதியரின் ஒளிகளையும் அஸத்ஸமமாக்குவதன்றோ இவனுடைய ஒளி. பரமபதத்தில் நித்யஸூரிகளுடைய

ரூபமாய் "रूपमन्यद्धरेर्महत्" (ரூபமந்யத் ஹரேர் மஹத்) என்னும்படியான ஆஶ்சர்யமான வடிவை உடையவனுமான சக்ரவர்த்தித்திருமகன்தானே, ஒரு புருவத்துக்கொரு புருவம் யோஜனை நீளமுடைய கும்பகர்ணன் பட்டுவிழும்படி

மவன்றனே. "रूपमन्यद्धरेर्महत्" (ரூபமந்யத்₃த₄ரேர்மஹத்)

ஒளியையும் இரவிக்கெதிர் மின்மினிபோல் ஆக்கிக்கொண்டு எழுந்தருளியிருப்பவனன்றோ இப்பெருமான்.

(மகப்புருவம் தானே) மிகப்பெரிய உருவத்தையுடையவனும் தானே.

"ஸமஸ்தா: ஶக்தயஶ்சைதா ந்ருப யத்ர ப்ரதிஷ்டி₂தா: |
தத்₃ விஶ்வரூபவைரூப்யம் ரூபமந்யத் ஹரேர் மஹத்॥" [6.7.70]

[அரசனே! இவ்வெல்லா சக்திகளும் எதனிடத்திலே நிலை நிற்கின்றனவோ, ஹரியினுடைய மேலான உருவமான அது உலகிலுள்ள உருவங்கள் எல்லாவற்றிலும் மேலானதாய்; வேறுபட்டதாயிருப்பது] என்று ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பேசப்பட்டதன்றோ. இங்கு பெருமையாவது,— ஆகாரத்தாலும், ஆஶ்சர்யகரத்வம் முதலான கு₃ணங்களாலும் பெருமைபெற்றிருக்கை, 'மஹத்' என்னும் வடமொழிச் சொல் 'மகப்பு' என்று கிடக்கிறது. அன்றிக்கே, "மஹாத்₃பு₄தம்" என்னும் வடமொழிச் சொல் 'மகப்பு' என்று சிதைந்துள்ளதாகவும் கொள்ளலாம். "ரூபம் யத₃த்₃யத்₃பு₄தம்" என்றாரன்றே ஆளவந்தாரும்.

'இப்படியிருப்பவன் பரமபத₃நாத₂னோ?' என்ன, "ஆத்மானம் மானுஷம் மந்யே" என்று தன்னை மனிதனாக நினைத்து வந்த அவதாரத்திலும் இப்படியேயிருந்தான் என்கிறார் பிறபகுதியாலே.(புருவம் ஒன்றுக்கொன்று ஓசனையான்வீழ) ஒருபுருவத்துக்கு ஒரு புருவம் யோஜனை தூரமுள்ளதான பெரிய வடிவையுடைய கும்பகர்ணன் மலை முறிந்தாற்போலே விழும்படியாக, (மிக அன்றிக்கொண்டு எய்தான்)"க்ஷமயா ப்ருதி₂வீஸம:"[பொறுமையில் பூமியைப் போன்றவன்] என்னும் நிலைபோய், "கோபமாஹாரயத் தீவ்ரம்" [கடுங்கோபத்தை ஏறிட்டுக்கொண்டான்] என்கிறபடியே மிகுந்த கோபத்தை ஏறிட்டுக் கொண்டு எய்தான். பிறர் காரியம் செய்யும் நமக்குக் கோப தாபங்கள் ஏதுக்கு என்னும் நினைவில்லாமல், தன்காரியம் செய்வதாகவே நினைத்துக் கடுங்கோபங்கொண்டு எய்தான்.

ஸங்கல்பத்தாலன்றிக்கே திருச்சரத்தாலே, தே₃வகார்யம் செய்தானுகையன்றிக்கே. தனக்கே வந்ததாகச் சீற்றத்தை ஏறிட்டுக்கொண்டு எய்தான். (மதிக்கில்) இவனுடைய திருமேனியை ஒன்றால் பரிச்சே₂தி₃க்கப்போகாதென்கை. 29.

---

என்கிறபடியே வெற்றிவேற வைலக்ஷண்யத்தாலே மிகவும் ஆஸ்சர்யத்தையுடைத்தான ரூபத்தையுடையனு யிருக்கும் என்று அவ்வழகிலே தாம் ஆழங்கால்பட்டு அநுப₄விக்கிறார். 29.

---

(கணையால் எய்தான்)'ஸங்கல்பத்தால் கொன்றால் நற்கொலையார்; அடியார் திறத்துப்பட்ட அபசாரத்துக்கு அது போராது' என்று நினைத்து நேரே வந்து "வெந்நரகம் சேராவகையே சிலைகுனித்தான்" [சிறியதிருமடல்] என்கிறபடியே விற்பிடித்து நின்ற காட்சியைக் காண்பதைக்காட்டிலும் மேற்பட்ட நரகானுப₄வம் இல்லையென்னும்படி விற்பிடித்துநின்று அம்பெய்தான். புருவம் ஒன்றுக் கொல்லுரேசனையானுகையாலே, இவனை அழிக்க அதி₄கமாக சிரமப்பட்டானோ? என்ன —(ஒரு கணையால் எய்தான்) ஓர் அம்பாலே அநாயாஸமாக எய்தான். (மதிக்கில்...) இப்படிப்பட்ட இந்த ராமபிரானை அறியப்பார்த்தால் உகப்புருவையுடையவனுகவும் ஒளியுருவையுடையவனுகவும்,மகப்புருவையுடையவனுகவுமிருப்பன்.'மதிக்கில்' என்றதால் இவனுடைய திருமேனியை அளவிட்டு அறிதல் ஆர்க்கும் ஆகாது என்றதாகிறது. (எய்தானவன் உகப்புருவம் தானே) "தே தம் ஸோமமிவோத்₃யந்தம்" [உதி₃க்கும் சந்திரனைப் போன்றவனை ராமபிரானை] என்று அறிவுடையரான ரிஷிகளாலும், "அபி வ்ருக்ஷா: பரிம்லாநா:" என்று அறிவற்ற மரங்களாலும் விரும்பப்படும் திருமேனியை உடையவன் இவனே. (எய்தானவன் ஒளியுருவம் தானே) "ஸோபயந் த₃ண்ட₃காரண்யம் தீ₃ப்தேந ஸ்வேந தேஜஸா"[தன் ஒளிவிடும் தேஜஸ்ஸாலே த₃ண்ட₃கவநம் முழுவதையும் ஒளிபெறச் செய்துகொண்டு வந்தான் ராமபிரான்] என்கிறபடியே தன் ஒளியாலே இருள்செறிந்த காட்டையும் ஒளிவிஞ்சியதாகச் செய்யவல்ல ஒளியுருவனும் இவனேயாவான். (எய்தானவன் மகப்புருவம் தானே) "பும்ஸாம் த்₃ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்கிறபடியே ஆடவர்களின் நெஞ்சையும் கண்ணையும் கவர்கின்ற பெருமை பெற்ற வடிவையுடையவன் இவனேயாவான். 29.

30. அவனென்னை யாளி யரங்கத்து அரங்கில்
அவனென்னை யெய்தாமல் காப்பான்—அவனென்ன
துள்ளத்து நின்றா னிருந்தான் கிடக்குமே
வெள்ளத் தரவணையின் மேல்.

பதவுரை :—என்னை ஆளி-என்னை ஆட்கொண்டருள்பவனை, அரங்கத்து அவன்-ஸ்ரீரங்கநாதன், என்னை—அரங்கில்-ஸம்ஸாரமாகிற நாடகசாலையில், எய்தாமல்—பிரவேசிக்க வொட்டாமல். காப்பான்—காத்தருள்வன்; அவன்—அப்பெருமான். என்னது—என்னுடைய. உள்ளத்து—நெஞ்சிலே. நின்றான் இருந்தான்—நிற்பதும் இருப்பதும் செய்தான், (ஆனபின்பு இனி) அவன்—அப்பெருமான். வெள்ளத்து—திருப்பாற்கடலில். அரவு அணையின்மேல்—ஆதிசேஷனாகிற படுக்கையில். கிடக்குமே—பொருந்துவனோ? [பொருந்த மாட்டான்]

பெரி-வ்யா:— (அவனித்யாதி) அரங்கத்தவன் என்னையாளி (அரங்கத்தித்யாதி) "பிறவிமாமாயக் கூத்து"

---

அவ:— அப்பேரழகோடே கோயிலில் வந்து என்னை அடிமைகொண்டு ஸம்ஸாரத்தில் புகாதபடி என்னை ரக்ஷித்து. அவ்வளவன்றிக்கே திருப்பாற்கடற்கிடையை உபேக்ஷித்து என்னெஞ்சிலே அத்யபி₄நிவிஷ்டனாய்க்கொண்டு புகுந்து நிற்றிருப்பதாகாநின்றான் என்கிறார்.

---

30. அவ:— "உகப்புருவனாகவும், ஒளியுருவனாகவும், மகப்புருவனாகவும் இருப்பவனாகில், அவனை நீர் கண்டது எப்படி?" என்ன, "திருப்பாற்கடலையும் இகழ்ந்து என்னை ரக்ஷிப்பதற்காக என்னெஞ்சிலே கோயில் கொண்டிருக்கும்போது அவனைக்காண்பதில் அருமையென்ன?" என்கிறார்.

வ்யா:— (அரங்கத்து அவன் என்னையாளி) 'ஶ்ரீமபிரானே இவன்' என்று அனைவரும் அறியலாம்படி அரங்கத்திலே கோயில் கொண்டெழுந்தருளியிருப்பவனே என்னையாளி. என்னைத் தன் வடிவழகைக் காட்டி ரக்ஷிப்பதற்காகவே திருவரங்கத்திலே கிடந்தான் என்கை. 'அரங்கத்திலே கிடந்து அவன் செய்ததென்?'

என்று ஸம்ஸாரமாகிற நாடகசாலையில் என்னை ப்ரவேசியாமல் காப்பாரார்? பெருமாளே. (அவஸரித்யாதி) என்ஹ்ருதயத்தில் புகுருகைக்கு அவஸர ப்ரதீக்ஷனாய்க் கோயிலிலே கண்

---

உரை:— அந்த சக்ரவர்த்தித் திருமகனென்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம்படி கோயிலிலே பேரழகோடே பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாள் என்னை அடிமை கொண்டருளின என் ஸ்வாமி; அந்தப் பெரியபெருமாள் தாமே ஸம்ஸாரமாகிற நாடகசாலையில் ப்ரவேசியாதபடி என்னை ரக்ஷித்தருளுமவர். அவ்வளவன்றிக்கே அவர் தாமே என்னுடைய ஹ்ருதயத்திலே அத்யபிநிவிஷ்டராய்க் கொண்டு பரந்த கால் பாவி த்ரித்து நின்றார். அவ்வள

---

என்னில்; (அரங்கில் அவனென்னை எய்தாமல் காப்பான) ஸம்ஸாரமாகிய அரங்கத்திலே — நாடகசாலையிலே — என்னை அடையாமல் காப்பவன் அவனே. "பிறவி மாமாயக் கூத்து" [திருவாய் 8-4-11] என்று நம்மாழ்வாரும் ஸம்ஸாரத்தை நாடகசாலையாக நிரூபித்தார். ஒரு மனிதனே நாடகவரங்கில் பல வேஷங்களில் தோன்றுவது போல, ஒரு ஜீவனே பல தேஹங்களை எடுத்துக்கொண்டு ஸம்ஸாரத்தில் தோன்றுகின்றனன்றோ.

ஆக. இவ்வளவால் இவ்வாழ்வாரைப் பெறுகைக்கு ஈச்வரன் அனுஷ்டித்த ஸாதநாநுஷ்டானத்தைப் பேசினார்; இனி அவனுடைய பலனைப் பெற்றான் என்கிறார்.—(அவனென்னெதுள்ளத்து நின்றான் இருந்தான்) திருப்பாற்கடல், திருவரங்கம் முதலானவிடங்களில் பள்ளிகொண்டருளியது என்னுடைய நெஞ்சில் நிற்பதும் இருப்பதுமாகிற பலனைப் பெறுவதற்காகவேயன்றோ; அப்பலனைப் பெற்றான். "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" [ரக்ஷிக்கப்படுபவனின் அபேக்ஷையை எதிர்பார்க்கிறான்] என்கிறபடியே கொள்வாருமுண்டோ என்று படுகாடுகிடக்கும் அரங்கன் என்னெஞ்சில் இடங்கிடைக்குமோ என்று எதிர்பார்த்துக்கிடந்து, இடம் சிறிது கிடைத்தவுடன் பெரும்பேறு பெற்றவனாய், நிற்பதும், இருப்பதும், கிடப்பதுமாகிற செய்கைகளையெல்லாம் என்னெஞ்சிலே செய்தான். (கிடக்குமே வெள்ளத்தரவணையின்மேல்) இனிமேல் பாற்கடலிலே ஆதிசேஷனின்மேல் கிடப்பனோ? ஸாத்யத்தைப் பெற்றபிறகு ஸாதநாநுஷ்டானமும் செய்வா

வளர்ந்தருளி அவகாசம் பெற்று என் ஹ்ருதயத்திலே நிற்ப திருப்பதாகிறவனுக்குத் திருப்பாற்கடலிலே படுக்கையில் கண்ணுறங்குமோ ? 30.

---

*விலும் அபிநிவேசம் அகஞ்சுரிப்படாமையாலே ஸ்தாவர ப்ரதிஷ்டையாக இருந்தார். அப்படி என்னெஞ்சிலே அத்யபிநிவிஷ்டரானவர் திருப்பாற்கடலிலே திருவனந். தாழ்வானுகிற படுக்கையின் மேலே திருவுள்ளம் பொருந்திக் கண்வளர்ந்தருளுவரோ? அதுக்கு ஸம்பாவனையில்லையிறே என்று கருத்து. 30.*

---

ருண்டோ ? இங்கு வெள்ளத்தரவணையில் கிடப்பதைச் சொன்னது பரமபதமும் திருமலை திருவரங்கம் முதலானவிடங்களில் இருப்பதும், நிற்பதும், கிடப்பதுமாகிற எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்.

"நிற்பதும் ஓர் வெற்பகத்திருப்பும் விண்கிடப்பதும்
நற்பெரும் திரைக்கடலுள் நானிலாத முன்னெலாம்
அற்புதன் அநந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே"

என்று இவரே திருச்சந்தவிருத்தத்தில்[65] அருளிச்செய்தாரன்றே.

"கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும்
புல்லென் றொழிந்தனகொல் ஏபாவம் !—வெல்ல
நெடியான் நிறங்கரியா னுள்புகுந்து நீங்கான்
அடியேன துள்ளத் தகம்" [பெரியதிருவ-60]

[கல்—திருமலை; கனைகடல்—திருப்பாற்கடல்; புல்லென்றொழிந்தன கொல்—புல்மூளைத்துப் போயினவோ?] என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தார். (கிடக்குமே வெள்ளத்தரவணையின்மேல்) திருப்பாற்கடலிலே சேதனரைப்பெறுகைக்காக ஸாதநாநுஷ்டானம் செய்யும் பகவான், தனக்கு மிகவிஷயனான சேதனனொருவனைப் பெற்றுவிட்டானாகில்,

"பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து என்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாளநம்பீ"

[பெரியாழ்-திரு 5-4-9]

31· மேல் நான்முக னரனையிட்ட விடுசாபம்
தான் நாரணனொழித்தான் தாரணையுள்—வானோர்
பெருமானை யேத்தாத பேய்காள் பிறக்கும்
கருமாயம் பேசில் கதை.

பதவுரை—மேல்—முன்பொருநாள், நான்முகன்-பிரமன். அரனை—ருத்ரனைக்குறித்து, இட்ட—கொடுத்த. விடுசாபம்—சாபத்தை, தாரணையுள்—இந்நிலவுலகத்தில் (உள்ளாரெல்லாருமறிய). நாரணன்தான்—எம்பெருமானே. ஒழித்தான்—போக்கியருளினன்; (அப்படிப்பட்ட). வானோர் பெருமானை—நித்யஸூரி நாதனான ஸ்ரீமந்நாராயனனை. ஏத்தாத—வாய் கொண்டு வாழ்த்தமாட்டாத. பேய்காள்-அறிவு கேடர்களே! பிறக்கும் கரு—பிறப்பதற்கு அடியான கர்ப்பஸ்தானத்தில் (நீங்கள் அநுபவிக்கக்கூடிய), மாயம்-ஆஶ்சரியமான து:க்கங்களை. பேசில்—சொல்லப்புகுந்தால். கதை-ஒரு மஹாபாரதம் போல் பரந்திருக்கும்.

---

என்று அத்தையும் விட்டு இங்கே ஓடிவருவன். அதைக்கண்ட இச் சேதனன்,

"வெள்ளத்து இளங்கோயில் கைவிடேல்" [இர-திருவ-54]

என்று ப்ரார்த்தித்தால் அரைமனத்துடன் அங்குமிருப்பன். வெள்ளத்திருப்பு 'இளங்கோயில்' [பாலாலயம்] ஆகும். சேதனன் நெஞ்சிலிருப்பு "ஆயததம் மஹத்" [நாராயணஸூக்தம்] [பெருங்கோயில்] "நெஞ்சமே நீள்நகர்" [திருவாய் 3-8-2] என்கிறபடியே பெருங்கோயிலாகும். அது ஸாதநாநுஷ்டான தசை. இது ஸாத்யப்ராப்தி தசை. இதைப் பெற்றவுடன் அதைக் கைவிடுவதற்கே எம்பெருமானுக்குக் குதூஹலம் விஞ்சிநிற்கும். 'இளங்கோயில் கைவிடேல்' என்னுமிவனுடைய நிர்ப்பந்தத்தினாலேயே அங்கேயும் நிற்பன். 30.

31. அவ:— 'தனக்கு துக்கநிவர்த்தகன் அவனே' என்று சென்ற பாசுரத்தில் அருளிச்செய்தார். "எனக்குமட்டுமோ? நீங்கள் தெய்வங்களாக நினைக்கிற ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் துக்கத்தைப் போக்கடிப்பவன் அவனே; அவனைப் பற்றுங்கள்" என்கிறார் இப்பாசுரத்தில்.

பெரி-அவ:—(மேல் நான்முகன்) நீங்கள் ஆஶ்ரயணீயராக நினைத்தவர்களுக்கும் இடர்வந்த இடத்திலே அவ்விடரைப் பரிஹரிக்குமவனையன்றோ பற்றவடுப்பது என்கிறார்.

வ்யா:— (மேலித்யாதி) பண்டு சதுர்முக₂ன் ருத்₃ரனை "कपाली त्वं भविष्यसि" (கபாலீ த்வம் ப₄விஷ்யஸி) என்று ஶபித்த ஶாபத்தைத் தரணியிலே எல்லாருமறிய ஸர்வேஶ்வரன்

---

அவ:— நீங்கள் ஆஶ்ரயணீயராக நினைத்தவர்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் அதனைப் பரிஹரித்து அவர்களை ரக்ஷிக்குமவனையன்றோ நீங்களுக்கும் பற்றவடுப்பது என்கிறார்.

உரை:—முன்பே ப்₃ரஹ்மாவானவன் லோககு₃ருவுமாய், பிதாவுமான தன்னைத் தலையறுத்த ருத்₃ரனை நிரபராத₄னான என்னைத் தலையறுத்த நீ, "कपाली त्वं भविष्यसि" (கபாலீ த்வம் ப₄விஷ்யஸி) என்று கையும் கபாலமுமாயிரந்து திரியக்கடவை என்று வலிய ஏறிட்ட ஶாபமானது தன்னை த₄ரணியிலே ஸர்வரும் அறியும்படி ஸர்வரக்ஷகனான ஸர்

---

வ்யா:— (மேல் நான்முகன் அரனையிட்ட விடுசாபம்) முன்னொரு நாள் தன் தலையொன்றைக் கிள்ளிய தனயனான ருத்₃ரனைக் குறித்துத் தந்தையான பிரமனிட்ட சாபத்தை (தான் நாரணனொழிந்தான தாரகையுள்) நாராயணன் தானே அச்சாபத்தைப் பூமியிலுள்ளார் எல்லாருமறியும்படி போக்கினான். இவ்விடத்தில்,

"தே₃வீம் ப்ரதி ருத்₃ர:-தத: க்ரோத₄பரீதேந ஸம்ரக்தநயநேந ச |
வாமாங்கு₃ஷ்ட₂நகா₂க்₃ரேண சி₂ந்நம தஸ்ய ஶிரோ மயா ||
ப்₃ரஹ்மா—யஸ்மாத₃நபராத₄ஸ்ய ஶிரஶ்சி₂ந்தம் த்வயா மம |
தஸ்மாச்சா₂பஸமாவிஷ்ட: கபாலீ த்வம் ப₄விஷ்யஸி ||
ருத்₃ர:—ப்₃ரஹ்மஹா ஽ஹம் ஶுசிர்பூ₄த்வா சரந் தீர்த₂நி பூ₄தலே |
ததோ ஽ஹம் க₃தவாந் தே₃வி! ஹிமவந்தம் ஶிலோச்சயம் ||
தத்ர நாராயணஶ் ஶ்ரீமாந் மயா பி₄க்ஷாம் ப்ரயாசித: |
ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகா₂க்₃ரேண விதா₃ரிதம் ||

போக்கினான். (வானோரித்யாதி) ஒருத்தன் தலையை அறுத்துப் பாதகியாக, ஒருத்தன் மோசயனாக, இருவருடைய வ்யஸநத்தையும் போக்குவதும் செய்து நித்யஸூரிகளுக்கு

வேஶ்வரன் போக்கினான். இப்படி ப்3ரஹ்மாதி3களுக்கு து3:க்க2நிவர்த்தகனானாற்போலே நித்யஸூரிகளுக்கு ப்ராப்யபூ4தனாய் ஶேஷியாயிருக்கிறவனை வாய்விட்டுப் புகழாத

மஹதீ ஸ்ரவதீ த4ாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா ||
விஷ்ணுப்ரஸாத3ாத் ஸுஶ்ரோணி! கபாலம் தத்ஸஹஸ்ரத4ா |
ஸ்பு2டிதம் ப3ஹுதா4 யாதம் ஸ்வப்நலப்3த4ம் த4நம் யதா2 ||''

[தே3வியைக்குறித்து ருத்3ரன்:— 'பிறகு கோபத்தையுடையவனும், சிவந்த கண்களை உடையவனுமான என்னால், அப்பிரமனுடைய தலை இடதுகைக் கட்டைவிரல் நகத்தின் நுனியால் வெட்டப்பட்டது'. பிரமன்:—'அபராத4மற்ற என்னுடைய தலை, உன்னால் அறுக்கப்பட்டபடியால் நீ சாபத்தை அடைந்து கபாலியாக (கபாலத்துடன் கூடியவனாக) ஆவாய். 'ருத்3ரன்:—தே3வி! ப்3ரஹ்மஹத்தி செய்தவனும் கலங்கினவனாகவும் பூ4மியில் தீர்த்தங்களைச் சுற்றிக்கொண்டிருந்த நான் அதற்குப்பின் ஹிமாசலமலைக்குச் சென்றேன். அங்கு ஸ்ரீமந்நாராயணன் என்னால் பிச்சைக்காக யாசிக்கப்பட்டான். அதன்பின் அவனால் தன் (தே3ஹத்தில்) ஒரு பா4கம் நக2த்தின் நுனியால் கீரப்பட்டது. அதிலிருந்து பெரிதாக வெள்ளமிடும் ரத்ததாரை பெருகிற்று. ......அழகிற் சிறந்தவளே! விஷ்ணுவினுடைய அருளினால் அக்கபாலம் ஆயிரக்கணக்கான பல துண்டுகளாக வெடித்து, கனவில் கிடைதத பணம்போல் சென்றது.] என்ற மாத்ஸ்யபுராண வசனம் அநுஸந்தி4க்கத்தக்கது. த4ாரகை— "धरतीति धारका" [(எல்லாவற்றையும்) தாங்குகையாலே பூ4மியானது த4ாரகையாகிறது.] என்னும் வ்யுத்பத்தியாலே பூ4மியைக் குறிக்கிறது. (தாரகையுள்) பூமியிலுள்ளோர் எல்லாரும் அறியும்படி ஒழித்தான்; கபாலியென்றும், பி4க்ஷாண்டார் என்றும் ருத்3ரனுக்கும், ஹரஶாபஹரன் என்று தனக்கும் லோகப்ரஸித்3த4மான பெயராகும்படி ஶாபத்தைப் போக்கினான். (வானோர் பெருமானை) தனயன் தந்தையின் தலையை அறுத்துப் பாபியாய் நின்றான்; தந்தையோவெனில் தலையறுப்புண்டு வருந்தத்தக்கவராய் நின்றனர். இருவருடைய துன்பத்தையும் துடைத்தான் எம்பெருமான். இச்செயலிலே ஈடுபட்டு நித்யஸூரிகள் இவனுக்குத் தங்களை எழுதிக்கொடுத்தார்கள்.

ப்ராப்யனானவனை ஏத்தாத அறிவுகேடர்காள்! (பிறக்குமித்யாதி) இவ்வறிவுகேடுகிடக்கப் பிறவிக்கடியான கர்ப்பஸ்தானத்திலுள்ள ஆம்சர்யம் சொல்லப்புகில் மஹாபாரதம். 31.

---

*அறிவுகேடர்காள்! பிறக்கைக்கு ஈடான கர்ப்பஸ்தானத்தில் நீங்கள் அனுபவிக்கும் ஆம்சர்யமான துரிதபரம்பரைகள் சொல்லப்புகில் ஒரு மஹாபாரதம்போலே சாலப் பரப்புடைத்து. 31.*

---

(வானோர் பெருமானை) அன்றிக்கே வானோரென்று இவ்வுலகிலுள்ள தேவராய், தங்கள் தலைவரான ப்ரஹ்மருத்ரர்களுடைய துன்பத்தையும் துடைக்கக் காண்கையாலே இவனே ஸர்வேம்வரனென்று அறுதியிட்டார்கள் தேவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். "அதிகம் மேநிரே விஷ்ணும் தேவா:" [தேவர்கள் விஷ்ணுவையே ஸர்வாதிகனென்று அறுதியிட்டார்கள்] என்னுமாப்போலே. (ஏத்தாத பேய்காள்) இப்படிப்பட்ட விலக்ஷணனைப் புகழாத அறிவு கெட்டவர்களே!

இப்படி எம்பெருமானைத் துதிக்காததினால் இவ்வறிவுகெட்டவர்களுக்கு வரும் அநர்த்தத்தைச் சொல்லுகிறார் அடுத்தபடியாக,— (பிறக்கும் கரு மாயம் பேசில் கதை) அவனைத் துதிக்காத நீங்கள் மாறிமாறிப் பலபிறப்புக்களெடுக்கும்போது கர்ப்பப்பையிலே அநுபவிக்கும் ஆம்சர்யமான துன்பங்களைச் சொல்லப்புகுந்தால் ஒரு மஹாபாரதக் கதையாய் முடியும். இவ்விடத்தில்,

"ஸுகுமாரதநுர் கர்ப்பே ஜந்துர் பஹுமலாவ்ருதே।
உல்பஸம்வேஷ்டிதோ புக்ந ப்ருஷ்ட க்ரீவாஸ்திஸம்ஹதி:॥
அத்யம்ல கடு தீக்ஷ்ணோஷ்ண லவணைர் மாத்ருபோஜனை:।
அத்யந்ததாபைரத்யர்த்தம் வர்த்தமாநாதிவேதந:॥
ப்ரஸாரணாகுஞ்சநாதௌ நாங்காநாம் ப்ரபுராத்மந:।
ஶக்ருந் மூத்ர மஹாபங்க ஶாயீ ஸர்வத்ர பீடித:॥
நிருச்ச்வாஸ: ஸசைதந்ய: ஸ்மரந் ஜந்மஶதாந்யத:।
ஆஸ்தே கர்ப்பேऽதிது:க்கேந நிஜகர்மநிபந்தந:॥
ஜாயமாந: புரீஷாஸ்ருங் மூத்ர ஶுக்லாவிலாநந:।
ப்ராஜாபத்யேந வாதேந பீட்யமாநாஸ்திபந்தந:॥
அதோமுகோ வை க்ரியதே ப்ரபலை: ஸூதிமாருதை:।
க்லேஶாந் நிஷ்க்ராந்திமாப்நோதி ஜடராந் மாதுராதுர:॥"

32. கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றினுள்ள
உதைப்பளவு போதுபோக் கின்றி—வதைப்பொருள்தான்,
வாய்ந்த குணத்துப் படாத தடைமினே.
ஆய்ந்த குணத்தானடி.

பதவுரை:— கதை பொருள் தான்—ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள்தான். கண்ணன் திருவயிற்றினுள்ள—ஸர்வேச்வரனுடைய ஸங்கல்பத்தைப் பற்றிநிற்பவை; உதைப்பு அளவு—ஒரு கணமும். போது போக்கு இன்றி—(வேறுவிதமாகக்) கழிக்காமல். வாய்ந்த குணத்து படாதது—(ப₄க₃வானுடைய) ஆஶ்சர்யமான கல்யாணகு₃ணங்களில் ஈடுபடாமலிருப்பது,வதைப்பொருள்தான்-பரஹிம்ஸையேயாம்;ஆய்ந்த குணத்தான்-தோ₃ஷமற்ற கு₃ணங்களையுடைய பெருமானுடைய. அடி—திருவடிகளை. அடைமினே—அடையுங்கள்.

[ஜீவனானவன், மிகவும் ம்ருதுவான தே₃ஹத்தையுடையவனாய், பல அழுக்குகள் நிறைந்த கருப்பையில் கொப்பூழ்க்கொடியினால் சுற்றப்பட்டவனாய், வளைந்துகிடக்கும் முதுகு, கழுத்து, எலும்புகள் ஆகியவற்றையுடையவனாய், மிகவும் புளிப்பு, துவர்ப்பு, காரம், உஷ்ணம், உவர்ப்பு முதலியவற்றுடன் கூடியவையும், மிகுந்த எரிச்சலைத் தருமவையுமான தாயின் உணவினால் மிகவும் விருத்தியடைகிற பெருந்துன்பத்தை அனுப₄விப்பவனாய், தன் அவயவங்களை நீட்டவும் முடக்கவும் மாட்டாதவனாய், மலமூத்திரப் பெருஞ்சேற்றில் படுத்துக்கொண்டு நாற்புறமும் துன்புறுபவனாய், மூச்சற்றவனாய், அறிவுள்ளவனாயிருக்கையாலே, நூற்றுக்கணக்கான முன் சென்ற தன் பிறவிகளின் நினைவை உடையவனாய், தன் கருமத்தாலே கட்டுண்டு மிகுந்த து:க்கத்துடன் கருப்பையில் வாழ்கிறான். பிறக்கும்போதும், மலம், மூத்திரம், ரத்தம், சுக்கிலம் ஆகியவற்றால் அழுக்கடைந்த முகத்தையுடையவனாய் ப்₃ரஹ்மாவால் செலுத்தப்பட்டதொரு வாயுவினால் எலும்புக்கூடுகள் நொறுங்கப்பெற்றவனாய்,மிகுந்த ப₃லமுள்ள ப்ரஸவவாயுக்களால் தலைகீழாகச் செய்யப்படுகிறான். இப்படிக் கஷ்டமடைந்த அந்த ஜீவன் தாயின் வயிற்றிலிருந்து பெருந்துன்பத்துடன் வெளிப்படுகிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் [6-5] சொல்லப்பட்ட கருமங்கள் (கர்ப்பக்லேசங்கள்)—அநுஸந்திக்கத்தக்கவை. 31.

ப்ராப்யனானவனை ஏத்தாத அறிவுகேடர்காள்! (பிறக்குமித்யாதி) இவ்வறிவுகேடுகிடக்கப் பிறவிக்கடியான கர்ப்பஸ்தானத்திலுள்ள ஆஸ்சர்யம் சொல்லப்புகில் மஹாபாரதம். 31.

---

*அறிவுகேடர்காள்! பிறக்கைக்கு ஈடான கர்ப்பஸ்தானத்தில் நீங்கள் அனுபவிக்கும் ஆஸ்சர்யமான துரிதபரம்பரைகள் சொல்லப்புகில் ஒரு மஹாபாரதம்போலே சாலப் பரப்புடைத்து.* *31.*

---

(வானோர் பெருமானை) அன்றிக்கே வானோரென்று இவ்வுலகிலுள்ள தேவராய், தங்கள் தலைவரான ப்ரஹ்மருத்ரர்களுடைய துன்பத்தையும் துடைக்கக் காண்கையாலே இவனே ஸர்வேஸ்வரனென்று அறுதியிட்டார்கள் தேவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம். "அதிகம் மேநிரே விஷ்ணும் தேவா:" [தேவர்கள் விஷ்ணுவையே ஸர்வாதிகனென்று அறுதியிட்டார்கள்] என்னுமாப்போலே. (ஏத்தாத பேய்காள்) இப்படிப்பட்ட விலக்ஷணனைப் புகழாத அறிவு கெட்டவர்களே!

இப்படி எம்பெருமானைத் துதிக்காததினால் இவ்வறிவுகெட்டவர்களுக்கு வரும் அநர்த்தத்தைச் சொல்லுகிறார் அடுத்தபடியாக,— (பிறக்கும் கரு மாயம் பேசில் கதை) அவனைத் துதிக்காத நீங்கள் மாறிமாறிப் பலபிறப்புக்களெடுக்கும்போது கர்ப்பப்பையிலே அநுபவிக்கும் ஆஸ்சர்யமான துன்பங்களைச் சொல்லப்புகுந்தால் ஒரு மஹாபாரதக் கதையாய் முடியும். இவ்விடத்தில்,

"ஸுகுமாரதநுர் கர்ப்பே ஜந்துர் பஹுமலாவ்ருதே।
உல்பஸம்வேஷ்டிதோ புக்ந ப்ருஷ்டக்ரீவாஸ்திஸம்ஹதி:॥
அத்யம்ல கடு தீக்ஷ்ணோஷ்ண லவணைர் மாத்ருபோஜநை:।
அத்யந்ததாபைரத்யர்த்தம் வர்த்தமாநாதிவேதந:॥
ப்ரஸாரணாகுஞ்சநாதௌ நாங்காநாம் ப்ரபுராத்மந:।
ஶக்ருந் மூத்ர மஹாபங்க ஶாயீ ஸர்வத்ர பீடித:॥
நிருச்ச்வாஸ: ஸசைதந்ய: ஸ்மரந் ஜந்மஶதாந்யத:।
ஆஸ்தே கர்ப்பேऽதிது:க்கேந நிஜகர்மநிபந்தந:॥
ஜாயமாந: புரீஷாஸ்ருங் மூத்ர ஶுக்லாவிலாநந:।
ப்ராஜாபத்யேந வாதேந பீட்யமாநாஸ்திபந்தந:॥
அதோமுகோ வை க்ரியதே ப்ரபலை: ஸூதிமாருதை:।
க்லேஶாந் நிஷ்க்ராந்திமாப்நோதி ஜடராந் மாதுராதுர:॥"

32. கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றினுள்ள
உதைப்பளவு போதுபோக் கின்றி—வதைப்பொருள்தான்,
வாய்ந்த குணத்துப் படாத தடைமினோ.
ஆய்ந்த குணத்தானடி.

பதவுரை:— கதை பொருள் தான்—ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்கள்தான். கண்ணன் திருவயிற்றினுள்ள—ஸர்வேச்வரனுடைய ஸங்கல்பத்தைப் பற்றிநிற்பவை; உதைப்பு அளவு—ஒரு கணமும். போது போக்கு இன்றி—(வேறுவிதமாகக்) கழிக்காமல். வாய்ந்த குணத்து படாதது—(ப4க3வானுடைய) ஆச்சர்யமான கல்யாணகு3ணங்களில் ஈடுபடாமலிருப்பது,வதைப்பொருள்தான்-பரஹிம்ஸையேயாம்;ஆய்ந்த குணத்தான்-தோ3ஷமற்ற கு3ணங்களையுடைய பெருமானுடைய. அடி—திருவடிகளை. அடைமினோ—அடையுங்கள்.

[ஜீவனானவன், மிகவும் மிருதுவான தே3ஹத்தையுடையவனாய், பல அழுக்குகள் நிறைந்த கருப்பையில் கொப்பூழ்க்கொடியினால் சுற்றப் பட்டவனாய், வளைந்துகிடக்கும் முதுகு, கழுத்து, எலும்புகள் ஆகியவற்றையுடையவனாய், மிகவும் புளிப்பு, துவர்ப்பு, காரம், உஷ்ணம், உவர்ப்பு முதலியவற்றுடன் கூடியவையும், மிகுந்த எரிச்சலைத் தருமவையுமான தாயின் உணவினால் மிகவும் விருத்தியடைகிற பெருந் துன்பத்தை அனுப4விப்பவனாய், தன் அவயவங்களை நீட்டவும் முடக்கவும் மாட்டாதவனாய், மலமூத்திரப் பெருஞ்சேற்றில் படுத்துக் கொண்டு நாற்புறமும் துன்புறுபவனாய், மூச்சற்றவனாய், அறிவுள்ளவனாயிருக்கையாலே, நூற்றுக்கணக்கான முன் சென்ற தன் பிறவிகளின் நினைவை உடையவனாய், தன் கருமத்தாலே கட்டுண்டு மிகுந்த து:க்கத்துடன் கருப்பையில் வாழ்கிறான். பிறக்கும்போதும், மலம், மூத்திரம், ரத்தம், சுக்கிலம் ஆகியவற்றால் அழுக்கடைந்த முகத்தையுடையவனாய் ப்3ரஹ்மாவால் செலுத்தப்பட்டதொரு வாயுவினால் எலும்புக்கூடுகள் நொறுங்கப்பெற்றவனாய், மிகுந்த ப3லமுள்ள ப்ரஸவவாயுக்களால் தலைகீழாகச் செய்யப்படுகிறான். இப்படிக் கஷ்டமடைந்த அந்த ஜீவன் தாயின் வயிற்றிலிருந்து பெருந்துன்பத்துடன் வெளிப்படுகிறான்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் [௬-௫] சொல்லப்பட்ட கருமாயங்கள் (கர்ப்பக்லேசங்கள்)—அநுஸந்திக்கத்தக்கவை.

31.

பெரி-வ்யா:— (கதையித்யாதி) ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள் ஸர்வேஶ்வரனுடைய ஸங்கல்பத்திலுள்ளன.

---

அவ:—அவன் கு₃ணங்களில் அவகா₃ஹியாதார் இதர விஷயங்களிலே மண்டி நசித்துப்போவர்கள். ஆன பின்பு ஸமஸ்தகல்யாண கு₃ணாத்மகனான அவன் திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:— ப₄க₃வத்₃கு₃ணசேஷ்டிதங்களைப் பரக்கச் சொல்லுகிற இதிஹாஸ புராணங்களால் ப்ரதிபாதி₃க்கப் படுகிற தே₃வாதி₃களான ஆத்மவஸ்துக்களெல்லாம் ஒரு க்ஷணம் ஒழியாமே ஸர்வ காலத்திலும் ஸர்வ நிர்வாஹகனான ஸர்வேஶ்வரனுடைய திருவயிற்றில் தி₃வ்யஸங்கல்பத்தாலே

---

32. அவ:— "பெருமானை ஏத்தாத பேய்காள்" என்றார் சென்ற பாசுரத்தில். "ஸத்வப்ரசுரரான நீர் பேயென்றும் நாயென்றும் நிஹீன வார்த்தைகளைச் சொல்லிப் பரநிந்தை₃ செய்யலாமோ? பரபரிவாத₃த்தைப் பரிஹரிக்கவேண்டுமென்றன்றோ பெரியோர்கள் பேசுகிறார்கள்." என்று சிலர் வினவினார்கள். "பரநிந்தை₃யில் ருசியாலே பேசினேனல்லேன்: வஸ்துஸ்தி₂தியிருந்தபடியைச் சொன்னேனித்தனை. உண்மையில் ப₄க₃வத்₃ கு₃ணங்களிலே ஈடுபடாதவர்கள், தங்களை அழித்துக்கொள்வதோடன்றியில் பிறருடைய ஸ்வரூபத்தையும் அழியச்செய்யும் பேய்களேயன்றோ. உள்ளதைச்சொன்னால் உடம்பெரியலாமோ? பேய்காள் என்று என்னால் இகழப்பட்டவர்களே ப₄க₃வதா₃நுகூலர்களானால் எனக்கும் உத்₃தே₃ஶ்யராகவன்றோ ஆகிறார்கள்" என்று அவர்களுக்குப் பதிலுரைக்கிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (கதைப்பொருள்தான்) கதைகளை முக்கியமாகக் கொண்ட இதிஹாஸபுராணங்களும், பொருளை—தத்துவங்களை—முக்கியமாகக்கொண்ட ஸ்ம்ருதிகளும். "கருமாயம் பேசில் கதை" என்று மஹாபா₄ரத விஷ்ணுபுராணாதி₃கள் ப்ரஸ்துதமாகையாலே,—(கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றினுள்ள) உங்களுடைய கருமாயங்களைப் பேசும் ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களெல்லாம் அவனுடைய ஸங்கல்பத்தைப் பற்றிநிற்கின்றன என்கிறார். இக்கருமாயங்களை ஒழிக்கவல்லவன் அவனே என்று பா₄வம். (திரு

(உதைப்பித்யாதி) ஒரு நொடிமாத்ரம் போதுபோக்கின்றி. (வாய்ந்த குணத்துப் படாதது வதைப்பொருள் தான்) ஆஶ்சர்ய

---

ஸத்தைபெற்று வர்த்திக்கிறன. இங்ஙனேயிருக்க, இதர விஷயப்ரவணமாய் நசித்துப்போகிற ஆத்மவஸ்துக்கள் தான் அவனுடைய அழகிதான குணங்களில் அவகாஹியாதவையா யிருக்கும். ஆன பின்பு நீங்கள் அப்படி விஷயங்களிலே

---

வயிற்றினுள்ள) வயிறு. என்றது லக்ஷணையாலே அந்த:கரண மான மனத்தைக் குறிப்பதாய், மந:கார்யமான ஸங்கல்பத்தை இங்கு சொல்லுகிறது. "அரவிந்த லோசநமந: காந்தா" [ஸ்தோ-ர] [தாமரைக்கண்ணனுடைய மனத்துக்கு இனியவன்] "உன்தன் திருவுள்ளம் இடர்கெடுந்தோறும்" [திருவாய் 10-3-9] "அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்" [ரா-ஸு] [இந்த தேவியின் மனம் அவரிடமும், அவருடைய மனம் இவளிடமும நிலைநிற்கிறது.] முதலான ப்ரமாணங்களிலிருந்து பகவானுக்கும் அப்ராக்ருதமான மனம் உண்டென்று தெளிவாகிறது. "அப்ராணோ ஹ்யமநா:" [ப்ராணனற்றவன்; மனமற்றவன்] "பஶ்யத்யசக்ஷு: ஸ ஶ்ருணோத்யகர்ண:" [கண்ணற்றவனாயினும் காண்கின்றான்; காதற்றவனாயினும் கேட்கின்றான்.] என்ற வாக்கியங்கள் ப்ராக்ருதமான மனம், கண், காது முதலானவையற்றவன் என்றும், இவனுக்கு மனத்தைக்கொண்டே ஸங்கல்பம் செய்யவேண்டும், கண்ணைக்கொண்டே காணவேண்டும், காதைக்கொண்டே கேட்கவேண்டும் என்னும் நியமமில்லையென்றும் உணர்த்துகின்றன. இவனுடைய ஸங்கல்பம் மனத்தைக்கொண்டேயன்றாகில், "வயிறு" என்னும் பதம் மனத்தைக்குறித்து, அதன்மூலம் ஸங்கல்பத்தைக் குறிக்கும்படியென்னென்னில்: இவனுக்கு அந்நியமம் இல்லையாகிலும், லோகஸித்தமான நியமத்தைக்கொண்டு பாசுரமிடுகிறார். (கதைப்பொருள்...போதுபோக்கின்றி) இதிஹாஸபுராணங்களால் சொல்லப்படும் எல்லா ஜீவர்களும் ஒருக்ஷணம் தப்பாமல் எப்போதும் அவன் திருவயிற்றில், திவ்யஸங்கல்பத்தாலே ஸத்தைபெற்று வாழ்கின்றனர் என்று பொருள் கொண்டார் அப்பிள்ளை.

(உதைப்பளவு போதுபோக்கின்றி வாய்ந்த குணத்துப்படாதது வதைப்பொருள் தான்) ஒரு க்ஷணநேரமும் வேறுவிதமாகப் பொழுது போக்காமல், பகவானுடைய ஆஶ்சர்யமான கல்யாணகுணங்களில்

குணத்தில் அகப்படாதது பரஹிம்ஸை. (ஆய்ந்த குணத்தான் அடி அடைமினோ) ஹேயப்ரத்யநீகமான குணத்தையுடையவன் திருவடிகளை ஆச்ரயியுங்கோள். 32.

---

மண்டி நசித்துப்போகாமல் ஹேயப்ரதிபடமான கல்யாண குணங்களை உடையனான ஸர்வேச்வரனுடைய திருவடிகளை ஆச்ரயியுங்கோள். உதைப்பளவு—நொடிப்பளவு. வதைப் பொருள்—நசித்துப்போகிற வஸ்துக்கள். 32.

---

ஈடுபடாதது லோகஹிம்ஸையேயாகும். லோகஹிம்ஸகர்களைப் 'பேய்காள்' என்னுமல் என்னென்று சொல்லுவது? இது பர ஹிம்ஸையாகுமோவென்னில்: பகவத்குணங்களிலே ஈடுபடாமல் இதர விஷயங்களிலே ஈடுபடுவதன்மூலம், இவன் தன்னையும், தன்னைப் பின்பற்றி நடக்கும் மற்றவரையும், "அஸந்நேவ" என் கிறபடியே இல்லாதவரைப்போலேயாக்கி அழிக்கிறானாகையாலே இவனே பரஹிம்ஸகர்களுள் தலைசிறந்தவனாவான். (உதைப் பளவு...வதைப்பொருள்தான்) நொடிப்பொழுது ஈடுபடாவிடிலும் பரஹிம்ஸையே.

"யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே|
ஸா ஹாநிஸ் தந் மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ் ஸா ச
விக்ரியா ||

[யாதொரு முஹூர்த்தத்திலோ, கணத்திலேயோ வாஸுதேவன் நினைக்கப்படவில்லையோ, அதுவே தாழ்வு; அதுவே பெருந்தொல்லை; அதுவே மயக்கம்; அதுவே விகாரம்] என்று ரிஷிகளும் அருளினார் களன்றோ. உதைப்பு—காலை உதைத்துகொள்ளும் நேரம்; நொடிப் பொழுது. (வதைப்பொருள்தான் வாய்ந்தகுணத்துப்படாதது) விஷயங்களில் ஈடுபட்டு அழியும் பொருள்களான ஜீவர்கள் அவ னுடைய அழகிய குணங்களில் ஈடுபடமாட்டார்கள் — என்று பொருள்கொண்டார் அப்பிள்ளை. (அடைமினோ ஆய்ந்த குணத்தான் அடி) ஆய்ந்தெடுத்த நற்குணங்களை உடையவனுடைய திருவடி களை அடையுங்கள். தாழ்வுக்கு எதிர்த்தட்டாயுள்ள குணங்களை யுடையவனாய் அவனிருக்கும்போது அவனடியை அடையாமலிருக்க லாமோ? (அடைமினோ) "பேய்காள்" என்று இகழப்பட்ட நீங்களே, பகவானிடம் ஆநுகூல்யமுடையாரானால் கௌரவமாக வார்த்தை சொல்லத் தகுந்தவர்களாகிறீர்கள் என்று பாவம். 32.

33. அடிச்சகடம் சாடிஅரவாட்டி, ஆனை
பிடித்தொசித்துப் பேய்முலை நஞ்சுண்டு—வடிப்பவள
வாய்ப்பின்னைத் தோளிக்கா வல்லேற்றெருத்திறுத்து,
கோப்பின்னுமானான் குறிப்பு.

பதவுரை:—அடி சகடம் சாடி—திருவடிகளாலே ஶகடாஸுரனை உதைத்து, அரவு ஆட்டி—காளியனை ஆட்டிவைத்து, ஆனைபிடித்து ஒசித்து—குவலயாபீடமென்னும் யானையைப் பிடித்து (அதன் கொம்பை) முறித்து, பேய்முலை நஞ்சு உண்டு—பூதனை முலையிலுள்ள விஷத்தை அமுது செய்து, வடி பவள வாய் தோளி பின்னைக்கா—அழகிய பவளம் போன்ற வாயையும், அழகிய தோளையும் உடைய நப்பின்னைப் பிராட்டிக்காக, வல் ஏறு எருத்து இறுத்து—ப2லம் பொருந்திய காளைகளின் [illegible] ஒடித்து, பின்னும்—பிறகும், குறிப்பு—திருவுள்ளத்தால், கோ ஆனான்—ஸ்வாமியானான்.

பெரி-அவ:— அஸாதா4ரணையான நப்பின்னைப் பிராட்டிக்கும், அல்லாதார்க்கும் ஒக்க விரோதி4யைப் போக்குமவன் என்கிறார்.

---

அவ:— ஆஶ்ரிதரை ரக்ஷிக்க வேணுமென்னும் திருவுள்ளக்கருத்தாலே ஶகடாஸுரநிரஸனம் முதலான தி3வ்ய சேஷ்டிதங்களைப்பண்ணி ஸ்வதஸ்ஸித்3த4மான தன்னுடைய ஶேஷித்வத்தை உதறிப்படுத்தான் என்கிறார்.

---

33. அவ:— "அடிஅடையினே" என்றீர்; அநாதி3காலமாகத் தொடர்ந்துவரும் விரோதி4கள் அடியடைய விடுமோ என்ன,—தனக்கினியையான நப்பின்னைப் பிராட்டிக்கும், மற்றுமுள்ளவர்க்கும் ஒருபடியாக விரோதி4களை நிரஸித்துத்தரும் தன்மையை உடையவனன்றோ அவன்; விரோதி4களுக்கு அஞ்சவேண்டா என்கிறார்.

வ்யா:— (அடிச்சகடம் சாடி) பிறந்த எழுதிங்களில் தோன்றிய விரோதி4யான ஶகடாஸுரனைத் தன் திருவடியாலே உதைத்தழித்துத் தன்னைத் தமர்க்கு நல்கினானன்றோ. (அரவாட்டி) 'அடி' என்பதை இங்கும் கூட்டிக்கொள்வது. காளியனைத் தன் திருவடியாலே ஆட்டி

வ்யா:— திருவடிகளாலே சகடையழித்து. காளியனைத் துரத்தி. குவலயாபீடத்தைப் பிடித்து அதின் கொம்பை அநாயாஸேந முறித்து. பூதனையை முடித்து. அழகிய பவளம் போன்றிருக்கிற அதரத்தையும் அழகிய தோளையுமுடைய நப்பின்னைப்பிராட்டிக்காகத் தன்னையொக்க வலிய வ்ருஷபங்க

---

உரை:—. ஆஶ்ரிதரைக்குறைவற நோக்கவேணுமென்னும் மநோரதத்தாலே தன்னை நலிவதாக வந்த ஶகடத்தை முலைவரவு தாழ்த்துச்சிறு நிமிர்த்த திருவடிகளாலே முறித்துவிழவிட்டு. காளியனுகிற பாம்பை ரக்தம் சொரியும்படி தலை நொறுங்க மிதித்து வாலைத்தூக்கி ஆட்டி. குவலயாபீடத்தை அநாயாஸேந பிடித்து அதின் கொம்பையிணுங்கியெறிந்து பூதனையினுடைய முலையில் விஷங்கலந்த பாலை ப்ராணனோடே பசையற உண்டு, அழகிய பவளம் போன்ற அதரத்தையும் தோளழகையுமுடைய. நப்பின்னைப் பிராட்டிக்காக ப்ரபலங்களான ருஷபங்களினுடைய கர்வ

---

வைத்துக் துரத்தி ஆயர்களை ரக்ஷித்தான் என்கை. "காளியனைத் துரத்தி" என்னும் [illegible], "அரவோட்டி" என்று பாடமிருந்திருக்குமென்று தோற்றுகிறது. (ஆனை பிடித்தொசித்து) குவலயாபீடமென்னும் யானையைத் தன் கையாலே பிடித்து அதன் கொம்பை முறித்து. (பேய் முலை நஞ்சுண்டு) சிறு குழந்தையாயிருக்கும்போதே தன்னைக் கொல்லவந்த பூதனையின் முலையிலேயுள்ள விஷத்தை வாயாலே அமுதம்போலே உண்டு. "பெருமாவஞ்சப்பேய் வீய. தூய குழவியாய் விடப்பால் அமுதா அமுது செய்திட்ட மாயன்" [திருவாய் 1-5-9] என்றாரன்றே நம்மாழ்வாரும். (வடிப்பவள வாய்ப்பின்னைத் தோளிக்கா வல்லேற்றெருத்திறுத்து) பவளம்போன்று அழகிய வாயையும், அழகிய தோளையும் உடைய நப்பின்னைப் பிராட்டிக்காகத் தன்னையொத்த வலிமையையுடைய ஏழு எருதுகளையும் தன் திருமேனியாலே தழுவி அவற்றின் கருத்துக்களை (முசுப்புகளை) அழித்து. (அடிச் சகடம் சாடி அரவாட்டி) திருவடியால் செய்த விரோதிநிரஸனம். (ஆனை பிடித்தொசித்து) திருக்கையால் செய்த விரோதிநிரஸநம். (பேய்முலை நஞ்சுண்டு) திருப்பவளத்தால் செய்த விரோதிநிரஸநம். (வல்லேற்றெருத்திறுத்து) திருமேனி முழுவதாலும் செய்த விரோதி

னுடைய கருத்தைப்போக்கி, ஸ்வாப₄ாவிகமான ஶேஷித்வத்தைப் பின்னையும் உதறிப்படுத்தான் திருவுள்ளத்தாலே. 33.

*ஹேதுவான கருத்தை முறித்து. இப்படி களைபிடுங்கி ஆஶ்ரிதவர்க்க₃த்தை ரக்ஷித்தருளின இச்செயல்களாலே மீளவும் நிலைநின்ற ஶேஷித்வத்தை உடையவனானான். 33.*

நிரஸநம். அஸாத₄ாரணையான நப்பின்னைப்பிராட்டியைப் பெறுவதற்கு விரோதி₄களானவையாலே திருமேனி முழுவதையும் ஈடுபடுத்தினான். மற்றவர்களுடைய விரோதி₄நிரஸநத்துக்குக் கை, கால், வாய் இவற்றில் ஒரொன்றே போதுமாயிருந்தது. விரோதி₄நிரஸநமாகிற ஸாத்₄யத்தில் வாசியில்லை. ஸாத₄நத்திற்குக் கையோடு காலோடு வாயோடு வாசியற எதுவும் அமையும். (வடிப்பவளவாய்ப்பின்னைத் தோளிக்கா) பெறப்போகும் வஸ்துவின் வைலக்ஷண்யத்திற்குத் தகுந்தபடியிருக்கவேண்டாவோ ஸாத₄நாநுஷ்டா₂னம்? அதனாலே ஏழு எருதுகளையும் திருமேனி முழுவதாலும் தழுவி இறுக்கிக்கொன்றான். (பின்னும் குறிப்பு கோவானான்) அவதாரம் முடிந்தபின்பும், ப₃ாஹ்யேந்திரியங்களாலே விரோதி₄நிரஸனம் செய்கை தவிர்ந்து, அந்தரிந்திரியமான திருவுள்ளத்தாலே விரோதி₄நிரஸநபரனானான். அவதாரம் முடிந்து திருப்பாற்கடலுக்கு எழுந்தருளிய பின்பும்,

"வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன்மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்"

[பெரியாழ்திரு 5-1-7] என்றும்,

"உறங்குவான்போல் யோகுசெய்த பெருமானை"

[திருவாய் 5-4-11] என்றும்,

சொல்லுகிறபடியே, திருவுள்ளத்தாலே ஆஶ்ரிதவிரோதி₄ நிரஸனத்தை மேலும் சிந்தித்துக்கொண்டு, இயற்கையான தன் ஶேஷித்வம் வெளிப்படும்படி ஆதி₃ஶேஷன்மேலே கண்வளர்ந்தருளினான். (பின்னும் குறிப்பு கோவானான்) அவதாரம் முடிந்தபின்னும் ஸங்கல்பத்தாலே விரோதி₄நிரஸநபரனாய், தனது நிலைநின்ற ஸ்வாமித்வம் தோற்ற இருந்தான். (பின்னும்) அவதரிக்கும் போதோடு மற்ற போதோடு வாசியற விரோதி₄நிரஸனத்தையே தொழிலாகக் கொண்டவனாக அவனிருக்கும்போது விரோதி₄களைப் பற்றின சிந்தை உங்களுக்கு எதற்கு என்கிறார். 33.

34\. குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானையேத்த
குறிப்பெனக்கு நன்மை பயக்க—வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை மெய்வினை நோயெய்தாமல்
தாங்கடத்தும் தன்மையான் தாள்.

பதவுரை:— கோட்டியூர் மேயானை ஏத்த குறிப்பு— திருக்கோட்டியூரில் பொருந்தி வாழும் எம்பெருமானைத் துதிப்பதே என் கருத்து; எனக்கு நன்மை பயக்க குறிப்பு— எனக்கு நன்மை பிறக்கவேண்டுமென்பது என் கருத்து; (அப்படியிருக்க) வேங்கடத்து மேயானை வெறுப்பனோ—திரு வேங்கடத்தெம்பெருமானை ஒதுக்கித் தள்ளுவேனோ? மெய் வினை நோய் எய்தாமல் தான் கடத்தும் தன்மையான் தாள் வெறுப்பனோ—சரீரம் காரணமாக வரும் கர்மமும் நோய்களும் அணுகாமல் தானே (ரக்ஷகனாக நின்று) அகல்விக்கும் தன்மையை உடைய எம்பிரானின் திருவடிகளை வெறுத்து மறப்பேனோ?

பெரி-அவ:— (குறிப்பெனக்கு) "உகந்தருளின தேசங் களிலே எனக்காக அவன் வர்த்திக்க, "வரில் பொகடேன்; கெடில் தேடேன் என்றிருக்கவோ?" என்கிறார்.

---

அவ:—எனக்காகத் திருப்பதிகளிலே வந்து ஸுலப னவன் திருவடிகளை விட்டிருக்கவல்லேனோ என்கிறார்.

---

34\. அவ:— உதைப்பளவு (நொடிப்பொழுது) போதுபோக் கின்றி வாய்ந்த குணத்தில் ஈடுபடவேண்டும் என்றீர், நீர் அப்படி ஈடுபட்டிருப்பதுண்டோ? என்ன "எனக்காக திவ்ய தேசங்களில் அவன் வந்து எழுந்தருளியிருக்க, நான் அவனை உபேக்ஷித் திருப்பேனோ?" என்று இப்பாசுரத்தில் பதிலுரைக்கிறார்.

வ்யா:— (குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானை ஏத்த) திருக் கோட்டியூரிலே எனக்காக எழுந்தருளியிருப்பவனை எப்போதும் துதிக்கவேண்டுமென்பதே என் கருத்து. (கோட்டியூர் மேயானை) என்னைப்பெற மாட்டாமையாலே பரமபதத்திலும் பொருந்தாமல் திருக்கோட்டியூரிலே பொருந்தி வாழ்கிறவனை. "மேவியுறை கோயில்" [திருவாய் 4-10-2] என்றாரன்றோ நம்மாழ்வாரும்.

வ்யா:— (குறிப்பித்யாதி) திருக்கோட்டியூரில் எனக்காக ஸங்கிஹிதனானவனை ஏத்தக் கருத்து. (குறிப்பித்யாதி) ஸம்ஶ்லேஷத்தால் வந்த உத்கர்ஷம் பிறக்கக் கருத்து. (வெறுப்பித்யாதி)வந்த ஸம்ப₄ந்த₄த்தை வேண்டாவென்று தள்ளுவனோ?

---

உரை:—என்னை அங்கீ₃கரித்து அடிமைகொள்ளுகைக்காகத் திருக்கோட்டியூரிலே வந்து நித்யவாஸம்பண்ணுமவனாய், அப்படியே திருமலையிலே வந்து நித்யவாஸம் பண்ணும் ஸ்வப₄ாவனானவனை - தத்₃கு₃ணசேஷ்டிதங்களைச் சொல்லி ஸ்துதிக்கவேணுமென்று எனக்கு நினைவு. நிரந்தராநுப₄வத்தால் வந்த உத்கர்ஷம் உத்தரோத்தரமுண்டாக வேணுமென்று எனக்கு நினைவு. ஶ்ரீஸம்ப₃ந்த₄த்துக்கு அடி

---

(குறிப்பெனக்கு நன்மை பயக்க)தனக்கு நன்மையை விரும்பாத சேதனன் உண்டோ? எனக்கு நன்மையை விரும்புகையாலும் நான் எம்பிரானையே இடைவிடாமல் ஏத்துகிறேன். (கோட்டியூர் மேயானை) அவனைப்பார்த்தாலும் இடைவிடாமல் ஏத்தவேணும். (எனக்கு) என் ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் அவனையே ஏத்தவேணும். (நன்மை பயக்க) இச்சேதனனுக்கு நன்மையாவது.— ப₄க₃வத் ஸம்ஶ்லேஷத்தால் வந்த பெருமை. அதைப்பெறுவதற்காகவும் ஏத்துகிறேன். (குறிப்பெனக்கு நன்மை பயக்க)

"ஸ்வோஜ்ஜீவநேச்ச₂ா யதி₃ தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி₃|
ஆத்மதா₃ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வப₄ாவஞ்ச ஸதா₃ ஸ்மர||

[உன்னை உய்வித்துக் கொள்ளவேண்டுமென உனக்கு விருப்பமிருந்ததாகில், உன் இருப்பில் ஆசையிருந்ததாகில் ஆத்மாவின் அடிமை நிலையையும், ஹரியின் ஸ்வாமி ப₄ாவத்தையும், இவற்றின் தன்மையையும் எப்போதும் நினைப்பாயாக.] என்றல்லவோ சொல்லப்பட்டது. (வெறுப்பனோ வேங்கடத்து மேயானை) எனக்காகப் பரமபத₃த்திலிருந்து திருவேங்கடமலையில் வந்து நிற்பவனை நான் வெறுப்பேனோ? தானே வரும் ஸ்ரீ தேவியைக் காலாலுதைப்பாருண்டோ? (மெய்வினை நோயெய்தாமல் தான் கடத்தும் தன்மையான் தாள் வெறுப்பனோ) சரீரத்தைப் பற்றிவரும் நோய்களும்,

(மெய்யித்யாதி) ஶரீரமடியாக வந்த வ்யாதி₂யும். வ்யாதி₂க்கு ஹேதுவான கர்மமும் கிட்டாமல் மாற்றுமவன் திருவடிகளை மறப்பனோ? 34.

35. தாளாலுலக மளந்த வசைவே கொல்,
வாளாகிடந்தருளும் வாய்திறவான்—நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்
ஐந்தலை வாய் நாகத்தணை.

---

யான கர்மங்களும், தத்கார்யமான து₃:க்க₂ங்களும் கிட்டாத படியாகத் தானே கைதொடனாய் அவற்றைக் கடத்தும் ஸ்வபா₄வனானவனுடைய திருவடிகளை வரிற்பொகடேன் கெடில் தேடேன் என்று உபேக்ஷிப்பனோ? "வெவ்வினைநோய்" என்று பாட₂மானபோது க்ரூரமான பாபங்களும் தத்ப₂லமான நோய்களும் கிட்டாதபடி என்று பொருளாகக்கடவது. 34.

---

நோய்க்குக் காரணமான கர்மங்களும் நம்மை அணுகாமல் தானே நின்று விலக்கியருளுகையை இயற்கையாகக்கொண்டவனுடைய திருவடிகளை வெறுப்பேனோ? ஒரு கணநேரமாகிலும் மறப்பேனோ? 'மெய்நோய் வினை எய்தாமல்' என்று அந்வயம். அன்றிக்கே, (மெய்வினை) ஶரீரஸம்ப₃ந்த₄த்துக்குக் காரணமான கர்மங்கள் என்றுமாம்; 'வெவ்வினை' என்று பாட₂மாம்போது கொடிய கர்மங்கள் என்று பொருளாகிறது. 'நோய்' என்று இக்கர்மங்களால் ஏற்படும் துன்பங்களைக் குறிக்கிறது. (மெய்வினை நோயெய்தாமல் தான் கடத்தும் தன்மையான்) வேங்கடவன் என்னும் இவனுடைய திருநாமமே இவன் மெய்வினைகளைப் போக்கடிப்பவன் என்று அறிவிக்குமே.

"வேங்கடங்கள் மெய்மேல் வினைமுற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்
வேங்கடத்துறை வார்க்கு நமவெனல்
ஆங்கடமை அது சுமந்தார்கட்கே" [திருவாய் 3.3.6]

என்னும் பாசுரத்தில் நம்மாழ்வார் இவ்வாழ்வாரை அடியொற்றினார். "எனக்கு நன்மை பயக்க" என்றதை "தங்கட்கு நல்லனவே செய்வார்" என்றும் "மெய்வினைநோயெய்தாமல் தாங்கடத்தும்" என்றதை "மெய்மேல்வினை முற்றவும் வேம் கடங்கள்" என்றும் அநுவதி₃த்திருப்பதைக் காண்க. 34.

பதவுரை:— நீள் ஓதம் வந்து அலைக்கும் மா மயிலை மா வல்லி கேணியான் —பெரிய அலைகள் வந்து அடிக்கிற சிறந்த மயிலைக்கு அடுத்த சிறந்த திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கிறவன். ஐந்தலை வாய் நாகத்து அணை வாளா கிடந்தருளும்—ஐந்து தலைகளையும் வாய்களையுமுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையில் அசையாமல் கிடக்கிறான்; வாய் திறவான்—பேசவும் இல்லை. தாளால் உலகம் அளந்த அசைவே கொல்—(இது) திருவடியால் உலகம் அளந்த களைப்பினாலேயோ?

பெரி-அவ:— (தாளால்) லௌகிகர் படியைக் கண்டு வெறுப்பனே என்கிறார்.

வ்யா:— (தாளாலித்யாதி) "வடிவிணையில்லா மலர் மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி" என்று பிராட்டி

---

அவ:—திருவல்லிக்கேணியிலே வாய்திறவாதே ஏகரூபமாகக் கண்வளர்ந்தருளக்கண்டு இது திருவுலகளந்தருளின ஆயாஸத்தாலேயோ என்று பயப்படுகிறார்.

உரை:—பெரிய திரைகளானவை வந்து துடைகுத்தி யுறக்குவாரைப்போலே தன் சிறு திவலைகளாலே ஸுக₂மாக ஸ்பர்ஶித்து ஶிஶிரோபசாரம் பண்ண, பே₄ாக₃ப்ர

---

35. அவ:— முப்பத்தோராம் பாட்டிலே "பெருமானை ஏத்தாத பேய்காள்" என்று லௌகிகர் ஸ்வபா₄வத்தைக்கண்டு வெறுத்தார். அதன் மேலெழுந்த உக்திப்ரத்யுக்திகளாய்ச் சென்றது சென்ற பாசுரம் வரையில். இப்பாசுரத்தில் "எம்பெருமான் செய்த ஸாஹஸச் செயல்களுக்குப் பரிவதற்கே எனக்குப் போது போராததாயிருக்க, பிறர் தன்மையைக்கண்டு வெறுக்கையாவதென்" என்று எம்பெருமானுக்குப் பரிய முற்படுகிறார்.

வ்யா:— (தாளால் உலகமளந்த அசைவே கொல்) "வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள் பிடிக்கும் மெல்லடியை" [திருவாய் 9-2-10] என்கிறபடியே திருமகள் கரம்தொடச் சிவந்து

களும் கூசித் தொடவேண்டும் திருவடிகளைக்கொண்டு காடு மேடையுமளந்து திருமேனி அலற்றதோ? இல்லாதத்தை உண்டாக்கும் "ஸங்கல்பம் போராதோ உண்டானத்தை உஜ்ஜீவிப்பிக்க? (வாளாவித்யாதி) ஏகரூபமாகக் கிடப்ப

தூனர்க்கு வர்த்திக்கலாம்படியான மயிலாபூரில் ஶ்லாக்யமான திருவல்லிக்கேணியிலே நித்யவாஸம் பண்ணுகிற ஸர்வேஶ்வரன், காற்றும் வெய்யிலும் தாக்காதபடி தன் வளைவாலே காத்துக்கொடுபோருகைக்கு உறுப்பான ஐந்து தலையையும், பரிவுடனே ஏத்துகைக்கு ஐந்து திருப்பவளத்

காட்டும் மென்மையை உடைய திருவடிகளைக்கொண்டு, காடுமேடு பாறை பள்ளங்களையெல்லாமளந்ததினாலே திருமேனி அயர்வுற்றதாலேதான், அசையாமலும், வாய் திறவாமலும் கண்வளர்ந்தருளுகிறாயோ பிரானே! (தாளால்) ஸம்பந்தத்தை மட்டும் பார்த்து எல்லாப் பொருள்களையும் திருவடியாலே தடவிக்கொடுத்து உஜ்ஜீவிப்பிக்க நினைத்தாய் போலும்! "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் | ந ப்ரஹ்மா நேஶாந: நேமே த்யாவாப்ருதிவீ ||" [நாராயணன் ஒருவனே முதலிலிருந்தான். பிரமனுமில்லை; சிவனுமில்லை; கீழுலகங்களும், மேலுலகங்களுமில்லை.] என்கிறபடியே இல்லை என்னலாம்படி கிடந்த பொருள்களை உண்டாக்கிய "பஹு ஸ்யாம்" [நானே பலவாகக் கடவேன்] என்னும் ஸங்கல்பம் போராதோ உண்டானதை உஜ்ஜீவிக்கச்செய்ய? தாளாலே தடவிக்கொடுத்தேயாகவேண்டுமோ? (உலகம்) இக்கொடுவுலகத்திற்கேயோ இப்பாடுபட்டது? (அனந்த அசைவேகொல்) அயர்வறுமமரர்களதிபதியின் அவிகாரமான திருமேனிக்கும் அயர்வுண்டென்று நினைக்கிறார் பரிவின் மிகுதியாலே. அஸ்தாநே பய ஶங்கையிருக்கிறபடி. (வாளா கிடந்தருளும்) இடம்வலம் கொள்ளாமல் அசையாமல் கிடந்தருளுகிறான். கிடக்கும்மழகைக்கண்ட எங்களுக்கு, தாளாலுலகமளந்ததைக் காணாத இழவுதீர, அசையுமழகைக் காட்டுகிறானல்லன். (வாய் திறவான்)

"ஆஶயா யதி வா ராம: புந: ஶப்தாபயேதிதி ||

[ராமபிரான் மறுபடியும் திரும்பிவந்து அழைப்பாரோ என்னும் ஆசையாலே (அங்கு நெடுநாள் நின்றேன்)] என்றும், "ப்ரிய வாதீ" என்றும்

தும் செய்து வார்த்தையும் பேசுகிறிலன். (நீளோதமித்யாதி) நீர்க்கரையைப் பற்றிக் கண்வளருகிறதும் ஶ்ரமத்தின் மிகுதியாலேயென்றிருக்கிறார். 35.

---

*தையுமுடையனாய், ஶைத்யமார்த்₃ஸவ ஸௌரப்₄யங்களுக்குக் கொள்கலமான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே இடம் வலம் கொள்ளமாட்டாதே வெறுமனே பாடோடக்கண் வளர்ந்தருளி நின்றான். இளைப்பின் கனத்தாலே திருப்பவளந் தோன்ற அருளிச்செய்யவும் மாட்டுகிறிலன். இதுக்கடி—மலர்மகள் முதலான பிராட்டிமாரும் கூசி ஸ்பர்ஶிக்கவேண்டும்படி அதிஸுகுமாரமான திருவடிகளாலே காடுமோடையுமான லோகத்தை அளந்தருளின அலைச்சலோதான்? 35.*

---

"பழுத்த நல்லமுதினின் சாற்றுவெள்ளம்
பாவியேன் மனமகந்தோறு முள்புக்(கு)
அழுத்தநின் செங்கனிவாயின்கள்வப்
பணிமொழிநினைதொறும் ஆவிவேமால்"

என்றும் சொல்லுகிறபடியே அடியாரை அகப்படுத்தும் வார்த்தைகளையும் சொல்லுகிறிலன்.

(நீளோதம் வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக்கேணியான்) நீண்டகடல், பகவான் உகந்துவாழும் ப்ரதேசமாகையால் தானே தேடிவந்து சிறு துளிகளால் ஸூக்ஷ்மாக ஸ்பர்ஶித்து, துடைதட்டி உறங்கச்செய்வாரைப்போலே அலையெறியும் மயிலாப்பூரைச்சேர்ந்த திருவல்லிக்கேணியிலே நித்யவாஸம் பண்ணுமவன். (நீளோதம்) தே₃ஹ பரிஶ்ரமப்பட்டவர்கள் கடற்கரையிலே சாய்ந்து காற்று வாங்குவதுபோலே, தாளாலுலகமளந்த தளர்த்தி தீரக் கடற்கரையிலே சாய்ந்திருக்கிறான் போலும் என்று நினைக்கிறார். (ஐந்தலைவாய் நாகத்தணை) காற்றும் வெயிலும் தாக்காதபடி குடைபோன்றிருக்கும் ஐந்துதலைகளையும், பரிவுடன் துதிக்க ஐந்து வாய்களையும் உடையவனாய், எம்பெருமான் கரடுமுரடான காடுமேடுகளையளந்த களைப்புத்தீர மெத்தென்று பஞ்சசயனமாயிருக்கும் ஆதிசேஷனாகிற படுக்கையிலே சாய்ந்தருளினான்போலும்.

"கொடியார் மாடக்கோளூரகத்தும்புளிங்குடியும்
மடியாதின்னே நீ துயில் மேவி மகிழ்ந்ததுதான்
அடியாரல்லல் தவிர்த்த அசைவோ அன்றேலிப்
படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே"

36. நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத்தணை யரங்கம் பேரன்பில்—நாகத்
தணைப்பாற் கடல்கிடக்கு மாதி நெடுமால்
அணைப்பார் கருத்த னுவான்.

பதவுரை:— நாகத்து அணை—திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே. குடந்தை — திருக்குடந்தையிலும், வெஃகா—திருவெஃகாவிலும், திரு எவ்வுள்—திருவெவ்வுளூரிலும், (அப்படியே) நாகத்து அணை—திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேல். அரங்கம்—திருவரங்கத்திலும். பேர்—திருப்பேர் நகரிலும். அன்பில்—அன்பில் என்னும் திருப்பதியிலும். (அப்படியே) நாகத்து அணை—சேஷசயனத்தின் மீது, பால் கடல்—திருப்பாற்கடலிலும். ஆதி நெடுமால்—ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரன். கிடக்கும்—பள்ளிகொண்டிருக்கின்றான்; (எதுக்காக வென்னில்) அணைப்பார் கருத்தன் ஆவான்—அன்பருடைய நெஞ்சில் புகுந்தவனாக ஆவதற்காக.

பெரி-அவ:— (நாகத்தணை) பலவிடத்தில் கண்வளர்ந்தருளுகிறதும் ஆயாஸத்தாலே என்றிருக்கிறார்.

---

அவ:—ஓரிடத்திலன்றிக்கே திருக்குடந்தை தொடக்கமான பல திருப்பதிகளிலும் திருவணையிலே பள்ளிகொண்டருளுகிறது—ஆஶ்ரிதருடைய ஹ்ருதயம் திருந்த அதிலே புகுந்தருளுகைக்கு அவஸர ப்ரதீக்ஷனாய் என்கிறார்.

---

என்று நம்மாழ்வார் [திருவாய் (8-3-5)ல்] இப்பாசுரத்தை அடியொற்றினார். 35.

36. அவ:— இப்படி ஓரிடத்திலேயோ கண்வளர்ந்தது; பலவிடங்களிலும் கண்வளர்ந்தருளியது உலகமளந்த அசைவினாலேயும், ஆஶாலேஶமுடையார் நெஞ்சிலே புகுவதற்காகவுமே என்கிறார்.

வ்யா:— (நாகத்தணைக்குடந்தை... நாகத்தணைப்பாற்கடல் கிடக்கும்) திருக்குடந்தை, காஞ்சியில் திருவெஃகா, திருவெவ்வுளூர்

வ்யா:— (நாகத்தணையித்யாதி) திருக்குடந்தையிலே திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறதும், கோயில் தொடக்கமான எல்லாத்திருப்பதிகளிலும், திருப்பாற்கடலி லும் ஜக₃த்காரணபூ₄தனான ஸர்வேஸ்வரன் தோள்தீண்டியாகக் கண்வளர்ந்தருளுகிறதும், தான் புகுரப்புக்கால் ஆணையிடா தார் ஹ்ருத₃யத்திலே புகுருகைக்காக. இப்படி அவஸரப்ர தீக்ஷனாக வேண்டுவானென்னென்னில்: தாயாகையாலே. 36.

37. வானுலவு தீவளி மாகடல் மாபொருப்பு
தானுலவு வெங்கதிரும் தண்மதியும்—மேனிலவு
கொண்டல் பெயரும் திசையெட்டுஞ் சூழ்ச்சியும்
அண்டந் திருமா லகைப்பு.

*உரை:—திருவனந்தாழ்வானுகிற படுக்கையின் மேலே திருக்குடந்தையிலும், திருவெஃகாவிலும், திருவெவ்வுளி லும், அப்படியே, திருவரவணையின் மேலே கோயிலிலும், திருப்பேரிலும், திருவன்பிலிலும், அப்படியே திருவனந்தாழ் வானுகிற படுக்கையின் மேலே திருப்பாற்கடலிலும், ஜக₃த் காரணபூ₄தனான ஸர்வேஸ்வரன் புகுருமிடத்திலே விலக்கா மல் புக்கிடுவானுக்கு என்றிருக்கும் ஆஸ்ரிதர் திருவுள் ளத்திலே புகுருகைக்கு அவஸர ப்ரதீக்ஷனாய்க் கொண்டு கண்வளர்ந்தருளாநிற்கும். 36.*

திருவரங்கம், திருப்பேர், திருவன்பில், திருப்பாற்கடல் ஆகிய இந்த திவ்யதேசங்களிலெல்லாம், ஸம்ஸாரிகளோடு தோள்தீண்டி ஸர்வேஸ்வரன் கண்வளர்ந்திருக்கிறான். எதற்காகக் கண்வளர்ந் தருளுகிறானென்னில் : (அணைப்பார் கருத்தனுவான் கிடக்கும்) 'உன்னை நெஞ்சிலே புகவொட்டோம்' என்னுமல், 'நெஞ்சிலே அணைப்போம்' என்னும் ஆஸாலேஸமுடையவர்களுடைய நெஞ்சிலே புகுவதற்காகவே இப்படிப் பலவிடங்களில் படுகாடு கிடக்கிறான். இவனிப்படி நெஞ்சிலே புகுவதற்கு ஸமயம் பார்த்து நிற்பதும் எதனாலேயென்னில் : (ஆதிநெடுமால்) உயிர்க்கெல்லாம் தாயா யிருப்பவனாகையாலே யென்கிறார். (ஆதி) தாயைப்போலே காரண பூ₄தனாயிருப்பவன் ; ஆதி₃காலத்திலே வயிற்றிலேவைத்து நோக்கி னவன், (நெடுமால்) தாயைப்போலே பேரன்பு கொண்டவன். 36.

பதவுரை:— வான்—ஆகாசமும், உலவு—அசைகின்ற தீ-அக்₃நியும், (உலவு) வளி-உலாவுகின்ற வாயுவும், மா கடல்-பெரிய கடலும், மா பொருப்பு—பெரிய குலபர்வதங்களும், உலவு — திரிகின்ற வெம்கதிர்தானும் — உஷ்ணகிரணனை ஸூர்யனும், தண் மதியும்—குளிர்ந்த சந்த்ரனும், மேல் நிலவு—மேலே நிலாவுகின்ற கொண்டல்—மேகங்களும், பெயரும்—சேதநவர்க்க₃மும், திசை எட்டும்—எட்டுத்திசைகளும், சூழ்ச்சியும்—ஆவரணங்களும், அண்டம்—ஆகிய இவையெல்லாவற்றோடுங்கூடின அண்ட₃மும், திருமால்—ஸர்வேஶ்வரனுடைய, அகைப்பு—ஸங்கல்பத்தினாலாயது.

பெரி-அவ:—(வானுலவு) ஆதிநெடுமாலே விவரிக்கிறது.

வ்யா:—(வானுலவு) சூழ்ச்சியும்—ஆவரணமும், இவையெல்லாம் திருமால் அகைப்பு-எழுச்சி; ஸ்ரிய: பதியினுடைய ப்ரயத்னத்தாலே யென்கை.

---

அவ:—இப்படி ஆஶ்ரிதர் நெஞ்சிலே புகுருகைக்கு அவஸர ப்ரதீக்ஷனாயிருக்கை விஸ்மயனீயமோ, முதலிலே ஸகல பதா₂ர்த்த₂ங்களையும் தன் ஸங்கல்பத்தாலே உண்டாக்குகிறவனுக்கு? என்கிறார்.

உரை:— ஆகாஶமும், அதிலே வர்த்திக்கக்கடவ அக்₃னி வாயுக்களும், பெரியகடலும், பெரியகுலபர்வதங்களும், தாங்கள் ஸஞ்சரிக்கக்கடவ உஷ்ணகிரணனை ஆதி₃த்யனும்.

---

37. அவ:— இவனே ஆதி₃காரணபூ₄தனோ? என்ன, அருளிச்செய்கிறார்.

வ்யா:— (வான்) ஆகாசமும், (உலவு தீவளி மாகடல்) எப்போதும் அசைந்துகொண்டிருக்கும் வாயு, அக்₃நி, ஜலம் என்னும் தத்துவங்களும், 'கடல்' என்றது ஜலதத்வம் முழுவதையும் குறிக்கிறது. (மாபொருப்பு) பெரிய குலபர்வதங்களும், இது ப்ருதி₂வீதத்வம் முழுவதற்கும் உபலக்ஷணம். (தானுலவு வெங்கதிரும் தண்மதியும்) உலவும்படியான ஸூர்யசந்திரர்கள் தானும்.

38. அகைப்பில் மனிசரை யாறு சமயம்
புகைத்தான் பொருகடல் நீர்வண்ணன்—உகைக்குமேல்
எத்தேவர் வாலாட்டு மெவ்வாறு செய்கையும்
அப்போ தொழியு மழைப்பு.

பதவுரை:—பொருகடல் நீர் வண்ணன்—அலையெறிகின்ற கடல்நீர்போன்ற திருநிறத்தையுடையவனான ஸர்வேஸ்வரன், அகைப்பு இல் மனிசரை—அறிவுச்சிறப்பில்லாத மனிசரை. ஆறு சமயம்—(நீசங்களான) ஆறு மதங்களில். புகைத்தான்—அகப்படச் செய்தான்; உகைக்கும் ஏல்—உதா₃ஸீநனாயிருந்துவிடும் பக்ஷத்தில், அப்போது—அப்போதே. எத்தேவர் வாலாட்டும்—எந்த தேவர்களுடையவும் அஹங்

---

குளிர்ந்த சந்த்₃ரனும், மேலே வர்த்திக்கக்கடவ மேகமென்று பேர்பெற்றவையும் திக்குக்கள் எட்டும். ஆவரணங்களும், இவை எல்லாவற்றோடும் கூடியிருக்கிற அண்ட₃மானது ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரனுடைய ஸங்கல்பரூபஜ்ஞானத்தாலே உண்டானது. அகைப்பு என்று எழுச்சியாய். அதாவது—திருவுள்ளத்தில் உத்₃யோகரூபமான ஸங்கல்பமென்றபடி. 37.

---

(உலவு) "பீ₄ஷோதே₃தி ஸூர்ய:" என்கிறபடியே அவனிடம் பயந்தாலே சிறிதும் தவறுதபடி ஸஞ்சரிக்கிறபடி. (மேல்நிலவு கொண்டல்) மேலே ஸஞ்சரிக்கும் மேகங்களும். (பெயரும்) சேதனவர்க்கமும். (கொண்டல்பெயரும்) மேகமென்று பெயர்பெற்றவையும் என்றுமாம். (திசையெட்டும்) "தி₃ஶஶ்ச நாராயண:" என்கிற எட்டுத் திக்குகளும். (சூழ்ச்சியும்) ஏழு ஆவரணங்களும். (அண்டம்) இவற்றாலான அண்டமும். (திருமால் அகைப்பு) ஸ்ரீமந் நாராயணனுடைய மனவெழுச்சியைப்—ஸங்கல்பத்தைப்—பற்றி நிற்பவை. "திருமால் அகைப்பு" என்றதால் ஸர்வேஸ்வரன் ஜகத்ஸ்ருஷ்டிசெய்வது பிராட்டியின் முகோல்லாஸத்திற்காகவே என்பதும், ஜகத்ஸ்ருஷ்டியில் பிராட்டிக்கும் ப்ரேரகத்வரூபமான அப்ரதா₄னமான அந்வயம் உண்டென்பதும் உணர்த்தப்படுகின்றன. 37.

காரமும், எவ்வாறு செய்கையும்—அவர்கட்கு ஆராதநமான எவ்விதமான (யஜ்ஞம் முதலிய) காரியங்களும், அழைப்பு—யஜ்ஞங்களில் (தேவதைகளின்) ஆஹ்வாநமும், ஒழியும்—ஒழிந்துபோய் விடும்.

பெரி-வ்யா:— (அகைப்பில் மனிசரை) எழுச்சியில்லாத மனிசரை; அளவில்லாதவரை என்கை. (ஆறு சமயமித்யாதி) க்ஷுத்ரபதார்த்தங்களை அகப்படுத்தப் புகைக்குமாபோலே பாஹ்ய ஸமயங்களைக் காட்டி அகப்படுத்தினான்

அவ:— சேதனர்க்குக் கர்மாநுகுணமாக பாஹ்யஸமயங்களிலே ருசியைப் பிறப்பித்து மதிகெடுக்கக்கடவ ஸர்வேஸ்வரன் அல்பம் உபேக்ஷிக்குமாகில், இவையெல்லாம் அதோராத்தரம் என்கிறார்.

உரை:— அளவு இல்லாத மனுஷ்யரை—கர்மாநுரூபமாக. சார்வாகார்ஹத பௌத்த, ஸாங்க்ய வைஶேஷிக பாசுபதரூபமான பாஹ்யஷட்ஸமயங்களிலும் மூட்டின

38. அவ:—"எல்லாம் ஸர்வேஸ்வரனுடைய ஸங்கல்பத்தைப் பற்றிநிற்கின்றனவாகையாலே அவனே ஆதியாவான் என்றீர். பிரமன் ஸ்ருஷ்டியைச் செய்கிறானென்றும், புராரியானவன் ஸம்ஹாரத்தைச் செய்கிறானென்றும், ஒவ்வொரு தேவதையும் ஒவ்வொரு அருஞ்செயல்களைச் செய்வதாகவும் லோகவேதங்களில் ப்ரஸித்தியுள்ளதே. அவர்களும் காரணபூதராகவர்களோ" என்ன, 'அவன் அந்தர்யாமியில்லாவிடில். அவர்களுக்கு நீங்கள் சொல்லும் பெருமைகளெல்லாம் இருந்தவிடம் தெரியாமல் அழிந்தொழியும்' என்கிறார்.

வ்யா:—(அகைப்பில் மனிசரை) எவ்வளவு உபதேசித்தாலும் புத்தியில் கொள்ளமாட்டாத புல்லறிவாளர்களான உங்களைப் போன்ற ஜீவர்களை, அகைப்பு—எழுச்சி; அறிவில் மேம்பாடு. (அகைப்பில் மனிசரை) அறிவில் சிறப்பில்லாத ஜீவர்களை என்றபடி. (பெரிய) அளவுடைய புத்தியற்றவர்கள் என்கை. (ஆறுசமயம் புகைத்தான்) ஆறுமதங்களிலும் அகப்படும்படியாகச் செய்தான்.

ஸர்வேச்வரன், (உகைக்குமேலித்யாதி) நெகிழகிற்குமேல், தே$_1$வதாந்தரங்கள் "ईश्वरोऽहं" (ஈஶ்வரோऽஹம்) என்று க்ஷுத்$_1$ரஜந்துக்கள் வாலாட்டுமாபோலே பண்ணும் அபி$_1$மாந

*வனுய். இரைபொராநின்றுள்ள கடலின் ஜலம்போலே ஶ்ரமஹரமான வடிவை உடைய ஸர்வேஶ்வரன் உபேக்ஷித்து எழ வாங்கி நீங்குமாகில். எத்தனையேனும் தங்களைப் போரப் பொலிய நினைத்திருக்கும் ப்$_1$ரஹ்மாதி$_3$தே$_1$வர்களுடைய மூசு குவாலெடுத்தாற்போலே உண்டான க$_3$ர்வமும், அவர்களைக் குறித்து இங்குள்ளவர்கள் ப$_3$ஹுவித$_4$மான யாகா$_1$தி$_3$ ஸாத$_4$னங்கள் அனுஷ்டி$_2$க்குமதுவும். ஆவ்வவ கர்மங்களை*

(ஆறுசமயம்)சாக்கியர், உலூக்கியர், அக்ஷபாத$_3$ர், க்ஷபணர், கபிலர், பதஞ்ஜலி எனப்படுபவரால் பிரவர்த்திப்பிக்கப்பட்ட பௌத்$_3$த$_1$ நையாயிக வைசேஷிக ஜைந ஸாங்க்$_1$ய யோக$_3$மதங்கள், நையாயிக யோக$_3$மதங்களுக்கு பதிலாக சார்வாக பாஶுபதமதங்களைக் கொள்வதுமுண்டு. (புகைத்தான்) காட்டில் புதர்களிலே ஒளிந்துகிடக்கும் பிராணிகளைப்பிடிப்பதற்காக, வேடர்கள் கூளங்களையிட்டுப் புகைத்து அவைகளை வெளிவரச்செய்து, அவற்றை அகப்படுத்துவதுபோலே புறச்சமயங்களாகிற புகையையிட்டு ஸம்ஸாரமாகிற வலையிலே அகப்படச்செய்தான் (அமைப்பில்.....புகைத்தான்) புகையிலே அகப்பட்டார்க்கு வழிதெரிய வழியுண்டோ? அதனாலேயே எவ்வளவு சொல்லியும் நீங்கள் தே$_3$வதாந்தரபரத்வஸங்காக்$_3$ரஸ்தராகவேயுள்ளீர்கள்.

(பொருகடல் நீர்வண்ணன் உகைக்குமேல்) கண்டார் கண்களெல்லாம் குளிரும்படியான திருநிறத்தையுடைய ஸர்வேஶ்வரன் உபேக்ஷித்தானாகில். வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றையெல்லாம் அளிக்கும் அலையெறியும் கடல்போன்ற தன்மையை உடையவன் உபேக்ஷிக்க ப்ரஸக்தியில்லை; ஒருகால் நீர் நெருப்பாகமாறி, உபேக்ஷித்தானாகில். (எத்தேவர் வாலாட்டும் ஒழியும்) குரங்குக் கூட்டம்போலே க$_3$ர்வங்கொண்டு திரியும் எல்லாத் தேவர்களுடைய அபி$_4$மானமும் ஒழியும். (வாலாட்டும்) நாய்கள் தங்கள் அபி$_4$மானம் தோற்ற வாலாட்டுவதுண்டாகையாலே, இங்கு 'வாலாட்டு' என்னும் பதம் அபி$_4$மானத்தைக் குறிக்கிறது. இத்தேவதைகளும் "ஈஶ்வரோSஹம்" [நானே ஈஶ்வரன்] என்று அபி$_4$மானித்தன்றோ இருப்பது. (எவ்வாறு அமைப்புச் செய்கையும் ஒழியும்) அத

மும், அத்தேவதைகளை ஆஶ்ரயிக்கைக்காகப் பண்ணும் வ்யாபாரமாகிற காட்டழைப்பும் அவன் நெகிழ்ந்தபோது ஒழியும்—முடியும். 38.

39. அழைப்பன் திருவேங் கடத்தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட—மழைப்பே
ரருவி மணிவரன்றி வந்திழிய யானை
வெருவி யரவொடுங்கும் வெற்பு.

---

அநுஷ்டிக்குமிடத்திலே "ब्रह्माणमावाहयामि" (ப்₃ரஹ்மாணமாவாஹயாமி) என்றாற்போலே உண்டான தத்தத்₃தே₃வதாஹ்வானங்களும் அவன் எழ வாங்கின அந்த க்ஷணத்திலே இன்றிக்கே போய்விடும். (அகைப்பில் மனிசர்) எழுச்சியில்லாத மனுஷ்யர். இத்தால் அளவிலிகளான மனுஷ்யரென்றபடி.

---

தே₃வதைகளை ஆஶ்ரயிப்பதற்காக "இந்த்₃ராய ஸ்வாஹா வருணாய ஸ்வாஹா" என்றும், "இந்த்₃ரமாவாஹயாமி, ஸோமமாவாஹயாமி" என்றும் அவர்கள் முகம் காட்டுவதற்காகச் செய்யும் அழைப்புகளும் ஒழியும். அன்றிக்கே, (எவ்வாறு செய்கையும் ஒழியும்) நீங்கள் அவர்களை ஆராதி₄க்கச் செய்யும் யஜ்ஞாதிகளும் ஒழியும். (அழைப்பு ஒழியும்) ஹவிர்ப்ப₄ாகம் வாங்கிக்கொள்ள நீங்கள் "ஸ்வாஹா" என்று அழைக்கும் அழைப்பும் ஒழியும். அன்றிக்கே, (எத்தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும் அழைப்புமொழியும்) அவர்களுடைய அபி₄மானமும், அவர்கள் செய்யும் த்ரிபுர த₃ஹநாதி₃ காரியங்களும், அவர்களை ஆஶ்ரயிக்கைக்கு நீங்கள் செய்யும் அழைப்புக்களும் அழிந்துபடும். அவர்களுடைய ஸத்தையோடு, உங்களுடைய ஸத்தையோடு வாசியற அழியும் என்றபடி. (அப்போது ஒழியும்) காலாந்தரத்திலேயன்றிக்கே, அவன் உபேக்ஷித்த க்ஷணத்திலேயே அழிந்தொழியும்.

"ந தத₃ஸ்தி விநா யத் ஸ்யாந் மயா பூ₄தம் சராசரம்"

[அசைவனவும், அசையாதனவுமான பொருள் எதுவும் என்னைப் பிரிந்தால் இல்லையாம்] என்று தானே கீ₃தையில் அருளிச் செய்தானன்றோ. 38.

பதவுரை:— திருவேங்கடத்தானை—திருவேங்கடமுடையானை. காண—கண்ணால் ஸேவிக்க, அழைப்பன்—வாய் விட்டுக் கூப்பிடாநின்றேன்; மழை—மழைகாலத்தில். பேர் அருவி—பெரிய அருவிகளானவை. மணி—(அங்குமிங்கும் கிடக்கிற) ரத்னங்களை, வரன்றி வந்து இழிய—திரட்டிக் கொண்டுவந்து விழ (அந்த ரத்னங்களின் ஒளியைக்கண்டு அக்னி ஜ்வாலைகளாக மயங்கி) யானை—யானைகளானவை, வெருவி—பயப்பட்டு நிற்கவும். அரவு—மலைப்பாம்புகளானவை. ஒடுங்கும்—(அந்த ரத்னங்களை மின்னலாக மயங்கி) புற்றிலே சென்று மறையவும் பெற்ற. வெற்பு—திருமலையை, கூட—சென்று கூடவேணுமென்று, திருக் கூடல் இழைப்பன்—கூடலிழைக்கின்றேன்.

பெரி-வ்யா:— (அழைப்பன்) போகமோக்ஷத்துக்கோ? என்னில்—(காண). (இழைப்பனித்யாதி) மழையிலே

---

அவ:—லௌகிகர் பட்டது பட; நான் முந்துற முன்னம் திருவேங்கடமுடையானைக் கண்டு அனுபவிக்கவேணு மென்றும். திருமலையாழ்வாரைச் சென்று திருவடித்தொழ வேணுமென்றும் ஆசைப்படாநின்றேன் என்கிறார்.

உரை:—நமக்கு முகம் தருகைக்காகத் திருமலையிலே வந்து ஸுலபனாய் நிற்கிற திருவேங்கடமுடையானை போக மோக்ஷங்களாகிற ப்ரயோஜனம் கொள்ளவிருக்கை

---

39. அவ:— மறுபடியும் பரோபதேசத்திலிருந்து கைவாங்கி. திருவேங்கடமலையையும், அங்கு நிற்கும் பெருமாளையும் பல பாசுரங்களாலே அனுபவிக்க இழிகிறார். இவருக்குப் பரோப தேசமும், ஸ்வாநுபவமும் மாறிமாறிச் செல்கிறபடி.

வ்யா:— (அழைப்பன் திருவேங்கடத்தானை) திருவேங்கட மலையில் எம்பிரானை அழைப்பேன். 'நீர் அழைப்பது எங்களைப் போல க்ருஹக்ஷேத்ரபுத்ரகளத்ராதி போகங்களைப் பெறுவதற்கோ, அல்லது ஞானிகளைப்போலே மோக்ஷத்தை அடைவதற்கோ' என்ன;

பெரிய அருவிகள் ரத்நங்களைக் கொண்டு வந்திழிய. ரத்நதீ₃ப்தியை ஆனை அக்₃நியென்றும். ஸர்ப்பம் மின்னென்றும் பயப்பட்டு ஒதுங்கும் திருமலை. அன்றிக்கே.

---

யன்றிக்கே. கண்டு அநுப₄விக்கைக்காக ஆற்றாமைதோற்ற வாய்விட்டுக் கூப்பிடாநின்றேன். நிரந்தரவர்ஷத்தாலே வெள்ளமிட்டுப் பெருகுகிற திருவருவிகளானவை அங்குமிங்குங் கிடக்கிற ரத்னங்களைத் திரட்டிக்கொண்டு வந்து பெரிய வேக₃த்தோடே குதிக்க. இப்படி ஒழுக்கறாமல்விழுகிற ரத்னங்களினுடைய ஒளியை யானைகளானவை அக்₃னி ஜ்வாலைகளாகக் கருதி அவை தன்னை வந்து கடு(து?)வச் தேடுகிறதோ என்று பயப்பட்டுப் போக்கிடமற்று நின்று

---

(காண) இரண்டுக்குமன்று. அவனைக் கண்ணால் கண்டு அநுப₄விக்கைக்காகவே கூப்பிடாநின்றேன். "கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப்பிறவி செய்யாமே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்" என்றாப்போலே இங்கு இப்போதே காணவேணுமென்னும் ஆசையுடையேனாயிருக்கும்போது. தே₃சாந்தரத்திலே, காலாந்தரத்திலே மோக்ஷத்தை விரும்ப இடமேது? மோக்ஷமே இப்பாடுபடும்போது போ₄க₃த்தை விரும்புகையாகிற பேச்சேயில்லை. (இழைப்பன் திருக்கூடல்கூட) கூடுவதற்காகத் திருக்கூடலிழைப்பேன். கூடலிழைத்தலாவது — "வட்டமாகக் கோட்டைக்கீறி. அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து. இரண்டிரண்டு சுழியாகக் கூட்டினால், இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று ஸங்கேதம்" [நாய்ச்சியார் திருமொழி-4 அரும்பதம்] என்பர். தங்கள் இஷ்டம் ஸித்₃தி₄க்குமோ என்பதற்காகப் பார்க்கும் ஶகுனங்களில் இதுஒரு வகையாகும். நாய்ச்சியார் திருமொழியில் நாலாம் திருமொழி காண்க. எதைக்கூடத் திருக்கூடலிழைப்பது என்ன. திருவேங்கடமலையைக் கூட என்று அருளிச்செய்கிறார் பின்னடிகளாலே—(மழைப்பேரருவி மணிவரன்றி வந்திழிய யானை வெருவி அரவொடுங்கும் வெற்பு கூடத் திருக்கூடல் இழைப்பன்) மழை காலத்தில் பெரிய அருவிகள் ரத்நங்களை அடித்துக்கொண்டு வந்துவிழ, அந்த ரத்னங்களின் ஒளியை யானை கொள்ளிக் கட்டையினொளியென்றும், பாம்பு மின்னலென்றும் கண்டு பயப்பட்டு ஒதுங்கும்படியான திருமலை. யானைகள் கொள்ளிக்கட்டைக்

நெருப்புக்கு பயப்பட்டு ஆனை மலைப்பாம்பின் வாயிலே புக்கு ஒடுங்கும் என்றுமாம். இப்படிக்கொத்த திருமலையைக்கூட இழைப்பன் திருக்கூடல் என்று அந்வயம். 39.

40. வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன்—கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டிகேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண்.

பதவுரை:— வெற்பு என்று—பலமலைகளையும் சொல்லி வருகிறபோது. வேங்கடம் பாடினேன்—திருமலையையும் பாடினேன்; (இச்சொல்லாலேயே) வீடு ஆக்கி நிற்கின்றேன்,—மோக்ஷம் நமக்கு நிச்சயம் என்னும்படியாக நின்றேன்; நின்று நினைக்கின்றேன்—'நான் சொன்ன ஒரு சிறிய சொல்லுக்குப் பெரிய பேறு கிடைத்த பாக்கியம் என்னே!' என்று நினைத்து ஆராய்கின்றேன்; கற்கின்ற—ஓதப்படுகிற, நூல்—வேத₃ங்களாகிற சாஸ்த்ரங்களில், வலை

தடுமாற, பாம்புகளானவை மின்னுக்கஞ்சி. தனக்கு இருப்பிடமான புற்றிலே சென்று ஒதுங்கும்படியிருக்கிற திருமலையைச் சென்று கூடவேணுமென்று திருக்கூடலிழையாநிற்பன். அன்றிக்கே நெருப்புக்கு பயப்பட்டு ஆனையானது மலைப்பாம்பின் வாயிலே புக்கு ஒடுங்குமென்றுமாம். 39

கும், மலைப்பாம்புகள் மின்னலுக்கும் பயப்படும் என்பது ப்ரஸித்₃த₄ம். அன்றிக்கே, மழைப்பேரருவி மணிகளைக்கொண்டுவந்து விழ. அதைக் கொள்ளியாகக் கொண்டு யானை பயப்பட்டு மலைப்பாம்பின் வாயை மலைக்குழையாக நினைத்து அதிலே விழும் திருமலை என்றும் கொள்ளலாம். "கரிய மாமுகில் படலங்கள் கிடந்தவை முழங்கிடக் களிறென்று பெரிய மாசுணம் வரையெனப் பெயர்தரு பிரிதி" [பெரியதிரு 1-3-10] என்ற பாசுரத்திலெடுத்ததோர் ஐதிஹ்யத்தில் யானைகளை விழுங்கும் மலைப்பாம்புகளும் உண்டென்று அருளிச்செய்திருப்பது அநுஸந்திக்கத் தக்கது. 39.

யில் பட்டிருந்த—வலையினுள் அகப்பட்டிருப்பதுபோல் நிலை பேராமல் நிற்கிலை ற. நூலாட்டி கேள்வனார்—லக்ஷ்மீநாதனை எம்பெருமானுடைய, கால் வலையில் பட்டிருந்தேன் காண்—திருவடிகளாகிற வலையில் அகப்பட்டு நிலையாக இருந்தேன்!.

பெரி-வ்யா:—(வெற்பித்யாதி) விசேஷித்து ஒன்று செய்ததில்லை; அல்லாத மலைகளைச் சொல்லுகிறவோபாதி இத்தைச் சொல்லத் திருமலையாயிற்று. (வீடாக்கி நிற்கின்றேன்)

அவ:— திருமலையை யாத்ருச்சிகமாகச் சொன்ன மாத்ரத்திலே க்ருதக்ருத்யனாய், ஸ்ரிய:பதி திருவடிகளிலே மற்றொன்றுக்கு ஆளாகாதபடி நான் அகப்பட்டேன். என் னெஞ்சே! நீயும் அவனை அனுபவி என்கிறார்.

உரை:— அல்லாத மலைகளைச் சொல்லுகிறவோபாதி ஸாமாந்யேந இதுவுமொரு மலை என்று சொன்னவளவிலே கோல்விழுக்காட்டாலே திருமலையை ப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடினவனாயிராநின்றேன்.

40. அவ:— செய்த காரியம் மிகச்சிறிது; பெற்ற பலனோ மிகப் பெரிது என்கிறார்.

வ்யா:—(வெற்பென்று வேங்கடம் பாடினேன்) விசேஷமாக ஒரு ஸாதநாநுஷ்டானம் செய்தேனல்லேன்; "கொச்சிமலை, குடகுமலை, இமயமலை" என்றாப்போலே மலைத்தொடர்களின் பெயர்களைச் சொல்லி வரும்போது யாத்ருச்சிகமாக என்னையுமறியாமல் திருவேங்கடமலை என்றும் சொல்லிவைத்தேன். இதை எம்பெருமான் திருவேங்கடத்தைப்பாடியதாகக் கணக்கிட்டு வைத்தான். ஆகவே, நானும் வேங்கடம் பாடினவனானேன். (வீடாக்கி நிற்கின்றேன்) பெற்ற பலனோ பரமபுருஷார்த்தமாயிரா நின்றது.

"யந்ந தேவா ந முநயோ ந சாஹம் ந ச ஸங்கர:|
ஜாநந்தி பரமேஸஸ்ய தத் விஷ்ணோ: பரமம் பதம்||

[பரமேசனான விஷ்ணுவினுடைய பரமபதத்தை தேவர்களும் முனிவர்களும் (பிரமனாகிய) நானும், ஸங்கரனும் அறியமாட்டோம்] என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்திலும்,

அனேக யத்நத்தாலே பெறும் மோக்ஷத்தை இச்சொல்லாலே உண்டாக்கிக்கொண்டு நின்றொழிந்தேன். (நின்று நினைக் கின்றேன்) எது சொல்லிற்று, எது பற்றிற்றென்று விசாரியா நின்றேன். (கற்கின்ற வித்யாதி) ஓதப்படுகிற வேத₃த்தாலே

---

ன்னளவன்றிக்கே என்னுடன் சேர்ந்தார்க்கும், பெருவருத் தத்தோடே பெறக்கடவ மோக்ஷத்தை உண்டாக்கிக் கொண்டு. க்ருதக்ருத்யனாய் நில்லாநின்றேன். "எது சொல் லிற்று, எது பெற்றது" என்று ஸாத₄னஸாத்₄யங்களி னுடைய லாக₄வகௌ₃ரவங்களை ஒருபடிப்பட அநுஸந்தி₄த்து விஸ்₃மிதனாகாநின்றேன். ஸக்ரமமாக ஓதப்

---

"அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்த₂ாநம் விஷ்ணோர் மஹாத்மந:।
ஸ்வயைவ ப்ரப₄யா ராஜந் து₃ஷ்ப்ரேக்ஷம் தே₃வதா₃நவை:॥"

[மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அவ்விருப்பிடம் சூரியனையும், அக்னியையும் விஞ்சிய ஒளியையுடையது. தன் ஒளியாலே தே₃வா சுரர்களும் காணவொண்ணாதது] என்று பு₄ராணத்திலும் சொல்லிய படி பெரும்பெரும் தவங்களையனுஷ்டி₂ப்பாரும் அடையவரிதான மோக்ஷ புருஷார்த்த₂த்தை எனக்காக்கிவைத்துக்கொண்டு நின்றேன் வேங்கடம் பாடிய அக்கணத்திலேயே. (நின்று நினைக்கின்றேன்) "வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால்" [பெரியதிரு 59] என்றுப் போலே ஆராய்கின்றேன். நாம் சொன்னதோ ஒருக்தி மாத்ரம். பெற்றப₂லனோ மிகப்பெரிது; இதெங்ஙனே கூடியது என்று தீவிரமாக ஆராய்ச்சி செய்கிறேன். (நின்று நினைக்கின்றேன்) "சஞ்சலம் ஹி மந:" [கீதை] [மனம் மிகச்சஞ்சலமானது] என்றும், "நின்றவா நில்லா நெஞ்சு" [பெரியதிருமொழி 1·1·4] என்றும் சொல்லப்படும் நெஞ்சையும் நிலைநிறுத்தி ஆராய்கிறேன் என்னுதல்; நினைந்து நிற்கிறேன் என்னுதல்; அதாவது:—இதை நினைத்து. இதொரு ஆச்சரியமிருந்தபடியென்! என்று ஸ்தப்₃த₄னாயிரா நின்றேனென்கை.

இப்படி ஆராய்ந்தவுடன் புருஷகாரபூ₄தையான பிராட்டியி னுடையவும் பரமத₃யாளுவான பரமபுருஷனுடையவும் நிர்ஹேதுக க்ருபையாலேயே இது நிகழ்ந்ததென்றறிந்து, அவர்களிடத்திலே ஈடுபட்டுநின்றேனென்கிறார் மேல். (கற்கின்ற நூல் வலையில்

ப்ரதிபாதிதக்கப்படுகிற பெரிய பிராட்டியார்க்கு வல்லபனான வன் திருவடிகளாகிற வலையிலகப்பட்டிருந்தேன். 40.

---

படுகிற வேதசாஸ்த்ரத்தாலே பாஹ்யகுத்ருஷ்டிக ளால் அவிசால்யமாப்படி ப்ரதிபாதிக்கப்படுகிற "விஷ்ணுபத்னீ" (விஷ்ணுபத்நீ) என்கிற அலர்மேல்மங்கைக்கு வல்லபனான திருவேங்கடமுடையானுடைய "அடிக்கீழ் அமர்ந்து புகுந்து அடியீர்வாழ்மின்" என்கிற திருவடிகளாகிற வலையிலே அகப் பட்டு மற்றொன்றுக்கு உரித்தாகாதபடி கற்றரிக்கவிருந்தேன். என்னெஞ்சே! நீயுமவனைக்கண்டு அநுபவிக்கப்பார். 40.

---

பட்டிருந்த...கேள்வனார்)முறையோடு ஓதப்படுகிற வேதமாகிற வலை யிலே அகப்பட்டு வெளிவரவொண்ணாதபடி கிடக்கிற லக்ஷ்மீநாதன். வலையாகில் பல நூல்களாலே பின்னப்பட்டிருக்குமே என்ன,—(நூல் வலையில்) இதுவும் நூல்வலையே என்கிறார். கயிறுகளால் பின்னப் பட்ட வலை என்று த்வனி, வேதமாகிற வலை என்று அர்த்தம். வேதத்தை வலையாகவும், அதில் தப்பவொண்ணாதபடி அகப்பட்டுக் கிடப்பவனாக ஸர்வேஶ்வரனையும் சொல்லுகையாலே, வேதப்ரதிபாத்ய னான பரப்ரஹ்மம் நாராயணனே என்பதை எவராலும் அசைக்க முடியாது என்றதாயிற்று. (நூலாட்டி) நூலை ஆள்பவள். அதாவது அவனைப்போலே அவளும் ஸ்ரீஸூக்தாதி வேதவாக்யங்களாலே சொல்லப்படுபவள் என்கை, "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" [வேதங்கள் முழுவதாலும் நானொருவனே அறியப்படுபவன்] என்ற அவனைப்போலே தானும் வேதங்கள் அனைத்தாலும் அறிவிக்கப் படுபவள் என்றுமாம். ஸர்வவேதப்ரதிபாத்யத்வம் பரப்ரஹ்மபூதனான ஸர்வேஶ்வரனுக்குண்டேயொழிய இப்பிராட்டிக்குண்டோ வெனில்; உண்டு, கடம் என்றால் கடத்வஜாதியும் தன்னடையே சொல்லப்பட்டதாவதுபோலே பரமபுருஷனைச் சொன்னால், அவனுக்கு ஸ்வரூபநிரூபகபூதையான இப்பிராட்டியையும் சொன் னதேயாகும். "எம்பெருமானைச் சொன்னவிடத்திலே பிராட்டியை யும் சொல்லிற்றாம்" என்று எம்பெருமானார் அருளிச்செய்ததாக ஸ்ரீவேதாந்ததேசிகர் ரஹஸ்யத்ரயஸாரத்திலே எடுத்த வார்த்தைக் கும் இதுவே கருத்து. "மியேஸிக்லோ மானை:" [எல்லாப் பிரமாணங்க ளாலும் அளக்கப்படுகிறேன்] என்று பிராட்டியும் லக்ஷ்மீதந்த்ரத் திலே அருளினாள். "விஷ்ணுபத்நீ" என்று வேதமும் இதையே சொல்லிற்று.

41. காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலியதிர—பேணி
வருவேங்கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங்கட மதனைச் சென்று

பதவுரை:—கல் அருவி—ஒலிக்கின்ற அருவிகளின் மூலமாக, முத்து உதிர—முத்துக்கள் உதிரப்பெற்றதாய், ஓணம் விழவில்—திருவோணத்திருநாளில், ஒலி அதிர—மங்களாஶாஸந த்₄வநி அதிரப்பெற்றதாய், பேணி வரு—(ப₄க்தர்கள்) விரும்பிவந்து சேரப்பெற்றதான, வேங்கடவா—திருவேங்கடமலையை இருப்பிடமாகவுடையவனே! என் உள்ளம் புகுந்தாய்—நீ என் நெஞ்சிலே புகுந்து விட்டாய்; (நீ திருமலையைவிட்டு என்னுள்ளத்திலே வந்துவிட்டாலும்) திருவேங்கடம் அதனை சென்று காணல் உறுகின்றேன்—நான் அத்திருமலையிற்சென்று ஸேவிக்க விருப்பம் கொண்டிருக்கிறேன்.

---

"ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும்
சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை....
பூவின்மேல் மாதுவாழ்மார்பினாய்" என்று

நம்மாழ்வாரும் இவ்வரும்பொருளையே அறிவுறுத்தினர். ஸகல வேத₃ங்களிலும் ஸர்வசித₃சித்₃வஸ்துக்களுக்கு விஶேஷ்யனாகச் சொல்லப்படுபவன் அவன். அவனுக்கு அந்தரங்க₃விஶேஷணமாகச் சொல்லப்படுபவள் அவள். அவனைச்சொன்னால் அந்தர்யாமியான அவளைச்சொன்னதாகும்; அவளைச்சொன்னால் நிரூபகையான அவனைச்சொன்னதாகும். இதையே (கற்கின்ற நூல் வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்) என்கிறார் ஆழ்வார். (நூலாட்டி) புருஷகாரபூ₄தையான அவளுடைய கருணையாலன்றோ இப்பேறு ஸித்₃தி₄த்தது என்று பா₄வம். (கேள்வனார்) "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்னும் அவனுடைய கருணையால் இது நிகழ்ந்ததேயொழிய என்னாலானதொன்றுமில்லை யென்கை. (நூலாட்டி கேள்வனார் கால்வலையில் பட்டிருந்தேன் காண்) இப்படி ஆராய்ந்தறிந்து, ஒருவர்க்கொருவர் நான்முந்தி நான்முந்தியென்று ரக்ஷிக்கும் தி₃வ்ய த₃ம்பதிகளின் திருவடிகளாகிற வலையிலே வேறொன்றுக்கு ஆகாதபடி நான் அகப்பட்டுநின்றேன் கிடீர்! (காண்) நெஞ்சே! நீயும் அதிற்பட்டு நிலைநிற்கப்பார்—என்று நெஞ்சை நோக்கிக் கூறுகிறாராகவுமாம். 40.

பெரி-வ்யா:— (கல்லருவியித்யாதி) ஒளியையுடைய அருவிகளிலே முத்துதிர. திருவோண நக்ஷத்ரமாகிற மஹா தி₃வஸத்திலே அநுகூலருடைய மங்களாஶாஸநத்தாலே வந்த

---

அவ:—"நெஞ்சே! நீயும் கண்டநுப₄விக்கப்பார்" என்றவாறே திருவேங்கடமுடையானும் இவர் திருவுள்ளத்திலே தான் முற்பாடனாய் வந்து புகுந்தான். நான் திருமலையைக் காண ஆசைப்படாநிற்க, என் மனோரத₂த்துக்கு விக்₄னம் பண்ண நின்றாய் என்கிறார்.

உரை:—திருவருவிகளோடே சேர்ந்து வருகிற ரத்ன பாஷாணங்களும் முத்துக்களும் பார்த்தவிடமெங்கும் சிதறி விழ. திருவோணமாகிற திவ்யோத்ஸவத்தில் திருப்பல்லாண்டுபாடுவார். வேத₃பாராயணம்பண்ணுவார். பாடுவார்

---

41. அவ:—என் நெஞ்சிலே அந்தர்யாமியாய் நிற்கும்நிலையிலும் திருவேங்கடமலையில் நிற்கும் நிலை அதிவிலக்ஷணமாயிருக்கையாலே, அங்கு சென்றுகாண ஆசைப்படுகிறேனென்று திருமலையின் பெருமையைப்பேசுகிறார். "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தன கொல்...அடியேனதுள்ளத்தகம்" [பெரியதிருவ 68] [கல்-திருமலை] "நிற்பதும் ஓர் வெற்பகத்து" [திருச்சந்த-65] என்கிறபடியே அவன் திருமலையைவிட்டு இவர் உள்ளத்துக்கு வர ஆசைப்படுவதுபோலே, இவர் தம் உள்ளத்திருப்பை விட்டு அங்கேகாண ஆசைப்படுகிறபடி. "இளங்கோயில் கைவிடேல்" [பெரிய திருவ] என்று ப்ரார்த்தித்தவருமுண்டன்றே.

வ்யா:—(கல்லருவி முத்துதிர) சப்தம் செய்கின்ற அருவியிலிருந்து முத்துக்கள் உதிரும்படியாகவும். (கல் அருவி) 'கல்' என்று சப்திக்கும் அருவி. திருமலையிலுள்ள அருவிகள் சப்திப்பதும் உத்தே₃ஶ்யமாகாநின்றது. அன்றிக்கே 'கல்' என்று மலையாய் மலையருவியென்றுமாம். (அருவி கல் முத்து உதிர) அருவியில் ரத்தினக் கல்லும், முத்தும் சிதறிவிழ என்றுமாம். (ஓணவிழவில் ஒலியதிர) • திருவோணத்திருவிழவில் அந்தியம் போதில் அரியுருவாகி அரியையழித்தவனைப் பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பெரியாழ்வாரைப்போன்ற ப்ரேமஸ்வபா₄வர்கள் பாடும் ஒலியானது மிகுதியாக முழங்கவும். (ஓண விழவில் ஒலியதிர, கல்லருவி முத்துதிர) பல்லாண்டுபாடுமிப்பேரொலியானது கல்லையுமுருக்கிக் கண்ணீரை

த்₄வநி மிக, ப்ராப்யதயா வந்து ஆஶ்ரயிக்கப்படும் திருமலையை யுடைய நீ என்னுடைய ஹ்ருத₃யத்திலே புகுந்தாய். நான் திருமலையை அடைந்து காணலுறுகின்றேன். 41.

---

ஆடுவாராகிற த்₄வனியானது கடலிரைத்தாற்போலே கண்டவிடமெங்கும் முழங்க. இந்த நிரவதி₄கஸம்பத்துக் கிடக்க, என்னை ஆசைப்பட்டு நான் இருந்த இடம் தேடி வருகிற அப்பனே! என்னுடைய ஹ்ருத₃யத்திலே பெருப் பேருகவந்து புகுந்தாய். நான் அந்த நிரவதி₄கஸம்பத்தை யுடைத்தான திருமலையைச் சென்று கிட்டி, கண்டனுப₄விக்க வேணுமென்று ஆசைப்படாநின்றேன். "பேணிவருவேங்

---

யும் வரவழைப்பதுபோலே இராநின்றது. "ஒலி" என்று, திருப்பல் லாண்டு பாடுவார், வேத₃பாராயணம் செய்வார், பாடுவார் ஆடுவார் ஆகிய அனைவரும் எழுப்பும் ஒலியைக் குறிக்கிறதாகவுமாம். (பேணி வருவேங்கடவா) இப்படி மங்களாஶாஸனம் மிக்கிருக்கும் தேசமாகை யாலும், அசேதனங்களும் சேதநஸமாதி₄யையடைந்து ஈடுபடும் தேச மாகையாலும் பல்லாண்டுபாடுவார் பலர் இப்பர்வதமே பரமப்ராப்ய மென்று நினைத்து வரும்படியான திருவேங்கடமலையிலே எழுந்தருளி யிருப்பவனே! (பேணி வரு வேங்கடவா) இச்செல்வத்தையும் காற்கடைக்கொண்டு, என்னை விரும்பும் அப்பனே! என்கிறு ராகவுமாம். (என்னுள்ளம் புகுந்தாய்) வேங்கடமலையிலே ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்யும் நீ, ஸாத்₄யமாகிற என் நெஞ்சைப் பெற்றவுடன் அத்தைவிட்டு இதிலே புகுந்தாய். (திருவேங்கடமதனைச் சென்று காணலுறுகின்றேன்) நானோவெனில் என்நெஞ்சைக் காட்டிலும் மிக விலக்ஷணமாயுள்ள திருவேங்கடமலையிலேயே உன்னைக்காண ஆசைப்படுகிறேன். நெஞ்சைக்காட்டிலும் திரு வேங்கடமலைக்குள்ள வைலக்ஷண்யமென்னென்னில்: (என் நெஞ்சம்—திருவேங்கடம்) பாவங்களுக்கெல்லாம் உத்பத்திஸ்தா₂ன மாயிருப்பது என் நெஞ்சம்.

"வேம் கடங்கள் மெய்மேல் வினை முற்றவும்"

[திருவாய் 3-3-6] என்கிறபடியே பாவங்களைப் போக்கடிப்பது வேங்கடம். (கல்லருவி முத்துதிர) சத்தம் அருவிபோல் சொரியும் அழுக்குப்படிந்த என் கல் நெஞ்சம் போலன்றியே கல்லுமுருகிக் கண்ணீர் முத்துக்களைப் பொழியுமிடம் வேங்கடம். (ஓணா விழ

42. சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால்—என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
அடிக்கமல மிட்டேத்து மங்கு.

பதவுரை:—**சேண் உயர் வேங்கடத்தை**—*மிகவும் ஓங்கின (சிகரத்தையுடைய)* திருமலையை, **சென்று வணங்குமின்**—*சென்று வணங்குங்கோள்; (அத்திருமலையானது)* **நீர்மையால்**—*தன்* ஸ்வபாவத்தினால், **நின்று வினை கெடுக்கும்**—*பாவங்களைப்போக்குவதில் நிலை நின்றிருக்கும்;* **அங்கு**—அத்திருமலையில், **கடி கமலம் நான்முகனும்**—*பரிமளம் மிக்க தாமரையிற் பிறந்தவனான பிரமனும்,* **கண் மூன்றத்தானும்**—முக்கண்ணனான *சிவபிரானும்.* **என்றும்**—எக்காலத்தும், **அடி**—*(எம்பெருமானது)* திருவடிகளிலே, **கமலம்**—*தாமரைப் புஷ்பங்களை* **இட்டு**—*ஸமர்ப்பித்து* **ஏத்தும்**—துதித்துக் கொண்டிருப்பர்கள்.

---

கடவா" என்று—அநுகூலர் அடங்கலும் பரமப்ராப்யமாக ஆதரித்து வந்து ஆஶ்ரயிக்கும் திருமலையையுடைய நீ என்றுமாம். "கல்லருவி முத்துதிர" என்று—ஒளி(வி?)யையுடைத்தான திருவருவிகளில் முத்துக்கள் சிதறிவிழ என்றுமாம், கல்லிலே அருவிகளில் முத்துக்கள் உதிர என்றுமாம். 41.

---

வில் ஒலியதிர) பல்லாண்டுபாடுவார் நெருங்கமுடியாத என் நெஞ்சம் போலன்றியே திருவோணத்திருவிழவில் பல்லாண்டு பாடுமொலி பெருகியிருக்குமிடம். (பேணிவருவேங்கடவா) ஸுலபமாகப் பருகமுடியாத பூகதஜலம் போலிருக்கும் நெஞ்சத்திருப்பைப் போலல்லாமல், ஆற்றுவெள்ளத்தில் தேங்கின மடுப்போலே அதிஸுலபமாகச்சென்று ஆஶ்ரயிக்கும்படியாயிருப்பது வேங்கடம். (வேங்கடவா) வாத்ஸல்யகுணம் ஒன்று மட்டும் பிரகாசிக்கும் அந்தர்யாமிநிலையைப் போலன்றிக்கே, பரத்வ, ஸௌலப்ய, ஸௌசீல்ய வாத்ஸல்யாதி ஸர்வகல்யாண குணங்களும் வாநரர்களோடு, நரர்களோடு, அயர்வறுமமரர்களோடு வாசியற அனைவர்க்கும் வெளிப்பட்டு நிற்குமிடம் வேங்கடம். (என்னுள்ளம் புகுந்தாய், திருவேங்கடமதனைச் சென்று காணலுறுகின்றேன்)

பெரி-வ்யா:— (சென்றித்யாதி) "சென்னியோங்கு தண் திருவேங்கடம்" என்னும்படியே புறப்பட்டவாறே கண்டு க்லேஶம்தீரும்படியாக ஆகாஶாவகாஶமடங்க விழுங்கும்படி உயர்ந்த சிக2ரங்களையுடைய திருமலையைச்சென்று வணங்குங்

---

அவ:— ப்ரயோஜநாந்தரபரரான ப்3ரஹ்மாதி3களும் தங்கள் ப்ரயோஜனம் பெறுகைக்குச்சென்று ஆஶ்ரயிக்கும் திருமலையை நீங்களும் உங்கள் அபேக்ஷித ஸித்3த்4யர்த்த2மாகவாகிலும் சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:— ஸர்வகாலத்திலும் பரிமளப்ரசுரமான திருநாபீ4கமலத்தைப் பிறப்பிடமாகவுடைய சதுர்முக2னும், த்ரிநேத்ரனான ருத்3ரனும் திருவடிகளிலே செவ்வித் தாமரைப் பூக்களைப் பணிமாறி து3ர்மானத்தைத் துறந்து வாய்விட்டு ஸ்தோத்ரம்பண்ணி ஆஶ்ரயிக்கும் அந்தத்

---

சேதநலாப4ம் ஈச்வரனுக்காகையாலே அவன் இவருள்ளத்தை ஆசைப்படுகிறான். தன்னை அயோக்3யனென்று அனுஸந்தி4க்கையாலே இவர் வேங்கடத்திலேயே அவனைக் காணவிரும்புகிறார். 41.

42. திவ்ய-அவ:— "இஷ்டப்ராப்தியும் அநிஷ்டநிவ்ருத்தியும் அன்றோ நமக்கு வேண்டுவது? திருவேங்கடயாத்திரை செய்து கொண்டிருந்தால் அவை ஸித்3தி4க்குமோ?" என்று சிலர் கேட்க, "மலைமிலேறி அப்பனை ஸேவிக்கவேண்டுமென்பதுமில்லை; அருகே சென்று மலையை வணங்கினாலும் போதுமானது: அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் தன்னடையே ஸித்3தி4க்கும்" என்கிறார்.

வ்யா:— (சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை) அளவிலும் புகழிலும் மிகவுயர்ந்த வேங்கடத்தைச் சென்று வணங்குங்கள். (சேணுயர் வேங்கடத்தை) நீங்கள் இதை வணங்குவதற்காக வெகுதூரம் நடக்கவும் வேண்டா; "சென்னியோங்கு தண் திருவேங்கடம்" [பெரியாழ்-திரு 5.4-1] என்கிறபடியே நீங்கள் உங்கள் ஊரிலிருந்து புறப்படும்போதே உங்களுக்குப் புலப்பட்டுப் பாபங்களையெல்லாம் போக்கும்படியாக ஆகாசப்பரப்பு முழுவதையும் அடைத்துக்கொண்டு மிகவுயர்ந்து விளங்குவதன்றோ இது என்கிறார். 'நின்று' என்பதை மத்4யமணி ந்யாயத்தாலே மேலும், கீழும் கூட்டிப் பொருள்கொள்ளலாம். (நின்று வணங்கு

கோள். (நீர்மையால் நின்று வினைகெடுக்கும்) விரோதியான பாபத்தைத் திருமலை தன் ஸ்வபாவத்தாலே நசிப்பிக்கும். (கடிக்கமலமித்யாதி) ப்ரயோஜநாந்தரபரரும் தங்கள் அதிகாரம் பெறுவது இத்திருமலையிலே அவனை ஆஶ்ரயித்து. திருநாபிகமலத்திலே அவ்யவதாநேந பிறந்த சதுர்முகனும். லலாடநேத்ரனும் அவன் திருவடிகளைப் புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டாஶ்ரயித்து. 42.

---

திருமலையிலே சென்று. பரபரப்பற்று ப்ரதிஷ்டிகராய் நின்று. தன் ஸ்வபாவத்காலே ஆஶ்ரயிப்பாருடைய ஸமஸ்தபாபங்களையும் நசிப்பிக்குமதாய், புறப்பட்டு வழிப்பட்டபோதே கண்டநுபவித்து வாழலாம்படி சிகரங்களினுடைய மிக்கவோக்கத்தையுடைத்தான திருமலையை நீங்களும் ஆஶ்ரயியுங்கோள். 42.

---

மினே) பரபரப்பில்லாமல் நிலையாக நின்று வணங்குங்கள். (நின்றுவினைகெடுக்கும் நீர்மையால்) 'வேங்கடம்'' [வினைகளை வேகவைத்தழிப்பது] என்று இதையே நிருபநாமாகப்பெற்றிருக்கையாலே இது இயற்கையாகவே நிலையாகப் பாவங்களைப் போக்கடிக்கும் தன்மையை உடையது. ஆகையாலே அநிஷ்ட நிவ்ருத்தியை நினைத்துக் கரையவேண்டாவென்கை. இஷ்டப்ராப்திக் கென்செய்வதென்னில்.—நீங்கள் பலப்ரதராக நினைத்திருக்கும் ப்ரஹ்மருத்ராதிகளும் தங்கள் பதவிகளைப் பெற்றுச்செல்வது அத்திருமலையிலே அவனை வணங்குவதன் மூலமேயாகுமென்கிறார் அடுத்தபடியாக; (என்றும்) இது ஏதேனுமொரு காலத்திலன்று; எப்போதும் இப்படியே நடந்து போருகிறதென்கிறார். (கடிக்கமல நான்முகனும்) "ஸர்வகந்த:'' எனப்படும் வஸ்துவிலிருந்து தோன்றியதாகையாலே பணங்கமழும்படியான உந்தித்தாமரையிலே அமர்ந்துள்ள நான்முகனும். (கண்மூன்றத்தானும்) பெரிய ஜ்ஞாந ஶக்தியுடையவன் என்பது தோற்ற மூன்று கண்களை தரித்துநிற்கும் முக்கண்ணனான சிவனும். (அடி கமலம் இட்டேத்துமங்கு) இவர்களிருவரும் அத்திருமலையிலேயே அவனுடைய திருவடிகளில் தாமரை முதலிய பூக்களாலே அர்ச்சனைசெய்து அவனைத்துதித்துத் தங்கள் பதவிகளைப்பெற்றுப் போவார்கள். ஆகையால் இஷ்டப்ராப்தியைக் குறித்தும் சிந்திக்கவேண்டா என்று கருத்து. 42.

43. மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்தானை
கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான்—திங்கள்
சடையேற வைத்தானும் தாமரை மேலானும்
குடையேறத் தாங்குவித்துக் கொண்டு.

பதவுரை:— மங்குல்தோய் சென்னி — மேகமண்டலத் தளவுஞ்சென்று கிட்டியிருக்கிற சிகரத்தையுடைத்தான, வடவேங்கடத்தானை—வடதிருவேங்கடமலையில் எழுந்தருளி யிருக்கும் பெருமானுக்கு. காப்பு அணிவான்—திருவந்திக் காப்பிடுவதற்காக. திங்கள் சடை ஏற வைத்தானும்—சந்திரனைச் சடையிலே ஏறவைத்துக் கொண்டுள்ள சிவனும், தாமரை மேலானும்—தாமரைப்பூவிற் பிறந்த பிரமனும் தாம்—ஆகிய இவர்கள். குடைஏற குவித்துக் கொண்டு — திருமுத்துக்குடை முதலான உபகரணங்களைச் சேகரித்துக்கொண்டு, கங்குல்—ஸந்த்யா காலந்தோறும். புகுந்தார்கள்—திருமலைக்குச் செல்லுவர்கள்.

பெரி-அவ:— (மங்குல்) சதுர்முக₂னும் லலாடநேத்ரனும் திருமலையிலே ஒருகாலாஶ்ரயித்துப் போமளவன்று. ஸமாராத₄நகாலங்கள் தோறும் ஸமாராத₄நோபகரணங்களைக் கொண்டு வந்தாஶ்ரயிப்பரென்கிறது.

---

அவ:— ப்₃ரஹ்மாதி₃கள் ஒருகால் ஆஶ்ரயித்துப் போமளவன்றிக்கே, ஸமாராத₄நகாலங்கள் தோறும், ஆராத₄நோபகரணங்களைக்கொண்டு வந்து ஆஶ்ரயிப்பர்கள்—என்கிறார்.

---

43. அவ:— இஷ்டப்ராப்தி அநிஷ்டநிவ்ருத்திகளுக்காக ப்₃ரஹ்மருத்₃ரர்கள் ஒருகால் வணங்கிப்போவதோடு நில்லார்கள்; திருவாராத₄னகாலங்கள்தோறும், ஆராத₄நத்துக்கு உறுப்பான குடை முதலிய உபகரணங்களை தரித்துக்கொண்டு வந்து வணங்குவர்கள் என்கிறது.

வ்யா:— (மங்குல் தோய் சென்னி வடவேங்கடத்தானை) மேகமண்டலத்தளவும் உயர்ந்துள்ள திருமலையிலே எழுந்தருளியிருப்ப

வ்யா:— (மங்குலித்யாதி) மேக₄பத₂த்திலே செல்ல உயர்ந்த சிக₂ரங்களையுடைய திருமலையையுடையவனே. (காப் பணிவான் கங்குல்புகுந்தார்கள்) திருவந்திக் காப்பெடுப்பான் ஸமாராத₄நகாலந்தோறும் புகுந்தார்கள். (திங்களித்யாதி)

*உரை:— சந்த்₃ரனை ஜடையிலே எப்போதும் த₄ரித்துக் கொண்டிருக்கும் ருத்₃ரனும், திருநாபீ₄கமலத்தை ஜன்மபூ₄மி யாகவுடைய ப்₃ரஹ்மாவும். ப்ரேமபரவசராய்க்கொண்டு— திருவாராத₄நம் கண்டருளுகைக்கு உபகரணமான திருமுத் தின்குடை தொடக்கமானவற்றை பின்னே தாங்களும் கண்டுகளித்துக்கொண்டுபோம்படிச்சீடாக உயர எடுத்துக் கொண்டு,மேக₄பத₂த்திலேசென்று கிட்டுகிற உயர்ந்த சிக₂ரங் களையுடைத்தாய்,வடதிக்கிலேயுளதிருமலையிலே எழுந்தருளி யிருக்கிற ஸர்வேஶ்வரனைத் திருவந்திக்காப்பெடுத்து ஸேவிக் கைக்காக ஸந்த்₄யாகாலத்திலே வந்து புகுந்தார்கள். "ஊஸ்ரீ*

வனை. நிலத்திலே கால்தோயப்பெறாத தேவர்க்கும் ஸுலபனாகைக் காக அவர்களுடைய பத₃ங்களையும் தொட்டு நிற்கும் திருமலையிலே எழுந்தருளியிருக்கிறபடி. (காப்பணிவான் கங்குல் புகுந்தார்கள்) திருவந்திக்காப்பெடுப்பதற்காகக் காலை மாலைகளிலே புகுந்து போருவர்கள். இவர்கள் தான் யாரென்னில்,—(திங்கள் சடையேற வைத்தானும்) த₃க்ஷப்ரஜாபதியின் சாபத்தாலே கலைகுறைந்து வந்து ஶரணமடைந்த சந்திரனைத் தலைமீதுகொண்டு ரக்ஷித்த ருத்₃ரனும். ரக்ஷகராக ப்ரஸித்₃தி₄பெற்றவர்களும் தங்களுடைய ரக்ஷகத்வத்தை நிலைநிறுத்திக்கொள்வது இத்திருமலையில் புகுந்தே என்று பா₄வம். (தாமரை மேலானும்) திருநாபிக்கமலத்திலே பிறந்து, படைக்கும் தொழிலிலே ஈடுபட்டிருக்கும் பிரமனும், (திங்கள்...மேலானும்) (சந்திரனை) ஏறவைத்தவனோடு, (தாமரையில்) ஏறியிருப்பவனோடு வாசியற இவனைத் தொழப்புகுவர். (குடையேறத் தாங்குவித்துக் கொண்டு புகுந்தார்கள்) திருமுத்துக்குடை முதலான ஆராத₄ந உபகரணங்களைத் தாங்கிக்கொண்டு புகுவர்கள். இங்கு குடை யைச் சொன்னது சாமரம் முதலிய மற்ற ஆராத₄ந உபகரணங்க ளுக்கும் உபலக்ஷணம். (தாங்குவித்துக்கொண்டு) தாங்கிக்கொண்டு என்றபடி. இப்பொருள் "திருமுத்துக்குடை முதலானவற்றை த₄ரித்துக்கொண்டு" என்னும் வ்யாக்யான ஸ்ரீ ஸூக்திக்குப்

சந்த்₃ரனை ஜடையிலே த₄ரித்த ருத்₃ரனும் தாமரைப்பூவை ஜந்மமாகவுடைய ப்₃ரஹ்மாவும் திருமுத்துக்குடை முதலான வற்றைத் தரித்துக்கொண்டு கங்குல் புகுந்தார்கள். 43.

44. கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய்
தண்ட வரக்கன்தலை தாளால்—பண்டெண்ணிப்
போம்குமரன் நிற்கும் பொழில்வேங்கட மலைக்கே
போங்குமர ருள்ளீர் புரிந்து.

பதவுரை:— குமரர் உள்ளீர் — கிழத்தனமற்றவர்களே! பண்டு — முன்பொருகால், குடங்கால்மேல் — மடியிலே, கொண்டுவைத்த குழவி ஆய் — எடுத்துவைக்கும் சிறு குழந்தையாய்க் கொண்டு தண்டம் அரக்கன்—தண்டிக்கத் தகுந்தவனான இராவணனுடைய, தலை—பத்துத் தலைகளை

*धर्मवीर्येण यथावत्संप्रपश्यसि" (தத்ஸர்வம் த₄ர்மவீர்யேண யதா₂வத் ஸம்ப்ரபஶ்யஸி) என்கிறபடியே ப்₃ரஹ்மாதி₃கள் சூ₂த்ரச₂த்₃ர யுபகரணங்களைக் கொண்டுவருகிறதும் திருவந்திக்காப்பிடுகிறதும் கூடநின்று கண்டாற்போலே ஸாக்ஷாத்கரித்து அருளிச்செய்கிறார். 43.*

பொருந்தியது. (ஏறத்தாங்குவித்துக்கொண்டு) "பின்னே தாங்களும் கண்டு களித்துக்கொண்டு போம்படிக்கீடாக உயர எடுத்துக் கொண்டு" என்று அப்பிள்ளையுரை. "தாம் குவித்துக்கொண்டு" என்று பிரித்து குடை முதலான உபகரணங்களைத் தாமே மிகவும் சேகரித்துக்கொண்டு என்றும் பொருளுரைப்பதுண்டு. (கங்குல் புகுந்தார்கள்) ஸந்த்₄யா காலந்தோறும் புகுவர்கள். "ஸ்ரீராமனின் எல்லாச் செயல்களையும் த₄ர்மவீர்ய ஜ்ஞாநத்தாலே உள்ளபடி காண்பாய்" என்று பிரமனிடம் வரம்பெற்ற வால்மீகி கண்டாற் போலே எம்பெருமானும் மயர்வறமதிநலமருளப்பெற்ற இவரும் கண்டு அருளிச்செய்கிறார். "இரண்டாமடியில் 'புகுந்தார்கள்' என்று இறந்தகாலமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் 'நித்யமாகப் புகுந்துகொண்டிருக்கின்றனர்' என்று நிகழ்காலமாகப் பொருள் கொள்ளக் குறையில்லை. 'விரைவினு மிகவினுந் தெளிவினுமியல்பி னும், பிறழவும் பெறூஉமுக் காலமுமேற்புழி' என்ற நன்னூற் சூத்திர முணர்க" என்ற தீபிகையுரையை அநுஸந்திப்பது. 43.

யும். தாளால்—திருவடியாலே எண்ணி—கீறி எண்ணிக் காட்டிவிட்டு, போம்-அந்தர்த்தாநமடைந்தவனான, குமரன்—நித்யயௌவனமுடையனான எம்பெருமான். நிற்கும்—நிற்குமிடமான. பொழில் வேங்கடம் மலைக்கே—சோலைகள் சூழ்ந்த திருமலைக்கே, புரிந்து போம்—ஆசைகொண்டு செல்லுங்கோள்.

பெரி-அவ:—(கொண்டு) அறிவுடையாரும் அறிவுகெடும் தசையில் ஹிதைஷியாய் ரக்ஷிக்குமவன் நிற்கிற திருமலையிலே படுகரணரானபோதே சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

---

அவ:— அறிவுடையாரும் மேல்வரும் அனர்த்தமறிந்து பரிஹரிக்கமாட்டாமல் கலங்கி, அனர்த்தத்தை விளைத்துக் கொள்ளப் புகுந்த தஶையிலும் ஹிதைஷியாய் ரக்ஷிக்கும் ஸர்வேஶ்வரன் நிற்கிற திருமலையிலே கரணபாடவமுள்ள போதே சென்று ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

---

44. அவ:— 'இப்படி ப்ரஹ்மருத்ரர்கள் இவனை வணங்குகைக்குக் காரணமென்' என்ன, 'அறிவுடைய அவர்களும் அறிவுகெடும் போது அவர்களுக்கு நன்மைசெய்ய விரும்பி ரக்ஷிப்பவனன்றோ இவன்; அவன் நிற்கும் திருமலையிலே சக்தியுள்ளபோதே சென்றுவணங்குங்கள்' என்கிறார்.

வ்யா:—(கொண்டு....குமரன்) இந்த விருத்தாந்தம்

"ஆமே அமரர்க் கறிய அது நிற்க,
நாமே அறிகிற்போம் நன்னெஞ்சே—பூமேய
மாதவத்தோன் தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடியை
பாதமத்தால் எண்ணினான் பண்பு"

என்று முதல் திருவந்தாதியிலும்,

"ஆய்ந்த அருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில்
வாய்ந்த குழவியாய் வாளரக்கன்—ஏய்ந்த
முடிப்போது மூன்றேழென்றெண்ணினான் ஆர்ந்த
அடிப்போது நங்கட்கரண்"

வ்யா:— (கொண்டித்யாதி) எடுத்து மடியிலே வைக்கும் பிள்ளையாய், த3ண்ட்3யனான ராக்ஷஸன் தலை பத்தும் அறுக்கப் படும் என்று திருவடிகளாலே கீறிக்காட்டி அந்தர்த்3தா4நம்

---

உரை:— ப்3ரஹ்மா தன்னை ஆஶ்ரயித்த ராவணனுக்கு வரம்கொடுப்பதாக உத்3யோகி3க்கிற த3சையிலே, எடுத்து மடியிலே வைத்துக்கொள்ளப்பட்ட முக்3த4ஶிஶுவான வடிவை உடையனாய்க்கொண்டு—அநீதியிலே கைவளருகை யாலே சித்ரவத4ம்பண்ணி த3ண்டி3க்கைக்கு யோக்3யனான ராவணனுடைய தலைகளை முன்பு ஒருநாளிலே இவை அறுப்புண்ணும் தலைகள் என்னுமிடம்தோற்ற அவனுக்கும் தெரியாதபடி திருவடிகளாலே கீறி எண்ணிக்காட்டிப் போன ஆஶ்ரிதவிஷயத்தில் ஹிதகாமனான முக்3த4ன் வர்த்

---

என்று மூன்றுந்திருவந்தாதியிலும் முதலாழ்வார்களால் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. இராவணன் கடுந்தவம் செய்து பிரமனைக் கண்டு வரம் வேண்டிக்கொள்ளும்போது, ஸர்வேஶ்வரன் ஒரு குழந்தை வடிவாய்ப் பிரமன் மடியிலே தூங்குவது போலே கிடந்து. இவன் த3ஶகண்ட2னகையாலே-பத்து தலைகளையுடையவனகையாலே-லோக கண்டகனய் விளங்குவான் என்று அறிவிப்பதற்காகவும், தான் ராமனயவதரித்து இவனுடைய தலைகளைக் கிள்ளியெறியப் போவதை உணர்த்துவதற்காகவும் தன் திருவடிகளாலே ராவணனுடைய பத்துத் தலைகளையும் கீறி எண்ணிக்காட்டி மறைந்தான் என்னும் விருத்தாந்தம் இங்கு அநுஸந்திக்கப்படுகிறது. இவ் விருத்தாந்தத்திற்கு இதிஹாஸபுராணங்களில் மூலமிருப்பதாகத் தெரியவில்லை. ஆழ்வார்கள் தம் மயர்வற்ற மதிநலத்தாலே ஸாக்ஷாத்கரித்ததாயிருக்கத்தகும். (கொண்டு குடங்கால் மேல் வைத்த குழவியாய்) மடியின்மேல் எடுத்து வளர்க்கும் சிறு குழந்தையாகி. (தண்ட அரக்கன்...) த3ண்ட்3யனான ராக்ஷஸன் இவன், என்னும் பிறிதொரு காலத்திலே தலையறுபட்டு தண்டிக்கப் படப்போகிறன் என்று காட்டுவதற்காக இராவணனும் உணராத படி அவன் தலையைத் தாளாலே கீறி எண்ணிக்காட்டினன் என்று பொருள். (பண்டெண்ணிப்போம் குமரன் நிற்கும்) பிரமனின் நலங்கருதி, முன்னொரு காலத்தில் இப்படித் தலையெண்ணி மறைந்த பாலனான ஸர்வேஶ்வரன் நிற்குமிடமான. (பொழில்

பண்ணின முக்₃த₄ன் நிற்கும் திருமலைக்கே கால் நடையாடும் போதே ஆஶ்ரயித்துப்போருங்கள். 44.

45. புரிந்து மலரிட்டுப் புண்டரீகப் பாதம்
பரிந்து படுகாடுநிற்ப—தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு.

பதவுரை:— புண்டரீகம் பாதம்—*திருவடித்தாமரைகளில்.* புரிந்து—*அன்புபூண்டு.* மலர் இட்டு—*புஷ்பங்களைப் பணிமாறி* பரிந்து—*மங்க₃ளாஶாஸநம் பண்ணி.* படு காடு நிற்ப—*வெட்டி வீழ்த்தின மரங்கள்போலே வணங்கிநிற்கும்படியாக,* எங்கும்—*ஸகல ப்ரதே₃சங்களிலும்,* தெரிந்து—*விளங்கி.* தான் ஓங்கி நின்றான்—*கு₃ணங்களால் பெருமைபெற்று எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுடையதாய்,* தண் அருவி வேங்கடமே—*குளிர்ந்த அருவிகளையுடைத்தான திருமலையே,* வானோர்க்கும்—*நித்யஸூரிகளுக்கும்,* மண்ணோர்க்கும்—*இவ்வுலகத்தவர்க்கும்,* வைப்பு—*நிதி₄யாயிருக்கும்.*

---

*திக்கும் திருச்சோலைகளையுடைத்தான திருமலைக்கே படுகரணராய் இளமைகுன்றாத பருவத்தையுடைய புருஷர்களடங்கலும் அபி₄முக₂ராய்க்கொண்டு சடக்கெனப் போங்கோள்.* 44.

---

வேங்கட மலைக்கே) சோலைகள் சூழ்ந்த திருமலைக்கே. (குமரருள்ளீர் புரிந்து போம்) * முற்றமூத்துக்கோல் துணையா முன்னடி நோக்கி நடக்கும் தசை வருமுன்னே விரும்பிப்போவீர்களாக. கிழத்தனம் வந்துவிட்டால் திருமலையில் ஏறிச்செல்வது இயலாத காரியமாகையால் சக்தியுள்ளபோதே சென்று வணங்குமின்கள் என்கிறார். (குமரருள்ளீர்) "பா₃ல்யேந திஷ்டா₂ஸேத்" [ப்₃ரஹ்மஜ்ஞானியானவன் குழந்தையைப் போலிருக்கக்கடவன்] என்ற ஶ்ருதி வாக்யத்தின்படி பரமாத்ம ஜ்ஞானிகள் என்றும் குழந்தையுள்ளம் படைத்தவராயிருப்பர் என்னும் உண்மையை உணர்த்துவதாகவும் கொள்ளலாம். (போம்) சடக்கெனச் செல்லுங்கள். 44.

பெரி-அவ:— (புரிந்து) வெறும் ஸம்ஸாரிகளுக்கேயன்று; நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யம் திருமலை என்கிறார்.

வ்யா:— (புரிந்தித்யாதி) நிரதிஶய போ₄க்₃யமான திருவடிகளிலே ஆத₃ரித்துப் புஷ்பாதி₃களையிட்டு ஸ்நேஹித்துப் படுகாடு

---

அவ:— உப₄யவிபூ₄தியிலுள்ளார்க்கும் திருமலையே ப்ராப்யமென்கிறார்.

உரை:— ஸாத₃ரமாக ஆஶ்ரயணோந்முக₂ராய்க்கொண்டு தாமரைப்பூப்போலே நிரதிஶயபோ₄க்₃யமான திருவடிகளிலே செவ்விப்பூக்களைப் பணிமாறி, ப்ரேமயுக்தராய்க்கொண்டு பரவஶகா₃த்ரராய்க் கால்வாங்கமாட்டாதே ஸர்வரும் ஆஶ்ரயித்துநிற்கும்படியாக விஶத₃தமமாக ஸர்வப்ரதே₃ஶத்திலும் ப்ரகாஶித்துத் தான் ஶீலாதி₃கு₃ணைத்தர

---

45. அவ:— "சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை" என்றும், "பொழில்வேங்கட மலைக்கே போம்" என்றும் ஸம்ஸாரிகளுக்கு ப்ராப்யம் திருவேங்கடமலையென்றார் கீழ்ப் பாசுரங்களில். ஸாமாந்யரான ஸம்ஸாரிகளுக்குமட்டுமோ ப்ராப்யம்? விலக்ஷணரான நித்யஸூரிகளுக்கும் ப்ராப்யமாயிருப்பது இத் திருமலையன்றோ என்கிறார்.

வ்யா:— (புண்டரீகப்பாதம்) "விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ:" [விஷ்ணுவினுடைய மேலான திருவடிகளில் மது₄தா₄ரைகள் ஒழுகா நிற்கின்றன] "தேனே மலரும் திருப்பாதம்" [திருவாய் 1-5-8] என்கிறபடியே தேனொழுகும் தாமரைபோலே மிகவினியதாயிருக்கும் திருவடிகளில். (புரிந்து மலரிட்டு) விரும்பிப் புஷ்பம் முதலியவற்றை ஸமர்ப்பித்து. மலர் என்றது நீர் சுடர் தூபம் முதலிய அனைத்துக்கும் உபலக்ஷணம். (பரிந்து படுகாடு நிற்ப) 'அபாய ப₃ஹுளமான தேஶமாயிற்றே; என் வருகிறதோ' என்று ப₄க்தர்கள் பரிந்து, வெட்டி வீழ்த்தின மரக்காடுபோலே பெயராமல் வணங்கி நிற்க. (தெரிந்து எங்கும் தானோங்கி நிற்கின்றான்) தன்னுடைய உயர்வானது நன்கு தெரியும்படியாக எல்லாவிடத்திலும் ஶீலம் (நீர்மை) முதலிய குணங்களால் குறைவற்று உயர்ந்து நிற்பவனுடைய; "கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்" [திருவாய் 4-5-10] என்கிறபடியே நிற்பவனுடைய. (படுகாடுநிற்பத் தெரிந்தெங்கும் தான் ஓங்கிநிற்கின்றான்) விழுந்து கிடக்கும்

கிடக்கும்படியாக விஸ்தீர்ணமாக எங்கும் குறைவற்றவனுடைய ஸ்ரமஹரமான திருமலையே உபயவிபூதிக்கும் ப்ராப்யம். 45.

46. வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்
றெப்பொழுதும் கைநீட்டும் யானையை—எப்பாடும்
வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே
நாடுவளைத் தாடுதுமேல் நன்று.

பதவுரை:— மா மதியை—'சிறந்த (இந்த) சந்திரனை, மாலுக்கு—திருவேங்கடமுடையானுக்கு. மணிவிளக்கு ஆ—மங்கள தீபமாக, வைப்பன் என்று—(திருமுன்பே) வைக்கக் கடவேன்' என்றெண்ணி, அந்த (சந்திரனைப் பிடிப்பதற்காக) எப்பொழுதும் — எப்போதும், கைநீட்டும் — உயரத் தூக்கின துதிக்கை தூக்கினபடியேயிருக்கிற, யானையை—ஒரு யானையைப் (பிடிப்பதற்காக). எப்பாடும் வேடு—வெளிப்புறங்களிலுள்ள வேடர். வளைக்க—சூழ்ந்துகொள்ள. குறவர்—(திருமலையிலுள்ள) குறவர்கள். வில் எடுக்கும்—(அவ்வேடரை எதிர்க்க) வில்லை எடுத்துக்கொள்ளுமிடமான, வேங்கடமே-திருமலையையே, நாடு-நாட்டிலுள்ளாரனைவரும், வளைத்து-பிரதக்ஷிணம் பண்ணி, ஆடுதும் ஏல்-(மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக)நர்த்தனம் பண்ணப்பெற்றால்,நன்று-நல்லது.

---

னாய் எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய குளிர்ந்த திருவருவிகளையுடைத்தான திருமலையே பரமபதவாஸிகளான நித்யஸூரிகளுக்கும், பூஸுரரான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் பரமப்ராப்யம். 45.

---

மரங்களின் நடுவே ஓங்கிநிற்கும் மரம்போலே விளங்குகிறபடி. "வ்ருக்ஷ இவ ஸ்தப்தः" [வணங்காத மரம்போலே நிற்கிறான் பரமபுருஷன்] என்று வேதங்களால் புகழப்படுபவனன்றோ. (தண்ணருவி வேங்கடமே) இவனுக்கும் இவனடியார்க்கும் ஸகல தாபங்களையும் போக்கும்படியான குளிர்ந்த அருவிகளையுடைய தேசம். (வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு) நித்யஸூரிகளுக்கும் இவ்வுலகத்தவர்க்கும் நிதிபோலே பரமப்ராப்யமாயிருக்கும். (மண்ணோர்) நிலத்தேவரான ஸ்ரீவைஷ்ணவர் என்றுமாம். 45.

பெரி-வ்யா:— ( வைப்பனித்யாதி ) சந்த்₃ரன் அணியனு யிருக்கையாலே ஸர்வேஶ்வரனுக்குத் திருநந்தாவிளக்காக வைப்பன் என்று ஒருகால் நீட்டிக் கிடையாதொழிந்தால் மீளவறியாதே, எப்போதும் கை நீட்டினபடியே அந்யபரமாய் நிற்கிற யானையைப் புறம்புள்ள வேடர் சூழ, திருமலையிலே

*அவ:— திர்யக்குக்களும் கிட்டி அடிமைசெய்ய ஆசைப் படும் திருமலையை நாட்டார் ப்ரத₃க்ஷிணாத்₃யநுகூலவ்ருத்தி களைப்பண்ணி ஆஶ்ரயிப்பர்களாகில் மிகவும் நல்லதென்கிறார்.*

உரை:— ஶ்லாக்₄யமான பூர்ண சந்த்₃ரனை ஆஶ்ரித வ்யாமுக்₃த₄னை திருவேங்கடமுடையானுக்கு அழகிய திரு நந்தாவிளக்காகத் திருமுன்பே வைப்பனென்று கருதிக் கொண்டு அவனைப் பிடிக்கைக்காக ஸர்வகாலத்திலும் துதிக்கையை நீட்டி அடிமைசெய்கையிலே அந்யபரமாய் நிற்கிற ஆனையைப் பிடிக்கைக்காக, எல்லாதிக்குக்களிலும்

46. அவ:— தன்னிடமுள்ள அறிவற்ற விலங்குகளும், அறி வில் தாழ்ந்த குறவர்களுங்கூட பா₄க₃வத்₃பா₄க₃வதர்களுக்குப் பணி செய்யும் பெருமைபெற்றிருக்கும் இத்திருமலையை நாடெல்லாம் ஆஶ்ரயிக்கவேண்டாவோ? என்கிறார்.

வ்யா:—(வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கு என்று எப்பொழுதும் கைநீட்டும் யானையை) வேங்கடத்திலுள்ள விலங்கின் ஸ்வபா₄வமிருக்கும்படியிது. வேங்கடத்து வாழ்கின்றதோர் யானை இரவிலே முழுநிலவைக் காண்கின்றது. மங்குல்தோய் சென்னி வடவேங்கடமாகையாலே அருகிலேயிருக்கும் சந்திரனை ஸர்வேஶ் வரனுக்கு நந்தாவிளக்காக வைக்கவேண்டுமென்று எண்ணித் தன் துதிக்கையை நீட்டுகிறது. ஒருமுறை நீட்டிக் கிடைக்காத போதிலும் பா₄க₃வத் கைங்கர்யத்திலுள்ள பேராசையாலே எப்பொழு தும் கைநீட்டிக்கொண்டே கிடக்கிறது. தே₃ஶவைப₄வத்தாலே வன விலங்குகளும் பரமபுருஷனிடம் பெருங்காதல் பெற்றுத்திரிகிறபடி. (எப்பாடும் வேடு வளைக்க) இந்த தே₃ஶத்தில் வஸிக்கப்பெறுமை யாலே ரஜஸ்தம:ப்ரசுரராய் வெளிப்புறங்களிலே வஸிக்கும் வேடர்கள், — ஆனைபிடிப்பதற்காக இங்கு வந்தவர்கள்—இந்த

வர்த்திக்கும் குறவர் வில்லெடுத்தபடி எதிர்க்கும் திருமலையை அறிவில்லாதாரோடு அறிவுடையாரோடு வாசியற எல்லாரும் ஆஶ்ரயிக்கப்பெறில் நன்று. 46.

---

வேடஜாதியானது பிறர்க்கிடமற வளைத்துக்கொள்ள, அங்கே வர்த்திக்கும் குறவரானவர்கள் அவர்களை நலிகைக்காகக் கையிலே வில்லை வாங்கிக்கொண்டு போரவதாக வொருப்படும் திருமலையையே ஜ்ஞாஜ்ஞவிபா4க3மற நாட்டிலுள்ள ப்ராணிகளடங்கலும் ப்ரத3க்ஷிணமாக வந்து ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்4ரமந்ருத்தம்பண்ணி ஆஶ்ரயிக்குமாகில் சாலவழகிது. 46.

---

யானையைக் கண்டதும் வளைத்துக்கொள்கின்றனர். திருமாலுக்குத் திருவிளக்காய் வைப்பதற்காகச் சந்திரனைப் பிடிக்கையிலே ஈடுபட்டு அந்யபரமாயிருக்கையாலே யானையும் இவர்கள் வளைத்துக்கொள்வதை அறியாமல் நிற்கின்றது. இனி, யானையின் கதியென்ன?- (குறவர் வில்லெடுக்கும்) அத்திருமலையிலே வாழும் குறவர்கள் அவ்வேடர்களை எதிர்த்துத் துரத்துவதற்காக வில்லையெடுக்கிறார்கள். இனி யானைக்கோர் தீங்குவர இடமில்லை என்று பா4வம், (எப்பாடும் வேடு-குறவர்) வேடர்களை 'எப்பாடுமுள்ள வேடர்கள்' என்று விஶேஷித்து, 'குறவர்' என்று விஶேஷணமில்லாமல் சொல்லுகையாலே திருமலையிலேயுள்ள குறவர்கள் என்று உணர்த்தப்படுகிறது. ப4க3வத்ஸந்நிதி4யில்லாத தே3ஶத்தில் வாழ்கையாலே வேடர்கள் தங்கள் ஜாதிக்கேற்பக் கொடுந்தொழில் புரிகிறார்கள். குறவர்களும் க்ரூரஜாதியிலே பிறந்தவர்களானாலும் தே3ஶவைப4வத்தாலே ஸத்வப்ரதா4னராயுள்ளனர்; தங்கள் ஶௌர்யத்தை பா4க3வத விரோதி4களான வேடர்களிடத்திலே காட்டுகின்றனர். (எப்பாடும் வேடு-குறவர்) ஜாதியின் க்ரௌர்யத்திலே வாசியில்லை; தே3ஶவைப4வம் ஸ்வபா4வத்தில் நெடுவாசியை உண்டுபண்ணியுள்ளது. (எப்பாடும் வேடு வளைக்க) 'எப்பாடும் வளைக்க' என்று கூட்டி நாற்புறமும் வளைத்துக்கொள்ள என்று பொருள் கொள்வாருமுண்டு. 'வளைக்க' என்பதிலிருந்தே 'நாற்புறமும் வளைத்துக்கொள்ள' என்னும் அர்த்த2ம் ஸித்3தி4க்குமாகையால் இது அஸ்வரஸம். 'புறம்புள்ள வேடர்' என்னும் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியோடும் பொருந்தாது. (வேடுவளைக்கக் குறவர் வில்

47. நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும்
பொன்னும் மணியும் முத்தமும் பூமரமும்—பன்மணிநீ
ரோடுபொருதுருளும் கானமும் வானரமும்
வேடுமுடை வேங்கடம்.

பதவுரை:— ஆளியும்—யாளிகளும். கோள் அரியும்—வலிமைமதங்கிய சிங்கங்களும், பொன்—பொன்களும். மணியும்—மாணிக்கங்களும். முத்தமும்—முத்துக்களும், பூமரமும்—பூத்த மரங்களும். பல்மணி நீரோடு பொருது உருளும் கானமும்—பலவகைப்பட்ட ரத்னங்கள் அருவிகளோடே கலந்து உருண்டு விழப்பெற்ற காடுகளும். வானரமும்-குரங்குகளும், வேடும்—வேடச்சாதியுமாகிற இவற்றை. உடை—உடையதான, வேங்கடம்—திருமலையானது. நல்மணிவண்ணன் ஊர்—நல்ல நீலரத்நம்போன்ற வடிவையுடையனான ஸர்வேஶ்வரனுடைய வாஸஸ்தாநமாகும்.

---

லெடுக்கும்) "வேடர்கள் யானையை வளைத்துக் கொள்ள, அந்த யானையை அடிப்பதற்காகக் குறவர்கள் வில்லை எடுக்கும்படியான" என்று அரும்பதவுரைகாரர் முதலானோர் பொருள் கொண்டனர். இப்பொருளில் தேஶவைபவம் வெளியிடப்படவில்லையாகையால் இது ஆழ்வார் உகந்ததன்று. "புறம்புள்ள வேடர் சூழ, திருமலையிலே வர்த்திக்கும் குறவர் வில்லெடுத்தபடி எதிர்க்கும்" என்று பெரியவாச்சான்பிள்ளை வேடர்களுக்கும் குறவர்களுக்குமிட்டிருக்கும் பரஸ்பர விலக்ஷணமான- (ஒன்றுக்கொன்று வேறுபட்ட)- விஶேஷணங்கள் நிரர்த்தகமாகிவிடும். மேலும், மாமுனிகளின் ஶிஷ்யரான அப்பிள்ளையும் "அவர்களை நலிகைக்காக" என்று தெளிவாக அருளிச்செய்தார்; ஆகையால் ஆழ்வாரும் ஆச்சான்பிள்ளையும் திருவுள்ளமுகந்த பொருள் நாம் இங்கு காட்டியபடியேயாகவேண்டும். (குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே நாடுமினோ த்து ஆடுதுமேல் நன்று) அறிவு குறைந்தவர்க்கும் பேரறிவு கொடுக்கும் வேங்கட மலையை அறிவில்லாதார் அறிவுடையார் ஆகிய அனைவரும் வலம் வந்து கூத்தாடினால் அது லோகக்ஷேமமாகும். (வேடு வளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே.... நன்று) வனவிலங்குக்கே ரக்ஷையுண்டாயிருக்கும் தேஶத்தில், மற்றுள்ளார்க்கு ரக்ஷையுண்டாகச் சொல்லவேணுமோ? 46.

பெரி-வ்யா:— (நன்மணி) ஸ்ரமஹரமான வடிவையுடைய வனுக்கு ரக்ஷணத்துக்குறுப்பாகையாலே திருமலையை ஊரென்கிறது. ரக்ஷணத்துக்குறுப்பாகையாலே திருவயோத்,

---

அவ:— ஸர்வேஸ்வரன் ப்ராப்யனுனவோபாதி அவன் விரும்பி வர்த்திக்கும் திவ்யதேசத்திலுள்ள சேதநாசேத நாத்மகமான ஸகலபதார்த்தங்களும் தமக்கு உத்தேஶ்யமா யிருக்கையாலே துறுப்புக்கூடாகத் திருமலையை மண்டி அநுபவிக்கிறார்.

உரை:— யாளியும், பிடுக்கையுடைத்தான ஸிம்ஹமும், பொன்னும், மாணிக்யங்களும், முத்துக்களும், புஷ்பிதமான வ்ருக்ஷங்களும், நாநாவிதமான ரத்னங்கள் திருவருவிகள்

---

47. அவ:— திருமலையிலேயுள்ள யானையொன்றின் பெருமை யைப்பேசினூர் கீழ்ப்பாட்டில். இப்பாட்டிலே இயற்கையில் அறிவு குறைந்த பற்பல பொருள்கள், திருமலையிலே நித்யஸூரிகளைப் போலே பேரறிவுபெற்று பகவானுக்குக் கைங்கரியம் செய்யும் பரிசைப் பேசுகிறார்.

வ்யா:— (நன்மணிவண்ணனூர்) நல்லதான நீலமணிபோன்ற திருநிறத்தையும் ஸ்வபாவத்தையும் உடையவனுடைய ஊர். வண்ணம்:—நிறம்; ஸ்வபாவம். நிறத்திலும், விலைமதிப்பற்றதா யிருக்கை, முந்தானையிலே முடிந்து ஆளலாம்படியான ஸௌலப்ய யத்தை உடைத்தாயிருக்கை, இழந்தால் உயிர்வெறுக்கும்படியாக வும், உண்டென்ன உயிர்தரிக்கும்படியாகவுமிருக்கை, உடையவன் காலிலே அனைவரும் விழும்படியிருக்கை முதலான தன்மைகளிலும் மணியை ஒத்திருக்கிறுனையாலே மாதவன் மணிவண்ணன் எனப்படுகிறுன். (நன்மணிவண்ணன்) உண்மையில் உலகிலுள்ள மணிகளெல்லாம் இவனுடைய தன்மைகளுக்கு ஏகதேசமும் ஒப்புமையாலே ' நன்மணிவண்ணன் ' என்கிறார். கடினமா யிருக்கை, உருவில் சிறிதாயிருக்கை முதலான மணியின் தோஷங் கள் இவனுக்கில்லையன்றே. (ஊர்) "கானமும் வானரமும் வேடும் உடைவேங்கடம்" என்று சொல்லப்புகும் இவர் திருமலையை ஊர் என்னலாமோ? மலையென்றே காடென்றே சொல்லுவ தன்றே பொருத்தமானது என்னில்: ராஜாவாயிருப்பவனுடைய

யையிலும் காட்டை விரும்பினாரிறே பெருமாள். அவர் விரும்பின காட்டை விரும்பிப்போகிற இளையபெருமாளை அக்காட்டோபாதி இப்படை வீட்டையும் நினையுங்கிடீரென்றாரிறே திருத்தாயார். [“रामं दशरथं विद्धि” (ராமம் த$_3$ஶரத$_2$ம் வித்$_3$தி$_4$)] “वध्यतां बध्यतां” (வத்$_4$யதாம் ப$_3$த்$_4$யதாம்) என்று அருவராதே உங்கள் தமயனாரோபாதியாக உங்களையரையும் நினையுங்கிடீர். [“मां विद्धि जनकात्मजां” (மாம் வித்$_3$தி$_4$ ஜநகாத்

---

*நீரோடே பொருது கண்டவிடமெங்கும் உருண்டுவந்து விழுகிற காடுகளும், நீரைக்கண்டால் வெருவி மரங்களிலே ஏறக்கடவ குரங்குகளும் வேடஜாதியுமாகிற இந்த நிரதிஶயஐஶ்வர்யத்தையுடைத்தான திருமலையே — அங்குத்தை நிலமிதியாலே பழிப்பற்ற நீலரத்னம்போலே ஒளிவிடுகிற*

---

ரக்ஷணத்துக்கு உறுப்பாயிருப்பது ஊராகிறது. ரிஷிகளை ராக்ஷஸ ப$_4$யத்திலிருந்து காப்பாற்றி ரக்ஷிப்பதற்கு உறுப்பாகையாலே அயோத்தியாகிற தலைநகரைக்காட்டிலும் காட்டை மிக விரும்பிச் சென்றான் ராமபிரான். அப்போது காடு நாடாகியது; நாடு காடாகியது. அப்பிரான் செல்லும் காட்டை விரும்பிச்செல்லும் லக்ஷ்மணனைப்பார்த்துத் தாயாரான ஸௌமித்திரை "அயோத்$_4$யாமடவீம் வித்$_3$தி$_4$" [ரா-அ-40.8] [அயோத்தி நகரைக் காடாக அறிவாயாக] என்று-அக்காட்டிலேயுள்ள ப்ரீதியை இந்நகரிலேயும் வைக்கவேண்டும் — என்று வேண்டிக்கொண்டாள். "ராமம் த$_3$ஶரத$_2$ம் வித்$_3$தி$_4$" [ரா-அ 40.8] [தசரதரை ராமபிரானாக நினைப்பாய்] "கொல்லவேண்டும் கட்டவேண்டும்" என்று தசரதரை வெறுக்காமல் உன் தமயனாரைப்போலே தந்தையையும் நினைக்க வேண்டும் என்று யாசிக்கிறாள். "மாம் வித்$_3$தி$_4$ ஜநகாத்மஜாம்" [என்னை சீதா பிராட்டியாக நினை]' இத்தந்தையின் மனைவியன்றோ இவள்' என்று அவர்மேலுள்ள கோபத்தாலே என்னையும் வெறுக்காதே. உன் தமயனுக்கினிய சீதையைப்போலே என்னையும் நினைக்க வேணும் என்று இரக்கிறாள். ஆக. இந்த ஶ்லோகத்தாலே ரக்ஷணத்துக்கு உறுப்பாகுமிடமே ஊர் என்றதாகிறது. அந்த லக்ஷணத்தின்படி பார்த்தால் தாழ்ந்தார்க்கும் முகங்கொடுத்து அவர்களை ரக்ஷிக்கும் இத்திருமலையே ஊர் எனத்தகுந்ததாகும். ரக்ஷிக்கப்படுமவர்களைச் சொல்லுகிறது அடுத்தபடியாக:- (ஆளியும்

மஜாம்)] உங்கள் தமயனுருகந்த பிராட்டியோபாதி என்னையும் நினையுங்கிடீரென்கிருர். (ஆளியுமித்யாதி) திருமலையில் வர்த்திக்கும் நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. 47.

வடிவையுடைய திருவேங்கடமுடையான் ரக்ஷ்யவர்க்கங்களைக் குறைவற ரக்ஷிக்கைக்குப் பாங்கான தேசமென்று விரும்பி வர்த்திக்கிற ஊர். 47.

கோளரியும்) யாளிகளும் சிங்கங்களும் தங்களுக்கிடையேயுள்ள இயற்கையான வைரத்தை மறந்து ஒன்ருக ஸர்வேஸ்வரனுக்குப் பணிசெய்து நிற்கிறபடி. (பொன்னும் மணியும் முத்தமும் பூமரமும் பன்மணிநீரோடு பொருதுருளும கானமும் வானரமும் வேடும்) அறிவு மழுங்கிக்கிடக்கும் பொன்னும் மணியும் முதலானவையும் பகவத்ப்ரபாவத்தாலே பரமபுருஷனுக்குப் பணிசெய்யும்படியான பேரறிவுபெற்று விளங்குகிறபடி. அறிவுடையாரும், "வேங்கடத்துக் கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே" என்றும், "மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனவேனே" என்றும் "செண்பகமாய் நிற்கும் திருவுடையேனவேனே" என்றும், "தம்பகமாய் நிற்கும் தவமுடையேனவேனே" என்றும் பிரார்த்திக்கும்படியன்றே இவற்றின் பெருமையிருப்பது. (பொன்னும்...வேடுமுடை வேங்கடம் நன்மணிவண்ணனூர்) அறிவுகுறைந்தார்க்கும் முகங்கொடுத்து ரக்ஷிக்குமிடமான இதுவே அவன் உகந்து வாழும் ஊராகும். தன்னேடொத்தவர்களான நித்யமுக்தரை ரக்ஷிக்குமிடமான பரமபதத்திலும், நித்ய ஸம்ஸாரிகளை நித்யஸூரிகளாக்கும் இவ்விடமே சிறந்ததன்ரே. (ஆளியும்...) "திருமலையில் வர்த்திக்கும் நித்யஸூரிகளைச் சொல்லுகிறது" என்ற வ்யாக்யான ஸூக்திக்கு இரண்டுவிதமாகக் கருத்துரைக்கலாம். திருமலையில் வாழும் விலங்கு முதலானவையும், நித்யஸூரிகளைப்போலே பகவத்கைங்கர்யருசியைப்பெற்று விளங்குகின்றன என்பது ஓர் கருத்து.

"அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரய: ஸ்ரஸ்தபந்தா:
விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம।
மஹித மநுஜதிர்யக் ஸ்தாவரத்வா: ப்ரயந்தே
ஸாநியதமிதி ஹ ஸ்ம ப்ராஹுரேப்யோ நம: ஸ்தாத் ॥"

[இயற்கையான ஶேஷத்வத்தை இழவாத நித்யஸூரிகளும், ஸம்ஸார பந்தம் அறுந்த முக்தர்களும், பாவம் நீங்கிய கடைசி

48. வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்—வேங்கடமே
தானவரை வீழத்தன் ஆழிப்படை தொட்டு
வானவரைக் காப்பான் மலை.

பதவுரை:— விண்ணோர்—நித்யஸூரிகள். மெய்ம்மையால்—உண்மையான ப₄க்தியுடனே, தொழுவதுவும்—ஆஶ்ரயிப்பதுவும், வேங்கடமே—திருமலையையே; மெய் வினை—(அநுப₄வியாமல்) அழியாத பாவங்களையும், மெய் நோய்—உடம்பைப்பற்றின நோய்களையும், தீர்ப்பதுவும்-போக்கடிக்க வல்லதும். வேங்கடமே—திருமலையே; தானவர் வீழ—அசுரர்கள் மாளும்படி, தன் ஆழி படைதொட்டு—தனது சக்ராயுத₄த்தைப் பிடித்து, வானவரை—தேவர்களை. காப்பான்—காத்தருளும்எம்பெருமானுடைய. மலை—திருமலை. வேங்கடமே—திருவேங்கடமேயாம்.

---

அவ:— நித்யஸூரிகளோடு ஸர்வேஶ்வரனோடு வாசியற ஸர்வர்க்கும் திருமலையே ப்ராப்யமென்கிறார்.

---

உடம்பை உடைய முமுக்ஷுக்களுமாகிய இவர்கள், மானிடப் பிறவியையும், பசுபக்ஷிப் பிறவியையும், ஸ்தா₂வரப் பிறவியையும் விரும்பினவர்களாய்க் கொண்டு ஸ்ரீரங்கத்தை எப்போதும் ஆஶ்ரயித்துள்ளனர் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். இவர்களின் பொருட்டு நமஸ்காரம் ஆகுக.] என்று பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் [1-33] சொல்லியபடியே நித்யஸூரிகளே ப₄க₃வத் ஸௌலப்₄யத்தை அனுப₄விப்பதற்காகப் பொன் மணி முதலியவையாக வடிவெடுத்துள்ளனர் என்பதும் ஒரு கருத்து 47.

48. அவ:—நித்யஸூரிகள் தொழுவதுவும், நித்யஸம்ஸாரிகளின் நோய்களைத் தீர்ப்பதுவும் திருமலையே என்கிறார்.

வ்யா:— (வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்) "மெய்ம்மையால் தொழுவதுவும்" என்கையாலும், "வானவரைக் காப்பான்" என்று தே₃வர்களைத்தனியாக எடுக்கையாலும், இங்கு "விண்ணோர்" என்று நித்யஸூரிகளைச் சொல்லுகிறது. (மெய்ம்மையால் தொழுவதுவும்) தொழுவதிலே, மெய்யாகத்தொழுவ

பெரி-வ்யா:— (வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்) திருமலை ப்ராபகமாக, வேறொன்று ப்ராப்ய மாகையன்றிக்கே, இதுதானே ப்ராப்யமாக ஆஶ்ரயிப்பர்கள் நித்ய ஸூரிகள். (வேங்கடமித்யாதி) "அவஶ்யமநுபோக்தவ்யம்" (அவஶ்ய மநுபோ₄க்தவ்யம்)என்கிற பாபத்தைப் போக்குமதுவும் திருமலை.

---

*உரை:— அஸ்ப்ருஷ்டஸம்ஸாரக₃ந்த₄ரான நித்யஸூரி கள். ஶ்ரீலாதி₃கு₃ணாநுப₄வத்துக்கு ஏகாந்தமாகையாலே மெய்யான ப்ராப்யமாக நினைத்து எப்போதும் ஆஶ்ரயிப்பதும் திருமலையே. ஸம்ஸாரிகளுடைய அநு ப₄வைகவிநாஶ்யமாம்படி மெய்யான ப்ராப₄ல்யத்தை உடைத்தான கர்மங்களையும், தத்கார்யமான வ்யாதி₄ களையும் ஸவாஸனமாகப் போக்குவதும் திருமலையே.*

---

தென்றும், பொய்யாகத் தொழுவதென்றும் இரண்டுண்டு போலே காணும்! "கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும் அடிக்கமல மிட்டேத்துமங்கு" என்று கர்மவஶ்யரான தே₃வர்கள் தொழும்போது அவனை உபாயமாகப்பற்றினபோதிலும், தங்கள் பதவிமுதலான ப₂லன்களை ப்ராப்யமாக நினைத்துக்தொழுவர்கள். இது பொய்யான தொழுகையாகும். நித்யஸூரிகளோவெனில் அவன் உகந்து வாழும் இத்திருமலையையே உபாயோபேயங்களாகக் கொண்டு தொழுவர். இது மெய்யான தொழுகையாகும், வேறொன்றை நினைத்து அவனைத்தொழுமவர்களுக்கு பூ₄ர்வவாஸத்₃தி₄யில்லாமை யாலே அவர்களுடைய தொழுகை பொய்யானதாகும். அவனையே எல்லாமாகநினைத்துத் தொழுவாருடைய அக்ருத்ரிமமான தொழு கையே மெய்யானதாகும். (வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பது வும்) இப்படி நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமாயிருப்பதோடன்றியில், நித்ய ஸம்ஸாரிகளின் அநிஷ்டங்களையும் தீர்க்கிறது திருமலையே. (மெய்வினை) அநுப₄வித்தாலல்லது அழியாத வலிய பாபங்கள்.

"அவஶ்யமநுபோ₄க்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபா₄ஶுப₄ம்।
நாபு₄க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி॥"

[ப்₃ரஹ்மவைவர்த்தம்-ப்ரக்ருதிக₂ண்டம் 26-70]

*[ஜீவன் தான் செய்த புண்யபாபங்களை அநுப₄வித்தே தீர்க்க வேண்டும். நூறுகோடி கல்பகாலமானாலும் கர்மம் அநுப₄வியா மல் கழியாது.]* என்கிற பாபங்களைப் போக்குவதும் திருமலையே.

(வேங்கடமித்யாதி) அஸுரஜாதி தரைப்படும்படிக்கீடாகத் திருவாழியைப் பிடித்து தே₃வஜாதிக்குக் குடியிருப்புக் கொடுத்தவனுக்கு ஊரும் திருமலையே. 48.

49. மலையாமை மேல்வைத்து வாசுகியைச் சுற்றி
தலையாமை தானொருகை பற்றி—அலையாமல்
பீறக் கடைந்த பெருமான் திருநாமம்
கூறுவதே யாவர்க்கும் கூற்று.

---

*ப்ரதிகூலரான அஸுரஜாதியானது தரைப்பட்டு முடியும் படியாகத் தனக்கு அஸாத₄ரணமான திருவாழியை த₄ரித்து அநுகூலரான தே₃வர்களை ரக்ஷிக்கும் ஸ்வபா₄வனான ஸர்வேஶ்வரன் விரும்பி வர்த்திக்கும்மலை திருவேங்கடமே. 48.*

---

(நோய்தீர்ப்பதுவும் வேங்கடமே) இப்பாபங்கள் காரணமாக வரும் வியாதிகளைத் தீர்ப்பதுவும் திருமலையே. (மெய்வினைநோய்...) ஶரீரஸம்ப₃ந்த₄மடியாகவரும் பாபங்களையும் வியாதிகளையும் தீர்ப்பதும் திருமலையே என்றுமாம். 'மெய்—*சரீரம்.* (வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்) "வேங்கடம்" [பாபங்களைக் கொளுத்துவது] என்னும் இதனுடைய பெயரே இது மெய்வினைநோய் தீர்க்கவல்லது என்று உணர்த்துகிறதன்றோ. "வேம்கடங்கள் மெய்மேல் வினைமுற்றவும்" என்றார் நம்மாழ்வாரும். 'வினை' என்று பாபங்களையும், 'நோய்' என்று வினை காரணமாக வரும் வியாதிகளையும் குறிப்பதாகக் கொள்ளலாம். அன்றிக்கே, போய பிழையும் புகுதருவான் நின்றனவுமான பூர்வாக₄ உத்தராக₄ங்களைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (வேங்கடமே தானவரைவீழத்... வானவரைக் காப்பான்மலை) அஸுரர்கள் விழும்படியாகத்தன் சக்ராயுத₄த்தை த₄ரித்து தே₃வர்களுக்குக் குடியிருக்குமிடங்கொடுத்துக் காப்பவனுடைய மலையும் திருமலையேயாகும். (ஆழிப்படை தொட்டு) சக்கரத்தாழ்வானைச் சுழற்றவேண்டியதுமில்லை; தொடுவதே போதுமானது—அசுரர் கூட்டங்கள் அழிவதற்கு என்று பா₄வம். திருமலையின் மெய்வினை நோய்தீர்க்கும் தன்மையும், அஸுரராக்ஷஸர்களை அழித்த விருத்தாந்தங்களும் வேங்கடாசல மாஹாத்மியத்தில் பரக்கக் காணலாம். 48.

பதவுரை:— மலை—மந்தரபர்வதத்தை. ஆமை மேல் வைத்து—கூர்மரூபியான தன்மேல் வைத்து. வாசுகியை—வாஸுகி நாகத்தை, சுற்றி—(கடை கயிருகச்) சுற்றி, ஆமைதான்—கூர்மரூபியாகத் திருவவதரித்த தானே, தலை ஒரு கை பற்றி — மலையினுச்சியை ஒருகையாலே பிடித் தழுக்கி, அலையாமல்—நீர் வெளியில் புரளாமல். *பீற—(அமுதம்) புறப்படும்படியாக, கடைந்த—(கடலைக்) கடைந்தருளின, பெருமான்—எம்பெருமானுடைய, திரு நாமம்—திருநாமங்களை. கூறுவதே—வாய்விட்டுச் சொல்லு வதே. யாவர்க்கும்—எல்லார்க்கும். கூற்று—வாய்ப் பேச் சாகக் கடவது.

பெரி-வ்யா:— (மலையாமையித்யாதி) கூர்மரூபியான தன் மேலே மலையைவைத்து வாஸுகியைச்சுற்றி. (தலையாமை

---

அவ:— உடம்பு நோவக் கடல்கடைந்து ஆச்ரிதர் அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுமவன் நீர்மையின் ஏற் றத்தை அருளிச்செய்கிருர்.

உரை:—மந்தரபர்வதத்தைக் கீழ் ஆழவிழாதபடி ஆதார கூர்மமான தன் மேலே வைத்து, வாஸுகியாகிற பாம்பைக் கடைகயிருகச் சுற்றி, மேல் கொந்தளியாதபடி அதினுடைய

---

49. அவ:— மலைமேலே நின்று முகங்கொடுக்கும் நீர்மையைப் பேசினுர் கீழ்ப்பாசுரங்களில். மலையின்கீழே கிடந்து தாங்கிய நீர்மையைப்பேசி மகிழ்கின்ருர் இப்பாசுரத்தில்.

வ்யா:— (மலை ஆமைமேல் வைத்து) மந்தரமலையை ஆமை யாகிற தன்மேல் வைத்து. சக்தியற்ற தேவர்களை ரக்ஷிப்பதற்காகத் தானே மந்தரமலையைப் பெயர்த்துவந்து திருப்பாற்கடலிலே மத்தாகநாட்டி, அது அமிழ்ந்து போகுமளவில் தான் ஆமையாய்க் கீழ்ப்புகுந்து தாங்கினபடியைச் சொல்லுகிருர். (வாசுகியைச் சுற்றி) வாசுகியென்னும் பெருநாகத்தைக் கடைகயிருகச் சுற்றி. (ஆமைதான் தலை ஒரு கை பற்றி) மலையமிழ்ந்துபோகாமல் கீழ் நின்று தாங்கினுலும், கடையும்போது மலையானது மேலேயும்

யித்யாதி) ஆமையான தான் மேலே கொந்தளியாதபடிக்கு ஈடாக, மலையின் உச்சியை ஒருகையாலே அமுக்கி. (அலையாமலித்யாதி) நிரம்பின நீர் புறம்பொசியாமலும், அம்ருதம் படும்படி உள்ளுலடையவும் கடைந்த ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தைச் சொல்லுவதே எல்லார்க்கும் அடுப்பது. 49.

50. கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா தீ
மாற்றமும் சாரா வகையறிந்தேன்—ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும் மாயன்
உரைக்கிடக்கு முள்ளத் தெனக்கு.

---

*உச்சியை ப்₁ருஹத்கூர்மரூபியான தான் ஒரு கையாலே அமுக்கி நிறைந்த நீரானது புறம்பு பொசிந்து அலையாத படியாக ஸாரமான அம்ருதம் உண்டாம்படி உள்ளுடைந்து கிழியும்படியாகக் கடலைக்கடைந்த ஸர்வேஶ்வரனுடைய ஔதா₃ர்யாதி₃கு₃ணங்களுக்கு வாசகமான திருநாமங்களைச் சொல்லுவது எல்லார்க்கும் அடுப்பது. கூற்று — கூறு பட்டது; தகுதியாமது என்றபடி. 49.*

---

புறங்களிலேயும் அலையுமன்றோ; அப்படி அலையாதபடி, கீழே ஆமையாய் நிற்கும் தானே மற்றுமோர் பேராமையுருக்கொண்டு மலையின் உச்சியை ஒரு கையாலே பற்றிக்கொண்டு. (அலையாமல் பீறக் கடைந்த) இவ்வளவு செய்தபின்பும் தேவாசுரர்கள் கடைவதற்கும் அஸமர்த்த₂ர்களாய்நிற்க, தானே முன்னின்று கடைந்தபடி. (அலையாமல் பீறக் கடைந்த பெருமான்) கடல் கொந்தளிக்காதபடியும், பெருமலையையிட்டதாலே கடல்நீர் வழியாதபடியும், ஸாரமான அம்ருதம் வெளிவரும்படி கடலின் உட்புறமெல்லாம் உடைந்து கிழியும்படியாகவும் கடைந்து. அச்செயலாலே தானே தே₃வாதி₄தே₃வன் என்பது விளங்கநின்றவன். (கடைந்த பெருமான்) இச் செயலாலே தே₃வஜாதி முழுவதையும் எழுதிக்கொண்டவன் என்றும் கொள்ளலாம். (பெருமான் திருநாமம் கூறுவதே யாவர்க்கும் கூற்று) இப்படி அந்யப்ரயோஜனர்களுக்கும் தன்னை அழியமாறி அளித்த ஸர்வேஶ்வரனுடைய வண்மை முதலிய கு₃ணங்களைக்கூறும் திருநாமங்களைச் சொல்லுவதே அந்யப்ரயோஜநர்களோடு அநந்ய ப்ரயோஜநர்களோடு வாசியற அனைவர்க்கும் தகுந்தது. 49.

பதவுரை:— கடல்—திருப்பாற்கடலிலே, கிடக்கும்—திருக்கண்வளர்ந்தருளுகிற மாயன்—ஆஸ்சர்யபூதனாய் ஆறு கலை—திருக்காவேரிக் கரையான கபிஸ்தலத்திலே, கிடக்கும் — திருக்கண்வளர்ந்தருள்கிற கண்ணன் — க்ருஷ்ணனுடைய உரை—ஸ்ரீஸூக்தியாகிற சரமஶ்லோகம், எனக்கு—என்னுடைய, உள்ளத்து—நெஞ்சிலே, கிடக்கும்—பதிந்திருக்கிறது; (ஆனபின்பு) கூற்றமும் சாரா—யமபயம் அணுகாமைக்கும், கொடுவினையும் சாரா—கொடிய பாவங்கள் அணுகாமைக்கும், தீ மாற்றமும் சாரா வகை — கெட்ட பெயர் அணுகாமைக்கும் உபாயத்தை, அறிந்தேன்—அறிந்தவனானேன்.

பெரி-வ்யா:— (கூற்றமுமித்யாதி) ம்ருத்யு அணையாமைக்கும், ம்ருத்யு அணைகைக்கு ஹேதுவான மஹாபாபம் அணையாமைக்கும், அபவாதமும் சேராமைக்கும் உபாயம்

---

அவ:— சரமஶ்லோகார்த்தம் என்னெஞ்சிலேயிருக்க, ஸர்வவிரோதிகளும் போகைக்கு ஒரு குறையில்லை என்கிறார்.

உரை:— திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளும் ஆஶ்சர்யகுணயுக்தனாய், அவ்வளவு போகமாட்டாத இங்குள்ளாரை

---

60. அவ:— ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை வாய்படைத்த பலன் பெறுவதற்காகச் சொல்லுங்கள் என்று பரோபதேஶம் செய்தார் கீழ்ப்பாட்டில். இங்கு, அவனுடைய திருநாமத்தை நெஞ்சில் கொண்ட எனக்கு ஒருதீங்குமில்லை என்று அநுஸந்தித்து நிர்ப்பரராகிறார்.

வ்யா:— (கூற்றமும் சாராவகையறிந்தேன்) யமன் என்னை அணுகாமைக்கு உபாயமறிந்தேன். "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய" [வி-பு 3-7-14] என்ற ஸ்ரீ விஷ்ணுபுராணஶ்லோகமும், "திறம்பேன்மின் கண்டீர்" என்னும் அறுபத்தெட்டாம் பாட்டும், "கெடுமிடராய வெல்லாம் கேசவாவென்னநாளும், கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்" [திருவாய் 10-2-1] "நாவலிட்டுழி

அறிந்தேன். ( ஆற்றங்கரையித்யாதி ) திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து ஆஶ்சர்யபூ₄தனாய், அநந்தரம் திருக்கபிஸ்த₂லத்திலே கண்வளர்ந்தருளுகிற க்ருஷ்ணன் "உன்னுடைய

---

*ரக்ஷிக்கைக்காகத் திருக்காவேரிக் கரையிலே கபிஸ்த₂லத்திலே கண்வளர்ந்தருளுகிற அநுக்₃ரஹஶீலனான க்ருஷ்ணன் திருத்தேர்த்தட்டிலே அர்ஜுனனை வ்யாஜீகரித்து,* "मामेकं शरणं व्रज। अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः" *(மாமேகம் ஶரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷ*

---

தருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே" *[திருமாலை 1]* "வள்ளலே! உன் தமர்க்கென்றும் நமன்தமர் கள்ளர்போல்" *[பெரியதிரு 8.10-7]* முதலான அருளிச்செயல்களும் இங்கு அநுஸந்தி₄க்கத் தக்கவை. ( கொடுவினையும் சாரா வகையறிந்தேன் ) யமன் என்னைப் பற்றுகைக்குக் காரணமான கொடிய பாபங்கள் என்னை அடையாமைக்கும் உபாயமறிந்தேன். ( தீ மாற்றமும் சாரா வகையறிந்தேன் ) "இவன் தே₃ஹாத்மாபி₄மானி; ஸ்வதந்த்ராத்மாபி₄மானி; தே₃வதாந்தரபரன்; விஷயாந்தரபரன்; உபாயாந்தரபரன்" என்னும் அபவாத₃ங்கள் ஒன்றும் அணுகாமைக்கும் உபாயமறிந்தேன். தீமாற்றம்—அநர்த்த₂மாகவுமாம். இவ்வுபாயங்களறிவதற்கு அடியென்' என்னில்: (கடல் கிடக்கும் மாயன் ஆற்றங்கரைக்கிடக்கும் கண்ணன் உரைக்கிடக்கும் உள்ளத்து எனக்கு) திருப்பாற்கடலிலே பிரமன்முதலிய தே₃வர்கள் தன்னை ஆஶ்ரயிப்பதற்காகக் கண்வளரும் ஆஶ்சர்யபூ₄தனாய், அங்கு காணமுடியாதார்க்கும் எளியனாகைக்காகக் கபிஸ்த₂லமென்னும் தி₃வ்யதே₃ஶத்திலே காவிரிக்கரையைப் பற்றி நின்று திருக்கண்வளரும் க்ருஷ்ணன் பா₄ரத யுத்₃த₄ ஸமயத்திலே,

"ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:॥"

*[மோக்ஷஸாத₄னமான எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விட்டு, என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். வருந்தாதே]* என்று சொன்ன வார்த்தை என்நெஞ்சில் எப்போதும் கிடக்கும்—ஆகையாலே நான் கூற்றமும்சாரா கொடுவினையும்சாரா தீமாற்றமும் சாரா வகையறிந்தேன் என்கை. ( கடல் கிடக்கும் மாயன் ) திருப்பாற்கடலிலே ஶ்வேதத்₃வீபவாஸிகள் போன்ற சிலருக்கே அணுக

ரக்ஷணத்துக்கு நானே கடவேன்; நீ ஶோகிக்கவேண்டா" என்று அருளிச்செய்த வார்த்தை என்னெஞ்சிலே கிடக்கும். (கூற்றம்) வர்ணாஶ்ரமத$_1$ர்மநிஷ்ட$_2$ரில் வ்யாவ்ருத்தி. (கொடு வினை) த்$_3$ருஷ்டகாம்யபரரில் வ்யாவ்ருத்தி. (ஆயனித்யாதி) அவனுடைய திருநாமங்கள் ஹ்ருத$_3$யத்திலே கிடக்கும் எனக்கு. அதாவது-தத்$_1$விஷயஜ்ஞானம். "मां-अहं" (மாம்-அஹம்). 50.

---

*யிஷ்யாமி மாஶுச:||) என்று அருளிச்செய்த சரமஶ்லோகார்த்த$_2$மானது ஹ்ருத$_3$யத்திலே நிரந்தரா நுஸந்த$_4$ான விஷயமாய்க்கொண்டு கிடவாநிற்கும். ஆகையாலே எனக்கு ம்ருத்யு வந்து கிட்டாமைக்கும். அதுக்கு அடியான கொடிய பாபங்கள் வந்து கிட்டாமைக்கும். அனர்த்த$_2$மென்று பேர்பெற்றவை வந்து கிட்டாமைக்கும் உபாயம் அறிந்தேன்: 'தீமாற்றஞ்சாரா' என்றது—அபவாத$_3$ங்கள் வந்து கிட்டாமைக்கும் என்றுமாம். 50.*

---

லாம்படியிருக்கும் ஆஶ்சர்யபூ$_4$தன். (ஆற்றங்கரைக்கிடக்கும் கண்ணன்) அவ்வருமைதீர கபிஸ்த$_2$லத்தில் ஆற்றங்கரையைப்பற்றி நின்று எல்லார் கண்ணுக்கும் விஷயமாகி நிற்பவன். (ஆற்றங்கரைக்கிடக்கும்) ஒருரில் ஒருவனைத்தேட நினைப்பவர், 'அவர் எப்படியும் குளிக்கவருவான்' என்னும் எண்ணத்தாலே ஆற்றங்கரையிலே நின்று தேடுவதுபோலே ஆஶாலேஶமுடையாரை அடைவதற்காக ஆற்றங்கரையிலே படுகாடு கிடக்கிறபடி. (கண்ணன்) கிருஷ்ணன்; எல்லாருடைய கண்ணுக்கும் விஷயமாகி நிற்பவன். (கண்ணன் உரை) கிருஷ்ணன் உரைத்ததான சரமஶ்லோகம். அன்றிக்கே, அவனுடைய ஸ்வரூப ரூபகு$_3$ண விபூ$_4$தி சேஷ்டிதங்களையுரைக்கும் திருநாமங்கள் என்றும் கொள்ளலாம். (உரைக் கிடக்கும்) கண்ணன் திருநாமம் நெஞ்சிற்கிடக்கும் எனக்கு; அதாவது—அவனைப்பற்றிய அறிவுடைமை எனக்கு என்று பாவம். (கண்ணன் உரைக்கிடக்கும் உள்ளத்தெனக்குக் கூற்றமும் சாரா) "ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய" என்னும் உபதே$_3$ஶத்தை உள்ளத்திற்கொண்ட எனக்குக் கேவல வர்ணாஶ்ரம த$_4$ர்மங்களிலேயே ஊன்றி நிற்பவர்களுக்கு வரும் யமப$_4$யம் இல்லை. (கண்ணன் உரைக் கிடக்கும்...கொடுவினையும் சாரா) "ஸர்வ த$_4$ர்மாந் பரித்யஜ்ய" என்னும் உக்தியிலே ஊன்றிநிற்கும் எனக்கு, இவ்வுலகிலும்

51. எனக்காவா ராரொருவரே எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால்—புனக்காயா
வண்ணனே யுன்னைப் பிறரறியார் என்மதிக்கு
விண்ணெல்லா முண்டோவிலை.

பதவுரை:— புனம்—தன்னிலத்திலே வளர்கிற, காயா—காயாம்பூவினுடைய, வண்ணனே — நிறம்போன்ற நிறமுடைய பெருமானே! எனக்கு—நீயே ரக்ஷகன் என்றிருக்கும் எனக்கு, ஆவார் ஆர் ஒருவரே — ஒப்பாகுமவர் யாரிருக்கின்றனர்? (எவருமில்லை:) எம் பெருமான்—ஸர்வேஶ்வரனுகிய நீயும், தானே தனக்கு ஆவான் அல்லால்—தனக்குத் தானே ஒப்பாயிருப்பவனேயன்றி, மற்று—எனக்கு ஒப்பாக வல்லையோ? உன்னை பிறர் அறியார்—நான் தவிர வேறொருவரும் உன்னையறியமாட்டார்கள்! என் மதிக்கு—(உன்னை நன்ருக அறிந்திருக்கிற) என்னுடைய பு₃த்₃தி₄க்கு, விண் எல்லாம் விலை உண்டோ — பரமபத₃மெல்லாம் கூடினுலும் ஒப்பாகப்போருமோ?.

---

அவ:— சரமஶ்லோகத்தில் தேவர் அருளிச்செய்தபடி புறம்புள்ள உபாயங்களைப் பற்றறவிட்டு தேவரையே நிரபேக்ஷாபாயமாகப்பற்றி நிர்ப₄ரனுயிருக்கிற எனக்கு உப₄யவிபூ₄தியிலும் ஒப்பார் உண்டோ என்கிறுர்.

---

ஸ்வர்க்க₃ாதி₃களான அவ்வுலகிலும் காமங்களை விரும்பிக் காம்ய த₄ர்மங்களை அநுஷ்டி₂க்குமவர்களுக்கு வரும் புண்யபாபஸம்ப₃ந்த₄ம் வர இடமில்லை. (ஆற்றங்கரைக்கிடக்கும் கண்ணன்) இத்தால், சரமஶ்லோகத்தில் "மாம்" என்ற பத₃த்திற்சொன்ன ஸௌலப்₄யம் முதலான ஆஶ்ரயண ஸௌகர்யாபாத₃க கு₃ணங்கள் உணர்த்தப்படுகின்றன. (கடல்கிடக்கும் மாயன்) இத்தால் "அஹம்" என்ற விடத்திற்சொன்ன ஆஶ்சர்யமான ஜ்ஞானஶக்திகள் முதலான ஆஶ்ரிதகார்யாபாத₃க கு₃ணங்கள் உணர்த்தப்படுகின்றன. 50.

51. அவ:— எனக்கு ஒரு தீங்குமில்லையென்ருர் கீழ்ப்பாட்டில் எனக்கு ஒப்பாரவர் ஒருவருமில்லையென்கிருர் இதில்.

பெரி-வ்யா:— (எனக்கித்யாதி) எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கிற எனக்கு ஒருத்தர் எதிருண்டோ? (எம்பெருமானித்யாதி) ஈஶ்வரன் தனக்கு ஒருவன் ரக்ஷகனுண்டென்று இராமையாலே அவனும் எனக்கு ஒப்பன்று.

---

உரை:— உன்னாலே உன்னைப்பெறுமதொழிய வேறொன்றால் உன்னைப்பெறவிரகில்லை என்கிற யதா₂ர்த₂ஜ்ஞானத்தைப் பரிபூர்ணமாகவுடைய எனக்கு ஶத்₃ருஶரு₁கராயிருப்பார் உப₄யவிபூ₄தியிலும் வேறொருவருண்டோ? விபூ₄திமானான ஸர்வேஶ்வரன் ரக்ஷகனான தன் பெருமைக்குத் தானே ஒப்பாமித்தனையொழிய, அவனே ரக்ஷகனென்று இருக்கிற என்னோடு ஒப்பாகமாட்டான்.

---

வ்யா:— (எனக்காவார் ஆரொருவரே) பிரானே! உன்னையே ரக்ஷகனாகக்கொண்ட எனக்கு ஒப்பாவார் உப₄யவிபூ₄தியிலும் ஒருவரேனும் உளரோ? "ந தத்ஸமஶ்சாப்₄யதி₄கஶ்ச த்₃ருஶ்யதே" [ஶ்வே] [அந்தப் பரமபுருஷனுக்கு ஒத்தவரும், மேலானவரும் காணப்படவில்லை] என்றும், "ந த்வத்ஸமோஸ்த்யப்₄யதி₄க: குதோந்யோ லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபா₄வ" [கீ₃தை] [ஒப்பற்ற கீர்த்தியை உடையவனே! உன்னை ஒத்தவர் மூவுலகிலுமில்லை. மிகுந்தவர் இருக்கமுடியுமோ?] என்று வேத₃வைதி₃கர்கள் ஒத்தார் மிக்காரை இலாதவன் என்று நம்மைப்பற்றிச் சொல்லாநிற்க, என்னையொத்தார் ஒருவருமில்லையென்று நீர் உத்₃கோ₄ஷிப்பதென்? என்று ஸர்வேஶ்வரன் அருளிச்செய்ய,— (எம்பெருமான் தனக்காவான் தானே மற்றல்லால்) ஸர்வேஶ்வரனான உனக்கு நீயே ஒப்பாவாயேயொழிய எனக்கு நீயும் ஒப்பாகாய். உன்னைப்போலவே நானும் ஒத்தார் மிக்காரையிலாதவனே. ரக்ஷகத்வத்திலே உனக்கு ஒப்பாவார் ஒருவருமில்லாததுபோலே, ரக்ஷ்யத்வத்தில் என்னையொத்தார் ஒருவருமில்லை. 'எனக்கு ரக்ஷகர் ஒருவருமில்லை' என்றிருக்கும் நீயும், 'ஸர்வேஶ்வரன் ஒருவனே ரக்ஷகன்' என்றிருக்கும் எனக்கு ஒப்பாகமாட்டாய். 'அதுகிடக்கட்டும், இவ்வுலகிலே நானே ரக்ஷகன் என்றறிந்தார் மற்றும் சிலருமில்லையோ உமக்கு ஒப்பாகைக்கு?' என்று ப₄க₃வத₃பி₄ப்ராயமாகச் சொல்லுகிறார்,—

(புனக்காயாவித்யாதி) ஶ்ரமஹரமான வடிவையுடைய நீ ரக்ஷகனல்லையாகிலும் விரும்பப்படும் உன்னை அசலார் அறியார். (என் மதிக்கித்யாதி) ஸம்ஸாரத்திலே எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கிற எனக்கு, விரோதி₄யில்லாத தே₃ஶத்திலேயிருக்கிறவர்கள் என்னோடு ஒப்பரோ? 51.

---

தன்னிலத்திலே காயாம்போலேயிருண்டு குளிர்ந்த வடிவையுடையவனே! இப்படி இருக்கிறவுன்னை வேறொருவர் அறியமாட்டார்கள். தங்கள் பேற்றுக்குத் தாங்கள் கச்சைகட்டி யத்னிக்கிற அறிவிலிகள் வர்த்திக்கிற ஸம்ஸாரத்திலே அவனே ரக்ஷகனென்று நாடோறும் ஏக சிந்தையனாயிருக்கிற என்னுடைய ஜ்ஞானத்துக்கு—விரோத₄ ப்ரஸங்க₃மில்லாத

---

(புனக்காயா வண்ணனே உன்னைப் பிறர் அறியார்) நீ ரக்ஷகனல்லாமல் ஹிம்ஸகனானாலும் உன் வடிவழகைவிட்டு அகலமாட்டாத என்னையொழிய இவ்வுலகில் வேறெவரும் உன்னை அறியார். (புனக்காயாவண்ணனே) தன்னிலமாகிற புனத்தில் பூத்த காயாம் பூவைப்போன்ற திருநிறத்தையும், மென்மை, குளிர்த்தி, மணம் முதலிய தன்மைகளையும் உடையவனே! (புனக்காயாவண்ணனே! உன்னைப் பிறர் அறியார்) இவ்வுலகில் உன்னை தே₃ஹாத்மாபி₄மானிகள் அறியவோ? ஸ்வதந்த்ராத்மாபி₄மானிகள் அறியவோ? தே₃வதாந்தரபரர் அறியவோ? ப்ரயோஜநாந்தரபரர் அறியவோ? ஸாத₄நாந்தரபரர் அறியவோ? ஸ்வருபத்₄யானபரர்களான ரிஷிகள்தான் அறியவோ? "நித்யவிபூ₄தியிலே அநந்தக₃ருட₃ விஷ்வக்ஸேநாதி₃கள் என்னையறிவாரில் தலைசிறந்தவர்களாயிற்றே. அவர்களாவது உமக்கு ஒப்பாவார்களா?" என்று பரமபுருஷன் கேட்கச் சொல்லுகிறார்,— (என் மதிக்கு விண்ணெல்லாம் உண்டோ விலை) தங்கள் பேற்றுக்குத் தாங்கள் கச்சைகட்டிக்கொண்டு முயலும் அறிவிலிகள் வாழும் ஸம்ஸாரத்தில். * நாகணைமிசை நம்பிரான் சரணே சரணென்று நாள்தோறும் ஏகசிந்தையனாயிருக்கிற எனது அறிவுக்கு விலையாகச் சொல்லக்கூடிய உபாயாத்₄யவஸாயம் பரமபத₃த்திலுள்ளார் அனைவரிடத்திலும் உண்டோ? ப்ராப்யம் கைபுகுந்தவர்களாகையாலே அவர்களிடமுள்ள உபாயாத்₄யவஸாயம் என்னிடமுள்ளதுபோலே பிரகாசியாது என்றபடி.

52. விலைக்காட்படுவர் விசாதியேற்றுண்பர்
தலைக்காட்பலிதிரிவர் தக்கோர்—முலைக்கால்
விடமுண்ட வேந்தனையே வேறா வேத்தாதார்
கடமுண்டார் கல்லாதவர்.

பதவுரை:— தக்கோர்—*நீசர்கள்*. விலைக்கு ஆள்படுவர்—*வாழ்வதற்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டிருப்பர்கள்*; விசாதி ஏற்று உண்பர் —(*ம்ருத்யுதானங்கள் வாங்கும் முகத்தால் பிறருடைய*) வியாதிகளைத் தாம் வாங்கி அநுபவிப்பர்கள்;

---

*திருநாட்டிலுள்ளார் எல்லார் பக்கலிலும் ஸத்ருமூல்யமாகச் சொல்லத்தக்கது ஒரு வஸ்துவுண்டோ? ப்ராப்யைகபரராயிருக்கிறவர்கள் பக்கல் அவனுபாயபாவம் விலை செல்லப்பெறாமல் குமரிருந்து போமத்தனை. ஆகையாலே அங்குள்ளார் ஒருவரும் ஒப்பாகமாட்டார் என்றபடி.* 51.

---

பரமபதத்திலுள்ளார் உன் ஸ்வரூபரூபாதிகளை நன்கு அறிந்தவர்களே என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆனால் அவர்கள் அனைவரும் சேர்ந்தாலும் எனக்கு ஒப்பாகமாட்டார்கள். விரோதியான கர்ம ஸம்பந்தமில்லாத தேசத்திலிருந்துகொண்டு உன்னையறிந்திருப்பவர்கள் அவர்கள். கர்மம் கொடுங்கோலாட்சிபுரியும் கொடுவுலகத்தில் 'நீயே ரக்ஷகன்' என்றறிந்திருப்பவனன்றோ நான். எனக்கு அவர்கள் ஒப்பாவர்களோ? நீரில் தாமரைகள் இந்தளத்தில்—[இந்தளம் — நெருப்புச்சட்டி] — தாமரைக்கு ஒப்பாகுமோ? பகல்விளக்கு இருள்விளக்குக்கு ஒப்பாகுமோ? "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே" [திருவிருத்தம்-79] என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. (எனக்காவார் ஆரொருவரே) ஆக இப்படி உபயவிபூதியிலுள்ளாரும் எனக்கு ஒப்பாகமாட்டாமையாலே எனக்கு ஒப்பாவார் யாருளர்? "இனி யாவர் நிகர் அகல்வானத்தே" [திருவாய் 4-5-8] "நினைக்கும் நெஞ்சுடையேன் எனக்கினி யார் நிகர் நீணிலத்தே" [திருவாய் 6-4-7] "எனக்கு எவ்வுலகம் நிகரே" [திருவாய் 6.4.2] "ஒருவர் நம்போல் வருங்கேழ்பவர் உளரே" [திருவிருத்தம்-44] என்று நம்மாழ்வாரும் இப்படி அருளிச்செய்தார். இது பகவத்ஸம்பந்தமடியாக வந்த அஹங்காரமாகையாலே ஹேயமன்று; அத்யந்தம் உபாதேயமே. 51.

தலைக்கு ஆள் பலி திரிவர்—ஒருவன் தலைக்காகத் தம் தலையை அறுப்பதாகச் சொல்லி நரபலியாகத் திரிவர்கள்; முலைக்கால் விடம் உண்ட வேந்தனையே—(பூதனையின்) முலையிலிருந்த விஷத்தை உட்கொண்ட கண்ணனையே. வேறு ஆ ஏத்தாதார்—குறிப்பாகத் துதிக்கமாட்டாதவர்களாய். கல்லாதவர்—அறிவு கெட்டவர்களாய்க்கொண்டு, கடம் உண்டார்—பாபங்களையநுபவிப்பவர்களாயிராநின்றார்கள்.

பெரி-அவ:— என்னோடு ஒப்பாருண்டோ என்று சொல்லுவானென்னென்னில்: இதுவன்றோ நாடு அநர்த்தப்படுகிறபடி என்கிறார்.

வ்யா:— (விலையித்யாதி) ஈஶ்வரஶேஷமாய், அநந்யார்ஹமான வஸ்துவை வேறுசிலர்க்கு ஶேஷமாக்கியும், ஜீவநத்துக்

---

அவ:— என்னோடு ஒப்பார் உண்டோவென்று சொல்லுவானென்னென்னில், இதுவன்றோ நாடு அனர்த்தப் படுகிறபடி என்கிறார்.

உரை:— அறிவுடைமைக்குத் தங்களைப்போலே தகுதியானவர்களில்லையென்று அபிமானித்திருக்கும் ஹேயரானவர்கள், எம்பெருமானுக்கு அநந்யார்ஹ ஶேஷபூதரான தங்களை மூல்யங்களுக்குச் சிலர்க்கு எழுதிக்கொடுத்து

---

52. அவ:— 'இவ்வுலகிலே எனக்கு ஸமானமானவர் உண்டோ' என்று ஒருவருமேயில்லைபோல் சொல்லலாமோ?; என்னில்; உலகில் எங்குபார்த்தாலும் இப்படிப்பட்டவர்களாகவேயிருக்கையாலே சொன்னேன் என்கிறார்.

வ்யா:— (விலைக்காட்படுவர்) பரமபுருஷனுக்கு அடிமைப்பட்டதாய், அவனுக்கே உரித்தானதாய், ஸ்ரீகௌஸ்துபம்போலே அவனுக்கு இனியதாய், அநர்க்கமானதான—(விலைமதிப்பற்றதான)—இவ்வாத்மவஸ்துவை ஒரு பணத்துக்கும் அரைப்பணத்துக்கும் வேறு சிலருக்கு அடிமையாக்குவர். * வாழாட்பட்டு நிற்காமல் * கூழாட்பட்டு நிற்பர். (விசாதியேற்றுண்பர்) தனவானுயிருப்பா

காகப் பிறருடைய வ்யாதிகளை நீர்வசர்ப்பித்துக்கொண்டும், ஒருத்தன் பிழைத்தால் தலையரிகிறேன் என்று ப்ரார்த்தித்து பலித்ரவ்யமாய்த் திரிந்துமன்றோ படுகிறது. "தக்கோர்" என்று க்ஷேபோக்தி. (முலையித்யாதி) இவர்கள் குறித்துச்செய்வது

---

அடிமைப்படுவர்கள். பிறருடைய வ்யாதிகளை காலதாரப்ரதிக்ரஹ முகத்தாலே நீர்வரர்ப்பித்துக்கொண்டு வயிறு வளராநிற்பர்கள். ஒருத்தன் பிழைத்தால் தலையை அறுத்துக்கொடுக்கக் கடவதாக அடிமைபுக்கு தேவதைகளுக்கு பலித்ரவ்யமாய்த் திரியா நிற்பர்கள். இப்படி தத்வ ஸ்திதியை ஶாஸ்த்ர முகத்தாலே கற்று அறியமாட்டாத அவிஶேஷஜ்ஞரானவர்கள் முலைவழியே விஷபானத்தைப் பண்ணி பூதனையை முடித்த செயலாலே, ஜகத்துக்கு

---

ஒருவன் வியாதியால் துன்புறும்போது, அவன் கொடுக்கும் பணத்திற்காக அவனுடைய வியாதியை தாரையேற்றுக்கொண்டு அந்த வியாதியை அநுபவிக்கவும் துணிவர். விசாதி—வியாதி. (உண்பர்) அவன் கொடுக்கும் பணத்தை அநுபவிக்கும்போதே வியாதியையும் அநுபவிப்பர். இவ்வளவேயோ?— (தலைக்காட்பலி திரிவர்) மரணாவஸ்தையால் துன்புறும் ஒரு தனிகன் தலைதப்பினானாகில்—(பிழைத்தானாகில்)—என் தலையை அறுத்துக் கொடுக்கிறேன் என்று க்ஷுத்ரதெய்வங்களிடம் பிரார்த்தித்து பலித்ரவ்யமாய்த் திரிந்து, தலையை அறுத்தும் கொடுப்பர், பணத்தின் மேலுள்ள ஆசையாலே. (தக்கோர்) மஹாபுத்திசாலிகள்; சுவரை வைத்துக்கொண்டன்றோ சித்திரம் எழுதவேண்டும் என்னும் உண்மையை அறியாமல் தங்களைப் பிறர்க்காக்கி ஶ்வவ்ருத்தியான—நாய் வேலையான—ஸேவையை ஏற்றுக்கொண்டும், தங்கள் உடம்புக்கு வியாதியை வரவழைத்துக்கொண்டும், தங்கள் உடம்பையே அழிக்க முற்பட்டுக்கொண்டும் தங்கள் உடம்புக்கு ஸுகமும் தேடும் இவர்களுடைய அறிவிருந்தபடி என்னே! இவர்கள் இப்படி அறிவு மழுங்குகைக்குக் காரணமென்னென்னில்: (முலைக் கால் விடமுண்டவேந்தனையே வேறு ஏத்தாதார் கல்லாதவர்) தாயுருக்கொண்டுவந்த பூதனையென்னும் பேயுடைய முலைவழியாக அவள் தடவிவந்த விஷத்தோடுகூட அவளுடைய வஞ்சனையாகிற விஷத்தையும் உண்டு அழித்த ஸர்வேஶ்வரனை புத்திபூர்வகமாகத்

ஸ்வ்விரோதி₄யைப் போக்குமவனை ஏத்தாமை. (கடமித்யாதி) அறிவுகேடர் "ते त्वघं भुञ्जते पापाः" (தே த்வக₄ம் பு₄ஞ்ஜதே பாபா:) என்னும்படியே பாபத்தை பு₄ஜிக்கிறார்கள். அன்றிக்கே, கொடுக்க உடலின்றிக்கேயிருக்கத் தனிசுவாங்கி ஜீவிக்குமவர்களென்னவுமாம். 52.

---

*ராஜாதி₄ ராஜனை தன்னைநோக்கித்தந்த உபகாரகனை வணையே வ்யாவ்ருத்தமாக ஏத்தமாட்டாதவர்களாய்க் கொண்டு அவன் தன்னை வழிபடுகைக்குத் தந்த கரண களேபரங்களைக்கொண்டு. அந்யபரராகையாலே கொடுக்க முதலற்றிருக்கத் தனிசுவாங்கி ஜீவிக்கும் புருஷர்களோடு ஒப்பர்கள். 'கடமுண்டார்' என்கிறது—"तेत्वघं भुञ्जते पापाः" (தேத்வக₄ம் பு₄ஞ்ஜதே பாபா:) என்கிறபடியே பாபத்தைப் புசிக்கிறவர்கள் என்றுமாம். 52.*

---

துதியாமையே இவ்வறிவுகேட்டுக்குக் காரணம் என்கை. விரோதி₄களை அழிப்பதையே தொழிலாகக் கொண்டவனை நினைவறிந்து துதிக்காமையாலேயே இவர்களுடைய அஞ்ஞானமாகிற விரோதி₄ அழியாமல் கிடக்கிறது என்று பா₄வம். (வேந்தனையே வேறு ஏத்தாதார்) ப₄க₃வானையே குறிப்பாகத் துதியாதவர்கள். பணத்திற்காக எதையும் செய்பவர்களாகையாலே, இவ்வுலகிலுள்ள நாய்களையும் பேய்களையும் இந்திரனென்றும் சந்திரனென்றும் துதிப்பதிலே ஒருகுறையுமிராது. ஆனால், ப₄க₃வானாகிற ஒருவனை மட்டும் துதிப்பதேயில்லை என்னும் விரதம் பூண்டிருக்கிறார்கள், அறிவுகேட்டின் மிகுதியாலே. (வேறு ஏத்தாதார்) வேறு—தனியாக; குறிப்பிட்டு. "வேறு ஏத்தாதார்" என்பதற்கு விலக்ஷணமாகத் துதிக்காதவர்கள்" என்று பொருள் கொள்வாருமுண்டு. ஆச்சான்பிள்ளையின் "இவர்கள் குறித்துச்செய்வது" என்ற ஸ்ரீ ஸூக்திக்கு நாம் கீழ் விவரித்த பொருளே பொருந்தும். அர்த்த₂ ஸ்வாரஸ்யமும் அப்பொருளிலேயே. (கடமுண்டார்) "தே த்வக₄ம் பு₄ஞ்ஜதே பாபா:" [கீ₃தை 3-13] [பாபிகளான அவர்கள் பாபத்தை பு₄ஜிக்கிறார்கள்] என்றாப்போலே பாபத்தை உண்கிறார்கள் இவர்கள். கடம்-பாவம். (வேந்தனையே வேறு ஏத்தாதார் கடமுண்டார் கல்லாதவர்)

"ந மாம் து₃ஷ்க்ருதிநோ மூடா₄: ப்ரபத்₃யந்தே நராத₄மா: |
மாயயாऽபஹ்ருத ஜ்ஞாநா ஆஸுரம் பா₄வமாஶ்ரிதா: ||"
[கீ₃தை 7-15]

53. கல்லாதவ ரிலங்கை கட்டழித்த காகுத்த
னல்லாலொரு தெய்வம் யானிலேன்—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத்
தேவரைத் தேறேல்மின் தேவு.

பதவுரை:— கல்லாதவர் இலங்கை — அறிவுகெட்ட ராக்ஷஸருடையதான இலங்காபுரியை. கட்டு அழித்த— அரணழித்த, காகுத்தன் அல்லால்—இராமபிரானையல்லது, ஒரு தெய்வம்—வேறொரு தெய்வத்தை, யான் இலேன்— நான் தெய்வமாகக் கொள்வேனல்லேன்; பொல்லாத தேவரை —விருபரான தேவதைகளாயும், தேவர் அல்லாரை– (உண்மையில்) தெய்வத்தன்மையற்றவர்களாயும், திரு இல்லா தேவரை–பிராட்டியின் ஸம்பந்தமில்லாமலே தேவ ரென்று பேர் சுமப்பவர்களாயுமுள்ள சிலரை. தேவு—தெய் வங்களாக, தேறேல்மின்—நீங்கள் நினைக்கவேண்டா.

---

அவ:— ப்ரபந்நஜன ரக்ஷணமாகிற மஹாத்வரத்திலே நித்யதீக்ஷிதனுயிருக்கும் சக்ரவர்த்தித்திருமகனையொழிய வேறு சிலரை ஆஶ்ரயணீயராக நினைத்திரேன். நீங்களும் க்ஷுத்ரதேவதைகளை ஸமாஶ்ரயணீயராக விஶ்வஸியாதே கொள்ளுங்கோள் என்கிறார்.

---

[பாபிகளான மூடர்களும், நராதமர்களும், மாயையினுல் அறிவு கெட்டவர்களும், அசுரஸ்வபாவங்கொண்டவர்களும் என்னை அடைவதில்லை] என்ற பகவத்வசனத்தை அடியொற்றியிருப்பது இது. (கடமுண்டார்) கடனுண்டார் என்ருய், எப்போதும் தாரித்ரியத்தாலே கடன்வாங்கி ஜீவிப்பவர்களாகவேயிருப்பவர் என்றுமாம். (கல்லாதவர்) திருப்பிக்கொடுக்க முடியாது என்று அறிந்திருந்தும் கடன் வாங்கிப் பிழைக்கும் அறிவுகெட்டவர்களைப் போன்றவர்கள் என்று கருத்து. 52.

53. அவ:— "எனக்காவார் ஆரொருவரே' என்னும் நிலை யிலே நீரிருக்கைக்கும், 'விலக்காட்படுவர்' என்னும் நிலையிலே நாங்களிருக்கைக்கும் ஹேதுவையும், நாங்கள் உய்வதற்கு உபா யத்தையும அருளிச்செய்யவேணும்" என்று ஸம்ஸாரிகளில் சிலர் கேட்க, "தேவதாந்தர ஸம்பந்தமில்லாமையே என் பெருமைக்கு

பெரி-வ்யா:— (கல்லாதவரித்யாதி) கற்ருன் ஒருத்தன் உளனாக, அவனைப்புறப்படவிட்ட ஜ்ஞாநஹீனருடையதான லங்கையை அரணழித்த சக்ரவர்த்தித் திருமகனையொழிய வேறொன்று ஸமாஶ்ரயணீயமாக நினைத்திரேன். "भावो नान्यत्र गच्छति" (பா₄வோ நாந்யத்ர க₃ச்ச₂தி) என்ற திருவடியைப்

---

உரை:— முதலிலே கல்வியில் புதியதுண்டறியாத அறிவு கேடரடங்கலும் குளவிக்கூடு கொண்டாற்போலே திரண்டு வர்த்திக்கிற லங்கையை அரணழித்துப் போகட்ட ககுத்ஸ்த₂ குலோத்₃ப₄வனான ஆண்பிள்ளையையொழிய வேறே ஒருவஸ்துவை ஸமாஶ்ரயணீயதை₃வமாக நான் உடையேனல்லேன். ஆனபின்பு நீங்களும் "காணிலுமுருப்பொலார்"

---

ஹேது; அதுள்ளதே உங்கள் சிறுமைக்கு ஹேது; நீங்கள் உய்யவேண்டுமாகில் அதை அறுத்துக்கொள்ளுங்கள்" என்று உபதே₃ஶிக்கிருர்.

வ்யா:— (கல்லாதவரிலங்கை) குளவிக்கூடுபோலே கல்லாதவரெல்லாம் திரண்டுவாழும் இலங்கை. "இஹ ஸந்தோ ந வா ஸந்தி" [ரா-ஸு 21-9] [இங்கு கற்றவர்களே இல்லையோ?] என்று பிராட்டியும் அதிஶங்கைகொள்ளும் இலங்கை. கற்றவனான விபீ₄ஷணன் ஒருவனிருப்பதைக்கண்டு பொறுக்காமல் அவனை விரட்டிவிட்ட அறிவுகேடர்க்கு இருப்பிடமான இலங்கை. இங்கு கல்வியாவது:— "ஸா வித்₃யா யா விமுக்தயே" [வி-பு 1-19-41] [மோக்ஷத்திற்கு உபயோக₃ப்படுவதே கல்வியாகும்.] என்கிறபடியே மோக்ஷத்திற்கு உறுப்பான பரம்பொருளறிவு. இலங்கையிலுள்ளார்க்கு அதில்லையென்னுமிடம் பிரஸித்₃த₄மன்றோ. (கட்டழித்த காகுத்தன்) அவ்விலங்கையின் அரணையழித்த சக்கரவர்த்தித் திருமகன். (காகுத்தனல்லால் ஒரு தெய்வம் யானிலேன்) ஶரணாக₃த ரக்ஷணமாகிற பெரிய யாக₃த்திலே எப்போதும் தீ₃க்ஷை கொண்டிருக்கும் அப்பிரானைத்தவிர வேறொருபொருளை ஆ₃ஶ்ரயிக்கத்தகுந்த தெ₃ய்வமாக நான் நினையேன்; இதுவே என் பெருமைக்குக் காரணம் என்றபடி. (யான் இலேன்) மறந்தும் புறந்தொழாமையாகிற இதில்லாமையே உங்கள் சிறுமைக்குக் காரணம் என்கை.

"ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டி₂த: |
ப₄க்திஶ்ச நியதா வீர பா₄வோ நாந்யத்ர க₃ச்ச₂தி ||"
[ரா-உ 40-15]

போலே இவரும். (பொல்லாத தேவரை) ஸூபாஶ்ரயமாக விரூபாக்ஷன் தொடக்கமானாரை ஆஶ்ரயிக்கப்போமோ?

---

என்கிறபடியே எறிட்டுப் பார்க்கவொண்ணாதபடி கட்டின சடையும், பூசின சாம்பலும் நெற்றியில் கண்ணுமான பொல்லாத வடிவையுடையராய்,

---

[பெருமானே! எனக்கு உன்னிடமுள்ள அன்பு (என்னிலும்) பெரிது. உன்னிடம் இவ்வன்பு என்றுமே நிலைநிற்பது; வீரனே! என் பக்தியும் அப்படியே நித்யமானது. என் நெஞ்சு வேறெங்கும் செல்லாது.] என்கிற ஹனுமானைப்போன்றவர் இவ்வாழ்வாரும். 'நாங்கள் உய்வுபாயம் யாது' என்ன, தேவதாந்தரங்களின் தன்மை சொல்லி அவர்களோடு ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளச் சொல்லுகிறார் பின்னடிகளாலே.— (பொல்லாத தேவரை) ரூப குணசேஷ்டிதங்களாலே த்ருஷ்டிசித்தாபஹாரியாயிருக்கும் இவனைப் போலன்றியே, • காணிலும் உருப்பொலார், செவிக்கினிதான கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாதாராயன்றோ மற்ற தேவர்களிருப்பது. உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண் தாமரைக் கண்ணனை இவனைப் போலன்றிக்கே, விரூபாக்ஷரா யும், அனல்கக்கும் கண்ணராயும், சடைகட்டிப் பொடிபூசி யிருக்கையாலே ரூபமும் பொல்லாதாயிருக்கும். 'துஷ்டர்களை அழித்தான்; நல்லோர்களை அளித்தான்; இறந்துபோன பிள்ளை களை மீட்டுக்கொடுத்தான்; பறவைக்கும் பேய்க்கும் பானைக்கும் மோக்ஷமளித்தான்' என்பதுபோன்ற செவிக்கினிய செயல்களை யுடைய இவனைப்போலன்றிக்கே, 'தந்தையின் தலையைக் கிள்ளி னான்; அதற்குப் பரிஹாரமாகப் பிச்சையெடுத்தான்; யாகத்தை யழித்தான்; பஸ்மாஸுரனைக் கண்டு ஓடினான்; பாணாஸுர னுக்குத் துணைநின்று புறமுதுகிட்டான்' என்று மற்ற தெய் வங்களுடைய செயல்களும் செவிகொண்டு கேட்கவொண்ணாதபடி பொல்லாதாயிருக்கும். 'பத்ரம் புஷ்பம்' [கீதை] என்னும் இவனைப் போலன்றிக்கே, 'உன் பையலை அறுத்துத்தா' என்கையாலே குணங்களும் அறப்பொல்லாதாயிருக்கும். இப்படி எல்லாம் பொல்லாதாயிருக்கையாலே 'பொல்லாத தேவரை' என்கிறார். இப்படி ஸூபத்வமுமில்லாமல், ஆஶ்ரயத்வமாகிற த்யேயத்வமு மில்லாமலிருப்பவர்களை ஸூபாஶ்ரயமாக — (தியானிக்கத் தகுந்த மங்களப் பொருளாக) — ஆஶ்ரயிக்கமுடியுமோ என்று பாவம்.

கித்யாதி₃) ஸமஸ்தலோகத்தையும் விடாதே நின்று தன் ஆஜ்ஞை செல்லும்படி நடத்தினவன் தானே வந்து அபி₄நிவிஷ்டனான ஸம்பத்து எனக்கே உள்ளது. அதுதானும் இன்று. 61.

62. திருநின்ற பக்கம் திறவிதென் றோரார்
கருநின்ற கல்லார்க் குரைப்பர்—திருவிருந்த
மார்வன் சிரீதரன்றன் வண்டுலவு தண்டுழாய்த்
தார்தன்னைச் சூடித்தரித்து.

பதவுரை:— திரு இருந்த மார்வன்—பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கப்பெற்ற திருமார்வை உடையவனாய், (அதனாலே) சிரீதரன்தன்—'ஸ்ரீத₄ரன்' என்று திருநாமம்

---

தி₃வ்யஶாஸனத்தை அப்ரதிஹதமாக நடத்தியருளின ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுகமாகவந்து ஸாத₃ரமாகப்பொருந்தி விஷயீகரித்து நின்ற ஸம்பத்தானது இதுக்கு முன்பன்றிக்கே இன்று எனக்கொருவனுக்குமேதான் உள்ளது. "ஒன்றி நின்று ஏழுலகை யாணையோட்டினான்சென்றொன்றி நின்ற திரு இன்று எனக்கேதான்" என்று அங்வயம். 61.

---

எனக்கே ஏற்பட்டது; அதுவும் இன்று ஏற்பட்டது. (எனக்கேதான்) தானாகச்சென்று அவனை வரிப்பவர்களிடத்தில் காட்டும் பரிவினும், அவன் கையே பார்த்து இருப்பவர்களிடம் பரமருஷனுக்குப் பரிவு பதின்மடங்கு அதிகமாயிருக்குமன்றோ. ஆயர்கள், ஆய்ச்சியர்கள், ஆயர் சிறுமிகள், பசுக்கள், கன்றுகள் ஆகிய இவர்களிடம் உத்தரோத்தரம் த்₃விகு₃ணிதமாயன்றோ கண்ணனின் அன்பிருப்பது. "திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி" "கன்று மேய்த்து இனிதுகந்த" "காலிமேய்க்க வல்லான்" "கன்று மேய்த்து விளையாட வல்லான்" முதலான ப்ரமாணங்களில் பொதிந்துகிடக்கும் பரமரஹஸ்யமான பெரும்புதையலன்றோ இப்பொருள். ஆக இப்பாட்டால் "ப்ரஜாபதிஸ் த்வம் வேத₃। ப்ரஜாபதிம் த்வோ வேத₃। யம் ப்ரஜாபதிர் வேத₃ ஸ புண்யோ ப₄வதி" [பரமபுருஷன் ஒருவனைத் (தானே) அடைகிறான்; பரமபுருஷனை ஒருவன் (தான்சென்று) அடைகிறான். இவர்களிருவரிலும் எவனைப் பரமபுருஷன் அடைகிறானோ அவனே சிறந்தவன்] என்னும் வேதா₃ர்த்த₂ம் வெளியிடப்பட்டதாயிற்று. 61.

பெற்றவனான எம்பெருமானுடைய, வண்டு உலவு தண் துழாய் தார் தன்னை — வண்டுகள் ஸஞ்சரிக்கப்பெற்ற குளிர்ந்த திருத்துழாய்மாலையை, சூடி—(தலையில்) அணிந்து தரித்து—அதனால் ஸத்தைபெற்று, திரு நின்ற பக்கம் திறவிது என்று ஓரார்—'பிராட்டி பொருந்தியிருக்கப்பெற்ற இடமாகிற நாராயணனே பரம்பொருள்' என்று நிச்சயிக்க மாட்டாதவர்கள், கரு நின்ற—(தங்களைப்போலே) கர்ப்பவாஸம்பண்ணிப் பிறக்கின்ற பிரமன் உருத்திரன் முதலானோரை, கல்லார்க்கு உரைப்பர்—(பரதெய்வமாக) மூடர்களுக்கு உபதேசிப்பர்கள்.

---

அவ:—ஶ்ரிய:பதியை ஸர்வேஶ்வரனென்று அறியாதே தங்களையொத்த ஸம்ஸாரிகளை ஈஶ்வரர்களாக அறிவுகேடர்க்கு உபதேசியாநிற்பர்கள் என்கிறார்.

---

62. அவ:—தன் பெருமையைப் பார்த்து இன்புற்றவுடன் பிறருடைய தாழ்வைக் கண்ணுற்றார். இதுக்குக் காரணம் தங்களோடொத்து கர்ப்பவாஸம்பண்ணிப் பிறந்த சில தெய்வங்களைப் பரதெய்வமாக நினைத்து மயங்குகையும் மயக்குகையுமன்றோ' என்று வருந்தி அருளிச்செய்கிறார் இப்பாட்டில். பிறர் துன்பம் கண்டால் பொறுக்கமாட்டாமலிருக்கையன்றோ ஸ்ரீவைஷ்ணவலக்ஷணம்.

வ்யா:—(திருநின்ற பக்கம் திறவிது) இன்ன வஸ்து என்ன வேண்டியதில்லை. பிராட்டி எந்த வஸ்துவிலே ஸாந்நித்யம் செய்திருக்கிறாளோ அதுவே பரதத்துவம். "ஶ்ரத்தயா தேவோ தேவத்வமஶ்நுதே" [ஶ்ரத்தாஶப்தவாச்யையான பிராட்டியாலே பெருமான் தேவனாயிருக்கும் தன்மையைப் பெறுகிறான்] என்று மறையும் முடிவு கட்டின விஷயமன்றோ இது.

"அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம் ப்ரஹ்ம ததபூத்" [30] [(பிராட்டியின்) அதிகமான கடாக்ஷங்கள் எப்பொருளின்மீது விழுந்தனவோ, அப்பொருள் பரப்ரஹ்மமாயிற்று.] என்றும்,

"வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி
யத்பாதசிஹ்நைஸ் தரந்தி" [4]

பெரி-வ்யா:— (திருநின்றபக்கம்) "अपाङ्गा भूयांसो यदुपरि" (அபாங்கா₃ பூ₄யாம்ஸோ யது₃பரி) என்னும்படியே 'இன்ன வஸ்து' என்னவேண்டா; ஏதேனுமொரு வஸ்துவிலே அவ ளுடைய கடாக்ஷமுண்டாகில் அது ஸர்வேச்வரதத்வமாகிறது. (திறவிதென்று) திறவிதாவது - ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தமும் தன்னதீ₄னமாய், வேறென்றுலறியாதது; ஒருசேதநராகில் அறிய லாம் என்கை. (கருநின்ற கல்லாரித்பாதி₃) மாம்பழமுண்ணி ந்யாயத்தாலே ஶ்ரீஸம்ப₃ந்த₄மில்லாதாரை ஶ்ரீமான்களாகச்சொல் லும்படியன்றிக்கே, பெரியபிராட்டியார் திருமார்விலே எழுந்

உரை:—பெரியபிராட்டியார் எழுந்தருளியிருக்கிற திரு மார்பையுடையனாய், அத்தாலே ஸ்ரீத₄ரனென்னும் திரு

[எப்பிராட்டியின் திருவடியடையாளங்களை முராரியின் திருமார்பிலே கண்டு வேத₃ாந்தங்கள் பரதத்வ விசாரத்தை முடிக்கின்றனவோ.] என்றும் ஸ்ரீகு₃ணரத்நகோசத்தில் பட்டரும் இவ்வர்த்தத்தையே அறுதி யிட்டாரன்றோ. (திறவிதென்று) திறவித'வது:—தன்னையொழிந்த எல்லாப் பொருளும் தனக்கு வசப்பட்டதாய், தானே தன்னைக் காட்டினாலொழிய வேறென்றுல் அறியத்தகாதது. "ஆப₄ாஸமான (மேலெழத்தோன்றும்) வசநங்களாலும், யுக்திகளாலும் அசைக்க வொண்ணாதது" என்பர் அப்பிள்ளை. (ஓரார்) அறிவுடையாரா யிருந்தால் இத்தத்துவம் இப்படிப்பட்டது என்று அறியலாமே! அதில்லையே! அறிவுடைமைக்கு அடையாளமேயில்லையே! (கரு நின்ற) தங்களோடொக்க க₃ர்ப்ப₄வாஸம் பண்ணிப் பிறக்கும் உருத் திரன் முதலிய தேவதைகளை. "உஷஸி ரேதோऽஸிஞ்சத்" [உஷ காலத்துக்கு அபி₄மானினியான தே₃வியிடம் பிரமன் வீரியத்தை விட்டான்] என்று உருத்திரனின் பிறப்பைச் சொல்லும் வேத₃ப₄ாக₃ மொன்று அவனும் க₃ர்ப்ப₄வாஸம் பண்ணிப்பிறந்தவனே என்று பேசிற்றன்றோ. (கரு நின்ற கல்லார்க்கு உரைப்பர்) தங்களைப் போன்ற ஜீவர்களான தே₃வர்களைப் பரதெய்வமாக, தங்களைப் போன்ற ஶாஸ்த்ரஜ்ஞாநமற்ற மூட₄ர்களுக்கு உபதேசிப்பார்கள்.

இவர்கள் செய்ய அடுப்பது யாதென்பதைப் பிற்பகுதியாலே பேசுகிறார்:— (திருவிருந்த மார்வன் சிரீதரன்) மாம்பழத்தின் வாஸனை யும் அறியாததொரு புழுவுக்கு உலகத்திலே 'மாம்பழமுண்ணி' என் றும் பெயருண்டு. பிராட்டியின் ஸம்ப₃ந்த₄லேசமும் அற்ற மற்ற

தருளியிருக்கையாலே 'ஸ்ரீத₄ரன்' என்று திருநாமத்தை உடையவனுடைய-மது₄வெள்ளத்தாலே வண்டுகள் திரியாநின்றுள்ள செவ்வியையுடைய திருத்துழாயை "சூடிக்களைந்தன சூடும்" என்னும்படியே தலையாலே த₄ரித்துத் திருநின்ற பக்கம் திறவிதென்று ஓரார். 62.

---

நாமத்தை முக்₂யமாகவுடைய ஸர்வேஶ்வரனுடையதாய். மது₄ஸம்ருத்₃தி₄யாலே வண்டுகள் இதஸ்ததஸ்ஸஞ்சரியா நிற்பதான குளிர்ந்த திருத்துழாய் மாலையை, "தொடுத்த துழாய் மலர்சூடிக் களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" என்கிறபடியே தலைக்கு அலங்காரமாக த₄ரித்து, அத்தாலே லப்₃த₄ஸத்தாகராய் த₄ரித்து "இறையுமகலகில்லேன்" என்று பெரியபிராட்டியார் நிரந்தரவாஸம் பண்ணுகிற வலப்பக்கத்தையுடைத்தான வஸ்துவே, வசநாப₄ாஸயுக்த்யா

---

தெய்வங்களை "ஸ்ரீமான்" என்று அவற்றின் ப₄க்தர்கள் அழைப்பது மாம்பழமுண்ணியென்னும் பெயரை ஒத்ததேயாகும். இப்பரமபுருஷன் விஷயத்திலோவெனில், பெரிய பிராட்டியார் திருமார்விலேயே "அகல கில்லேன் இறையும்" என்று எழுந்தருளியிருக்கையாலே, "ஸ்ரீத₄ரன்" என்னும் பெயருக்குப் பொருந்தியவன் இவனேயென்கை. இதுவே எம்பிரானுக்குள்ள தனிப்பெருமை என்று காட்டுவதற்காகவன்றோ

"ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸ்ரீவாஸ: ஸ்ரீபதி: ஸ்ரீமதாம் வர:
ஸ்ரீத₃: ஸ்ரீஶ: ஸ்ரீநிவாஸ: ஸ்ரீநிதி₄: ஸ்ரீவிப₄ாவந: ||
ஸ்ரீத₄ர: ஸ்ரீகர: ஶ்ரேய:ஸ்ரீமாந்" [608-619]

[திருமறுமார்வன்: திருவுக்கிருப்பிடம்; திருவின் நாயகன்; திருவாளர் தலைவன்; திருவையளிப்போன்; திருவுக்கும்திரு; திருமகள் கொழுனன்; திருவின் பெட்டகம்; திருப்புகழாளன்; திருவை தரிப்போன்; திருவுடன் பிறப்போன்; திருவை உடையோன்] என்று பன்னிருதிருநாமங்களாலே இவனுடைய ஸம்ப₃ந்த₄த்தை விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலே வியாஸர் வெளியிட்டார். "திருவிருந்த மார்பில் சிரீதரன்" என்றும் பாடும் காண்கிறது. (சிரீதரன் தன் வண்டுலவு தண்டுழாய்த் தார் தன்னைச் சூடித்தரித்து) லக்ஷ்மீநாத₂னுடைய, மது₄வெள்ளம் மிக்கிருக்கையாலே வண்டுகள் ஸஞ்சரிக்கும், குளிர்ந்து மலர்ந்த திருத்துழாய் மாலையை "சூடிக்களைந்தன சூடும் இத்தொண்டர்களோம்" [திருப்பல்லாண்டு-9] என்கிறபடி தலையிலே சூட்டிக்

63. தரித்திருந்தே ஞகவே தாராகணப் போர்
விரித்துரைத்த வெந்நாகத் துன்னை—தெரித்தெழுதி
வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது.

பதவுரை:— தாராகணம் — நக்ஷத்ரக₃ணங்களினுடைய, போர்—ஸஞ்சாரத்தை, விரித்து உரைத்த—(ஜ்யோதிஶ் ஶாஸ்த்ரத்தின் மூலம்) விஸ்தாரமாக வெளியிட்டவனும், வெம் நாகத்து உன்னை—எதிரிகளுக்கு வெம்மை மிக்கவனுமான திருவனந்தாழ்வானுக்கு அந்தராத்மாவாகிய உன்னை, தெரித்து—அநுஸந்தி₄த்தும், எழுதி—எழுதியும், வாசித்தும்—(எழுதினவற்றைப்) படித்தும், கேட்டும்—(பலரிடம்) ஶ்ரவணம்பண்ணியும், வணங்கி—நமஸ்காரம்பண்ணியும், வழிபட்டும்—ஆராத₄னம் செய்தும், பூசித்தும்—பூஜித்தும், போது போக்கினேன்—காலத்தைக் கழித்துக்கொண்டிருக்கிறேன், ஆகவே—இப்படி செய்ததினால், தரித்திருந்தேன்—நான் ஸத்தைபெற்றிருந்தேன்.

---

ப₄ாஸங்களால் சலிப்பிக்கவொண்ணாத பரவஸ்துவென்று யுக்தியுக்தமாக அறுதியிடமாட்டாதவர்கள் — தங்களோடொக்கக் கர்மவஶ்யராய் கர்ப்ப₄வாஸம்பண்ணிப் பிறப்பது இறப்பதாய்த் திரிகிற க்ஷுத்₃ரதே₃வதைகளை, ஶாஸ்த்ராப்₄யாஸத்தில் புதியதுண்டறியாத தங்களோடொத்த அறிவுகேடர்க்கு உபதே₃ஶியாநிற்பர்கள். கல்லார்க்கு—கல்லாதவர்களுக்கு என்றபடி. 62.

---

கொண்டு, அத்தாலே ஸத்தைபெற்று நின்று; ''திருநின்ற பக்கம் திறவிதென்று ஓரார்'' என்று கீழோடே கூட்டி அந்வயித்துக் கொள்வது. 62.

63. அவ:—சென்ற பாட்டில் பிறருடைய தாழ்வைக்கண்டு, 'பரமபுருஷனை வணங்குகிறார்களில்லையே' என்று வருந்தினர். இப்பாட்டில், ''ஆரானுமாதானும் செய்ய அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே'' [பெரிய திருவ 25] என்ற நம்மாழ்வாரைப்

பெரி-அவ:—(தரித்திருந்தேன்) கீழிற்பாட்டில் இப்படி செய்திலர் என்று வெறுத்தார் லோகத்தை. இதில் தமக்குள்ள ஏற்றம் சொல்லுகிறது.

வ்யா:—(தாராகணப்போரித்யாதி) நக்ஷத்ரகணங்களுடைய ஸஞ்சாரத்தை விஸ்த்ருதமாகச் சொன்ன திருவனந்தாழ்வானுக்கு ஆத்மாவாயிருந்துள்ள உன்னை அநுஸந்தித்தும்,

---

அவ:— "கல்லார்க்கு உரைப்பர்" என்று முதலிலே அறிவிற்புதியதுண்டறியாத நாட்டாரை கர்ஹித்து வார்த்தை சொல்லாநின்றீர். அவர்களிற்காட்டில் உமக்கு ஏற்றம்தான் என்னென்ன, இதுவன்றோ நான் ஸத்தை பெற்று தரிக்கைக்காகப் போதுபோக்கினபடி என்கிறார்.

உரை:-நக்ஷத்ரகணங்களினுடைய ஶுபாஶுபநிமித்தமான பரஸ்பர ஸஞ்சாரத்தை லோகரக்ஷணார்த்தமாக ஜ்யோதிஶ்ஶாஸ்த்ர முகத்தாலே பரக்க அருளிச்செய்த— ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணாத வெம்மையையுடைய திருவனந்தாழ்வானுக்கு அந்தராத்மாவாய் நின்ற உன்னை விஶதமமாக அநுஸந்தித்து, அநுஸந்தித்த ப்ரகாரத்திலே

---

**போலே நெஞ்சை மீட்டு, மறுபடியும் தான் பெற்ற நன்மையைப் பேசி உகக்கிறார்.**

***வ்யா:—(தாராகணப்போர் விரித்துரைத்த வெந்நாகத்துன்னை) நக்ஷத்ரகணங்களின் போக்கை (கதியை - ஸஞ்சாரத்தை) ஜ்யோதி: ஶாஸ்த்ரமூலமாக விஸ்தாரமாகச் சொன்ன திருவனந்தாழ்வானாகிற உன்னை; திருவநந்தாழ்வானுக்கு ஆத்மாவாயிருக்கும் உன்னை யென்றபடி. "என்னாகத்துன்னை" என்று ஆராய்ச்சிக்காரரொருவர் "ஆழ்வார்கள் காலநிலே" என்னும் புத்தகத்தில், பாடத்தை மாறு படுத்தி வீண் ஆராய்ச்சிகள் செய்திருப்பது ஆசார்ய ஸ்ரீஸூக்தி விருத்தமாகையாலே அநாதரிக்கத்தக்கது. (தெரித்து) தெரிந்து; அறிந்து; அநுஸந்தித்து என்றபடி. "தரித்து" "விரித்து" என்றதோடு எதுகை ஒத்திருப்பதற்காக, 'ந்' என்னும் மெல்லொற்றை, 'த்' என்னும் வல்லொற்றாக்கி, 'தெரித்து' என்று கிடக்கிறது. "தெரிவித்து" [உபதேசித்து] என்பது இடைக்குறையாய்க் கிடக்***

லிகி2த்தும், வாசித்தும், ஶ்ரவணம்பண்ணியும், நிர்மமனை வணங்கி அதுதானே யாத்ரையாய் ஆராதி4த்தும் காலம் போக்கினேன். (ஆகவே தரித்திருந்தேன்) ஆக தரித்திருந்தேன். (தரித்திருந்தேனாகவே) தரித்திருந்தேனாகைக்காகப் பூசித்துக் காலத்தைப் போக்கினேன் என்றுமாம். 63.

---

எழுதியும், நாத்தழும்பெழும்படி பலகாலும் அத்தைப் படித்தும், அதின் அர்த்த2ங்களை வேறே சிலர் பக்கலிலே ஶ்ரவித்தும், பின்னையும், **"सन्ततं नमस्यन्तः"** (ஸந்ததம் நமஸ்யந்த:) என்கிறபடியே நிர்மமனைத் திருவடிகளிலே அநவரதம் ப்ரணாமம் பண்ணியும் அதுதானே யாத்ரையாயும், **"मद्याजी भव"** (மத்3யாஜீ ப4வ) என்கிறபடியே தத்தத்காலங்கள் தோறும் ஸமாராத4நம் பண்ணியும் இப்படி காலக்ஷேபம் பண்ணினேனையன்றோ நான் த4ரித்திருந்தேன். த4ரித்திருந்தேனாகைக்காக இப்படி போதுபோக்கினேன் என்றுமாம். 63.

---

கிறது என்று கொள்ளலாமாயினும், "தெரித்து, எழுதி, வாசித்தும், கேட்டும்" என்னும் க்ரமத்தைப் பற்ற, "அநுஸந்தி4த்து" என்னும் பொருளே சுவையுடைத்தாகையாலே, ஆசார்யவர்யரால் அங்ஙனமே அருளிச்செய்யப்பட்டது. (தெரித்து) முதலில் மனஸ்ஸாலே அநுஸந்தி4த்து. (எழுதி) பிறகு அவ்வர்த்த2ங்களை நூல்களாக எழுதி. (வாசித்தும்) தாமும் பிறரும் எழுதிய செவிக்கினிய செஞ்சொற்களைப் படித்தும்; சகாரத்தாலே பிறரைப் படிக்கச் செய்வதையும் கூட்டிக் கொள்கிறது. (கேட்டும்) முதலாழ்வார்கள் போன்ற மஹான்கள் அருளிச்செய்யுமவற்றைக் கேட்டும். சகாரத்தாலே தம்முடைய சிஷ்யர்களுக்கு உபதேசித்து அவர்களைக் கேட்கச்செய்வதையும் கூட்டுகிறது. (வணங்கி) 'நாம் இவ்வளவு அறிவுடையோம்' என்னும் க3ர்வமில்லாமல், 'அதுவும் அவனதின்னருளே' என்றறிந்து மமகாரமற்று அவன் திருவடிகளிலே வணங்கி. (வழிபட்டும் பூசித்தும்) மநோவாக்காயங்களால் அவனை ஆராத4னம் செய்தும். "வழிபட்டும்" என்றும் "பூசித்தும்" என்றும் இரண்டு பதங்களைப் பிரயோகிக்கையால் தனக்கு ப4க3வதா3ராத4னமே ப்ரதா4னமான பொழுதுபோக்காயிருந்தது என்று உணர்த்துகிறார். (போக்கினேன் போதை) ஆத்மோஜ்ஜீவநார்த்த2மாகச் செய்யவேண்டுவதொன்றில்லை. திருத்தலாமள

64. போதான விட்டிறைஞ்சி யேத்துமினோ பொன்மகரக்
காதானை யாதிப் பெருமானை—நாதானை
நல்லானை நாரணனை நம்மேழ் பிறப்பறுக்குஞ்
சொல்லானைச் சொல்லுவதே சூது.

பதவுரை:—பொன் மகரம் காதானை—அழகிய மகரகுண்ட$_3$லங்களைத் திருக்காதுகளில் அணிந்துள்ளவனும், ஆதி—ஜக$_3$த்காரணபூ$_4$தனும், பெருமானை—பெருமை பொருந்தியவனும், நாதானை—(அனைவர்க்கும்) நாத$_2$னாயிருப்பவனும், நல்லானை-அடியாரிடம் வாத்ஸல்யமுடையவனும், நாரணனை-நாராயணனென்று ப்ரஸித்$_3$தி$_4$பெற்றவனும், நம் ஏழ் பிறப்பு அறுக்கும் சொல்லானை—நம்முடைய ஜந்ம பரம்பரைகளை அறுக்கவல்ல திருநாமங்களையுடையவனுமான புருஷோத்தமனைக் குறித்து, போது ஆன இட்டு இறைஞ்சி ஏத்துமின்—புஷ்பமென்று பேர் பெற்றவற்றை ஸமர்ப்பித்து வணங்கித் துதிசெய்யுங்கோள்; சொல்லுவதே—(அவனுடைய திருநாமங்களை வாயாரச்) சொல்லித் துதிப்பதே, சூது—நமக்குத் தகுதி.

---

அவ:— என்னிலை இதுவானபின்பு நீங்களும் என்னைப் போலே—ஆகர்ஷகமான அழகையுடையனாய் ஸர்வாதி$_4$கனான ஸர்வேஶ்வரனை புஷ்பாத்$_3$யுபகரணங்களைக்கொண்டு ஆஶ்ரயித்து ஏத்துங்கோள் என்கிறார்.

---

வும் பிறரையும் திருத்தியாகிவிட்டது. இனி, இங்கிருக்கும் நாள் நல்ல போதாகப் போக்கவேண்டுமிவ்வளவேயன்றோ உள்ளது. அதை இக்காரியங்களாலே போக்கினேன். (ஆகவே தரித்திருந்தேன்) ஆகையினாலேயே மிகக்கொடிய இந்த ஸம்ஸாரத்திலிருந்தும் ஸத்தை பெற்றிருந்தேன். அன்றிக்கே, இவற்றைச் செய்தது எதற்காகவெனில்;—(தரித்திருந்தேனாகவே) தரித்திருந்தவன் ஆவதற்காக; ஸத்தை பெறுவதற்காக என்றும் கொள்ளலாம். 63.

64. அவ:—தம் காலக்ஷேபப்ரகாரத்தை அருளிச்செய்தார் கீழ்ப் பாட்டில். பிறருக்குப் போதுபோக்கும் வழியை உபதேசிக்கிறார் இப் பாட்டில்.

பெரி-வ்யா:—(போதானவித்யாதி) 'இன்ன புஷ்பம்'என்று நியதியில்லே; பூவானதை யெல்லாவற்றையும் கொண்டு திரு வடிகளிலே ஸமர்ப்பித்து வணங்கி ஸ்தோத்ரம் பண்ணுங்கோள். (பொன் மகரக்காதானே) கைக்கூலி கொடுத்தும் ஸ்தோத்ரம்

---

உரை:-ஸ்ப்ருஹணீயமான திருமகரகுண்டலங்களாலே அலங்க்ருதமான திருக்காதுகளையுடையனாய், அழகுகண்டு மேல் விழுகிறவளவன்றிக்கே, அழிந்துகிடக்கிற காலத்திலே இவற்றை உண்டாக்கின ஸர்வாதிகனாய், ஸர்வர்க்கும்

---

வ்யா:—(போதான இட்டிறைஞ்சி ஏத்துமினோ) பூவென்று பெயர்பெற்றது எதுவானாலும் சரி; அவற்றையெல்லாம் எம்பெருமானுடைய திருவடிகளிலே ஸமர்ப்பித்து, மனத்தாலே அவனை வணங்கி, வாயாலே துதியுங்கள். பக்தியுடன் ஸமர்ப்பித்தால் எந்தப் பூவாயினும் எம்பிரானுக்கு ஆகாததில்லை என்னும் சாஸ்திரார்த்தத்தை "போதான" என்னும் பதத்தாலே உணர்த்துகிறார். "பத்ரம் புஷ்பம்... பக்த்யுபஹ்ருதம் அஶ்நாமி" [பக்தியோடு அளிக்கப்பட்ட எந்த இலையையும் பூவையும் நான் ஆதரத்துடன் அனுபவிக்கிறேன்.] என்றான் கீதையில் கண்ணன்; திருமங்கையாழ்வாரும் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும்... புள்ளாய் ஓரேனமுமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கு" என்று எம்பெருமானுக்கு ஆகாத பூவில்லை என்று உணர்த்தினார். "புரிவதுவும் புகை பூவே" என்றார் நம்மாழ்வாரும். இவ்விடத்தை உபந்யஸியாநின்ற பட்டர் "கூளத்தையிட்டுப் புகைத்தாலும் போதும்; கண்டகாலிப்பூவை இட்டாலும் ஏற்றுக்கொள்ளுவன்" என்று அருளிச்செய்தார். இதைக்கேட்ட நஞ்சீயர் " 'ந கண்டகாரிகாபுஷ்பம் தேவாய விநிவேதயேத்' [கண்டகாரிப்பூவை எம்பெருமானுக்கு இடலாகாது] என்று ஶாஸ்த்ரம் சொல்லிற்றே" என்றார். "எம்பெருமானுக்கு ஆகாதது என்னும் நினைவாலே கண்டகாரிப் புஷ்பத்தை நிஷேதிக்கவில்லை, பறிக்கிற ஆஶ்ரிதன் கையில் முள்பாயும் என்பதற்காகத் தவிர்த்தது காணும்" என்று பட்டர் அருளினார். (இட்டு இறைஞ்சி ஏத்துமினோ) 'இட்டு' என்று காயிககைங்கர்யத்தையும், 'இறைஞ்சி' என்று மாநஸகைங்கர்யத்தையும், 'ஏத்துமினோ' என்று வாசிககைங்கர்யத்தையும் சொல்லுகிறது. (பொன் மகரக் காதானை) பொன் போலே ஆசைப்படத்தக்கதாய், மகரகுண்டலங்களணிந்ததான திருச்செவிகளை உடையவனை. விலைகொடுத்து வாங்கிப் போற்றி

பண்ணவேண்டும்படி ஸ்ப்ருஹணீயனானவனை. (ஆதியித்யாதி₃) அழகியதென்று அப்ராப்தமன்றிக்கே நமக்கு உத்பாத₃கனானவன். ஸ்வாமியாய், வத்ஸலனாகையாலே நாராயணஶப்₃த₃ வாச்யனாய், நம்முடைய ஸம்ஸாரஸம்ப₃ந்த₄த்தை அறுக்கும் திருநாமத்தை உடையவனைச் சொல்லுவதே இவ்வாத்மாவுக்கு உறுவது. 64.

---

நிருபாதி₄கஶேஷியாய் ஆஶ்ரித விஷயத்தில் அதிமாத்ர வத்ஸலனாய், பிரியில் தரியாமல் உள்ளே பதிகிடந்து ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகையாலே நாராயண ஶப்₃த₃வாச்யனாய், நம்முடைய—ஒன்றன்பின்னொன்றாக ஒழுக்கறாமல் வருகிற ஜன்மபரம்பரைகளை வேர்ப்பற்றோடே அறுத்துவிடவல்ல திருநாமங்களையுடையவனை,

---

ரக்ஷிக்கப்படும் பொன்போலே இவனும் கூலிகொடுத்துத் துதிக்கத் தக்கவன் என்று உணர்த்துவதற்காக 'பொற்காதானை' என்றார். 'பொன்மகரம்' என்று ஸுவர்ணமயமான மகரகுண்ட₃லங்கள் என்றும் பொருள் கொள்வர். (ஆதிப்பெருமானை) அழகியதாயிருந்தும், தகாததாயிருக்கும் சில பொருள்கள்போல் அன்றிக்கே, நமக்குத் தகுந்தவனாய், நம்மைப் படைத்த பெருமையை உடையவனை. ''நம்மை ஏற்பனோ?'' என்ன:— (நாதானை) நம் ஸ்வாமியாகையாலே நம்மை அங்கீகரிக்கக் கூடியவனை. 'நம் தோ₃ஷங்கண்டு வெறுப்பனோ?' என்ன,—(நல்லானை) தோ₃ஷங்களைக் காணாமலிருக்கை, அவைகளை கு₃ணமாகவும் கொள்ளுகை என்னும் வாத்ஸல்யமாகிற நல்லதோர் கு₃ணத்தை உடையவனை. இப்பெருமைகள் இவனுக்குண்டு என்னும் விஷயத்தில் ப்ரமாணமென்னவெனில்;—(நாரணனை) நாராயணன் என்னும் இவன் பெயரே இப்பெருமைகளைப் பிரகடனம் செய்கிறதன்றோ என்கிறார். (ஆதிப்பெருமானை நாரணனை) ஸ்ருஷ்டி காலத்தில் நரஸமூஹங்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருந்தவனாகையாலே நாராயண ஶப்₃த₃ம் இவனுடைய ஸர்வஸ்ரஷ்ட்ருத்வத்தையும் காட்டுகிறது. ''ஞாலமுற்றும் உண்டுமிழ்ந்த நாராயணனே'' [திருவாய் 4-3-6] என்றார் ஆழ்வாரும். (நாதானை நாரணனை) நரஸமூஹங்களை த₄ரித்தும், வியாபித்தும் நின்று, அவற்றுக்கு ப்ராப்ய ப்ராபகங்களாயிருக்கையாலே ஸர்வஸ்வாமித்வமும் நாராயண ஶப்₃தா₃ர்த்த₂ம். ''நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்'' [திருவாய் 2-7-2]

65. சூதாவ தென்னெஞ்சத் தெண்ணினேன் சொன்மாலே
மாதாய மாலவனே மாதவனே—யாதானும்
வல்வ்வா சிந்தித் திருப்பேற்கு வைகுந்தத்
தில்லேயோ சொல்லீ ரிடம்.

பதவுரை:—மாது ஆய—அழகுதான் ஒரு வடிவுகொண்டாப் போலேயிருப்பவனும், மாலவனே—அடியாரிடம் மயக்கமுடையவனுமான, மாதவனே—திருமாலேக் குறித்து, சொல்

---

கைக்கு எட்டப்பட்ட பூக்களானவை எல்லாவற்றையும் பணிமாறி, நிர்மலராய் நிர்மமராய்த் திருவடிகளிலே விழுந்து புகழுங்கோள்: சொன்ன கு₃ணங்களுக்கு வாசகமான அவன் திருநாமங்களேச் சொல்லுகையே நல்ல வாய்ப்பு. 64.

---

என்றூர் ஆழ்வாரும். (நல்லானே நாரணனே) மிகத்தாழ்ந்த நர ஸமூஹங்களேக் கண்டு வெறுக்காமல் அவற்றினுள்ளே பூர்ணமாக வியாபித்து விளங்குகிறுறைகயாலே வாத்ஸல்யகு₃ணமும் நாராயண ஶப்₃த₃ார்த்த₂ம். "நல்லானுடைய நாமம் சொல்லில் நமோ நாராயணமே"[பெரிய்திரு 6-10-4] என்றூர் மங்கை மன்னனும். (நாரணனே நம்மேழ் பிறப்பறுக்கும் சொல்லானே) நம்முடைய கணக்கற்ற பிறவிகளேப் போக்கடிக்கும் நாராயண ஶப்₃த₃த்தால் சொல்லப்படுமவனே.

"ஸங்கீர்த்ய நாராயண ஶப்₃த₃மாத்ரம் விமுக்தது₃:க்கா₂:
ஸுகி₂நோ ப₄வந்தி"

[நாராயண ஶப்₃த₃த்தைமட்டும் ஸங்கீர்த்தனம் செய்தவளவில் ஸம்ஸாரத் துன்பம் நீங்கி மோக்ஷஸுக₂த்தை அடைகின்றனர்] என்று சொல்லப்பட்டதன்றே. "அடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரஞ்செய்யும் நாராயணவென்னும் நாமம்" [பெரிய திரு 1-1.9] என்றூர் மங்கை மன்னனும். அன்றிக்கே, "நம்மேழ் பிறப்பறுக்கும் சொல்லானே" என்று பொதுவாக பகவானுடைய திருநாமங்களின் பெருமையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். "யந்நாமஸங்கீர்த்தநதோ விமுச்யதே" "யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாப₄யாத் விமோக்ஷமாப்நோதி" [எவனுடைய திருநாம ஸங்கீர்த்தனத்தினல் ஸம்ஸாரமாகிற பெரும் ப₄யத்தினின்றும் நீங்கி மனிதன் மோக்ஷமடைகிருனே......] என்று ரிஷிகளும் இவ்வர்த்த₂த்தைப் பேசினர். (சொல்லுவதே சூது) அவனேச் சொல்லுவதே ஜீவர்களான நமக்குத் தகுந்தது. 64.

மாலை—இச்சொல் தொடைகளை, யாதானும் வல்ல ஆ சிந்தித்து இருப்பேற்கு—சக்தியுள்ளவரையில் அனுஸந்தி₄த்திருக்கிற எனக்கு, வைகுந்தத்து இடம் இல்லைபோ-ஸ்ரீவைகுண்ட₂த்தில் இடம் இல்லையோ? சொல்லீர்—சொல்லுங்கள்; சூது ஆவது—இதுவே நமக்குத் தகுந்தது என்று, என் நெஞ்சத்து எண்ணினேன்—என் மனத்தில் உறுதிகொண்டேன்.

பெரி-வ்யா:—(சூதித்யாதி₃) உறுவதாவது என் நெஞ்சிலே மநோரதி₂த்தேன். (சொன்மாலையித்யாதி₃) அழகுதான் வடிவு கொண்டாற்போலேயாய், வ்யாமுக்₃த₄னாயிருந்துள்ள ஸ்ரிய:பதி

---

அவ:— ஸ்மர்த்தவ்யனான எம்பெருமானுடைய சீர்மையாலே பரமபத₃ ப்ராப்திக்கு ஸ்மரணமாத்ரத்துக்கு அவ்வருகுண்டோ? என்கிறார்.

உரை:— அழகுதான் ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கிறவனாய் ஆஶ்ரிதவ்யாமுக்₃த₄னான ஶ்ரிய:பதியைச் சொன்ன ஶப்₃த₃ஸந்த₃ர்ப்ப₄ரூபமான இத்திருவந்தாதியாகிற ப்ரப₃ந்த₄த்தை ஏதேனும் வல்லதொரு ப்ரகாரம் அநுஸந்தி₄த்து இருப்போமென்று இருக்கிற எனக்கு ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வத்துக்கு ஏகாந்தமான பரமபத₃த்தில் இடமில்லையோ சொல்லுங்கோள். இதுவே நமக்கு நல்ல

---

65. அவ:—''சொல்லுவதே சூது'' என்று பிறருக்கு உபதே₃ஶித்ததைத் தாம் அனுஷ்டி₂த்தபடியையும், அதனால் பெறவிருக்கும் ப₂லனையும் பேசுகிறார்.

வ்யா:—(சூதாவது என்னெஞ்சத் தெண்ணினேன்) செய்யத் தகுந்த காரியத்தை என் மனத்திலே மனனம் செய்தேன். ''நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்'' [பெரிய திருவந்தாதி-53] என்கிறபடியே நினைப்பதும் பேரின்பமாயிருக்கும் விஷயமாகையாலே இதையே நெஞ்சிலே மநோரதி₂த்தேன். அது யாதென்னில்—(சொல்மாலை வல்லவா சிந்தித்து...) ஸர்வேஶ்வரனைச் சொல்லும் பிரபந்தங்களை முடிந்தவரையில் அநுஸந்தி₂ப்பதே என்கை. 'விஷயமேது' என்ன ;—

யைச் சொல்லப்பட்ட ப்ரப₃ந்த₄த்தை ஏதேனும் ஒருபடி அநு ஸந்தி₄த்திருக்கிற எனக்குப் பரமபத₃த்தில் இடமில்லையோ? ஸ்ம்ருதிமாத்ரம் உடையாருக்கும் பரமபத₃ம் ஸித்₃தி₄யாதோ? என்கை. "स्मृतो यच्छति शोभनं" (ஸ்ம்ருதோ யச்ச₂தி ஶோப₄நம்) என்கிறபடியே, பரமபத₃ப்ராப்திக்கு ஸ்மர்த்தவ்யனுடைய நீர்மை யாலே ஸ்மரணமாத்ரத்துக்கு அவ்வருகு வேண்டாவென்று தாத்பர்யம்.

---

வாய்ப்பென்று என் மனஸ்ஸிலே அத்₄யவஸித்தேன். மாதென்று — அழகாய்—மாதாயவென்றது—அழகென்றும், அழகுக்கு ஆஶ்ரயமென்றும் இரண்டின்றிக்கே அழகு தான் ஒரு வடிவுகொண்டாற்போலேயிருக்குமவன் என்கை. அன்றிக்கே — மாதாயவென்றது — தாய்போலே பரிவனானவனை என்றுமாம். "மாயவனை" என்று பாட₂மாய் ஆஶ்சர்ய கு₃ணசேஷ்டிதங்களையுடையவனை என்றுமாம். 65.

---

(மாதாய) அழகே வடிவெடுத்தது என்னும்படியான விஷயம். மாது— அழகு. வெளியழகேயாய், உள்ளத்தில் கொடியவனுமிருப்பனோ? என்ன ;—(மாலவனை) அன்பே உருவானவனை. இவ்வழகுக்கும், அன்புக்கும் அடியென்ன? எனில் ;—(மாதவனை) லக்ஷ்மீநாத₂னை. மா—லக்ஷ்மீ; த₄வன்—நாத₂ன். இவளுடைய ஸம்ப₃ந்த₄மே இவனை அழகனாகவும், அன்பனாகவும் ஆக்குகிறது என்கை. (யாதானும் வல்லவா சிந்தித்திருப்பேற்கு) மாலைச்சொல்லும் மாலைகளை ஏதேனு மொரு விதத்தில் இயன்றவரையில் நினைத்திருக்கும் எனக்கு. (வைகுந்தத்திலையோ சொல்லீர் இடம்) வைகுந்தத்தில் இடமில்லை யோ? நீங்களே சொல்லுங்கள். (சிந்தித்திருப்பேற்கு வைகுந்தத் தில்லையோ இடம்)

"ஆயாஸ: ஸ்மரணே கோऽஸ்ய ஸ்ம்ருதோ யச்ச₂தி ஶோப₄நம்" [வி-பு 1-17-78]

[இப்பரமனை நினைப்பதில் என்ன சிரமமுள்ளது? நினைத்தமாத்ரத்தில் நன்மையளிப்பவன் இவன்] என்று சொல்லப்படும் ஸௌலப்₄யத்தை யுடையவனாய் அவனிருக்கும்போது அவனை அடைய நினைவுக்குமேல் வேறொன்று வேண்டுமோ? (மாதாய) தாய்போலே பரிவனானவனை. "மாலவனை" என்றவிடத்தில் "மாயவனை" என்று பாட₂மாய், ஆஶ்சர்ய மான கு₃ணசேஷ்டிதங்களை உடையவனை என்றும் கொள்ளலாம். 65.

66. இடமாவ தென்னெஞ்ச மின்றெல்லாம் பண்டு
படநாகணை நெடியமாற்கு—திடமாக
வையேன் மதிசூடி தன்னோடு அயனைநான்
வையேனாட் செய்யேன் வலம்.

பதவுரை:—பண்டு—(நான் நினைப்பதற்கு) முனபு, படம் நாக அணை நெடிய மாற்கு—படங்களையுடைய ஶேஷஶயனத்தில் பள்ளிகொண்டருள்பவனாயிருந்த ஸர்வேஶ்வரனுக்கு, இன்று—இப்போது முதலாக, எல்லாம்—மேலுள்ள காலமெல்லாம், இடம்ஆவது—இருப்பிடமாவது, என் நெஞ்சம்—எனது நெஞ்சாகும்; மதி சூடி தன்னோடு—சந்திரனைத் தலையிலே சூடியிருக்கிற ருத்₃ரனையும், அயனை—பிரமனையும், திடம் ஆக—பரம்பொருளாக, வையேன்—மனத்திற்கொள்ள மாட்டேன்; வையேன் நான் — (பரதத்துவமின்னதென்று கண்டறியத்தக்க) ஸூக்ஷ்ம பு₃த்₃தி₄யுடையேனான நான், வலம்—(பகவானை அண்டைகொண்ட) ப₃லத்தாலே, ஆள் செய்யேன்—(அந்த தே₃வதாந்தரங்களுக்குத்) தொண்டு செய்யவும் மாட்டேன்.

பெரி-வ்யா:—(இடமித்யாதி₃) ஸர்வாதி₄கனான ஸர்வேஶ்வரனுக்கு வாஸஸ்த₂ானம்—என்னோடு ஸம்ஶ்லேஷிப்பதுக்கு

அவ:— ஸ்ரீ வைகுண்ட₂த்தில் இடமில்லையோவென்று நான் மநோரதி₂த்தவாறே எம்பெருமான் வந்து என்னெஞ்சிலே புகுந்தருளினனென்று ப்ரீதராகிறார்.

உரை:— என்னை விஷயீகரிப்பதற்கு முன்பு ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான ப₂ணங்களையுடைய திருவனந்தாழ்

66, அவ:—" என்னெஞ்சத்தெண்ணினேன் " என்றார் கீழ்ப் பாட்டில். எண்ணியவுடன் அவன் பட்ட பாட்டையும், அதைக்கண்டு தான் ஈடுபட்டபடியையும் அருளிச்செய்கிறார் இப்பாட்டில்.

வ்யா:—(இடமாவதென்னெஞ்சமின்றெல்லாம்) நான் அவனை நெஞ்சிற்கொண்டபிறகு, இப்போதெல்லாம் என் நெஞ்சமே அவனுக்கு இருப்பிடமாயிற்று. இதற்குமுன் எங்கிருந்தான்? எனில்: (பண்டு

முன்பெல்லாம், தன்னோடே ஸம்ஶ்லேஷத்தாலே விஸ்த்ருத மான ப₁ணத்தையுடைய திருவனந்தாழ்வான்; இப்போதெல்

---

வான் மேலே பள்ளிகொண்டருளக்கடவ ஸர்வாதி₄கனான ஸர்வேஶ்வரனுக்கு, இப்போது தொடங்கி மேலுள்ள கால மெல்லாம் உகப்புடனே எழுந்தருளியிருக்கும் வாஸ ஸ்தா₂னம்—என்னுடைய மனஸ்ஸாயிருக்கும். கலாமாத்ர

---

பட நாகணை) இதற்கு முன்பெல்லாம், தன்னோடு உண்டான நித்ய ஸ்பர்ஶத்தாலே பல்கிப் பணைத்திருக்கும் பல்லாயிரம் படங்களை யுடைய திருவனந்தாழ்வான் மேலேயாயிற்று கண்வளருவது. (இன் றெல்லாம் என்னெஞ்சம்—பண்டு படநாகணை) ஸாத்₄யஸ்த₂லமும் ஸாத₄நாநுஷ்டா₂னஸ்த₂லமும். நிஹீநமான நெஞ்சில் விருப்பம் யாருக்கு? எனில்; (நெடிய மாற்கு) ஸர்வாதி₄கனான ஸர்வேஶ்வர னுக்குஎன்கிறார். (இடமாவதென்...நெடியமாற்கு)

"அன்று வெஃகணைக்கிடந்ததென்னிலாத முன்னெலாம்" [64]

"கிடப்பதும், நற்பெருந்திரைக்கடலுள் நானிலாத
முன்னெலாம்" [65]

என்று இவ்வாழ்வார்தாமே திருச்சந்தவிருத்தத்திலும்,

"பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாளநம்பீ" [5-4-9]

என்று பெரியாழ்வாரும் இவ்வர்த்த₂த்தை விவரித்தருளினார்கள். (நெடிய மாற்கு) என்னிலும் விஞ்சிய காதலை உடையவனுக்கு என்றும் பொருள்கொள்ளலாம். மால்—பெரியோன்; அன்பன்.

"வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று
ஆர்வுற்ற என்னையொழிய என்னின்முன்னம்
பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினான்"
[திருவாய் 9-6-10]

என்னும்படியான நெடிய காதலை உடையவனாகையாலே அதிநிஹீந மான என் நெஞ்சிலே நிலைபெற்றான் என்கிறார். "நீர் என் செய்தீர்?" என்ன; "அவன் வந்து சேர்ந்தபிறகு அந்நெஞ்சை அவனிருக்கத்தக்கதாம்படி திருத்திவைத்தேன்" என்கிறார் பின்னடி

லாம் என்னுடைய ஹ்ருதயம். (திடமித்யாதி₃) சந்த்₃ரனை த₄ரித்தானாயிருக்கிற ருத்₃ரனையும், திருநாபீ₄கமலத்திலே உத்பந்நனாகையாலே அஜனென்றிருக்கிற ப்₃ரஹ்மாவையும் த்₃ருட₄பதா₃ர்த்₂ங்களாக நினையேன். (வையேனாட்செய்யேன்) அதுக்கடி கூரியேனாய், ஸாராஸாரவிவேகஜ்ஞனாகை. "प्रतिबुद्धा न सेवन्ते" (ப்ரதிபு₃த்₃தா₄ ந ஸேவந்தே) என்று கூரியரானவர்கள் தே₃வதாந்தரபூ₄ஜநம் பண்ணார்களிறே என்கை. (வலம்) இதுக்கெல்லாவற்றுக்கும் அடி ப₄க₃வத்பரிக்₃ரஹமான ப₃லம். 66.

---

னான சந்த்₃ரனைத் தலையிலே த₄ரித்திருக்கிற ருத்₃ரன்தன்னோடே கூட இதர விஸஜாதீயமான திருநாபீ₄கமலத்தில் பிறப்பாலே அஜனென்று அபி₄மானித்திருக்கும் ப்₃ரஹ்மாவை த்₃ருட₄வஸ்துக்களாக என் மனஸ்ஸிலே வையேன். பராபரவஸ்துக்களை அலகலகாகக் காணவல்ல அறிவுடையனான நான் அவர்கள்விஷயமாக ப்ரத₃க்ஷிணநமஸ்காராத்₃யநுவர்த்தனங்களைப் பண்ணேன். இவையெல்லாவற்றுக்கும் மூலம் ஸர்வாதி₄கனான எம்பெருமானை அண்டைகொண்ட ராஜகுலத்தால் வந்தமிடுக்கு. "प्रतिबुद्धा न सेवन्ते" (ப்ரதிபு₃த்₃த₄ா ந ஸேவந்தே) என்று ஸாராஸாரவிவேகஜ்ஞர் தே₃வதாந்தர பூ₄ஜனம் பண்ணார்களென்னாநின்றதிறே. வையேன் நான்—குறியேன் நானென்றபடி. அதூ₂வா—

---

களாலே. (திடமாக வையேன்) இதர தே₃வதைகளை நிலையான பொருள்களாக நெஞ்சிலே வைக்கமாட்டேன். அவர்கள் தான் யாரென்னில்; (மதிசூடி தன்னோடு அயனை) ஆபத்துக்காலத்திலே தன்னை அண்டிவந்த சந்திரனைத் தலையிலே த₄ரித்து ரக்ஷிக்கையாலே தானே ஸர்வரக்ஷகன் என்று அபி₄மானித்திருக்கிற ருத்₃ரனையும், நாபீ₄கமலத்திலிருந்து பிறக்கையாலே தான் அயோநிஜன் என்று அபி₄மானித்திருக்கிற பிரமனையும் பரம்பொருளாக நினையேன். (நான் வையேன்) இதற்குக் காரணம் நான் ஸூக்ஷ்மபு₃த்₃தி₄யுடையவனாய், நன்மைதீமைகளை அறியவல்லவனாயிருக்கை. வை—கூர்மை; (இங்கு) பு₃த்₃தி₄கூர்மை. வையேன்-புத்திகூர்மையை உடையேன். (வையேன் ஆட்செய்யேன்) பு₃த்₃தி₄ கூர்மையை உடையேனாகையாலே ப்₃ரஹ்மருத்₃ரர்களுக்கு அடிமை செய்யமாட்டேன்.

67. வலமாக மாட்டாமை தானாக வைகல்
குலமாக குற்றந்தா னாக—நலமாக
நாரணனை நாபதியை ஞானப்பெருமானை
சீரணனை யேத்துந் திறம்.

பதவுரை:—நாரணனை—ஸர்வஸ்வாமியாய், நாபதியை—(என்னுடைய) நாவுக்கு நிர்வாஹகனாய், ஞானம் பெருமானை—அறிவிற் பெரியவனாய், சீர் அணனை—நற்குணங்கள் பொருந்தியிருக்கப்பெற்றவனான ஸர்வேஶ்வரனை, வைகல் நலம் ஆக ஏத்தும் திறம்—எப்போதும் நன்றாகத் துதிசெய்கையாகிற இந்த ஸ்வபா₄வமானது, வலம் ஆக—ப₂லம் தருவதாகிலுமாகுக; மாட்டாமை தான் ஆக—ப₂லம் தரமாட்டாதாகிலுமாகுக; குலம் ஆக—நற்குலத்தைத் தருவதாகிலுமாகுக; குற்றம் தான் ஆக-தீக்குலத்தையுண்டாக்குவதாகிலுமாகுக; (துதிப்பதை நான் கைவிடமாட்டேன்).

---

அவர்களை வலத்திலே வையேன்-ப்ரத₃க்ஷிணம் பண்ணேன்; ஆட்செய்யேன் – அல்லாத அடிமைத்தொழில்களும் செய்யேன் என்றுமாம். 66.

---

"ப்₃ரஹ்மாணம் ஶிதிகண்ட₂ஞ்ச யாஶ்சாந்யா தே₃வதா: ஸ்ம்ருதா: ।
ப்ரதிபு₃த்₃தா₄ ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் ப₂லம் ॥
[பா₄ர-மோக்ஷ-116]

[அவர்களிடமிருந்து கிடைக்கும் ப₂லன் அளவுபட்டதாகையாலே, புத்தி கூர்மையுள்ளவர்கள் பிரமனையும், சிவனையும், மற்ற தே₃வதைகளையும் ஆராதி₃க்கமாட்டார்கள்] என்றன்றோ சொல்லப்பட்டது. (வலம்) இப்பெருமைகள் எல்லாவற்றுக்கும் காரணம் அப்பெருமானை அண்டைகொண்ட ப₂லமாகும். (வலம் வையேன்) அவர்களை ப்ரத₃க்ஷிணம் செய்யேன் என்கிறாராகவுமாம். 66.

67. அவ:—"நெஞ்சத்து எண்ணினேன்" என்றும், "திடமாக வையேன் மதிசூடி தன்னோடு அயனை" என்றும் சொன்னீர். நண்ணாதார் முறுவலிப்பதும், நல்லுற்றார் கரைந்தேங்குவதும் உலகியற்கையாகக் காணப்படுகிறதே. துன்பம் வந்துற்றபோதும் இவ்வுறுதி தளராதிருக்குமோ? என்ன;—இன்பம் வந்தாலும் துன்பம் வரினும்

பெரி-வ்யா:—(வலம்) (நலமாக இத்யாதி₃) நன்றாக ஸர்வ ஸ்வாமியாய், என் நாவுக்கு நிர்வாஹகனாய், ஜ்ஞாநகு₃ணங்களுக் கெல்லாம் ஆஶ்ரயமாயிருக்கிறவனை நன்றாக ஏத்தும் ப்ரகாரம்; (வலமாக) ப₂லமாகவுமாம்; ஆபி₄ஜாத்யத்தை உண்டாக்கவுமாம்;

அவ:— நன்மையாகிலுமாம், தீமையாகிலுமாம். இவற்றில் எனக்கொரு தாத்பர்யமில்லை. ப₃ஹுகு₃ணனான எம்பெருமானை ஏத்துகையே உத்₃தே₃ஶ்யமென்கிறார்.

உரை:— நாரஶப்₃த₃வாச்யரான ஸர்வாத்மாக்களுக்கும் நிருபாதி₄கஸ்வாமியாய், அப்படியே அவர்களெல்லாம் ஒரு தட்டும், நாம் ஒருதட்டும் என்னும்படி நமக்கு ஸ்வாமியாய், "உனக்கென் செய்கேன்" என்று கரைந்திருக்கிற அறிவால் பெரியனாய், அல்லாத ஸகலகு₃ணங்களுக்கும் ஆஶ்ரயமாயிருக்கிறவனை — ஸர்வகாலத்திலும் அழகிதாக ஏத்தும் இந்த ஸ்வபா₄வமானது ப₂லமாகிலும் ஆகிறது.

யான் எம்பிரானைத் துதிப்பதில் ஒருகுறையுமிராது என்று தன் அத்₄யவஸாயத்தை அருளிச்செய்கிறார்.

வ்யா:—(நலமாக நாரணனை) நன்றாக ஸர்வஸ்வாமியாயிருப்பவனை. நரஸமூஹங்கள் எல்லாவற்றையும் வியாபித்து, த₄ரித்துநின்று அவற்றுக்கு ஸ்வாமியாயிருக்கும்போது அவற்றின் தோ₃ஷம் தன்மேல் படாதபடி நன்றாக இருப்பவன். ஆகையால் இவனைத் துதிப்பது தாழ்வுக்குக் காரணமாகாது என்று பா₄வம். (நாபதியை) தாழ்ந்த விஷயங்களிலே அழுந்திக்கிடந்த என் நாவைத் தன் விஷயத்திலே யாம்படி நிர்வஹித்தவனை. (நம்பதியை) என்றும் பாட₂ம். நாரஶப்₃த₃வாச்யரான் மற்றவர் ஒருதட்டும், நாம் ஒரு தட்டுமாம்படி எமக்கு நாத₂னாயிருப்பவனை என்று பொருள். (ஞானப்பெருமானை) "யஸ்ஸர்வஜ்ஞ:ஸர்வவித்" [எவன் எல்லாப் பொருள்களுடைய ஸ்வரூப ஸ்வபா₄வங்களை அறிகிறானோ] என்கிறபடியே அறிவுக்கோர் இருப்பிடமாயிருப்பவனை.. "உன்னடியார்க்கு என் செய்வன் என்றே இருத்தி நீ" [பெரியதிரு 53] என்று சொல்லப்பட்ட அறிவால் பெரியவன் என்றுமாம். (சீரணனை) அறிவுள்ளவனாயிருந்தும் கு₃ணஹீனனா யிருக்கையன்றிக்கே, கு₃ணங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவனை, (ஏத்தும் திறம்) ஏத்தும் வித₄ம். 'நலமாக' என்றதை இங்கு கூட்டி 'நன்றாகத் துதிக்கும் வழி' என்றும் பொருள்கொள்ளலாம். (வலமாக) அவனைத் துதிப்பதாகிற செயல் ப₂லத்தைக் கொடுத்தாலும் சரி;

அதிலே தோ₃ஷத்தை உண்டாக்கவுமாம். இவையன்று உத்₃தே₃ஶ்யம்; அவனை ஏத்துகையே உத்₃தே₃ஶ்யமென்கை. 67.

68. திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்க ளென்றான் நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

---

ப₃லஹாநியாகிலும் ஆகிறது. ப₄க₃வத்பரிக்₃ரஹரூபமான ஆபி₄ஜாத்யத்துக்கு உடலாகிலும் ஆகிறது. அதிற்குற்றமாகிலும் ஆகிறது. இவையல்ல உத்₃தே₃ஶ்யமென்கை. இங்ஙனே சொல்லிற்று—நன்மையையே பண்ணுமென்னும் கருத்தாலே. அன்றிக்கே "நாரணனை" இத்யாதி₃க்கு—ஸர்வேஶ்வரனாய், என்னுடைய நாவுக்கு ப்ரவர்த்தகனாய், என்னை ரக்ஷிக்கைக்கு உறுப்பான அறிவால் மிக்கிருக்கிற ஶ்ரீத₄ரனையென்று பொருளாகவுமாம். 67

---

(மாட்டாமைதானாக) ப₃லமின்மையைக் கொடுத்தாலும் சரி; (குலமாக) நற்குடிப்பிறப்பைக் கொடுத்தாலும் சரி; (குற்றந்தானாக) தோ₃ஷமுள்ள குடிப்பிறப்பைக் கொடுத்தாலும் சரி; (வலமாக—குலமாக...) "குலம் தரும்; வலந்தரும்" [பெரியதிரு 1-1-9] என்றபடி ஆனாலும் சரி; அதற்கு எதிர்த்தட்டேயானாலும் சரி; (வைகல்) இது நித்யமேயானாலும் சரி. எனக்கு ஒரு ப₂லன் உத்₃தே₃ஶ்யமல்லாமல், அவனை ஏத்தி உகப்பிப்பதே உத்₃தே₃ஶ்யமாகையால், "என்னெஞ்சத்தெண்ணினேன்" [65] "திடமாக வையேன்" [66] என்னும் இரண்டு உறுதிகளையும் கைவிடேன். (நாரணனை நாபதியை ஞானப்பெருமானை சீரணனை ஏத்தும் திறம்) துதிக்கப்படுபவன் ஸர்வேஶ்வரனாய், என் நாவை இத்திருவந்தாதியைப் பாடவைப்பவனாய், என்னை ரக்ஷிக்கைக்கு உறுப்பான அறிவால் மிக்கிருக்கும் ஶ்ரீத₄ரனாகையாலே, உண்மையில் வலம் முதலிய நன்மையே ஏற்படுமேயொழியத் *தீமை* ஏற்பட இடமில்லை என்று கருத்து.

"கடியன் கொடியன் நெடியமால் உலகங்கொண்ட
அடியன் அறிவருமேனிமாயத்தன் ஆகிலும்
கொடிய என் நெஞ்சம் அவனென்றே கிடக்கும் எல்லே"
[திருவாய் 5-3-5]

என்ற நம்மாழ்வாரின் உறுதியும் இங்கு நினைக்கத்தக்கது. 67.

பதவுரை:—நமனும்—யமனும், தன் தூதுவரை—தனது ஸேவகர்களை, கூவி—அழைத்து, செவிக்கு–(அவர்களுடைய) காதில், திறம்பேல்மின் கண்டீர்—(தூதர்காள்! இப்போது நான் உங்களுக்கு இடும் ஆணையைத்) தவறவேண்டா; திருவடிதன்—ஸர்வேச்வரனுடைய, நாமம்—திருநாமத்தை, மறந்தும்—மறந்தொழிந்தாலும், புறம் தொழா மாந்தர்—தே₃வதாந்தர பூ₄ஜநம் பண்ணாத மனிசர்களை (க் கண்டால்) இறைஞ்சி—வணங்கி, சாதுவர் ஆய் போதுமின்கள் என்றான்—(கொடுமை தவிர்ந்து) ஸாது₄க்களாய் நடக்கக்கடவீர்கள் என்று சொன்னான்.

**பெரி-அவ:–(திறம்பேன்மினித்யாதி₃) ப₄க₃வத் பரிக்₃ரஹமே ப₂லமென்னுமத்தை "स्वपुरुषमभिवीक्ष्य" (ஸ்வபுருஷமபி₄வீக்ஷ்ய) என்கிற ஶ்லோகத்தின்படியாலே விவரிக்கிறார்.**

---

அவ:— ப₄க₃வத் பரிக்₃ரஹமே ப₂லமென்னுமிடத்தை, "**स्वपुरुषमभिवीक्ष्य**" (ஸ்வபுருஷமபீ₄வீக்ஷ்ய) என்கிற ஶ்லோகத்தின் கட்டளையிலே விவரிக்கிறார்.

---

**68. அவ:—ப₄க₃வத்₃ பூ₄ஜனமும், தே₃வதாந்தர வைமுக்₂யமும் துன்பம் தருவதாகிலும் உத்₃தே₃ஶ்யமே என்றார்; உண்மையில் ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄மே ப₂லந்தருவது என்னும் அரும்பொருளை—ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமகிங்கர ஸம்வாத₃த்தில்**

"ஸ்வபுருஷமபி₄வீக்ஷ்ய பாஶஹஸ்தம்
வத₃தி யம: கில தஸ்ய கர்ணமூலே ।
பரிஹர மது₄ஸூத₃நப்ரபந்நாந்
ப்ரபு₄ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்॥" [3.7.14]

[பாஶத்தைக் கையில் கொண்டு நிற்கும் தன் தூ₃தனைக் கண்ணாலே நோக்கி, (ஸர்வலோகப₄யங்கரனாகப்) பிரஸித்திபெற்ற யமன் அவன் காதினுள் பின்வருமாறு சொல்லுகிறான்:— தூத! மது₄ஸூத₃னனை ஶரணமடைந்தவர்களை விலகிச்செல். நான் மற்றுள்ளார்க்கு ஸ்வாமியேயொழிய வைஷ்ணவர்களுக்கு ஸ்வாமியல்லன்.] என்று யமன் சொன்ன பாசுரத்தைக் காட்டி நிலைநாட்டுகிறார். இந்த ஸ்ரீவிஷ்ணு புராண ஶ்லோகத்திற்கு மொழி பெயர்ப்பாகவும், வியாக்கியானமாகவும் அமைந்துள்ளது இப்பாசுரம்.

வ்யா:—(திறம்பேன்மின் கண்டீர்) 'திறம்பாதே கொள்ளுங் கோள்' என்னும்போது நாலு பத்தோலை மறுக்கவுமாம். (திருவடியித்யாதி₃) "परिहर मधुसूदनप्रपन्नान्" (பரிஹர மது₄ஸூத₃ந ப்ரபந்நாந்) என்கிறபடியே. ஸ்வாமியினுடைய திருநாமத்தை

---

உரை:— சேதனர் பண்ணின பாபங்களை ஏற்றத் தாழ்வுகள் வாராமல் நிரூபித்து, தத₃நுகு₃ணமாக த₃ண்டிக்கையிலே ஸர்வேஶ்வரனாலே நியுக்தனான யமனும், பத்தெட்டோலை மறுத்து கார்யத்தைப் பழுதற நடத்தும்படி தரம்பெற்றிருக்கும் அந்தரங்க₃ரான தன் தூ₃தரை—கார்ய கௌ₃ரவம் தோற்ற வாய்விட்டழைத்து, பிறர்கேட்கில் என்னைத் தேடுகிறதோவென்று ப₄யப்பட்டு, அசலறியாதபடி செவியிலே "நான் உங்களுக்குச் சொல்லுகிற வார்த்தையை ஓலக்க வார்த்தையாக நினைத்துத் தவிரவிடாதே கிடிகோள். ஸர்வஸ்வாமியான ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை ஒருகால் கற்றுப் பின்னை மறந்தார்களாகிலும்,

---

வ்யா:—(திறம்பேன்மின் கண்டீர்) நான் சொல்லும் இவ்வார்த்தையை மீறிவிடாதீர்கள்—என்று இவ்வளவு கண்டிப்பாகப் பீடி₂கை போட்டுக்கொண்டு ஆரம்பிப்பதாலே, இது யமனிடும் மற்ற ஆணைகளுக்கெல்லாம் மேலான ஆணை என்று தோற்றுகிறது. இக்கட்டளையைக் காப்பாற்றுவதற்காக, தன்னுடைய மற்ற கட்டளைகள் பத்தெட்டையும் நிறைவேற்றாமல் விடலாம் என்று பா₄வம். ஒருவனுடைய ஆவியைக் கொண்டுவரும்படி யமனே ஓலையனுப்பினாலும், அவன் வைஷ்ணவனாகில் யமதூ₄தன் அவ்வோலையை மறுக்கலாம் என்று கருத்து. (திருவடிதன் நாமம் மறந்தும் புறம்தொழா மாந்தர்) சுலோகத்தில் "மது₄ஸூத₃நப்ரபந்நாந்" என்னும் பத₃த்தை அவ்யாப்தி முதலான தோ₃ஷங்கள் வாராதபடி லக்ஷண ஶிக்ஷை செய்து விவரிக்கிறார். 'மது₄ஸூத₃நனை ஶரணம் பற்றியவர்கள்' என்று பொதுவாகச் சொன்னதை, ஶரண்யனுடைய ஸ்வபா₄வத்தைத் திருவுள்ளத்தில் கொண்டு, "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்று விவரிக்கிறார். ஸர்வேஶ்வரனை ஒருகால் ஶரணம்பற்றிய பிறகு, அவனை அடியோடு மறந்துவிட்டாலும் பா₃த₄கமில்லை; மற்றுமோர் தெய்வத்தைத் தொழாமலிருந்தார்களாகில் போதுமானது மது₄ஸூத₃ன ப்ரபன்னர்களாகைக்கு— என்று கருத்து. மனைவியொருத்திக்குக் கணவனிடம் அன்பில்லாவிடிலும் பா₃த₄கமில்லை; சிறுகச்சிறுக அன்பு பிறக்கக்கூடுமாகையாலே

மறக்கவுமாம்; தே₃வதாந்தர ப₄ஜநம் பண்ணுதொழிகை இவன் ப்ரபந்நனுகையாவது. ப₄ர்த்தாவின்பக்கல் ஆநுகூல்யம் க்ரமத்திலே பிறக்கவுமாம்; ப₄ர்த்ரந்தரபரிக்₃ரஹமிறே அவனுக்காகாமைக்கு அடி. (மாந்தரை) மநுஷ்யரை. (இறைஞ்சியுமித்யாதி₃) அவர்களை நலிந்திலோம் என்றிருக்கவொண்ணுது; "पाशहस्त" (பாஶஹஸ்தம்) என்கிற க்ரூர வேஷத்தைத் தவிர்ந்து விநீத வேஷராய், அஞ்ஜலிப்ரணுமாதி₃களைப் பண்ணிப்போருங்கோள் என்கிறுன். (நமனும்) "सम इति" (ஸம இதி) என்று சொல்லப்

---

தத்₃வ்யதிரிக்தரான க்ஷு₃த்₃ரதே₃வதைகளை ப்ரணுமாத்₃யநுவர்த்தநம் பண்ணி ஆஶ்ரயியாத மஹாப்ரப₄ாவரான ஸ்ரீ வைஷ்ணவர்களை, இவர்களுக்கு நாம் கடவோமல்லோமென்று ஒதுங்கிக்கொண்டு கடக்கப்போகாதே திருவடிகளிலே தலையை மடுத்து அநுவர்த்தித்து, கையும் சூலமும் பாஶமுமான க்ரூரவேஷத்தை விட்டு அநுகூலராய்க் கொண்டு போருங்கோள்" என்று சொன்னுன். "தன் தூதுவரை" என்கையாலே "ஸ்வபுருஷம்" என்கிற பத₃த்தின்

---

அவனுடைய பத்னீத்வத்திற்கு ஹானியில்லை. ஆனுல் அவள் வேருெருவனேடு கூடினுளாகில் புருஷனுல் ஸ்வீகரிக்கத்தகாதவளாய் தன் ஸ்வரூபத்தையே இழக்கிருளன்ரே. அதுபோலவே ப₄க₃வந்நாமத்தை மறந்தாலும், புறந்தொழாமலிருந்தார்களாகில் அவர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களாவர்கள்; அவர்கள் விஷயத்திலும் அஞ்சி நடக்கவேணும் என்கை. திருவடி-ஸ்வாமி. (மாந்தர்) மநுஷ்யரை. ப₄ாக₃வதர்களுக்குரிய கு₃ணச்சிறப்புகளில்லாமல், ஸாமாந்யர்களைப்போலே இருந்தாலும் சரி; மறந்தும் புறந்தொழாமை ஒன்றையே நீங்கள் கவனிக்கவேண்டியது. (இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்கள் என்ருன்) ''பரிஹர'' என்றதை விவரிக்கிறபடி. 'அவர்களைத் துன்புறுத்தாமல் செல்கிறேம்' என்று இவ்வளவோடே திருப்தியடைந்தால் போதாது; ''பாஶஹஸ்தம்'' என்று சொல்லப்பட்ட கொடிய வேஷத்தை விட்டு அடக்கவொடுக்கத்தோடு அஞ்சலி, நமஸ்காரம் முதலியவற்றைச் செய்து ஸாது₄க்கள் என்று தோற்றப் போகவேண்டும் என்ருன். சாதுவர்—ஸாது₄க்கள். இப்படிச் சொன்னவன்தான் யாரென்னில், (நமனும்)

"அஹமமரவரார்ச்சிதேந தா₄த்ரா
ஸம இதி லோகஹிதாஹிதே நியுக்த:" [வி-பு 3-7-15]

படுகிறவனும். (தன் தூதுவரை) "ஸ்வபுருஷ்" (ஸ்வபுருஷம்) என்றபடி. (செவிக்கு) "கர்ணமூலே" (கர்ணமூலே) என்றபடி.

---

அர்த்த₂த்தைச் சொல்லுகிறது. 'கூவி' என்கையாலே— 'அபி₄வீக்ஷ்ய' என்கிற பார்வையின் கருத்தை வ்யக்த மாக்கினபடி. "செவிக்கு" என்கையாலே—'கர்ணமூலே' என்கிற பத₃த்தின் அர்த்த₂மும் சொன்னபடி. 'பரிஹர' என்கிற பத₃த்தின் கருத்தை—'இறைஞ்சியும்' என்று வ்யக்தமாக்கினபடி. 'புறந்தொழாமாந்தர்' என்று—"மது₄

---

[நான்-தேவர்தலைவர் வணங்கும் பரமபுருஷனாலே, (உயர்ந்தோர் தாழ்ந் தோர் என்னும் வாசிபாராமல் அனைவருக்கும் நீதி வழங்குவதில்) ஸமானமானவன் என்னும் காரணத்தாலே உலகிற்கு நன்மையளிப் பதிலும், தீமை தீர்ப்பதிலும் ஏவப்பெற்றிருக்கிறேன்.] என்று ஸமன்- பக்ஷபாதமற்றவன் – என்று பிரஸித்₃தி₄பெற்றவனான யமன் கிடீர் இவ்வார்த்தையைச் சொன்னது. "ப்ரபு₄ர ஹமந்யந்ருணாம்" என்கிற படியே மற்றுள்ளார் விஷயத்திலன்றோ இவன் ஸமனாகவும் யமனாகவும் ஆவது. பிரஜைகளுக்கு நீதி வழங்குமவன் ராஜமஹிஷிக்கு நீதி வழங்கமுடியுமோ? ஆகையாலே, பக்ஷபாதமற்றவன் என்று பிரஸித்₃தி₄ பெற்றவனும் பக்ஷபாதம் தோற்ற வார்த்தை சொன்னான் என்கிறார்.

"அவன்தமர் எவ்வினையராகிலும் எங்கோன்
அவன்தமரே என்றொழிவதல்லால்—நமன் தமரால்
ஆராயப்பட்டறியார்கண்டீர் அரவணைமேல்
பேராயற்காட்பட்டார் பேர்" [55] என்றார் பொய்கையாழ்வாரும்,

(தன் தூதுவரை) "ஸ்வபுருஷம்" என்றதன் மொழிபெயர்ப்பு. தன் ஓலைகளில் பலவற்றையும் மறுக்கலாம்படி தனக்கு நெருங்கிய தூ₃தர் கள் என்று கருத்து. (கூவி) கார்யத்தின் பெருமை வெளிப்படும்படி வாய்விட்டு அழைத்து. "அபி₄வீக்ஷ்ய வத₃தி" என்றதை விவரித்தபடி. (செவிக்கு) "கர்ணமூலே" [காதினுள்] என்றதன் மொழி பெயர்ப்பு. "ராஜமஹிஷியை விரும்பாதே" என்னும் வார்த்தையை ஒருவன் நாலுபேரறியச் சொல்லலாகாதன்றோ. சொன்னால், சொல்லப் பட்டவனுக்கு ராஜமஹிஷியிடம் விருப்பமுள்ளதென்று ராஜாவின் காதில் விழுந்து அவனுக்கு ப்ராணஹாநியும் ஆகுமன்றோ. அது போலே, தனக்கு மிகவும் அந்தரங்க₃னான தூ₃தனிடம் சொல்லும் போதும், 'இது வெளிப்பட்டால் நம் க₃தி என்னாமோ?' என்னும் ப₄யத்தாலே நெஞ்சு "திடுக் திடுக்" என்று அடித்துக்கொள்ள தூ₃தனின்

அந்தரங்கர்க்கு வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே, ப்ரகாஶிக்கில் என்றுகிறதோ? என்று நெஞ்சு பறைகொட்டுகிறபடி. 68.

69. செவிக்கின்ப மாவதுவும் செங்கண்மால் நாமம்
புவிக்கும் புவியதுவே கண்டீர்—கவிக்கு
நிறைபொருளாய் நின்றனை நேர்பட்டேன் பார்க்கில்
மறைப்பொருளு மத்தனையே தான்.

பதவுரை:—செவிக்கு இன்பம் ஆவதுவும்—காதுக்கு இன்பமளிப்பதும், செம் கண் மால் நாமம்—புண்டரீகாக்ஷனை எம்பெருமானுடைய திருநாமமே; புவிக்கு—பூமியிலுள்ளாரெல்லார்க்கும், புவியும் அதுவே— (நிழல்பெற ஒதுங்குவதற்கு) இடமாவதும் அத்திருநாமமே; கவிக்கு நிறைபொருள் ஆய்

---

ஸந்தோஷப்ரஸங்காத்" என்கிற பதத்தின் அர்த்தம் சொன்னபடி. ப்ரபன்னனுகையாவது—தேவதாந்தரபஜனம் பண்ணுதொழிகை. பர்த்தாவின்பக்கல் ஆநுகூல்யம் க்ரமத்திலே பிறக்கவுமாம். பர்த்ரந்தரபரிக்ரஹ மற்றிருக்கையிறே பாதிவ்ரத்யத்துக்கு வேண்டுவது. 68.

---

காதுக்குள் அதிரஹஸ்யமாகச் சொல்லுகிருன். (செவிக்கு) "கர்ணமூலே" என்றதற்கு வியாக்கியானமருளிச்செய்த விஷ்ணுசித்தாசார்யர், "ப்ரபுபி: ஸ்வப்ரபாவபங்கஸ்தாநம் ந ப்ரகாஶ்யமிதி நீத்யா, விஷ்ணு நாமஸங்கீர்த்தநாதேஷு நாரகிணோபி தச்ச்ரவணாதிநா நரகாந் முச்யேரந்: தேந ஸ்வாதிகாரஹாநிரிதி பீத்யா ச கர்ணமூலே கதநம்। 'ராஜதாராந் மா கா' இதி வசநவத்ர ஹஸி கதநீயத்வாச்ச॥" [யஜமானர்கள், தங்கள் பெருமைக்குக் குறைவேற்படுவதற்குக் காரணமாயிருக்கும் விஷயத்தை வெளிப்படுத்தலாகாது என்னும் நியாயத்தாலும், விஷ்ணு நாமத்தை உரக்கச் சொன்னால் அதைக் கேட்பது, நினைப்பது, சொல்லுவது முதலான செயல்களைச் செய்து நரகவாஸிகளும் முக்தியடைவர்; அதனால் தன் பதவிக்கு அழிவேற்படும் என்னும் பயத்தாலும் கர்ணமூலத்தில் சொல்லுகிருன். "ராஜமஹிஷியை அநுபவிக்காதே" என்னும் வாக்கியத்தைப்போலே ரஹஸ்யமாகச் சொல்லவேண்டிய விஷயமானபடியாலும் (காதினுள் சொல்லுகிருன்)] என்று செவியினுள் சொன்னதற்கு மூன்று காரணங்களை அருளிச்செய்ததும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. 68.

நின்றானை—கவிதைக்கு நிறைந்த பொருளாயிருக்கும் எம்பெருமானை, நேர்பட்டேன்—யாத்₃ருச்சி₂கமாக அடையப்பெற்றேன்; பார்க்கில்—ஆராய்ந்து பார்த்தால், மறை பொருளும் அத்தனையேதான்—வேத₃ங்களில் தேர்ந்த பொருளும் அவ்வளவே.

பெரி-வ்யா:— (செவிக்கித்பாதி₃) யமவஶ்யதையைத் தவிர்க்குமளவன்று; செவிக்கினிபதுவும் புண்ட₃ரீகாக்ஷனுடைய திருநாமம். (புவிக்கும் புவியதுவே கண்டீர்) எனக்கு ஒருத்தனுக்குமேயோ? பூமியிலுள்ளார்க்கெல்லாம்

அவ:— யமவஶ்யதையைத் தவிர்ந்து பாவநமாயிருக்குமளவன்றிக்கே அநுப₄விப்பார்க்கு அத்யந்த போ₄க்₃யமாயிருக்குமென்று ஆத்மாநுப₄வத்தாலே திருநாமத்தினுடைய போ₄க்₃யதையை அருளிச்செய்கிறார்.

உரை:— கேட்கிற என்னுடைய செவிக்கு, தென்றலும் சிறுதுளியும் பட்டாற்போலே நிரதிஶய போ₄க்₃யமாயிருக்குமதுவும் வாத்ஸல்யத்தாலே குதறிச் சிவந்த திருக்கண்களையுடையனாய் ஆஶ்ரிதவ்யாமுக்₃த₄னான ஸர்வேஶ்வரனுடைய திருநாமமாயிருக்கும். எனக்கு ஒருத்தனுக்கு

69. அவ:—யமவஶ்யதையைத் தவிர்க்கும் இப்பெருமைமாத்திரமுள்ளதன்று; செவிக்கின்பமாவதுவும், பூமிக்குப் புகலிடமும், கவிகளுக்கு நிறைபொருளும், மறையின் முழுப்பொருளும் ப₄க₃வத்₃விஷயமே என்கிறார்.

வ்யா:—(செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால் நாமம்) 'உம்' என்ற சகாரம் கீழிற்பாட்டிற் சொன்ன யமவஶ்யதையைக் கூட்டுகிறது. யமனுக்கு வஶப்பட்டிருக்கையைத் தவிர்ப்பது மாத்திரமன்று; செவிக்கினிய செஞ்சொல்லாயிருப்பதும் தாமரைக்கண்ணனுடைய திருநாமமே. முக்கண்ணன், நெருப்புக்கண்ணன் என்னும் பெயர்களைப்போலே கேட்கும்போதே கொள்ளிக் கட்டையைக் காதிலே செருகினாற்போலே செவிக்கினாததாய் விருபமாயிராதே, கேட்பவர்களை அம்ருத ப்ரவாஹத்திலே அழுத்துவது போலேயிருப்பது தாமரைக்கண்ணனின் திருநாமமே. (மால்) அடியாரிடம் அன்புடையவன்; ஸர்வேஶ்வரன்; 'சிவந்த கண்' இரு பெருமைகளையும் காட்டுகிறது. (புவிக்கும் புவியதுவே கண்டீர்) என் ஒருவனுக்கு மட்டுமோ இனியது? பூ₄மியிலுள்ளார் அனைவர்க்கும் புகலிடமாயிருப்பது அத்திருநாமமன்றோ.

ஸ்தாநம் திருநாமம். (கவியித்யாதி) ஸ்துத்யனுக்கு ஒரு பூர்த்தியின்றிக்கே, ஸ்தோதா நிரப்பவேண்டும்படி யன்றிக்கே, கவிபாடுகைக்கு ஸ்வரூபரூபகுணங்களால் குறைவற்று நின்றவனை யாத்ருச்சிகமாக லபித்தேன்.

மன்றிக்கே பூமியிலுள்ளார் எல்லார்க்கும் ஒதுங்கி வாழ்கைக்கு ஸ்தானம் அந்தத் திருநாமமேகிடிகோள். ஸ்துத்யனுக்கு வஸ்துத: ஒரு பூர்த்தியற்றிருக்க, ஸ்தோதா வானவன் அங்குமிங்கும் கதிர்பொறுக்கி நிரப்பவேண்டும் படியிருக்கும் நாட்டார்படியன்றிக்கே கவிபாடுமவனுக்கு வேண்டும் ரூபகுணவிபூத்யாதிகளால் பரிபூர்ண வாச்யனாய் நின்றவனை யாத்ருச்சிகமாக லபித்தேன்.

"ஆர்த்தா விஷண்ணா: ஶிதிலாஶ்ச பீதா:
கோரேஷு ச வ்யாதிஷு வர்த்தமாநா: ।
ஸங்கீர்த்ய நாராயண ஶப்தமாத்ரம்
விமுக்தது:க்காஸ் ஸுகிநோ பவந்தி ॥"

[தாபத்ரயங்களால் வருந்தியவர்களும் (அவைகள் வருமோ என்று) பயந்தவர்களும், கோரமான வியாதிகளில் வாடுபவர்களும் நாராயண ஶப்தத்தை மட்டும் கேட்டால், துன்பம் நீங்கப்பெற்று இன்பமடைகிறார்கள்] என்றல்லவோ சொல்லப்பட்டது.

நாமத்தின் பெருமையைச் சொன்னார் கீழ்; அதை உடையவனின் பெருமையைச் சொல்லுகிறார் மேலே:—(கவிக்கு நிறைபொருளாய் நின்றானை) மற்றுள்ளார் குறைவாளராகையாலே, அவர்களைத் துதி பாடுமவர்கள் அவர்களுக்கு உள்ள குறைகளை, இல்லாத நிறைவுகளை யிட்டு நிரப்பிக் கவிபாடவேண்டியிருக்கும். "அந்யதீயாந் குணாந் அந்யத்ர த்வஸதோऽதிரோப்ய பணிதி:" [ஸ்ரீஸ்தவம்-3] [மற்றொருவனுடைய குணத்தை, அதில்லாத வேறொருவனிடம் ஏறிட்டுப்பாடுவது துதி] என்றார் ஆழ்வானும். இவனோவென்னில் நிறைவாளனாகையாலே எவ்வளவு கவிகள் இவனைத் துதிக்கப்புக்காலும் துதித்து முடித்தது சிறிதாய், துதிக்கத் தொடங்காதது பெரிதாயிருக்கும்படியான ஸ்வரூப ரூப குண விபூதிகளை உடையவன். ஆகையால் இவனே கவிக்கு நிறைபொருளாய் நிற்பவன். "வசஸாம் வாச்யமுத்தமம்" [ஜிதந்தே 1-7] [வாக்குகளுக்கு மேலான பொருளாயிருப்பவன் ஸர்வேஶ்வரன்] என்று சொல்லப்பட்டதன்றோ.

( பார்க்கிலித்யாதி3 ) யாத்3ருச்சி2கமாகவன்றிக்கே ஆராய்ந்து பார்க்கில் வேத3ாந்த ரஹஸ்யமும் அத்தனையே. 69.

70. தாளுெருவனுகித் தரணி யிடந்தெடுத்து
ஏளுெருவனு யெயிற்றில் தாங்கியதும்—யாளுெருவன்
இன்று வறிகின்றே னல்லேன் இருநிலத்தைச்
சென்றுங் கடிப்படுத்த சேய்.

பதவுரை:—தான் ஒருவன் ஆகி—தான் ஒப்பற்ற அழகை யுடையவனுய், சென்று—(மஹாப3லியினிடத்தில் யாசகனுய்ச்) சென்று, ஆங்கு—அந்த மாவலியின் யாக3 பூ4மி யிலே, இரு நிலத்தை—விஶாலமான இந்நிலத்தை, அடிப் படுத்த—அளந்துகொண்ட, சேய் — சிறுபிள்ளையானவன், ஏன் ஒருவன் ஆய்—விலக்ஷண வராஹ ரூபியாய் (பிரளயப் பெருங் கடலினுள் முழுகி) தரணி—பூ4மியை, இடந்து எடுத்து—(அண்டபி4த்தியில் நின்றும்) குத்தி எடுத்து, எயிற்றில்—(தனது) கோரைப் பல்லின்மீது, தாங்கியது— த4ரித்தமையை, யான் ஒருவன்—நாளுெருவன் மாத்திரம்,

---

யாத்3ருச்சி2கமாகவன்றிக்கே ஆராய்ந்து பார்க்கில் வேத3 ஸித்3த4மான அர்த்த2ந்தானும் அவ்வளவே. 69.

---

(நேர்பட்டேன்) அவனை என் முயற்சியாலன்றியே யாத்3ருச்சி2கமாக அடையப்பெற்றேன். அதாவது:-அவனுடைய நிர்ஹேதுக கிருபை யாலே அடைந்தேன். ''விதிவாய்க்கின்று காப்பாரார்'' [திருவாய் 5.1-1] ''விதி4நிர்மிதமேதத்3ந்வயம்'' [ஸ்தோ-ர-51] [இந்த ஸம்ப3ந்த4ம் விதி4யினலேற்பட்டது] என்று விதி4யென்றும் யத்3ருச்சை2 யென்றும் சொல்லப்படுவது ப4க3வானுடைய நிர்ஹேதுக கிருபையே யன்றே. (பார்க்கில்) 'யாத்3ருச்சி2கமாகக் கிடைத்த பொருள்தானே' என்று திருப்தியுடனிருந்துவிடவில்லை, ரத்னபரீக்ஷை பண்ணுவாரைப் போலே ஆராய்ந்து பார்த்தேன். அப்படிப் பார்த்தளவிலே தேறிநின்ற தென்னவென்றால்: (மறைப்பொருளுமத்தனையேதான்) வேத3ாந்த விழுப்பொருளும் அதுவேயாயிருந்தது. இடறிவிழுந்தபோது விலை மதிப்பற்ற மாணிக்கமே நம் கைப்பட்டது என்று உணர்ந்தேன். 69.

இன்று—இன்றுவரை, அறிகின்றேன் அல்லேன்—அறிகிறே னில்லை. [நெடுநாளாகவே பலருமறிவர்.]

பெரி-அவ:—வேதாந்தரஹஸ்யம் இது என்றிருந்தபடி எங்ஙனேயென்னில்: நான் ஒருத்தனும் இன்றாக அறிந்ததோ? ப்ரஸித்தமன்றோ? என்கிறார்.

வ்யா:— (தானொருவனாகி) வாமனனாய். (இரு நிலத்தித்யாதி) பரப்பான பூமியைத் தன் திருவடிக்

---

அவ:— வேதஸித்தமான அர்த்தமும் இதுவேயென்று நீர் அறிந்தபடி என்னென்ன, நானொருத்தனும் இன்றாக அறிந்ததோ? ஸர்வலோக ப்ரஸித்தமன்றோ? என்கிறார்.

உரை:— தான் அத்விதீயனாய் ஸர்வாதிகனாயிருந்து, மஹாபலி பக்கலிலே அர்த்தியாய்ச்சென்று நீரேற்று, பரப் பையுடைத்தான பூமியை அத்தசையிலே தன் திருவடி

---

70. அவ:—'மறைப்பொருளும் அதுவே' என்றீர்; இதை எப்படி அறிந்தீர்? என்ன;—உண்மையில் நான் ஒருவனே இன்று வரையில் இதை அறியாதவன். ஆயினும், அறிவாளிகள் எல்லோரும் என்றும் அறிந்த அரும்பொருளன்றோ இது என்கிறார்.

வ்யா:—(தான் ஒருவனாகி) ஸர்வேச்வரனாயிருக்கும் தானே ஒப்பற்றதொரு நிலையை உடையவனாகி. பெரியவனுக்கு ஒப்பற்ற நிலையாவது-ஸௌசீல்ய ஸௌலப்ய வாத்ஸல்ய குணங்களின் எல்லை நிலத்திலே நிற்கை. அது வாமனனாய் நின்ற நிலையேயாகும். "ஒரு மாணிக்குறளாகி" [திருவாய் 1-10-11] என்றார் நம்மாழ்வாரும். (ஒருவனாகி) 'ஒருவன்' என்பதும் 'வாமனன்' என்பதும் பர்யாயம் போலே காணும்! பெரியவன் தாழநின்றான்; ஸகலபலப்ரதன் யாச கனாகி நின்றான்; அபேக்ஷையை எதிர்பாராமலே குறைகுண நிருபணம் செய்யாமல் எல்லாரையும் திருவடியாலே நடவிக்கொடுத்தான். இது வன்றோ ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய குணங்களின் எல்லை நிலமாவது. இவனையன்றோ 'ஒருவன்' என்ன அடுப்பது. இந்த அர்த்த ஸ்வாரஸ்யத்தாலும், 'ஏன் ஒருவனாய்' என்று தனியே படித்திருப்பதாலும், 'தானொருவனாகி' என்றத்தை, "இருநிலத்தைச் சென்றங்கடிப்படுத்த சேய்" என்ற கடையடியோடு கூட்டிப் பொருள் கொள்வது சிறக்கும். (ஆங்கு சென்று) இருந்தவிடத்திலேயிருந்து

குள்ளே அடங்கும்படி இட்டுக்கொண்டு, அசசெயலாலே அத்₃விதீயனாய், ப்ரளயங்கொண்ட பூ₄மியை அண்ட₃பி₄த்தியில் நின்றும் ஒட்டுவிடும்படி இடந்தெடுத்து, மஹாவராஹ ரூபி

---

களுக்குள்ளே அடங்கும்படி இட்டுக்கொண்ட சிறுபிள்ளையானவன், நீருக்கும் சேற்றுக்கும் இருயாத அத்₃விதீயமான அழகையுடைய வராஹரூபியாய்க்கொண்டு ப்ரளயத்திலே முழுகி அண்ட₃பி₄த்தியிலே ஒட்டிக்கிடந்த பூ₄மியை இடந்தெடுத்துத் திருவெயிற்றில் ஏகதே₃ஶத்திலே

---

ஸங்கல்பத்தாலே அழிக்கலாயிருக்க, அவனிடம் ஔதா₃ர்யமென்னும் ஒரு கு₃ணமிருக்கையாலே தன்னை அழியமாறி அவனிருக்குமிடம் சென்று- (இருநிலத்தை அடிப்படுத்த சேய்) பரப்புமிகுந்த பூ₄மி தன் திருவடியிலே அடங்கும்படி அளந்துகொண்டு, அத்தாலும்

"ஏக: ப்ராக்ஷீஸரத் பாத₃மேக: ப்ராசிக்ஷளந்முத₃ா ।
அபரோப்யத₄ரந் மூர்த்₄நா கோ₂தி₄கஸ் தேஷு கு₃ண்யதாம்॥ "

[ஒருவன் திருவடியை நீட்டினன்; ஒருவன் அதை உகப்புடன் கழுவினன்; ஒருவன் அந்நீரைத் தலையிலே த₄ரித்தான். அவர்களிலே எவன் பெரியன் என்று எண்ணிப்பாருங்கள்] என்கிறபடியே 'இவனே ஒப்பற்றவன்' என்று எழுத்திடலாம்படியிருந்த சிறுபிள்ளை. (தரணி இடந்தெடுத்து) ப்ரளயஜலத்தில் மூழ்கிப் பாதாளத்தில் அண்ட₃பி₄த்தியிலே ஒட்டிக்கொண்டிருந்த பூ₄மியை அதிலிருந்து ஒட்டுவிடும்படி தன் கொம்பாலே குத்தியெடுத்து. (ஏன் ஒருவனாய் எயிற்றில் தாங்கியதும்) ஒப்பற்ற பன்றியுருவையுடையவனாய், மிகப் பெரியனாயிருந்தும், மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாய் அவதரிக்கையாலே இவ்வவதாரத்திலும் ஸௌலப்₄ய ஸௌஶீல்ய வாத்ஸல்ய கு₃ணங்கள் மிகவும் ப்ரகாசிக்கையாலே 'ஏன் ஒருவனாய்' என்கிறார். உருவிலும், அழகிலும் மிக்க மஹாவராஹமாகையாலே 'ஏன் ஒருவன்' என்கிறாராகவுமாம். (எயிற்றில் தாங்கியதும்) தன் த₃ந்தத்தின் ஒரு நுனியிலே தாங்கி நின்றதும். (யானொருவன் இன்று அறிகின்றேனல்லேன்) அறிவின்மையில் ஒப்பற்ற நானே இன்றுவரை இதை அறியவில்லை. இன்று - இன்றுவரை. இன்றே நான் அறிந்தேன். ஆனால், இன்று நான் அறிந்துதானா இவ்விஷயம் வெளியிடப்பட்டது? அன்று. பலரும் என்றும் அறிந்துள்ளனர் இவ்வுண்மையை என்று கருத்து. (யானொருவன் இன்று அறிகின்றேன்)

யாய்ப் பெரிய பூ₄மியைத் திருவெயிற்றில் ஏகதே₃ஶத்திலே த₄ரித்ததும் நான் ஒருத்தனும் இன்றாக அறிந்ததோ? 70.

71. சேய னணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோனாய்நின்ற—மாயன் அன்
றோதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞான மில்.

பதவுரை:—சேயன்—ஸுதூ₃ரஸ்த₂னாய், மிகப்பெரியன்—மிகப்பெரியவனானாலும், சிறியன் — ( ஸம்ஸாரிகளிலும் ) தாழநின்று அவதரிப்பவனாய், அணியன் — ஸுலப₄னாயும், ஆயன்—இடைப்பிள்ளையாகவும் பிறந்தவனாய், துவரை கோன் ஆய் நின்ற—த்₃வாரகாபுரிக்குத் தலைவனாய் நின்ற பெரு மேன்மையை உடையவனாயுமிருந்த, மாயன்—எம் பெருமான், அன்று—(பா₄ரத யுத்₃த₄ம் நடந்த) அக்காலத்தில்,

---

த₄ரித்தது நானொருவனும் இன்றாக அறிகிறேனல்லேன். இது ஸர்வலோக ப்ரஸித்₃த₄மாயிருப்பதொன்றன்றோ ? என்கை. 70.

---

நான் ஒருவன் இன்றுதானா இவ்விஷயத்தை அறிந்தேன்? (அல்லேன்) அன்று; நெடுநாளாகப் பலரும் அறிவர் என்று வாக்யபே₄த₃ம் பண்ணியும் பொருள் கொள்ளலாம். "இத₃ம் விஷ்ணுர் விசக்ரமே" "த்ரீணி பத₃ா விசக்ரமே" "விசக்ரமே ப்ருதி₂வீமேஷ ஏதாம் க்ஷேத்ராய விஷ்ணு:" "த்ரிர் தே₃வ ப்ருதி₂வீமிதி ப்ரவிஷ்ணு:" "விஷ்ணோர் நுகம்......விசக்ரமாணஸ் த்ரேதோ₄ருகா₃ய:" "உபே₄ தே வித்₃ம ரஜஸீப்ருதி₂வ்யா விஷ்ணோ தே₃வ த்வம் பரமஸ்ய வித்ஸே" [யஜு அஷ்ட 2-8-16] [விஷ்ணுவே! பூ₄மியிலும் ஆகாயத்திலும் நீ வைத்த இரண்டடிகளை அறிவோம். மூன்றாவது அடிவைப்பை நீயே அறிவாய் போலும்!] "ஶம் நோ விஷ்ணுருருக்ரம:" "விஷ்ணுக்ராந்தே வஸுந்த₄ரே" என்றும் "உத்₃த்₄ருதாऽஸி வராஹேண க்ருஷ்ணேந" [தை-நா] என்றும் இவ்வர்த்த₂த்தை வேத₃ங்கள் வாய் வெருவும் போது இவனே மறைப்பொருளென்பதை இன்றுவரை அறிவற்றிருந்த நான் சொல்லித்தானா தெரிந்துகொள்ளவேணும்? 70.

ஓதிய—(திருத்தேர்த்தட்டில் அர்ஜுநனைக் குறித்து) அருளிச் செய்த, வாக்கு அதனை—(சரமஶ்லோகமாகிய) அந்தத் திருவாக்கை, உலகத்தில்—இவ்வுலகத்திலுள்ளார், கல்லார்—கற்கப்பெறாதவர்களாய், மெய் ஞானம் இல் — தத்துவ உணர்ச்சியற்ற, ஏதிலர் ஆம்—ப₄க₃வத்₃ விரோதி₄களாயுளர்.

பெரி-அவ:—(சேயன்) ப்ரளயங்கொண்ட பூ₄மியை எடுத்து ரக்ஷித்தது அறியாதிருந்தவளவேயோ? ஸம்ஸாரப்ரளயத்தில் நின்றும் எடுக்க அவனருளிச்செய்த வார்த்தையைத்தான் அறியப்பெற்றோமோ? என்கிறார்.

வ்யா:—(சேயன் மிகப்பெரியன்) "यतो वाचो निवर्त्न्ते" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று வாங்மனஸ்ஸுக்களுக்கு நில

---

அவ:—ப்ரளயங்கொண்ட பூ₄மியை எடுத்து ரக்ஷித்தத்தை அறியாதவளவேயோ? ஸம்ஸார ப்ரளயத்தினின்றும் எடுக்கைக்காக அவன் அருளிச்செய்த வார்த்தையைத்தான் அறியப் பெற்றதோ? என்கிறார்.

உரை:— அநுகூலரான யஶோதா₃தி₃களுக்கு, கையிலே கோலைக்கொடுத்து 'பசுமேய்த்துவா' என்று நியமிக்கலாம்படி சிறுபிள்ளையாய்க்கொண்டு மிகவும் ஆஸன்னனாய்

---

71. அவ:-லௌகிகமான ப்ரளயம் அகப்படுத்திக்கொண்டபோது அவன் நம்மை எடுத்து ரக்ஷித்ததை அறியாதிருந்ததுமாத்திரமோ? ஸம்ஸாரஸாக₃ரப்ரளயத்திலிருந்து நம்மை எடுக்க அவன் அருளிச் செய்த சரமஶ்லோகமாகிற வார்த்தையைத்தான் இன்றுவரை நாம் அறியப்பெற்றோமோ? என்று வருந்துகிறார்.

வ்யா:—(சேயன்) பிரமன், உருத்திரன் முதலானோர்க்கு அறியவொண்ணாதபடி மிகவும் தூ₃ரத்திலிருப்பவன்; ''ந த்வாம் கேசந ஜாநதே'' [ரா-உத் ] என்றும்,

"யந்ந தே₃வா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர:।
ஜாநந்தி பரமேஶஸ்ய தத் விஷ்ணோ: பரமம் பத₃ம்॥"
[வி-பு 1-9-55]

மல்லாதபடியாலே ப்₃ரஹ்மாதி₃களுக்கும் தூ₃ரஸ்த₂னுயிருக்கும். (சிறியன் அணியன்) ஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகாய்ப் பிறந்து

வர்த்திக்கும் நீர்மையை உடையனாய், அங்கிலேதன்னிலே அநாஶ்ரிதரான துர்யோத₄நாதி₃களுக்கு எட்டவொண்ணாத படி மிகவும் பெரியவனாய்க்கொண்டு தூ₃ரஸ்த₂னுயிருக்கு

[தே₃வரும், முனிவரும், பிரமனான நானும், உருத்திரனும் பரமேஶ் வரனான விஷ்ணுவுடைய அந்த மேலான ஸ்வரூபத்தை அறியமாட் டோம்] என்றும்,

''ந ஸ ஶக்யஸ் த்வயா த்₃ரஷ்டும் மயாந்யைர்
வாபி ஸத்தம।
ஸர்வேஷாம் ஸாக்ஷிபூ₄தோऽஸௌ ந க்₃ராஹ்ய:
கேநசித் க்வசித்॥''

[பார-மோக்ஷ]

[குழந்தாய் ருத்₃ரனே! அப்பெருமான் உன்னாலும், என்னாலும், வேறு எவராலும் காணத்தக்கவனல்லன்; எல்லோரையும் காண்பவனா யினும் இவன் எவனாலும் எக்காலத்திலும் காண அரியவன்] என்று பிரமனும் பகர்ந்தானன்றே.

''அத்₃யாபி மாம் ந ஜாநந்தி ருத்₃ரேந்த்₃ராஸ் ஸபிதாமஹா:'' [பிரமனோடு கூடிய ருத்₃ரனும் இந்திரனும் இன்றும் என்னை அறியார்] என்று வராஹபுராணத்திலும், ''நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய'' [நான் எவருக்கும் வெளிப்படுபவனல்லன்] என்று கீ₃தையிலும் தானும்.

''ந யஸ்ய ரூபம் ந ப₃லப்ரபா₄வௌ
ந ச ஸ்வபா₄வ: பரமஸ்ய பும்ஸ:।
விஜ்ஞாயதே ஶர்வபிதாமஹாத்₃யைஸ்
தம் வாஸுதே₃வம் ப்ரணமாம்யசிந்த்யம்॥''

[எந்தப் பரமபுருஷனுடைய உருவமும், ப₃லப் பெருமைகளும், தன்மை யும், ப்₃ரஹ்மருத்₃ராதி₃களாலும் அறியப்படுவதில்லையோ, அறிதற்கரிய அந்த வாஸுதே₃வனை வணங்குகிறேன்] என்று ஸ்ரீ விஷ்ணு த₄ர்மத் தில் பிறரும் வாசியறச் சொல்லும்படியுள்ள அர்த்த₂மன்றோ இது. ''ந தே விஷ்ணோ ஜாயமாநோ ந ஜாதோ தே₃வ மஹிம்ந: பரமந்தமாப'' [விஷ்ணுவே! முன்பிறந்தவனும், பிறக்கிறவனும் உன்பெருமையின் மேலெல்லையை அறிந்ததில்லை] என்று ப₃ஹ்வ்ருசஶ்ருதியும் ஓதிற்று. இப்படி அறிவரியனாயிருக்கக் காரணமென்னென்னில், (மிகப்பெரியன்;

ஆப்ததமனுகக் கேட்ட மநுவும், என்றும் ஓதுவித்துப் போருகிற நாலு வேதமும், இவையெல்லாம் ஆச்சர்யபூதன் ஸங்கல்பத்திலே உண்டான உண்மையுடைய. 76.

---

கேட்டுப் போருகிற மந்வாதி தர்மசாஸ்த்ரங்களும், ஆசார்யோச்சாரணாநூச்சாரணக்ரமத்தாலே நியமேந ஓதிப்போரக்கடவ ருகாதிசதுர்வேதங்களுமாகிற இந்த வாச்யவாசகவர்க்கமடங்கலும் ஆச்சர்யசக்தியுக்தனை தன்னுடைய திவ்யஸங்கல்பத்திலே உண்டான தத்வத்தை யுடைத்து. இன்ன சப்தம் இன்ன அர்த்தத்தைக் காட்டக்கடவதென்று சப்தார்த்தங்களினுடைய வாச்ய

---

தார். (பாட்டும் முறையும்) இயலும் இயலைப்பாடும் முறையான இசையும். (படுகதையும்) பழைய விருத்தாந்தங்களை 'இப்படி, இப்படி' என்று கூறும் இதிஹாஸங்களும். (பல் பொருளும்) ''ஸர்க்கஶ்ச ப்ரதிஸர்க்கஶ்ச'' என்று தொடங்கிச் சொல்லப்படும் பல பொருள்களைச் சொல்லும் புராணங்களும். இது அப்பிள்ளை நிர்வாஹம்.

(ஈட்டிய தீயும்) பஞ்சீகரணத்தாலே மற்ற நாலு பூதங்களும் தன்னில் அமையும்படி சேர்க்கப்பட்டுக் காரணமாகும் அக்னியும். ஐந்து பூதங்களும் தனித்தனியே நின்றால் காரியங்களை உண்டு பண்ணும் காரணமாக மாட்டாவாகையால், ஸர்வேச்வரன் ஒவ்வொரு பூதங்களையும் எட்டு பகுதிகளாகப் பிரித்து, அதில் ஒவ்வொன்றிலும் நாலு பகுதிகள் நிற்க, மற்ற நாலு பகுதிகளை மற்ற நாலு பூதங்களிலும் சேர்க்கும் ப்ரக்ரியை பஞ்சீகரணமாகும். (இருவிசும்பும்) மற்ற நாலு பூதங்களையும் வியாபித்து நிற்கையாலே அவற்றிலும் பெரிதான ஆகாசமும். இவையிரண்டையும் சொன்னது பஞ்சபூதங்களுக்கும் அவற்றாலுண்டாகும் கார்யப்பொருள்களுக்கும் உபலக்ஷணம். பெரியவாச்சான்பிள்ளையின் நிர்வாஹத்தில் இவ்வளவும் வாச்யங்களைச் சொல்லுகிறது. இனி, இவற்றுக்கு வாசகங்களைச் சொல்லுகிறது. அப்பிள்ளை நிர்வாஹத்தில் 'ஈட்டிய தீயும் இருவிசும்பும்' என்பதுமட்டும் வாச்யபரம். முன்னும் பின்னும் வாசகபரம். (கேட்ட மனுவும்...தற்பு) ''யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்'' [தைத் ஸம் 2-2] [மநு சொன்னதெல்லாம் மருந்தாகும்] என்று வேதத்திலும் ஓதிக்கேட்கப்பெற்ற மனுஸ்ம்ருதியும், என்றும் ஆசாரியனால் ஓதுவிக்கப்பட்டு சிஷ்யனால் கேட்கப்படுகை

77. தற்பென்னைத் தானறியா னேலும் தடங்கடலைக்
கற்கொண்டு தூர்த்த கடல்வண்ணன்—எற்கொண்ட
வெவ்வினையும் நீங்க விலங்கா மனம்வைத்தான்
எவ்வினையும் மாயுமால் கண்டு.

பதவுரை:— **தட கடலை**—பரந்த சமுத்திரத்தை, **கல் கொண்டு**—மலைகளினால், **தூர்த்த**—அணைசெய்து அடைத்த வனும், **கடல்வண்ணன் தான்**—கடல்போன்ற கருநிறமுடைய வனுமான எம்பெருமான், **என்னை**—(தோஷமே வடிவெடுத்த வனான) என்னை, **தற்பு**—உள்ளபடியே, **அறியான் ஏலும்**—அறிந்திலனாயினும், **என் கொண்ட** — என்னைக்கொள்ளை கொண்டிருக்கிற, **வெம் வினையும்** — கொடிய பாவங்கள் யாவும், **நீங்க**—என்னை விட்டு நீங்கும்படியாக, **கண்டு**— நெஞ்சாலே நினைத்து, **மனம்**—தனது திருவுள்ளத்தை, **விலங்கா**—வேறு எங்கும் விலகிப்போகாதபடி, **வைத்தான்**— (என்மீதே ஒரு மடைப்படுத்தி) வைத்தருளினன்; (ஆகை யாலே) **எ வினையும்**—பாபமென்று பேர் பெற்றவை எல் லாம், **மாயும்**—அழிந்து போகும்; **ஆல்**—ஆஶ்சர்யம்.

---

வாசகஸம்பந்தநியமம் எம்பெருமானுடைய திவ்யஸங்கல் பாயத்தமென்றதாயிற்று. தற்பு — தத்வம். உண்மை யென்றபடி. 76.

---

**யாலே 'ஶ்ருதி' எனப்படும் நாலு வேதமும், ஆஶ்சர்யபூதனுடைய ஸங்கல்பத்தால் உண்டான தத்வஸ்திதியை உடையவை. இன்ன சொல் இன்ன பொருளைக் காட்டும் என்னும் நித்யமான வாச்ய வாசகத் தொடர்பு எம்பருமானின் திவ்யஸங்கல்பத்தால் ஏற்பட்டது என்றபடி. (மாயை) '' மாயா வயுநம் ஜ்ஞாநம் '' என்கிற ஆர்ஷ நிகண்டுவின்படி ஸங்கல்பரூபமான அறிவைக் குறிக்கும். ''ஆத்ம மாயயா ஸம்பவாமி'' [கீதை 4-6] [என் ஸங்கல்பத்தால் பிறக்கிறேன்] என்றான் கண்ணனும். தற்பு-தத்வம்; உண்மை. 76.**

**77. அவ:— வாச்யவாசகங்களெல்லாம் அவனுடைய ஸங்கல் பாயத்தமாயிருப்பது ஒருபுறமிருக்கட்டும். தோஷமே வடிவெடுத்த என் ஸ்வரூபத்தைப் பாராமல் என்பக்கல் விஶேஷகடாக்ஷம் பண்ணின**

பெரி-வ்யா:—(தற்பித்யாதி₃) என்னை உள்ளபடி அறியா ஞகிலும். (தடங்கடலையித்யாதி₃) அரியது செய்யுமவன். ஆழக்

அவ:—என் தோ₃ஷபூ₄யஸ்தையைப் பார்த்து இக ழாதே, என்னுடைய ஸமஸ்தகர்மங்களும் உருமாய்ந்துபோம் படி பக்கம் நோக்கறத் தன் திருவுள்ளத்தை ஸர்வேஶ்வரன் என் பக்கலிலே வைத்தருளினன் என்கிருர்.

உரை:—ஸர்வஜ்ஞன தான் தோ₃ஷமே வேஷமான என்னை உண்மையாக அறியாஞகிலும், இடமுடைத்தான கடலை, நீரைக்கண்டால் ஆழக்கடவ கற்களைக் கொண்டு

படியைக் கண்டால் நான் தாக்கொண்டு மானிடம் பாடமுடியுமோ? என்கிருர்.

வ்யா:— (தற்பென்னைத் தானறியானேலும்) என்னை உள்ளபடி அறியாஞகிலும். "குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன், நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன், புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்" [திருச்சந்த-90] என்கிறபடியே தோ₃ஷ மெல்லாம் வடிவெடுத்த என்னை உள்ளபடி அறியாஞகிலும். (தானறியானேலும்) "யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்" என்கிறபடியே ஸர்வஜ்ஞன தானே என் தோ₃ஷங்களை அறியாஞகிலும். (என்னைத் தான் அறியானேலும்) 'என் தோ₃ஷத்தை' என்று சொல் லாமல், 'என்னை' என்பானேன்? என்னில்: தோ₃ஷமே வடிவெடுத்தவ ராகத் தம்மை அறுதியிட்டிருக்கையாலே, 'என்னை' என்கிருர். தோ₃ஷங் கள் நிருபிதஸ்வரூப விஶேஷணமாயிருக்கும் நிலைபோய், ஸ்வரூப நிரு பகமாயிருக்கிறபடி. (அறியானேலும்) "அவிஜ்ஞாதா ஹி ப₄க்தாநாம் ஆக₃ஸ்ஸு கமலேக்ஷண:" [ப₄க்தர்களுடைய பாவங்கள் விஷயத்தில், தாமரைக்கண்ணன் அறியாதவனுகவேயிருக்கிருன்.] என்றதன்றே.

"அற்றமுரைக்கில் அடைந்தவர்பால் அம்புயைகோன்
குற்றமுணர்ந்திகழும் கொள்கையிறே—எற்றேதன்
கன்றினுடம்பின் வழுவன்றே காதலிப்பது
அன்றதனை ஈன்றுகந்த ஆ" [ஞானஸாரம்]

என்ருர் அருளாளப்பெருமாள் எம்பெருமாஞரும். (தடங்கடலைக் கற்கொண்டு தூர்த்த கடல்வண்ணன்) மிகப்பெரிய கடலைக் கல்லாலே அணைகட்டினவனய், கடல்போன்று இருண்டு குளிர்ந்த வடிவையும்

கடவ கல்லைக்கொண்டு நீரிலே அணைகட்டினவன். (எற் கொண்ட இத்யாதி₃) நான் உரு மாயும்படி என்னை க்₃ரஸித்த மஹாபாபமும் நசிக்கும்படி, வேறோரிடத்திலும் போகாதபடி திருவுள்ளத்தாலே கொ(க)ண்டு, என் பக்கலிலே மநஸ்ஸை வைத்தான். ஆதலால் பாபமென்று சொல்லப்படுகிறவை யடைய மாயும். 77.

---

திடர்படும்படி தூர்த்த, கடல்போலே இருண்டு குளிர்ந்த வடிவையுடையவன், நான் உருமாயும்படி என்னைக் கபளீ கரித்துக்கொண்டு கிடந்த ஸமஸ்த பாபங்களும் விட்டு நீங்கும்படியாக அழகிய திருக்கண்களாலே குளிரக் கடா க்ஷித்து, வேறொரு விஷயத்தில் புகுந்து போகாதபடி—என் பக்கலிலே திருவுள்ளத்தை ஒருமடைப்பட வைத்தான். ஆகையாலே பாபமென்று பேர் பெற்றவையடங்கலும் நசித்துப்போம். 77.

---

கா₃ம்பீ₄ர்யாதி₃ ஸ்வபா₄வத்தையுமுடையவன். கடலிலே ஆழ்ந்துபோகக் கூடிய கற்களைக்கொண்டு, குலபர்வதங்களையிட்டாலும் விழுங்கக்கூடிய கடலிலே அணைகட்டிய அக₄டிதக₄டநா ஸாமர்த்₂யத்தை உடையவன். இப்படி அரியது செய்வது பிராட்டிக்காகமாத்திரமன்று; என் விஷயத் திலும் அரியது செய்தான் என்கிறார் அடுத்தபடியாக—(எற்கொண்ட வெவ்வினையும் நீங்கக் கண்டு) நான் 'அஸந்நேவ' என்று உருவழிந்து போம்படி என்னை மூடிக்கொண்டிருந்த மஹாபாபங்களெல்லாம், "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ கானோ ஒருங்கிற்றுக் கண்டிலமால்" என்று கைவிட்டோடும்படி கடாக்ஷித்து. வெவ்வினை— கொடியபாபம்; 'எவ்வினை' என்று பிரித்து 'எல்லாப் பாபங்களும்' என்றும் பொருள்கொள்வர். (விலங்கா மனம் கண்டு வைத்தான்) "கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும் புல்லென்றொழிந்தனகொல்" "பனிக் கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்து" என்று சொல்லுகிற படியே தான் என்னைத் தவிர வேறொரு விஷயத்தில் செல்லாதபடி தன் திருவுள்ளத்தாலே ஸங்கல்பித்து, என்னிடத்திலே மனத்தை வைத்தான். (அறியானேலும் — மனம் வைத்தான்) என் ஸ்வ ரூபத்தை அறியாவிடினும் என்னிடம் மனஸ்ஸை வைத்தான்; அறியாதவனே அறியலானான்; தோ₃ஷங்களை அறியாவிடினும், கு₃ணங்களை ஒன்று பத்து நூறாக கிரஹித்து என்னிடம் ஈடுபட்டான்.

78. கண்டு வணங்கினார்க் கென்னாங்கொல் காமனுடல்
கொண்ட தவத்தாற் குமையுணர்த்த—வண்டலம்பும்
தாரலங்கல் நீண்முடியான்றன்பெயரே கேட்டிருந்து அங்
காரலங்க லானமையா லாய்ந்து.

பதவுரை-காமன்—மன்மதனுடைய, உடல்—ஶரீரத்தை, கொண்ட—நீருக்கின, தவத்தாற்கு—தபஸ்ஸையுடைய சிவ னுக்கு, உமை—(மனைவியான) பார்வதியானவள், உணர்த்த—தெரிவிக்க, வண்டு அலம்பும் தார் அலங்கல் நீள் முடியான் தன் பெயர் கேட்டிருந்தே—வண்டுகள் (தேன் வெள்ளத்தில்) அலைகிற பூமாலையை நீண்ட திருமுடியிலுடையனான எம் பெருமானுடைய திருநாமங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே, அங்கு—அப்போதே, ஆர் அலங்கல் ஆனமை—மிகவும் அசைந்து போனமையை, ஆய்ந்தால்—ஆராய்ந்து பார்க்கில், கண்டு வணங்கினார்க்கு—நேரே கண்டு வணங்குமவர் கட்கு, என் ஆம்கொல்—எப்படிப்பட்ட விகாரமுண்டாகுமோ (என்பது சொல்லமுடியாது).

அவ:— யாத்₃ருச்சி₂கப₄க₃வந்நாம ஶ்ரவணத்தாலே, தம:ப்ரக்ருதியாய் க்ரோத₄ஶீலனான ருத்₃ரனுட்பட விக்ருத னும்படி கண்டால், நேர்கொடு நேரே ஸாக்ஷாத்கரித்தவர் களுக்கு எந்த விக்ருதி பிறக்குமோ என்கிறார்.

* அவிஜ்ஞாதாவானவனே * ஸஹஸ்ராம்ஶுவானான். (எவ்வினையும் மாயுமால்) எற்கொண்ட எவ்வினையும் நீங்க அவன் மனம் வைத்த பின்பு பாவங்கள் அழியாதிருக்க வழியுண்டோ? ஆகையால் ப₄க₃வத₃ப சாரம், பா₄க₃வதாபசாரம், அஸஹ்யாபசாரம் முதலான பாபங்களெல் லாம் அழிந்தொழியும். இது என் விஷயத்திலே செய்த அக₄டித க₄டனை என்று பா₄வம். 77.

78. அவ:—அத்₃ருஷ்ட ப₂லமான பாபநிவர்த்தநம் நிற்க; அவனைக் கண்டு வணங்கினவர்கள் த்₃ருஷ்டத்திலே அனுப₄விக்கும் ஆநந்த₃ம்தான் எத்தகையது! என்கிறார். யாத்₃ருச்சி₂கமாக பகவா

* அவிஜ்ஞாதா—(தோ₃ஷங்களை) அறியாதவன்; * ஸஹஸ்ராம்ஶு:—(கு₃ணங்களை) ஆயிரமடங்காக அறிபவன். [விஷ்ணு ஸஹஸ்ரநாமம்.]

பெரி—வ்யா:—(கண்டு) அபி₄மத விஷயத்திலே ப்ராவண்யத்தை விளைத்தவனை அநங்க₃னாக்கினவன் நெஞ்சங்கூட ஶ்ரவணமாத்ரத்திலே பரவசமானபடி கண்டால், இவ்வஸ்துவை ஸாக்ஷாத்கரித்து ப்ரஹ்மாதி₃களைப்பண்ணினார்க்கு எத்தனை நன்மை பிறவாது? என்கிறார். (தவத்தாற்கு) தபஸ்ஸுக்குப் ப₂லம் ஒருத்தனுடைய ஹிம்ஸையாம்படி நெஞ்சு திண்ணியனானவனுக்கு. (உமைபுணர்ந்த) ப்ராஸங்கி₃கமாக ப₄க₃வத்

---

உரை:— அபி₄மதவிஷயத்தை க₄டிப்பித்த காமனுடைய ஶரீரத்தை த₃க்₃த₄மாக்கின தப:க்ரௌர்யத்தை உடையனான ருத்₃ரனுக்கு, மஹிஷியான உமையானவள் முறை

---

னுடைய திருநாமங்களைக் கேட்ட மாத்ரத்தாலே, தமோகுணம் நிறைந்தவனாய், கோபவசப்படுமவனான ருத்₃ரனும்கூட விகாரமடையும்படியைப் பார்த்தால், நேருக்கு நேரே கண்டு வணங்கினவர்களுக்கு என்ன ஈடுபாடு ஏற்படும்? என்கிறார்.

வ்யா:—(காமனுடல் கொண்ட தவத்தாற்கு) தன் பத்னியிடத்திலே காதலை விளைவித்த காமனுடைய உடலை எரித்த தவத்தையுடையவனான ருத்ரனுக்கு; நெடுங்காலம் செய்த தவவலிமையை அபி₄மதவிஷயத்தில் அன்பை விளைவித்தவனை அழிப்பதிலே செலவிடும்படியான க்ரூரஸ்வபா₄வத்தை உடைய ருத்ரனுக்கு. (உடல்கொண்ட தவத்தாற்கு) தபஸ்ஸுக்குப் ப₂லம் ஒருவனை அழிப்பதாம்படியான கல்நெஞ்சனுக்கு. இப்படிப்பட்ட கல்நெஞ்சன்கூட நாமஶ்ரவணத்தாலே நெஞ்சுருகிற்று என்று பா₄வம். (உமை உணர்ந்த) பார்வதியானவள் சொல்ல. இவ்விருத்தாந்தம் பின்வருமாறு:—ஒரு சமயம் ருத்ரன் தியானபரனாயிருக்கக் கண்ட பார்வதியானவள்

"கம் த்வமர்ச்சயஸே தே₃வ! கிம் தை₃வமதி₄கம் தவ |
ஜபஹோம நமஸ்காரை: தம் வத₃ஸ்வ மஹேஶ்வர ||"

[தேவனே! நீர் ஜபஹோம நமஸ்காரங்களாலே யாரை அர்ச்சனம் செய்கிறீர்? உமக்கும் மேலான தெய்வம் எது? மஹேஶ்வரனே! அவனை எனக்கு உரைப்பீராக] என்று தொடங்கி பகவந்நாமங்களைச் செவிக்கினிதாகப் பாடி ப்ரஶ்னம் பண்ண, அவனை மேலும்மேலும் திருநாமங்களைப் பாடச்சொல்லிக் கேட்டு, மிகவும் மேனிதளர்ந்துபோனான் என்பர். (உமை உணர்ந்த) ப்ரஶ்நமுகேநத்தாலே ப்ராஸங்கி₃கமாக பகவத்குண நாமங்களை அவள் சொல்லக்கேட்டு ஶிஷ்யாசார்யக்ரமம்

கு₃ணங்களைக் கேட்டு; ஶிஷ்யாசார்யக்ரமம் மாறுடி, அவள் வாயாலே தான்கேட்டு. (வண்டித்யாதி₃) மது₄வெள்ளத்திலே வண்டுகள் அலையாநின்ற திருத்துழாய்மாலையையும், ஆதி₄ ராஜ்யஸூசகமான முடியையும் உடைய ஸர்வேஶ்வரன் திரு நாமங்களையே கேட்டு, நெஞ்சாலே அநுஸந்தி₄த்துக்கொண் டிருந்து. (ஆரலங்கலானமையால்) அலங்கலென்று அசைவாய், பாரவஶ்யத்தைச் சொன்னபடி. 78.

---

மாறுடி அஜ்ஞாதஜ்ஞாபனம் பண்ண—வண்டுகளானவை தேன்வெள்ளத்திலே கிடந்து அலையும்படியிருக்கிற பூந் தாரையுடைத்தான திருத்துழாய் மாலையாலே அலங்க்ருத மாய், ஆதி₄ராஜ்யஸூசகமான திருவபி₄ஷேகத்தை உடைய னை ஸர்வேஶ்வரன்தன்னுடைய இவ்வொப்பனை, அழகு முத லான ஸ்வபா₄வத்துக்கு வாசகமான திருநாமங்களை யாத்₃ ருச்சி₂கமாகக் கேட்டு, நெஞ்சாலே உள்ளீடான கு₃ணங்களை அநுஸந்தி₄த்துக் கொண்டிருந்து, அந்த த₃ஶையிலே முடித்து வாடின பூமாலைபோலே பரவஶனாய்த் துவண்டு

---

மாறி, அவள் வாயாலே தான் பகவத்விஷயத்தைக் கேட்டபடி. (வண்டலம்பும் தாரலங்கல் நீண் முடியான் தன் பெயரே கேட்டிருந்து) வண்டுகள் தேன்வெள்ளத்தில் அலையப்பெற்ற திருத்துழாய் மாலையை யுடைய நீண்ட மகுடத்தையுடைய எம்பெருமானுடைய பெயர்களைக் கேட்டு அநுஸந்தி₄த்திருந்தமாத்திரத்திலேயே, (வண்டலம்பும் தாரலங் கல் நீண்முடியான்) "சுடர் முடிமேலும் புனைந்த தண்ணந்துழாயுடை யம்மான்" [திருவாய் 1-9-7] என்றார் நம்மாழ்வாரும். வண்டலம்பும்— வண்டுகள் ஶப்₃தி₃க்கும் என்பாருமுண்டு. (நீண் முடியான்) "ஆதி₄ ராஜ்யமதி₄கம் பு₄வநாநாமீஶ தே பிஶுநயந் கில மௌளி:" [நீ உலகங்களுக்கெல்லாம் தலைவன் என்பதை உன் கிரீடமே கோட் சொல்லித்தருகிறது.] என்று ஆழ்வான் அருளியபடியே ஸர்வாதி₄கத் வத்தைக் காட்டும் முடியை உடையவன். (அங்கு ஆரலங்கலானமை ஆய்ந்தால் கண்டு வணங்கினார்க் கென்னுங்கொல்) திருநாமத்தைக் கேட்டவுடன் "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும், "உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர் சோர" என்றும் "ஆஹ்லாத₃ஶீத நேத்ராம்பு₃: புலகீக்ருத கா₃த்ரவாந் ஸதா₃ பரகு₃ணாவிஷ்ட:" [ஆநந்தக் கண்ணீரையும் மயிர்க்

79. ஆய்ந்துகொண் டாதிப்பெருமானை அன்பினால்
வாய்ந்த மனத்திருத்த வல்லார்கள்—ஏய்ந்த தம்
மெய்குந்தமாக விரும்புவரே தாமும்தம்
வைகுந்தம் காண்பார் விரைந்து.

பதவுரை:—ஆதி—ஜகத்காரணபூதனான, பெருமானை—ஸர்வேச்வரனை, அன்பினால்—ப்ரேமத்துடன், ஆய்ந்து கொண்டு—அநுஸந்தித்துக்கொண்டு, வாய்ந்த மனத்து—(தமது) பாங்கான நெஞ்சிலே, இருத்த வல்லார்கள் தாமும்—நிலை நிறுத்திக்கொள்ள வல்லரானவர்களும், தம் வைகுந்தம்—தங்களுக்கென்று ஏற்பட்டுள்ள பரமபதத்தை, விரைந்து—சீக்கிரமாக, காண்பார்—காண விருப்பமுடையராய், ஏய்ந்த—ஆத்மாவோடுபொருந்திய, தம் மெய்-தங்களுடைய உடம்பை, குந்தம் ஆக—வியாதியாக, விரும்புவர்—எண்ணுவர்.

விழுந்தபடி கண்டால்; கேட்டவளவன்றிக்கே பத்தும் பத்தாக இவ்வஸ்துவை ஸாக்ஷாத்கரித்து நிர்மமராய்த் திருவடிகளிலே விழுந்தவர்களுக்கு எந்த விக்ருதி பிறக்குமோ? 78.

அவ:— பகவத்விஷயத்திலே ருசியுடையவர்கள், எம்பெருமானை அநுபவிக்கைக்கு ஏகாந்தமான பரமபதத்தை

கூச்செறியும் மேனியையும் உடையவனாய், எப்போதும் பரமாத்ம குணத்தால் ஆட்கொள்ளப்பட்டவனாயிருப்பான்] என்றும் சொல்லும் நிலைமையை அடைந்தபடியை ஆராய்ந்தால், பரமபுருஷனை நேரே கண்டு மமகாரமற்று வணங்கினவர்கள் படும்பாடு எங்ஙனமிருக்கும்? அலங்கல் — அசைவு. (ஆரலங்கலானமை) மிகவும் அசைந்து போனமை. அன்றிக்கே, அலங்கல் என்று மாலையாய், 'முடித்து வாடின பூமாலைபோலே துவண்டு விழுந்தான்' என்றும் கொள்வர். ஆரலங்கலானமையால், ஆய்ந்து — ஆராய்ந்து, கண்டு வணங்கினார்க்கு என்னாங்கொல் என்று கூட்டியும் பொருள்கொள்ளலாம். 78.

79. அவ:—அவனை நேரேகண்டு வணங்கினவர்களின் ஆநந்தம் மிகப்பெரிது என்றார். சரீரத்தில் ஈடுபாடு இவ்வாநந்தத்திற்கு இடையூறாய் நில்லாதோ? என்ன—ஸர்வேச்வரனை நெஞ்சிற்கொண்டு பரம்பதமும் செல்லவேணும் என்னும் த்வரையுடனிருப்பவர்கள், அதற்கு விரோதியாம்படி தாம் அபிமானித்த சரீரத்தை. "சரீரம்

பெரி—அவ:—(ஆய்ந்து) ப₄க₃வத்₃விஷயத்திலே ருசியுடைய வர்கள், அவனை ஏகாந்தமாய் அநுப₄விக்கலாம் தே₃ஶம் பரம பத₃ம் என்று ஆசைப்பட்டு, அதுக்குக் காற்கட்டாயிற்றென்று சொல்லலாம்படி அபி₄மானித்த ஶரீரத்தை—"शरीरं व्रणवत्पश्येत्" (ஶரீரம் வ்ரணவத் பஶ்யேத்) என்னும்படியே நோயாக விரும்புவர்களென்கிறார்.

வ்யா:—(ஆய்ந்திதபாதி₃)ஜக₃த்காரண பூ₄தனான ஸர்வேஶ் வரனை ப்ரேமத்தாலே அநுஸந்தி₄த்துக்கொண்டு இருத்துகைக்கு

ப்ராபிக்கவேணுமென்னும் த்வராதிஶயத்தாலே தத்₃விரோதி₄ யான ஶரீரத்தை நோயாக விரும்புவர் என்கிறார்.

உரை:—ஜக₃த்காரணபூ₄தனான ஸர்வேஶ்வரனை ப்ரேமத் தாலே அநுஸந்தி₄த்துக்கொண்டு, அவன் எழுந்தருளி யிருக்கைக்குப் பாங்கான நெஞ்சிலே, "இருப்பேன் என்று என்னெஞ்சு நிறையப் புகுந்தான்" என்னும்படி ஸுப்ர திஷ்டி₂தமாக வைத்துக்கொள்ள வல்லவர்கள், இப்படி

வ்ரணவத் பஶ்யேத்'' [?] [ஶரீரததைப் புண்ணைப்போலே காணக் கடவன்] என்கிறபடியே நோயாக எண்ணுவர்களாகையாலே ப₄க₃வத₃ நுப₄வஜநிதமான ஆநந்த₃த்திற்கு ஶரீரப்ராவண்யம் இடையூருய் நில்லாது என்கிருர்.

வ்யா:— (ஆய்ந்துகொண்டாதிப் பெருமானை அன்பினல்) ஜக₃த் காரணபூ₄தனான ஸர்வேஶ்வரனை அன்பாலேஅநுஸந்தி₄த்துக்கொண்டு. ''காரணம் து த்₄யேய:'' [அத₂ர்வஶிகை₂] [ஜகத்காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது] என்றல்லவோ சொல்லப்பட்டது. (வாய்ந்த மனத்திருத்த வல்லார்கள்) 'பகவானை இருத்தவேணும் என்ருல் 'அல்லேன்' என்னுத நெஞ்சிலே வைக்க வல்லவர்கள். (வாய்ந்த மனம்) ''முந்துற்ற நெஞ்சு'' [பெரிய திருவ-1] ''என்னை நெகிழ்க் கிலும் என்னுடை நன்னெஞ்சம் தன்னை அகல்விக்கத் தானும் கில்லான் இனி'' [திருவாய் 1-7-8] என்கிறபடியே தம்மிலும் முற்பட்டிருக்கும் மனம், '' இருப்பேன் என்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான் '' [திருவாய் 10-8-6] என்று அவனும் மேல்விழும் மனம். ( ஆதிப்பெருமானை வாய்ந்த மனத்திருத்த வல்லார்கள் )

யோக்₂யமான நெஞ்சிலே வைக்கவல்லவர்கள். (ஏய்ந்த தம் மெய்) "ஸ்தூ₂லோऽஹம், க்ருஶோऽஹம்" என்று தானாகச் சொல்லலாம்படியான ஶரீரத்தை. குந்தமாக—நோயாக. 79.

ப்ராப்யருசிபரிபூர்ணராயிருக்கிற தாங்களும், ஆஶ்ரிதரான தங்களுக்கென்றே கூறப்பட்டிருக்கிற ஸ்ரீவைகுண்ட₂த்தை—'பெற்றபோது பெறுகிறோம்' என்று ஆறியிருக்கை யன்றிக்கே ஸத்வரராய்க்கொண்டு, கெடுத்தவன் நிதி₄ கண்டாற்போலே கண்டுகொண்டு அநுப₄விப்பதாக, அதுக்குக் காற்கட்டாய், "தே₃வோऽஹம்" (தே₃வோऽஹம்) என்னும்படி தங்களோடு பிரிவறப் பொருந்தியிருக்கிற ஶரீரத்தை வ்யாதி₄போலே து₃:க்க₂ாவஹமென்று கருதி, இதுவிட்டு நீங்குவது எப்போதோ என்று மநோரதி₂யாநிற்பர்கள். வடுகபா₄ஷையில் குந்த₃மென்று வ்யாதி₄க்குப்பேர். 79.

''முழு வேழுலகுமுண்டான் உகந்து வந்து அடியேனுள் புகுந்தான் அகல்வானுமல்லனினி'' [திருவாய் 2.6.7] என்கிறபடியே ஜக₃த்காரண பூ₄தனைத் தம் பாங்கான நெஞ்சிலே ஸ்த₂ாவரப்ரதிஷ்டை₂யாக எழுந்தருளப்பண்ண வல்லவர்கள். (மனத்திருத்த வல்லார்கள்) ''சஞ்சலம் ஹி மந:'' [கீதை 6-34] ''நின்றவா நில்லா நெஞ்சு'' [பெரியதிருமொழி 1-1-4] என்கிற அதிசஞ்சலமான மனத்திலே இருத்துவது மிகவரிய காரியம் என்று உணர்த்துகிறார். (வல்லார்கள்தாமும்) இவ்வரிய காரியத்தைச் செய்தவர்களுடைய பெருமை சொல்லுகிறது. (வல்லார்கள்தாமும்) ப்ராப்யமான பகவத்விஷயத்திலே ருசியுடையவர்களான இவர்களும். (தம் வைகுந்தம் விரைந்து காண்பார்) அந்த ப₄க₃வத₃நுப₄வம் இடையறுமல் செல்லும் தே₃ஶமான பரமபத₃த்தை விரைவிலே அடைய விருப்பமுள்ளவர்களாய். (தம் வைகுந்தம்) 'மரீசிநாம் பத₃ம்'' [புருஷஸூக்தம்] ''வானவர் நாடு'' [திருவாய் 3.9-9] என்கிறபடியே வானிளவரசான ஸர்வேஶ்வரன் அடியார்க்கென்றே ஆக்கிவைத்திருக்கும் பரமபதத்தை. (விரைந்து காண்பார்) ''பெற்றபோது பெறுகிறோம்'' என்று பொறுத்திராமல், பறிகொடுத்த பொருளைக் கண்டாற்போலே பதறிக்கொண்டு விரைவிலே காண விருப்பமுடையவர்களாய். (ஏய்ந்ததம் மெய் குந்தமாகவே விரும்புவர்) அவ்விருப்பத்தாலேயே, தம்மோடு பொருந்தியிருக்கும் தம் ஶரீரத்தை நோயாகவே எண்ணுவர். (ஏய்ந்த தம் மெய்) ஞானம் பிறந்தபின்பும், ''ஸ்தூ₂லோஹம், க்ருஶோஹம்'' [நான் தடித்தவன்; நான் மெலிந்தவன்] என்று தானாகவே வ்யவஹரிக்கலாம்படி ஆத்

80. விரைந்தடைமின் மேலொருநாள் வெள்ளம் பரக்கக்
கரந்துலகம் காத்தளித்த கண்ணன்—பரந்துலகம்
பாடின ஆடினகேட்டுப் படுநரகம்
வீடின வாசற் கதவு.

பதவுரை:— பரந்து—எங்கும் வியாபித்து, ஆடின—நர்த்தனம் செய்யும், உலகம்—சிறந்த பாகவதர்கள், பாடின—பாடின திருநாமங்களை, கேட்டு—கேட்டதனால், படுநரகம் வாசல்—நரகங்களின் வாசல்களிலிருந்த, கதவு—கதவுகள், வீடின—விழுந்தொழிந்தன; மேல் ஒரு நாள்—முன்னொருகாலத்தில், வெள்ளம் பரக்க—பிரளய வெள்ளம் பரவினபோது, உலகம்—உலகங்களையெல்லாம். கரந்து—(திருவயிற்றில்) மறைத்து வைத்து, காத்து அளித்த—துன்பங்களைப் போக்கி ரக்ஷித்த, கண்ணன்—கண்ணபிரானை விரைந்து அடைமின்—சீக்கிரமாகச் சென்று பணியுங்கோள்.

பெரி—வ்யா:—(விரைந்தடைமினித்யாதி) முன்பு ப்ரளயம் வருகிறதென்று லோகத்தை வயிற்றிலே வைத்து, ப்ரளயம்

அவ:— ஸர்வாபத்ஸகனான க்ருஷ்ணனை ஸம்ஸாராபத்தையுடைய நீங்கள் தங்கிவ்ருத்த்யர்த்தமாக ஈண்டென ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

உரை:— " தீர்த்தகரராமின் திரிந்து " என்கிறபடியே ஸர்வப்ரதேஶத்திலும் ஸரஸஸஞ்சாரம் பண்ணுகிற்பாராய்,

மாவோடு ஒன்றிநிற்கும் தம் ஶரீரத்தை. (குந்தமாகவே விரும்புவர்) தம் வைகுந்தத்தைப்பெற இடையூரான நோயாகவே எண்ணுவர். ஸுகத்துக்குக் காரணமாகவோ, ஸுகதுக்கங்கள் இரண்டுக்கும் காரணமாகவோ எண்ணமல் துக்கஹேதுவாகவே எண்ணுவர். குந்தம்-நோய். 79

80. அவ:—'ஞானிகள் தம் மெய் குந்தமாக விரும்புவதிருக்கட்டும். எங்களுக்கு ஸம்ஸாரபந்தம் விடமாட்டேனென்கிறதே' என்ன,—ப்ரளயங்கொண்ட உலகத்தை ரக்ஷித்த கண்ணனை அடைந்தால் ஸம்ஸாரப்ரளயம் கொண்ட நீங்களும் உஜ்ஜீவிக்கலாம் என்கிறார்.

வ்யா:—(விரைந்தடைமின்) உங்களாபத்தைப் பார்த்தால் சடக்கென அடையவேண்டாவோ? யாரையடைவது என்ன, ப்ரளயங் கொண்டவர்களை எடுத்து ரக்ஷிப்பதையே தொழிலாக உடையவனை

தேடி வந்தாலும் அத்தனைபோதும் தெரியாதபடி மறைத்துக் காத்து ரக்ஷித்த க்ருஷ்ணனை விரைந்து அடையுங்கோள். (உலகம்) என்று உத்க்ருஷ்டரைச் சொல்லுகிறது. (பரந்தித்யாதி) பரந்து, உத்க்ருஷ்டராய், ஆடினவர்கள் பாடின திருநாமங்களைக் கேட்ட நரகத்து வாசல்களில்கதவு வாங்கிப்பொகட்டன.

பக்3வத3நுப4வத்தால் வந்த உயர்த்தியையுடையராய், அநுப4வஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்4ரமநர்த்தனம் பண்ணுநிற்பாரான ஸ்ரீவைஷ்ணவர்கள், ப்ரீதிக்குப்போக்கு விட்டுப் பாடின திருநாமங்களைக் கேட்டபடியாலே, நரகப்ரவேஶம் பண்ணுவாரொருவருமில்லாதது கொண்டு நரகத்3வாரங்களிலுண்டான கதவுகள் வாங்கிப்பொகட்டன.

என்கிறார் மேல்—(மேலொருநாள்...) இன்று உங்களை ஸம்ஸார வெள்ளம் மூடிக்கொண்டிருப்பது போலே, அன்று ப்ரளயவெள்ளம் உலகனைத்தையும் சூழ்ந்துகொள்ள. (உலகம் கரந்து காத்து) உலகம் முழுவதையும், தன் திருவயிற்றிலே மறைத்து வைத்து. ப்ரளயம் நெடுங்காலம் தேடிவந்தாலும் இவர்களிருப்பிடத்தை அறியமுடியாதபடி தன் திருவயிற்றிலே மறைத்துக் காவல்காத்து. (அளித்த கண்ணன்) இம்முறையிலே உலகத்தை ரக்ஷித்த கண்ணனை விரைந்து அடையுங்கோள் என்று கீழோடும், பாடினகேட்டு என்று மேலோடும் கூட்டுவது.

நரகப4யம் எங்களைத் துன்புறுத்தும்போது நாங்கள் அவனை அடைவது எப்படி? என்ன,—(பரந்து ஆடின உலகம் பாடின கேட்டு) எங்கும் வியாபித்து நர்த்தனம் செய்யும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பாடின திருநாமங்களைக் கேட்டு, 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்கிறபடியே, உலகம் என்னும் ஶப்3த3ம் விண்ணுளாரிலும் சீரியரான பாகவதர்களைக் குறிக்கிறது. (பரந்து ஆடின உலகம் பாடின கேட்டு) "கிடந்து மிருந்தும் எழுந்தும் கீதம் பலபல பாடி நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம் செய்கின்றனவே" [திருவாய் 5-2-4] "நன்றிசை பாடியும் துள்ளியாடியும் ஞாலம் பரந்தார்" [திருவாய் 5-2-6] என்றார் நம்மாழ்வாரும். (கேட்டுப் படு நரகம்) இத்திருநாம ஒலி கேட்டவுடன் "நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி" [திருமாலை] என்கிறபடியே நரகமே சுவர்க்கமாகி யொழிந்தது. (நரகம் வீடின வாசற்கதவு) நரகவாசற்கதவுகள் விழுந்தொழிந்தன. ஆகையால் உங்களுக்கு நரகப4யம் வேண்டா என்று கருத்து.

அன்றிக்கே, நரகத்து வாசல்களில் பிடுங்கிப்பொகட்ட கதவுகளை நாட்டி "முனியாது மூரித்தாள் கோமின்" என்னும்படியே விரைந்து அடையுங்கோள் என்றுமாம். கண்ணான் என்றது கண்ணனை என்றபடி. 80.

---

ஆனபின்பு, முன்னொரு நாளிலே ப்ரளயமானது எங்கு மொக்க ஆக்ரமித்துக்கொண்டு வர, லோகத்தை ப்ரளயம் தேடிவந்தாலும் தெரியாதபடி திருவயிற்றிலே வைத்து அத்தால் வந்த வ்யஸனத்தைப் பரிஹரித்து யதா₂பூர்வம் ரக்ஷித்த க்ருஷ்ணனை ஸத்வரராய்க்கொண்டு ஆஶ்ரயி யுங்கோள். "உலகமென்பது உயர்ந்தோர்மாட்டு" என்கிற படியே உத்க்ருஷ்டரைச் சொல்லுகிறது. கண்ணனென் றது—கண்ணனை என்றபடி. அன்றிக்கே, கண்ணனுடைய வர்களாய், உத்க்ருஷ்டராய், ஆடித்திரிகிற ஶ்ரீவைஷ்ண வர்கள் பாடின திருநாமங்களை நாடாகக்கேட்டு க்ருதார்த்த₂ ரானார்கள். ஆகையாலே நரகத்₃வாரங்களில் பிடுங்கிப் பொகட்ட கதவுகளை நாட்டி "முனியாது மூரித்தாள் கோமின்" என்கிறபடியே விரைந்து அடையுங்கோள் என்றுமாம். 80.

---

(கண்ணான் உலகம் பரந்து பாடினவாடின கேட்டுப் படு நரகம் வீடின வாசற் கதவு) "கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல் மலியப்புகுந்து இசைபாடி ஆடி உழிதரக்கண்டோம்— நலியும் நரகமும் நைந்த" என்று நம்மாழ்வார் இப்பாசுரத்தை விவரித்தருளினார்.

அன்றிக்கே, இப்பாசுரத்தை யமதூ₃தர்களை நோக்கி ஆழ்வார் அருளிச்செய்வதாகவும் கொள்ளலாம்.

(வீடின வாசற் கதவு விரைந்து அடைமின்) திருநாம ஸங் கீர்த்தனத்₄வனி கேட்டு, நரகத்திலுள்ளாரனைவரும் நரக வாசற் கதவை வீழ்த்திவிட்டுப் போய் விட்டார்கள். ஓ! யமதூ₃தர்களே! விரைந்து வந்து நரக வாசற் கதவை அடைத்துக் கொள்ளுங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். "இனி யார் புகுவார் எழு நரக வாசல் முனியாது மூரித்தாள் கோமின்" [முதல் திருவ-87] என்றார் பொய்கையாழ்வாரும். 80.

81. கதவு மனமென்றும் காணலா மென்றும்
குதையும் வினையாவி தீர்ந்தேன்—விதையாக
நற்றமிழை வித்தி யென்னுள்ளத்தை நீவிளைத்தாய்
கற்றமொழி யாகிக் கலந்து.

பதவுரை—நீ — (ஞானம் சக்தி முதலியவற்ருல் குறை வற்றவனுன) நீ, கற்ற மொழி யாகி — நான் கற்ற தமிழ்ச் சொற்களுக்குப் பொருளாக இருந்துகொண்டு, கலந்து — என்னோடு ஒரு நீராகக் கலந்து, நல் தமிழை — சிறந்த தமிழ்ப் பாஷையை, விதை ஆக வித்தி — விதையாக விதைத்து, என் உள்ளத்தை — எனது ஹ்ருதயத்தை, விளைத்தாய்—(இப்பிரபந்தமாகிற பயிர்) விளையும்படி பண்ணினாய்; (அதனால்) மனம் — மனமானது, கதவு என்றும்— 'எம்பெருமானை அடைவதற்குத் தடை' என்று (சில ஸமயங்களில்) நினைத்தும், (மனம்) காணல் ஆம் என்றும்— '(மனமானது) எம்பெருமானைக் காண்பதற்குத் துணை' என்று (சில ஸமயங்களில்) நினைத்தும், குதையும் வினை ஆவி தீர்ந்தேன்—(ஆகவிப்படி ஒரு நிலை நில்லாமல் மாறி மாறி) சஞ்சலப் படுவதையே தொழிலாக வுடைத்தான நெஞ்சைத் தவிர்ந்தேன்.

---

அவ:— நீ என்னைக்கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளுகையாலே 'உன்னைக்காண முடியுமோ முடியாதோ' என்னும் என் ஹ்ருதய து:க்கத்தைப் போக்கினேன் என்கிருர்.

---

81. அவ:—''விரைந்தடைமின்'' என்றவுடன் உலகமெல்லாம் ப₄க₃வத் ப்ரவணராஞர்கள். ஆழ்வார் ஸாதி₄த்த அருஞ்செயலைக்கண்டு திருவுள்ளமுகந்த எம்பெருமான், 'ஆழ்வீர்! உமக்கு நான் செய்ய லாவதொரு கைம்மாறு உண்டோ?' என்ருன்; ''என்னுடைய இக் காரியத்துக்கெல்லாம் அடியாக, என் உள்ளத்தைத் திருத்திப் பயிர் செய்தவன் நீயேயாயிருக்கும்போது, எனக்கு இனிச்செய்யவேண்டியது என்ன இருக்கிறது?'' என்கிருர்.

பெரி-வ்யா—(கதவித்யாதி₃) "मन एव मनुष्याणां कारणं बन्ध-मोक्षयोः" (மந ஏவ மநுஷ்யாணும் காரணம் பந்த₄மோக்ஷயோ:) என்னும்படியே ப₄க₃வத்₃ விஷயத்தைக் கிட்டாமைக்குக் கதவு

---

உரை:— நினைத்தது தலைக்கட்டவல்ல ஜ்ஞாந ஶக்த்யாதி₃களால் குறைவற்ற நீ, பிறந்தவன்று தொடங்கி நான் அப்₄யஸித்துப்போந்த தமிழ்ப₄ாஷைக்கு வாச்யனாய் வந்து புகுந்து, லக்ஷ்யலக்ஷணங்களில் ஒரு பழுது சொல்லவொண்ணாத அழகிய தமிழை நெஞ்சப்பெருஞ்செய்யிலே விதையாக விதைத்து, இப்படி என்னுடைய ஹ்ருத₃யத்தை அழகிய கவிபாட்டுக்களால் குறைவற விளையும்படி கைதொட்டு க்ருஷி பண்ணினாய். அத்தாலே, "**मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः**" (மந ஏவ மநுஷ்யாணும் காரணம் பந்த₄மோக்ஷயோ:) என்கிறபடியே விஷயாந்தரப்ரவணமானபோது மனஸ்ஸு உன்னைக்காண்கைக்குக் கதவுபோலே

---

வ்யா:—(கதவு மனமென்றும்...தீர்ந்தேன்) மற்றுள்ளார்க்கு ப₄க₃வானை அடைவதில் உள்ள ஒரு பெருந்தடையை நான் தீரப்பெற்றேன் என்கிறார். அத்தடைதான் யாதென்னில்: (கதவு மனமென்றும் காணலாமென்றும் குதையும் வினையாவி)

"மந ஏவ மநுஷ்யாணும் காரணம் ப₃ந்த₄மோக்ஷயோ: |
ப₃ந்த₄ாய விஷயாஸங்கி₃ முக்த்யை நிர்விஷயம் மந: ||
[வி-பு 6-7-28]

[நெஞ்சே மனிதர்களுடைய ஸம்ஸார ப₃ந்த₄த்திற்கும், மோக்ஷத்திற்கும் காரணமாகிறது; நெஞ்சு ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் ஈடுபட்டதாகில் ப₃ந்த₄த்திற்கும், விஷயங்களில் ஈடுபடாமலிருந்ததாகில் மோக்ஷத்திற்கும் காரணமாகிறது] என்கிறபடியே, நெஞ்சுதானே ஒரு சமயம் பரமபுருஷனைக் காணத் தடையாயிருக்கும் கதவுபோல் உள்ளதென்றும், மற்றொரு சமயம் அவனைக்காண ஸாத₄னமாயிருக்கிறதென்றும் சொல்லும்படி, ஒருநிலை நில்லாத தொழிலையுடைய நெஞ்சைத் தவிரப் பெற்றேன். (கதவு மனமென்றும் காணலாமென்றும்)

"ஆத்மைவ ஹ்யாத்மநோ ப₃ந்து₄ராத்மைவ ரிபுராத்மந:"
[கீ₃தை 6-5]

மநஸ்ஸென்றுமாம்; காண்கைக்கும் பரிகரமென்றுமாம். (குதை யித்யாதி₃) தடுமாற்றமான தொழில் தவிர்த்தேன். (விதை யித்யாதி₃) தடுமாற்றம் திருகைக்குச் சொல்லுகிறது. 81.

---

தகைவாய் ப்ரதிப₃ந்த₄கமாயிருக்குமென்றும், விஷயஸங்க₃ மற்றபோது இந்த மனஸ்ஸுதானே பரிகரமாக உன்னைக் கண்டு அநுப₄விக்கலாமென்றும், ஒரு நிலைநில்லாமல் உத்த ரோத்தரம் ப்₄ரமித்து வருகிற தொழிலையுடைத்தான பொல் லாத நெஞ்சைத் தவிர்ந்தேன். 'என்றும்' என்றது என்னுமென்றபடி. குதைவு—அசைகை. வினை—தொழில். ஆவி என்று ப்ராணவாசி ஶப்₃த₃த்தாலே தத₃ாஶ்ரயமான மனஸ்ஸை லக்ஷிக்கிறது. 81.

---

[நெஞ்சே ஆத்மாவுக்கு உறவினனாகவும் ஆகிறது; நெஞ்சே ஆத்மா வுக்கு எதிரியாகவுமாகிறது.] என்றானன்றோ கீ₃தையில் கண்ணனும். (குதையும் வினையாவி தீர்ந்தேன்) தடுமாறும் தொழிலையுடைய நெஞ்சைத் தவிரப் பெற்றேன். ப₄க₃வத்₃ விஷயத்திலே ஒருநிலை நிற்கும் நெஞ்சைப் பெற்றேன் என்று பா₄வம். (ஆவி) "ஆவி" என்று ப்ராணனைச் சொல்லும் ஶப்₃த₃ம் ப்ராணனுக்கு இருப்பிடமான நெஞ்சை லக்ஷணையாலே காட்டுகிறதாய், கீழ் எடுத்த கீ₃தா ஶ்லோ கத்தில் "ஆத்மா" என்றும் "ஊனில் வாழ் உயிரே" [திருவாய் 2-3-1] என்னுமிடத்தில் உயிர் என்றும் சொல்லப்படுவதுபோலே இங் கும் 'ஆவி' என்று நெஞ்சு சொல்லப்படுகிறது.

மற்றுள்ளார்க்குள்ள இத்தடுமாற்றம் தீருகைக்கு ஹேது சொல்லு கிறது மேலே. (விதையாக நல் தமிழை வித்தி) இலக்கிய இலக் கணங்களில் ஒரு பழுது சொல்லவொண்ணாத அழகிய தமிழ் பா₄ஷையை என் நெஞ்சிலே விதையாக விதைத்து. (கற்ற மொழியாகிக் கலந்து) நான் பிறந்தவன்று தொடங்கிப் பழகிப்போந்த தமிழ் மொழிக்குப் பொருளாகி என்னுள் புகுந்து. (மொழியாகி) மொழிக்கு வாச்யனாய். (என் உள்ளத்தை நீ விளைத்தாய்) "நெஞ்சப் பெருஞ்செய்." [திருவாய் 5-3-4] எனப்படும் நெஞ்சாகிற நிலத்திலே, ஞானசக்தி களால் குறைவற்ற * பத்தியுழவனாகிற நீ, தமிழ் மொழியாகிற விதையை விதைத்து, இக்கவிகளாகிற பயிர் விளையும்படி செய்தாய். அதனாலேயே நான், கதவு மனமென்றும் காணலாமென்றும் குதையும் வினையாவி தீர்ந்தேன் என்று கீழோடே அந்வயம். 81.

82. கலந்தானென் னுள்ளத்துக் காமவேள் தாதை
நலந்தானு மீதொப்ப துண்டே—அலர்ந்தலர்கள்
இட்டேத்து மீசனும் நான்முகனு மென்றிவர்கள்
விட்டேத்த மாட்டாத வேந்து.

பதவுரை:—காம வேள்தாதை — மன்மதனுக்குத் தந்தை யானவனும், அலர்ந்த அலர்கள் இட்டு ஏத்தும் ஈசனும் — மலர்ந்த பூக்களை ஸமர்ப்பித்துத் துதி செய்கின்ற சிவ பிரானென்ன, நான்முகனும்—பிரமனென்ன, என்ற இவர் கள்—என்கிற (சிறந்த) தேவர்களும், விட்டு ஏத்த மாட்டாத-வாய் விட்டுத் துதித்து முடிக்க முடியாதவனுமான, வேந்து-தே₃வாதி₃தே₃வன், என் உள்ளத்து — எனது நெஞ்சிலே, கலந்தான்—சேர்ந்து கொண்டான்; ஈது ஒப்பது நலம் தானும் உண்டே - இந்த நன்மையோடொத்த நன்மை வேறுண்டோ? [இல்லை.]

பெரி-வ்யா:—( கலந்தானித்யாதி₃ ) எல்லாரும் தன்னை ஆசைப்பட இருக்குமவன் என்னை ஆசைப்பட்டு ஹ்ருத₃யத்திலே கலந்தான். அழகாலே எல்லாரையும் அகப்படுத்தும் காமனுக்கும்

---

அவ:— அதிலோகமான அழகையும் ப்₃ரஹ்மாதி₃களுக் கும் கிட்டவொண்ணுத வேண்டப்பாட்டையுமுடையவன் என் ஹ்ருத₃யத்திலே தானே வந்து ஒரு நீராக ஸம்ஶ்லேஷித்தான். இத்தோடொக்கும் புருஷார்த்த₂ம் லோகத்திலுண்டோ?

உரை:— அழகாலே நாட்டைப் பிச்சேற்றக்கடவ காம னுக்கு உத்பாத₃கனுகையாலே மிக்க அழகையுடையனுய்,

---

82. அவ:—உள்ளத்தை விளைத்துக் குதையும் வினையாவி தீர்த்தது மட்டுமோ? மிகப்பெரியனுன தான் மிகத் தாழ்ந்ததான என் நெஞ்சிலே கலந்ததுக்கு ஒப்பான நன்மை உலகிலே உண்டோ? என்று உலகெல்லாமறியப் பறைசாற்றுகிறுர்.

வ்யா:—(கலந்தான் என் உள்ளத்து) கண்ட கண்ட விஷயங்களிலே வாய்வைத்துப் போந்த என் உள்ளத்திலே ஒருநீராகக் கலந்தான்.

உத்பாத₃கனானவன். (ஈதொப்பது நலந்தானுமுண்டே) அவன் தான் காட்டக் கண்ட இதுக்குக் கதிர் பொறுக்கிக் கண்ட நலங்கள் ஸத்₃ருஶமோ? (அலர்ந்தலர்களித்யாதி₃) செவ்விப் பூக்களைக் கொண்டு ஏத்துகிற ருத்₃ரனும் சதுர்முக₂னும் வாய் விட்டு ஏத்தமாட்டாத ஸர்வாதி₄கன் என் உள்ளத்தைக்கலந்தான். அவ்வழகையும் மேன்மையையும் உடையவன் என்கை. 82.

---

செவ்விப்பூக்களைக் கையாரப்பறித்திட்டு, வாயார ஸ்தோத்ரம் பண்ணக்கடவ ஈஶ்வராபி₄மானியான ருத்₃ரனும் சதுர்முக₂னும் லோகப்ரஸித்₃த₄ரான இவர்கள் முழுமிடறுசெய்து பரிபூர்ணமாகப் புகழமாட்டாதிருக்கிற ராஜாவான க்ருஷ்ணன் அந்த அழகோடும் பெருமையோடுங்கூட என்னுடைய ஹ்ருத₃யத்திலே தானே அபி₄நிவிஷ்டனாய் இன்று இடைவெளியற ஸம்ஶ்லேஷித்தான்; இந்தப் பேற்றோடு ஸத்₃ருஶமாகச் சொல்லத்தக்கதொரு நன்மையும் உண்டோ? 82.

---

அவன்தான் யாரென்னில்: (காமவேள் தாதை) தன் அழகாலே பிறரை மயக்கும் மன்மதனுக்கும் உத்பாத₃கனாகையாலே * மந்மத₂ மந்மத₂னான பேரழகன் கிடீர் மிகத் தாழ்ந்த என்னெஞ்சை ஆசைப் பட்டுக் கலந்தது என்கிறார். காமவேள் தாதை — காமனுக்கும் தந்தை. (காமவேள்) காமன்—பிறரிடம் ஆசையை விளைக்குமவன். வேள்—அழகன். காமன்—வடமொழி; வேள்—தமிழ்ச்சொல். வெறும் அழகுதானோ உள்ளது என்னில்: (அலர்ந்தலர்கள்...வேந்து) அன்று மலர்ந்த பூக்களைக் கையாரப்பறித்து எம்பெருமான் திருவடிகளிலே யிட்டு, வாயாரத் துதிக்கும் ஈச்வராபி₄மானியாகிய சிவனும், அவனுக்கும் தந்தையான பிரமனும் வாய்விட்டுப் பரிபூர்ணமாகத் துதிக்கமாட்டாத ராஜாதி₄ராஜன் கிடீர் என்னோடு கலந்தது என்கிறார். (ஈசனும் நான் முகனும் என்றிவர்கள்) தேவர் தலைவர்களான இவர்களுடைய ப்ரஸித்₃தி₄ சொல்லுகிறது. (விட்டேத்த) வாய்விட்டுத்துதிக்க; முழு மிடறுசெய்து துதிக்க; பரிபூர்ணமாகத் துதிக்க. (வேந்து கலந்தான் என் உள்ளத்து) ஸார்வபௌமன் கூடத₃ரஸியை ஆசைப்பட்டுக் கலந்தாப்போலேயிராநின்றது. (ஈதொப்பது நலந்தானுமுண்டே) இதற்கு ஸமமானதொரு நன்மையும் உலகில் உண்டோ? (அலர்ந்தலர்கள்... விட்டேத்த மாட்டாத வேந்து கலந்தான்; ஈதொப்பது நலந்தானு முண்டே) அவன் தானே மேல் விழுந்து காட்டக்கண்டு அனு

83. வேந்தராய் விண்ணவராய் விண்ணாகித் தண்ணளியாய்
மாந்தராய் மாதாய் மற்றெல்லாமாய்—சார்ந்தவர்க்குத்
தன்னாற்றான் நேமியான் மால்வண்ணன் தான்கொடுக்கும்
பின்னால் தான்செய்யும் பிதிர்.

பதவுரை:— நேமியான்—திருவாழியாழ்வானை யுடையவனும், மால் வண்ணன்—அன்பே வடிவெடுத்தவனுமான எம்பெருமான், சார்ந்தவர்க்கு—தன்னை அடைந்தவர்கள் விஷயத்தில், வேந்தர் ஆய்—அரசர்கள் ஆகியும், விண்ணவர் ஆய்—(மழை பொழிவிக்கும்) தேவர்கள் ஆகியும், விண் ஆகி—போகமனுபவிக்கும் சுவர்க்கமாகியும், தண்ணளி ஆய்—(சுவர்க்கத்தில்) அருள் செய்பவனாய், மாந்தர் ஆய்—மனிசர்களான உறவினர்களாய், மாதா ஆய்—தாய் செய்யும் நன்மைகளைச் செய்பவனாய், மற்று எல்லாம் ஆய்—மற்றுமுள்ள எல்லா வகை நன்மைகளையும் செய்பவனாய், (எவ்வளவு நன்மைகள் செய்தாலும்) தன் ஆற்றான்—தனக்குள் திருப்தி இல்லாதவனாய்க்கொண்டு, தான் கொடுக்கும்—தானே (எல்லாவற்றையும்) கொடுக்கும்; பின்னால்—இவ்வளவுக்கு மேலும், தான் பிதிர் செய்யும் — தானே விலக்ஷணமான மோக்ஷத்தைக் கொடுக்கும்.

பெரி-அவ:—இத்தோடு ஒக்கும் அழகுண்டோ? என்னும் அத்தை உபபாதித்துக் காட்டுகிறார்.

---

அவ:— ஆஶ்ரித விஷயத்தில் இங்கிருக்கும் நாள் ஸர்வவிதரக்ஷைகளையும் பண்ணி, ஶரீரம் விட்டால்

---

புவித்த இவ்வனுபவத்துக்கு, நெற்களத்திலே உதிர்ந்துகிடக்கும் கதிர்களை சிரமப்பட்டுப் பொறுக்கி ஜீவிப்பாரைப்போலே, முயற்சி செய்து செவ்விப்பூக்களைப் பறிப்பது, துதிப்பது முதலான செயல்களை ஸாதனபுத்தியோடு செய்யும் ப்ரஹ்மருத்ராதிகளுடைய அனுபவங்கள் ஈடாகுமோ? 82.

83. அவ:—'நலந்தானு மீதொப்பதுண்டே' என்று ஒரு நன்மையைப் பேசினார். ''இது ஒன்றோ அவன் அடியார்க்குச் செய்யும்

வ்யா:—(வேந்தராயித்யாதி₃) சிறியத்தைப் பெரியது தின்னுதபடி நோக்கும் ராஜாக்களாய், பூ₄மியிலுள்ளார்க்கு வர்ஷத்தாலே உபகரிக்கும் தே₃வர்களாய், பூ₄மியிலுள்ளார் பண்ணின

---

பேச்சுக்கு நிலமல்லாத பேற்றையும் பண்ணிக்கொடுத்து, பின்னையும் ஒன்றும் செய்யாதானாய் நெஞ்சறவோடே யிருக்குமென்று "நலந்தானுமீதொப்பதுண்டே" என்று கீழ்ச்சொன்னத்தை உபபாதி₃க்கிறார்.

உரை:— ரக்ஷணபரிகரமான திருவாழியையுடையனாய், ஆஶ்ரித விஷயத்தில் இன்னது செய்தது இன்னது செய்யாதது என்று விவேகிக்கமாட்டாதபடி பிச்சுத்தான் ஒருவடிவு கொண்டாற்போலே யிருக்கக்கடவ ஸர்வேஶ்வரன்–தன்னை ஆஶ்ரயித்திருக்கும் ப்ரபன்னரானவர்களுக்கு, சிறியத்தைப் பெரியது நலியாதபடி நோக்கும் ராஜாக்களாய், பூ₄மியிலுள்ளோர்க்கு வர்ஷத்தாலே உபகரிக்கும் தே₃வர்களாய்,

---

நன்மை? அடியார்கள் இங்கிருக்கும் நாள், இன்னது செய்வது என்னும் நியமமில்லாமல் ஸர்வவித₄ரக்ஷைகளையும் பண்ணி, ஶரீரம் விட்டால் சுவர்க்கலோக இன்பங்களையும், இவை யனைத்திலும் விலக்ஷணமான பரமபத₃வின்பத்தையும் கொடுத்து, இவ்வளவும் செய்தும், 'இவன் செய்ததுக்குத் தக்கதாக ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று நெஞ்சாறல் பட்டிருப்பவனன்றோ அவன்" என்று சென்ற பாசுரத்திற் சொன்ன அர்த்த₂த்தை விவரித்துக் காட்டுகிறார் இப்பாசுரத்தில்.

வ்யா:— (வேந்தராய்) இவ்வுலகிலிருக்கும் வரையில், து₃ர்ப்ப₃லர்களை, ப₃லஶாலிகள் துன்புறுத்தாதபடி நோக்குகிற ராஜாக்களாய்; "நாவிஷ்ணு: ப்ருதி₂வீபதி:" [அரசன் விஷ்ணுவிலும் வேறுபடாதவன்] என்றும், "திருவுடை மன்னரைக்காணில் திருமாலைக் கண்டேனேயென்னும்" [திருவாய் 4-4-8] என்றும் அரசர்கள் ப₄க₃வத₃ம்ஶபூ₄தர்கள் என்னுமர்த்த₂ம் அறிவிக்கப்பட்டதன்றோ. (விண்ணவராய்) அரசர்கள் நல்லாட்சி புரிந்துவந்தாலும், நீர்வளமில்லாவிடில் பிரயோஜனமில்லையன்றோ. அந்த நீர்வளத்திற்குக் காரணமான மழையை உலகிலுள்ளார்க்கு உபகரிக்கும் தே₃வர்களாய். "ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண:" [எல்லா தே₃வர்களும் கண்ணனே] என்றார் வியாசர்.

ப₂லமனுப₄விக்கும் ஸ்வர்க்க₃மாய், அங்கு இவர்களுக்குப் பண்ணும் தண்ணளியாய், இவர்களுக்கு ஸஜாதியரான மநுஷ்யராய்; அழகாய் என்னவுமாம்; "सहस्रं हि पितुर्माता" (ஸஹஸ்ரம் ஹி பிதுர் மாதா) என்னவுமாம்; அநுக்தமான எல்லாமுமாய்.

---

பூ₄மியிலுள்ளவர்கள் பண்ணின புண்யப₂லம் அநுப₄விக்கும் ஸ்வர்க்₃மாய், அங்கு ப₂லாநுப₄வம் பண்ணுமளவும் இவர்களுக்குப் பண்ணும் தண்ணளியாய், இங்கு ப₃ந்து₄க்களான மனுஷ்யராய், வத்ஸலையான மாதாவாய், அநுக்தமான ஸர்வமுமாய், பின்னையும், 'ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று தான் த₄ரிக்கமாட்டாதானுய்க்கொண்டு இந்த ப₃ஹுவித₄மான போ₄க₃த்தை இங்கிருக்கும் நாள் தான் கொடாநிற்கும். ஶரீரவிஶ்லேஷத்துக்குப் பின்பு உக்த

---

(விண்ணாகி) இவ்வுலகத்திலும் விலக்ஷணமானதாய், இங்கு அநுஷ்டி₂த்த ஜ்யோதிஷ்டோமாதி₃ கர்மங்களுக்குப் ப₂லமனுப₄விக்குமிடமான சுவர்க்கலோகமாகி. "இனிய நல்வான் சுவர்க்கங்களுமாய்" [திருவாய் 3-10-7] என்றார் நம்மாழ்வாரும். (தண்ணளியாய்) அந்த சுவர்க்கலோகத்தில் இவர்களுக்கு இந்திராதி தேவர்கள் பண்ணும் இரக்கமாய். இந்திராதி தேவர்கள் மூலமாக எம்பெருமானே இவர்களுக்கு இரங்கி சுவர்க்க இன்பங்களைக் கொடுக்கிறான் என்று கருத்து.

"லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந்"
[கீ₃தை 7-22]

[என்னாலேயே கொடுக்கப்படும் விருப்பங்களை தேவர்களிடமிருந்து அடைகிறன்.] என்றான் கீ₃தையில் தானும். (மாந்தராய்) உறவினராயும், நண்பராயும் உதவும் மனிதர்களாய். "ஸுஹ்ருத் க₃திர் நாராயண:" [ஸுபா₃லோபனிஷத்] (மாதாய்) பெற்ற தாயாய், இது தந்தைக்கும் உபலக்ஷணம். "ஸஹஸ்ரம் ஹி பிதுர் மாதா" [தாய் தந்தையைக்காட்டிலும் ஆயிரம் மடங்கு விஞ்சியவள்] என்று சொல்லுகையாலே தாயையிட்டுத் தந்தையை உபலக்ஷிக்கிறது. "பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ" [பெரியதிருவ 5] "மாதா பிதா நாராயண:" [ஸுபா₃ல] மாதாய் — மாதாவாய்; இடைக்குறை. (மாதாய்) அழகாய் என்றுமாம். மாது—அழகு. இவன் அனுப₄விக்கும் அழகுகளெல்லாம் அவனுடைய அழகேயென்கை.

(சார்ந்தவர்க்கு) இப்படி எல்லாமாவது தன் பக்கல் ந்யஸ்த பரரானவர்களுக்கு. (தன்றற்றுன் நேமியான் தான் கொடுக்

---

ஸமஸ்தபோகவ்யாவ்ருத்தமாய் அநுபவித்துக் குமிழ் நீருண்டு போமித்தனைபோக்கி இவனுல் பேசித்தலைக்கட்ட வொண்ணுதபடியிருக்கிற ஸ்வாநுபவரூபமான போகத்தை வ்யாமுக்தனுன தான் காலதத்வமுள்ளதனையும் செய்து கொடாநிற்கும். இத்தால் ஆச்ரித விஷயத்தில் வ்யா

---

"யத் யத் விபூதிமத் ஸத்த்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா।
தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்ஶஸம்பவம் ॥"
[கீதை 10-41]

[செல்வம் நிறைந்ததாயும், அழகுள்ளதாயும், உறுதியுள்ளதாயும் உள்ள பொருள்களெல்லாம் என் தேஜஸ்ஸின் அம்ஶத்தால் உண்டானதாக அறிவாயாக.] என்று தானும்,

"அடங்கெழில் சம்பத்து
அடங்கக்கண்டு—ஈசன்
அடங்கெழில் அஃதென்று
அடங்குக உள்ளே" [திருவாய் 1-2-7]

என்று ஆழ்வாரும் அருளிச்செய்தனரன்றே. (மற்றெல்லாமாய்) "ப்ராதா திவாஸ: ஶரணம்" என்றும் "மற்றையாராவாரும் நீ பேசில்" [பெரியதிருவ 5] என்றும் சொல்லப்படும் மற்றுமுள்ள உறவினர் உபாயம் ப்ராப்யம் என்னும் எல்லாமுமாய்; இப்படி எல்லாமும் ஆவது யாருக்கென்னில்: (சார்ந்தவர்க்கு) தன்னை அடைந்தவர்களுக்கு இப்படி எல்லாமாகிருன். (தன் ஆற்றுன்) இவ்வளவு செய்தும் 'இவன் நம்மை அடைந்ததற்கீடாக ஒன்றும் செய்யப்பெற்றிலோம்' என்று தனக்குள் திருப்தியில்லாதவனுய்.

"கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ॥"
[பாரதம்]

[வெகுதூரத்திலிருந்த என்னை துரௌபதி 'கோவிந்தா!' என்று கூப்பிட்ட கூக்குரல் விருத்தியடைந்த கடன்போல் என் நெஞ்சை விட்டு அகலுகிறதில்லை] என்பவனன்றே. (நேமியான்) இவர்களுடைய

கும்) எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யானாய்க் கொடுக்கும்: (பின்னால் தான் செய்யும் பிதிர்) பின்னைச் செய்யுமது வ்யா வ்ருத்தம்; அவன் குமிழ்நீருண்டிட இவன் குமிழ்நீருண்ணக் காணுமத்தனை. 83.

---

மோஹாதிஶயத்தாலே இஹலோகத்தில் போ4க3த்தை யும், பரலோகத்தில் ஸ்வர்க்கா3தி3போ4க3த்தையும் தது3ப4ய விலக்ஷணமான பரமபத3 போ4க3த்தையும் இவர்களுக்குக் கொடுத்து, பின்னையும் ஒன்றும் செய்யாதானாய் நெஞ் சாறல்பட்டிருக்கும்படி சொல்லுகிறது. "யா ஙஙியேகாரிவினமு"

---

விரோதி4யைக் கழிக்கைக்கும், தன்னை அனுப4விப்பிக்கைக்கும் கையும் திருவாழியுமாகக் காட்சியளிப்பவன். (மால் வண்ணன் தான் கொடுக்கும்) அன்பே உருவெடுத்தவனாகையாலே, இப்படி எல்லாம் செய்தும் ஒன்றும் செய்யாதவனைப்போலே கொடுத்துக்கொண்டே யிருப்பன். (பின்னால் தான் செய்யும் பிதிர்) இவ்வுலகத்திலும் சுவர்க்கம் முதலானவற்றிலும் இவ்வளவும் செய்தபின்பு பரமபதத் திற்கு இவனைக் கொண்டுபோய்க் கொடுக்கும் அனுப4வம் விலக்ஷண மானது. பிதிர்—மிகுந்தது; ஶேஷபூ4தமானது. அதாவது:—தான் அனுப4வித்து மிகுந்ததைக் கொடுக்கும். அதாவது—ஸர்வேஶ்வரனை தான் இச்சேதனனை அனுப4வித்து அமுதக்கடலிலே பரிபூர்ணமாக மூழ்கி நிற்க, அந்நிலையைக்கண்டு இவன் ப4க3வத3நுப4வாம்ருத ஸாக3ரத்திலே உள்ளே மூழ்கி ஆநந்தி3க்கை; "அஹமந்நம் - அஹ மந்நாத3:" [தைத்திரீயம்] என்கிறபடியே ஈஶ்வரன் சேதனனை அனுப4வித்து ஆநந்திக்க, அவ்வானந்த3த்தை ஈஶ்வராநந்த3த்துக்கு ஶேஷபூ4தமாய்த் தான் அனுப4விக்கை. "பு4ங்க்தே ஸ்வபோ4க3 மகி2லம் பதிபோ4க3 ஶேஷம்" [ஸர்வேஶ்வரனுடைய போ4க3த்துக்கு ஶேஷமாய் முக்தன் அநுபவிக்கிறான்] என்றார் வேதா3ந்ததே3ஶிகரும்.

ஸர்வேஶ்வரன் தன் அடியார்க்கு மோக்ஷத்தைக் கொடுப்பது பொருத்தமுடையது; இவ்வுலக இன்பங்களையும், சுவர்க்க இன்பங் களையும் தருவதாகச் சொல்லுவது பொருந்துமோ என்னில். ஸகல ப2லப்ரத3னான அவன் அடியாருடைய ருசிக்குத் தக்கவாறு இதர ப2லன்களையும் கொடுக்கக்குறையில்லை. பிராட்டிக்காகத் தன் உயிரை விட்ட பெரியவுடையாருக்கு — (ஜடாயுவுக்கு) — இன்னது செய்வ தென்றறியாமல் தடுமாறி

84\. பிதிருமனமிலேன் பிஞ்ஞகன் றன்னோடு
எதிர்வனவ னெனக்கு நேரான்—அதிரும்
கழற்கால மன்னனையே கண்ணனையே நாளும்
தொழுங்காதல் பூண்டேன் தொழில்.

பதவுரை:— அதிரும் கழல் கால — ஒலிக்கின்ற வீரக் கழலைத் திருவடிகளிலே அணிந்துள்ள, மன்னனை—ராஜாதிராஜனை, கண்ணனையே — கண்ணபிரானையே, நாளும்— எங்காளும், தொழும் தொழில்—தொழுவதே நித்யகர்மமாகும் படி, காதல் பூண்டேன் — அன்பு கொண்டிருக்கிற நான், பிதிரும் மனம் இலேன் — சஞ்சலப்படும் நெஞ்சுடையே னல்லேன்; பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன் — ருத்ரனை ஞானத்தில் ஒத்திருப்பேன், (என்னலா மாயினும்) அவன் எனக்கு நேரான் — அந்த ருத்ரன் (நித்திய தாஸனுன) என்னோடு ஒவ்வான்.

---

(யா கதிர்யஜ்ஞஶீலாநாம்) என்று ஸ்ரீ கார்யநிமித்தமாகத் தன்னையழிய மாறின பெரிய உடையார்க்குச் செய்வதறி யாமல், அர்வாசீனபோகத்தோடு, பரமபோகத்தோடு வாசியற ஸர்வத்தையும் கொடுத்தாரிறே பெருமாள். 83.

---

"யா கதிர் யஜ்ஞஶீலாநாம் ஆஹிதாக்நேஶ்ச யா கதி: ।
அபராவர்த்திநாம் யா ச யா ச பூமிப்ரதாயிநாம் ।
மயா த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந் ॥"
[ரா-ஆ 68-30]

[யாகமனுஷ்டிப்பார்க்கும், அக்னிஹோத்ரம் செய்பவர்க்கும், பூமி தானம் செய்வார்க்கும், திரும்பிவருதலில்லாத முக்தர்க்கும் எந் தெந்த கதிகளுண்டோ, மிகச்சிறந்த அந்தந்த லோகங்கள் அனைத் தையும் என்னால் நியமிக்கப்பெற்ற நீ அடைவாயாக] என்று கீழுலக வின்பங்களோடு, பரமபதவின்பத்தோடு வாசியற எல்லாவற்றையும் கொடுத்தானன்றோ ராமபிரான். 83.

84\. அவ:— அவன் உபகரிப்பதில் அதிவிலக்ஷணனுயிருப்பது போலே எம்பெருமானுக்கு அன்பு செய்வதிலே தானும் ஒப்பற்றவன் என்கிருர்.

பெரி-அவ:— (பிதிரும்) அவனேபோதி நானும் வ்யா வ்ருத்தன் என்கிறார்.

வ்யா:— (பிதிருமனமிலேன்) ஏகரூபமன்றிக்கேயிருக்கிற மநஸ்ஸை உடையேனல்லேன். (பிஞ்ஞகனித்யாதி₃) "ईश्वरात् ज्ञानमन्विच्छेत्" (ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த்) என்கிற தே₃வ

---

அவ:— ஸர்வாதி₄கனான க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயித்து அநுப₄விக்கையே நித்யயாத்ரையாயிருக்கிற எனக்கு ஜ்ஞானாதி₄கனாக ப்ரஸித்₃த₄னான ருத்₃ரனும் ஒப்பாக மாட்டான் என்கிறார்.

உரை:— ஆஶ்ரித விரோதி₄ நிரஸநார்த்த₂மாக இடப் பட்டதாய், ப்ரதிகூலர் குடல் குழம்பும்படி முழங்காநின் றுள்ள வீரக்கழலோடே கூடின திருவடிகளையுடையனாய், இச்செயலாலே ஆஶ்ரிதர்க்கெல்லாம் ராஜாவாயிருக்கிற க்ருஷ்ணனை ஸர்வகாலத்திலும் அநுப₄விக்கைக்கீடான அபி₄நிவேஶமே நித்யக்ருத்யமாக ஏறிட்டுக் கொண்ட வனாய், அத்தாலே ஒரு க்ஷணகாலமும் விஷயாந்தரங் களில் புகுந்து போகக்கடவ மனஸ்ஸையுடையேனல்லேனா யிருக்கிற நான், "ईश्वरात् ज्ञानमन्विच्छेत्" (ஈஶ்வராத் ஜ்ஞாந மந்விச்சே₂த்) என்கிறபடியே பேரறிவாளனாக ப்ரஸித்₃த₄னா

---

**வ்யா:— (பிதிரும் மனமிலேன்) ஒருபடிப்பட்டிராத நெஞ்சை உடையேனல்லேன்; பகவத்விஷயம் ஒன்றிலேயே ஈடுபடும் நெஞ்சை யுடையேன், ''கதவு மனமென்றும் காணலாமென்றும் குதையும் வினையாவி தீர்ந்தேன்'' என்றதையே த்₃ருடீ₄கரிக்கிறார். மனஸ்ஸை ஒரே விஷயத்தில் ஈடுபடுத்துவதிலே உமக்கு ஒப்புண்டோவெனில்; (பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன்) ''ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த்'' [மாத்ஸ்ய 67-41] [சிவனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன்] என்கிறபடியே தானும் சிறந்த அறிவாளியாய், பிறருக்கும் அறி வளிக்கும் சிவனை நான் இவ்விஷயத்தில் ஒப்பேன். ருத்₃ரனுக்கும் உமக்கும் ஸர்வப்ரகார ஸாம்யம் உண்டோ என்னில்: (அவன்**

பெரி-அவ:— (பிதிரும்) அவனோபாதி நானும் வ்யா வ்ருத்தன் என்கிறார்.

வ்யா:— (பிதிருமனமிலேன்) ஏகரூபமன்றிக்கேயிருக்கிற மநஸ்ஸை உடையேனல்லேன். (பிஞ்ஞகனித்யாதி₃) "ईश्वरात् ज्ञानमन्विच्छेत्" (ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த்) என்கிற தே₃வ

---

அவ:— ஸர்வாதி₄கனான க்ருஷ்ணன் திருவடிகளை ஆஶ்ரயித்து அநுப₄விக்கையே நித்யயாத்ரையாயிருக்கிற எனக்கு ஜ்ஞானாதி₄கனாக ப்ரஸித்₃த₄னான ருத்₃ரனும் ஒப்பாக மாட்டான் என்கிறார்.

உரை:— ஆஶ்ரித விரோதி₄ நிரஸநார்த்த₂மாக இடப் பட்டதாய், ப்ரதிகூலர் குடல் குழம்பும்படி முழங்ாநின் றுள்ள வீரக்கழலோடே கூடின திருவடிகளையுடையனாய், இச்செயலாலே ஆஶ்ரிதர்க்கெல்லாம் ராஜாவாயிருக்கிற க்ருஷ்ணனை ஸர்வகாலத்திலும் அநுப₄விக்கைக்கீடான அபி₄நிவேஶமே நித்யக்ருத்யமாக ஏறிட்டுக் கொண்ட வனாய், அத்தாலே ஒரு க்ஷணகாலமும் விஷயாந்தரங் களில் புகுந்து போகக்கடவ மனஸ்ஸையுடையேனல்லேனா யிருக்கிற நான், "ईश्वरात् ज्ञानमन्विच्छेत्" (ஈஶ்வராத் ஜ்ஞாந மந்விச்சே₂த்) என்கிறபடியே பேரறிவாளனாக ப்ரஸித்₃த₄னா

---

வ்யா:— (பிதிரும் மனமிலேன்) ஒருபடிப்பட்டிராத நெஞ்சை உடையேனல்லேன்; பகவத்விஷயம் ஒன்றிலேயே ஈடுபடும் நெஞ்சை யுடையேன், "கதவு மனமென்றும் காணலாமென்றும் குதையும் வினையாவி தீர்ந்தேன்" என்றதையே த்₃ருடீ₄கரிக்கிறார். மனஸ்ஸை ஒரே விஷயத்தில் ஈடுபடுத்துவதிலே உமக்கு ஒப்புண்டோவெனில்; (பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன்) "ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சே₂த்" [மாத்ஸ்ய 67-41] [சிவனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன்] என்கிறபடியே தானும் சிறந்த அறிவாளியாய், பிறருக்கும் அறி வளிக்கும் சிவனை நான் இவ்விஷயத்தில் ஒப்பேன். ருத்₃ரனுக்கும் உமக்கும் ஸர்வப்ரகார ஸாம்யம் உண்டோ என்னில்: (அவன்

ளோடு ஒப்பன். (அவனெனக்கு நேரான்) ஸத்வம் தலையெடுத்தபோது எம்பெருமான் ரக்ஷகனென்றிருக்கிறவன் எனக்கு ஒப்போ? (அதிருமித்யாதி) த்வநியாநின்ற வீரக்கழலைத் திருவடிகளிலேயுடைய ஸர்வாதிகனான க்ருஷ்ணனைத் தொழுகையே தொழிலாகக் காதல்பூண்ட எனக்கு ரஜஸ் தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது "ईश्वरोऽहं" (ஈச்வரோऽஹம்) என்றிருக்குமவன் ஒப்பன்று. 84.

---

யிருக்கிற ருத்ரனோடு ஒப்பன்; ஸத்வம் தலையெடுத்தபோது, 'எம்பெருமான் ரக்ஷகன்' என்றும், ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது, 'ஈச்வரோऽஹம்' என்றும் இருக்கும் அந்த ருத்ரன் ஸர்வகாலத்திலும் பகவத்சேஷபரனாயிருக்கும் எனக்கு ஒப்பாகமாட்டான். 84.

---

எனக்கு நேரான்) மற்ற விஷயங்களில் உருத்திரன் எனக்கு ஒப்பாகமாட்டான். (அவன் எனக்கு நேரான்) ஸத்வம் தலையெடுத்தபோது,

"தாஸபூதாஸ் ஸ்வத: ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: ।
அதோऽஹமபி தே தாஸ இதி மத்வா நமாம்யஹம் ॥"

[ஈச்வர ஸம்ஹிதை]

[பரமாத்மாவான உனக்கு எல்லா ஜீவர்களும் இயற்கையிலேயே அடிமைப் பட்டவர்கள்; ஆகையால் நானும் உனக்கு அடிமைப் பட்டவன் என்றறிந்து வணங்குகிறேன்] என்றும்,

"க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம்
புருஷோத்தமம்" [வி-பு 5-33-41]

[நீண்ட கையையுடைய கண்ணா! உன்னையே புருஷோத்தமனென்றறிந்தேன்] என்றும் ஸர்வேச்வரனே ரக்ஷகனென்று ருத்ரன் நினைத்திருப்பது கொண்டு ஒருபுடை அவனை ஒப்புச் சொன்னேனித்தனை; ரஜஸ்தமஸ்ஸுக்கள் விஞ்சினபோது "ஈச்வரோஹம்" [கீதை 16-14] என்று நினைத்து எதிரம்பு கோக்கும் அவன் உண்மையில் எனக்கு ஒப்பாகமாட்டான் என்கிறார். 'அவன் எனக்கு நேரான்' என்று சொல்லுகைக்கு அடியாகத் தமக்குள்ள வைலக்ஷண்யத்தை அருளிச் செய்கிறார் அடுத்தபடியாக;— (அதிரும் கழற்கால மன்னனையே) அடியார்களின் விரோதிகளைத் தன் முழக்காலேயே முடிப்பதற்காகவே இடப்பட்டதாகையாலே, எப்போதும் சப்திநாநிற்கும் வீரக்கழலைக்

85. தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாமமேத்த
பொழுதெனக்கு மற்றதுவே போதும்—கழிசினத்த
வல்லாளன் வானரர்கோன் வாலி மதனழித்த
வில்லாளன் நெஞ்சத் துளன்.

பதவுரை:—கழி சினத்த — மிக்க கோபத்தையுடையவனும், **வல்லாளன்**—மிக்க வலிமையுடையவனும், **வானரர் கோன்** — குரங்குகட்கு அரசனுமாகிய, **வாலி** — வாலியினுடைய, **மதன்**—மதத்தை [கொழுப்பை], **அழித்த**—தொலைத்த, **வில் ஆளன்**—கோதண்டவில்லை ஆள்பவனான இராமபிரான், **நெஞ்சத்து**—எனது நெஞ்சிடத்து, **உளன்**—எழுந்தருளியிருக்கிறான்; (ஆகையாலே) **எனக்கு**—எனக்கு, **தொழில்**—காரியம், **தொல்லை மால் தன் நாமம் ஏத்த**—பழையோனான அந்த ஸர்வேஶ்வரனுடைய திருநாமங்களை வாயாரப் புகழ்வதேயாம்; **எனக்கு**—எனக்கு, **மற்றதுவே**—கீழ்ச்சொன்ன ஸ்ரீராம நாம ஸங்கீர்த்தனத்தினாலேயே, **பொழுது போதும்**—போது போகும்.

---

காலிலே அணிந்து இச்செயலாலே அடியார்கள் குழாங்களை எழுதிக்கொண்டிருப்பவனையே. இத்தால் மேன்மை சொல்லிற்று; மேன்மை மட்டுமன்று; நீர்மையுமுண்டென்கிறது மேலே — (**கண்ணனையே**) இடையனாய்ப் பிறந்த க்ருஷ்ணனையே. (**நாளும் தொழும் தொழில்**) என்றும் தொழுவதையே தொழிலாகக் கொண்டு. (**காதல் பூண்டேன்**) அதற்கடியான அவன் விஷயமான அன்பை விளைத்துக்கொண்டேன் நான். இப்படிக் கண்ணனுக்கு நித்ய கைங்கர்யம் செய்யப் பாரிக்கும் எனக்கு, பாணாஸுரயுத்தத்தில் கண்ணனோடு எதிரம்பு கோத்த ருத்ரன் ஒப்பன்று என்று கருத்து, 'தொழக்காதல்' என்றும் பாடம்.

''பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன் அவன் எனக்கு நேரான்... கண்ணனையே நாளும் தொழக்காதல் பூண்டேன் தொழில்'' என்னும் தொடர்களிலே, ஒரு சமயம், தம்முடைய அநாதரத்தாலே கோபங்கொண்டு முக்கண்ணைத் திறந்த ருத்ரனையும் தம் பகவத் பக்தி ப்ரபாவத்தாலே வென்று, அவனிடமிருந்து 'பக்தி ஸாரர்' என்று பட்டம் பெற்ற விருத்தாந்தத்தை உணர்த்துகிறார் என்று பெரியோர் பணிப்பர். 84.

பெரி-அவ:— (தொழிலித்யாதி₃) எதிர்கள் 'சதுரங்க₃ம் பொரப் போருவீரோ' என்றழைக்க இவர் சொல்லும்படி.

வ்யா:-(தொழிலித்யாதி₃) எனக்குத் தொழில், புராணனான ஸர்வேஶ்வரனை ஏத்த. (பொழுதித்யாதி₃) நாங்களும் எல்லாக் கார்யமும் செய்து ப₄க₃வந்நாம ஸங்கீர்த்தநமும் பண்ணு கிறிலோமோ? என்ன;— எனக்கு ராமவ்ருத்தாந்தம் கிடக்க

---

அவ:— "நாளும் தொழக் காதல் பூண்டேன் தொழில்" என்கிறதென்? எங்களைப்போலே ஒருபோது ப₄க₃வத்₃விஷயம் இல்லாதபோது லௌகிகவ்யாபாரமுமாயிருக்கப் பார்த்தாலோ? என்று லௌகிகர் சொல்ல, என் நெஞ்சிலே நிரந்தரவாஸம் பண்ணுகிற சக்ரவர்த்தித்திருமகனுடைய வீரசரிதம் அநுஸந்தி₄க்கைக்குக் காலம் போருமித்தனை போக்கி, லோகவ்ருத்தாந்தம் அநுஸந்தி₄க்கைக்கு எனக்கு அவஸரமில்லை என்கிறார்.

உரை:—மிக்க சீற்றத்தையுடையனாய், பெருமிடுக்கனுமாய், வானரஜாதிக்கெல்லாம் ராஜாவான வாலியினுடைய க₃ர்வத்தைத் தலையழித்துப் பொகட்ட ஸ்ரீஶார்ங்க₃த் திருவில்லையுடைய வீரனான சக்ரவர்த்தித்திருமகன் –

---

85. அவ:— "நாளும் தொழுங்காதல் பூண்டேன் தொழில்" என்கிறதென்? எங்களைப் போலே ஒரு சமயம் பகவத் விஷயத்தில் ஈடுபட்டும், மற்ற சமயங்களிலே சூது சதுரங்கமாடுவது முதலான செயல்களைச் செய்தும் போரலாகாதோ? என்று லௌகிகர் சிலர் கேட்க; எனக்குச் சக்ரவர்த்தித்திருமகனுடைய வீரசரிதமநுஸந்தி₄ப்பதற்கே காலமெல்லாம் போதுமாயிருக்க, மற்ற விஷயங்களுக்கு நேரமேது? என்கிறார்.

வ்யா:— (தொழிலெனக்குத் தொல்லை மால் தன் நாமமேத்த) எனக்குத் தொழில், பழையோனான ஸர்வேஶ்வரனை ஏத்துவதேயாம். "நாங்களும் எவ்வளவோ காரியம் செய்துகொண்டு நடுவே திருநாமஸங்கீர்த்தனமும் செய்யவில்லையோ? அப்படிச் செய்தாலென்ன" என்ன;— (பொழுதெனக்கு மற்றதுவே போதும்) எனக்கு அந்த ப₄க₃வத்₃ விஷயத்திற்கே பொழுது சரியாயிருக்கிறது.

வேறொன்றுக்குப் போது போராது. (கழி சினத்தவித்யாதி) மிக்க சினத்தையுடையனாய், வாநரராஜாவான வாலியுடைய செருக்கை வாட்டின சக்ரவர்த்தித் திருமகன் என்னெஞ்சிலே ஸந்நிஹிதன். 85.

---

அந்யபரதை பண்ணுகைக்கு இடமறும்படி என் ஹ்ருதயத்திலே ஸந்நிஹிதனாயிராநின்றான். ஆகையாலே ம்ருதஸஞ்ஜீவநமான ராமகுணங்களிலே அகப்பட்ட எனக்கு நித்யக்ருத்யம் — பழையவனாய் ஸர்வாதிகனான அந்தச் சக்ரவர்த்தித்திருமகனுடைய திருநாமங்களை அபிநிவேஶ பரவஶனாய்க்கொண்டு வாயார ஏத்துகை. லௌகிகரான

---

அந்த பகவத் விஷயத்திலும், அவனுடைய ஒரவதாரமான ராமன் விஷயமான நினைவு தவிர வேறொன்றுக்குப் பொழுதில்லை என்கிறார் அடுத்தபடியாக:—(கழி சினத்த வல்லாளன்) மிகுந்த சினத்தையுடையவனாய் வலிமிக்கவனாயிருப்பவன். (கழி சினத்த) காலிலே விழுந்து கெஞ்சிய தம்பியை நிக்ரஹித்த செயலிலே இவனுடைய பெருஞ் சினத்தைக் காணலாம். (வல்லாளன்) ராவணனையும் ஒரு பூச்சியைப் பிடிப்பதுபோலே பிடித்துக்கட்டிய செயலிலே பெரும்பலத்தைக் காணலாம். (வானரர்கோன்) தன் சினத்தாலும், பலத்தாலும் வானரர்களை அடக்கியாண்டு அவர்களுக்கு ராஜாவாயிருந்தவன். (கழி சினத்த வல்லாளன் வானரர்கோன்) ராமபிரானைப்போலே தன் ஸௌந்தர்யகுணங்களாலே குடிகளை ஈடுபடுத்தி "இச்சாமோ ஹி மஹாராஜம்" [தடக்கையனான ராமபிரானை அரசனாகக் காண விரும்புகிறோம்] என்று அவர்களே விரும்பும்படியிருக்கையன்றிக்கே, தன் சினத்தாலும், வலிமையாலும் வானரராஜ்யத்தை வசப்படுத்திக் கொண்டிருந்தான் வாலி என்று விளங்குகிறது. (வாலி மதனழித்த) வாலியின் கர்வத்தை ஒடுக்கிய. (கழிசினத்த வாலி மதனழித்த) அபயமென்று அடியில் வீழ்ந்த தம்பியையும் நிக்ரஹித்தவனாகை யாலே இவன் கர்வத்தை ஒடுக்கினான் எம்பிரான் என்று பாவம். (வல்லாளன் மதனழித்த) தன் வலிமையை ராவணன் முதலான கொடியவர்களை ஒடுக்குவதற்கு உபயோகியாமல், அவர்களோடு தோழமை கொள்ள உபயோகித்தவனாகையாலும் இவன் ஒடுக்கத் தக்கவனே என்று கருத்து. (வானரர்கோன் மதனழித்த) இவன்

86. உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய்
தன்னெப்பான் தாஞு யுளன்காண் தமியேற்கு
என்னெப்பார்க் கீச னிமை.

பதவுரை:— நல் நெஞ்சே—எனக்குப் பாங்கான மனமே! உத்தமன்—(பலனை எதிர்பாராமல் ரக்ஷிக்கும்) புருஷோத்தம னை எம்பெருமான், உளன் கண்டாய்—(நம்மை ரக்ஷிப்ப தற்கு) இருக்கிறுன் காண்! என்றும் உளன் கண்டாய்—(இங்கும் அங்கும்) எக்காலத்திலும் (நம்மை ரக்ஷிப்பதில் நிலைநிற்பவனாய் இருக்கிறுன் காண்; உள்ளுவார் உள்ளத்து—நினைக்க இசைவார் மனத்திலே, உளன் கண்டாய்—நித்ய வாஸம் பண்ணுமவன் காண்; தன் ஒப்பான் ஈசன்—(தனக்குப் பிறரொருவரும் ஒப்பில்லாமையாலே) தனக்குத் தானே ஒத்திருப்பவனான அந்த எம்பெருமான், தமியேற்கு—ஒரு கைம்முதலுமற்றவனான எனக்கும், என் ஒப்பார்க்கு—என்னைப்போலே உபாய ஶூன்யரா்யிருப்பவர்கட்கும், தான் ஆய் உளன் காண்—தானே ரக்ஷகனாயிருக்கிறுன் காண், இமை—இதனை அறி.

---

உங்களில் வ்யாவ்ருத்தனான எனக்கு மற்றுள்ள கால மெல்லாம் அதுக்கே போருமித்தனை. "எங்கள் தமுடையவர் திருக்கையருளை இரக்கிற (?) நான் அங்யபரதை பண்ணு வது எங்ஙனே என்கிறுர்" என்று இதுக்குப் பிள்ளைலோகா சார்யர் அருளிச்செய்ததாக அருளிச்செய்யும்படி. 85.

---

துஷ்ட மிருகமாரகையாலே இவனை ஒரு பொருளாக்கி நேர்நின்று சண்டை செய்யாமல் மறைந்து நின்று அடித்து கர்வத்தை ஒடுக்கி யதே பொருத்தமுள்ளது என்று பாவம். (மதனழித்த வில்லாளன் நெஞ்சத்துளன்) வாலியை கர்வபங்கம் செய்த வில்லையுடையவன் என் நெஞ்சிலே ஸர்வகாலமும் எழுந்தருளியிருக்கிறுன். அப்படி யிருக்க நான் மற்ற விஷயங்களிலே போதுபோக்க நேரமேது என்று கருத்து. 85.

பெரி-அவ:— (உளன்) 'அல்லாதார்க்கும் ஸர்வேஶ்வரன் உளனென்று உபபாதித்தேன். நீயும் இவ்வர்த்தத்தை உண் டென்று நினைத்திரு' என்று திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

வ்யா:—(உளன் கண்டாய்) பரிஹரிக்கவொண்ணாத ஆபத்து வந்தாலும் பரிஹரிக்க வல்லவனுண்டு. (நன்னெஞ்சே) ஸர்வேஶ்வரன் உளனென்று உபபாதிக்கப் பாங்கான நெஞ்சே!

---

அவ:—, இப்படி ஸர்வேஶ்வரன் உளனென்று எல் லார்க்கும் உபபாதித்தவர் தம் திருவுள்ளத்தைக் குறித்து 'எம்பெருமான் நிர்வாஹகனென்னுமிடத்தை நீயும் உணர்ந் திரு' என்று அருளிச்செய்கிறார்.

உரை:— ஸர்வேஶ்வரன் உளனென்று உபபாதிக்கப் பாங்கான நெஞ்சே! இத்தலையில் ஒரு ஹேதுவை அபேக்ஷி யாமல் தன்னது பேருக ரக்ஷிக்கும் புருஷோத்தமன் பரி

---

86. அவ:— கீழ்ப் பாசுரங்களிலெல்லாம், ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதி ஸத்பாவத்தைப் பல படியாகப் பாரெல்லா மறியப் பேசினார்; இப்பாசுரத்தில்,— "தெய்வமில்லையென்பார்க்கும் ஸர்வேஶ்வரன் உளனென்று விவரித்துக் காட்டினேன்; நீயும் இவ் வர்த்தத்தை உண்டென்று நினைத்திருப்பாயாக" என்று தம் திரு வுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்கிறார்.

வ்யா:— (உளன் கண்டாய்) ஈஶ்வரனுடைய ஸத்பாவத்தை உபதேஶிக்கிறாரல்லர். அவனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி ஸாக்ஷாத்கரித்த நெஞ்சாகையாலே. பின்னை என் சொல்லுகிறாரென்னில்: ரக்ஷகனாக உளன் கண்டாய் என்கிறார்; உன்னாலும், மற்று எவராலும் தவிர்க்க முடியாத ஆபத்துக்கள் வந்தாலும் தவிர்க்க வல்லவனாக அவன் உளன் கண்டாய் என்கிறார். (நன்னெஞ்சே) இவ்வர்த்தத்தை உபதேஶிக்கத்தகுந்த யோக்ய தையை உடைய நெஞ்சே! பிறர்க்கும் இப்பொருளை உபதேஶிக்கவல்ல நெஞ்சாகையாலே, தான் கேட்கத்தகுந்தது என்னும் விஷயத்தைச் சொல்லவேணுமோ? (நன்னெஞ்சே) "நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப்பெற்றால் என் செய்யோமினி என்ன குறைவினம்" [திருவாய்

(உத்தமனென்று முளன் கண்டாய்) இதுக்கு முன்பு நிர்ஹேதுக மாக ரக்ஷித்தவன் ப்ராப்தி தசையிலும் ரக்ஷிக்கும். (உள்ளு வாருள்ளத்துளன் கண்டாய்) அவன் ரக்ஷிக்க இத்தலையால் செய்யவேண்டுவது - ஆணையிடாமை; (தன்னொப்பானித்யாதி)

---

ஹரிக்கவொண்ணாத ஆபத்து வந்தால் அத்தைப் பரிஹரித்து நம்மை ரக்ஷிக்கைக்கு ஸர்வகாலத்திலும் ரக்ஷகனாய்க் கொண்டு உளன் கிடாய்; தானாக வந்து ரக்ஷிக்குமிடத்தில் ஆணையிட்டு விலக்காதே பொருந்தி அநுஸந்திப்பாருடைய ஹ்ருதயத்திலே ஸந்நிஹிதனாய்க்கொண்டு ரக்ஷிக்குமவன் கிடாய். அகிஞ்சனனான எனக்கும், என்னைப்போலே

---

1-10-4] என்றாப்போலே கொண்டாடுகிறார். ரக்ஷகனாகும்போது கைம்மாறு கருதி ரக்ஷிப்பனோ எனில்: (உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமன்) கைம்மாறு கருதாது ரக்ஷிக்கும் உத்தமனாக வன்றோ அவனுள்ன் என்கிறார். தன் தன்மையையே கருதிக் காரியம் செய்பவன் அதமன்; தனக்கும் பிறர்க்கும் நன்மையெண்ணிச் செயல் புரியுமவன் மத்யமன்; பிறர் நன்மையையே எண்ணி உதவுமவன் உத்தமன். ஓங்கி உலகளந்த உத்தமனன்றோ இவன். ஸ்வதந்திர னாகையாலே, இதுவரையில் நிர்ஹேதுகமாக ரக்ஷித்தபோதிலும், இனி என் செய்யப்புகுகிறானோ என்னில்: (உத்தமன் என்று முளன் கண்டாய்) இதுக்கு முன்பு இவ்வுலகத்தில் நிர்ஹேதுகமாக ரக்ஷித்தது போலே, இனி அவ்வுலகிலும் கைம்மாறு கருதாது தன் அநுபவத்தைக்கொடுத்து ரக்ஷிப்பான். அவன் ரக்ஷகனாவதற்கு இத்தலையில் யோக்யதை கனக்க வேண்டுமோ? என்னில்: (உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய்) ப்ராஸங்கிகமாக பகவத்விஷயத்தைப் பற்றி நினைவு வந்தால், 'நினைக்கமாட்டேன்' என்று ஆணையிடாமல், நினைக்க இசைவாருடைய நெஞ்சிலே உளன் என்கிறார்; நெஞ்சிலே நினைக்க இசைகையே இவன் ரக்ஷகனாகைக்கு இத்தலையில் வேண்டிய யோக்யதை என்கை. (உள்ளுவார் உள்ளத்து உளன்) ''கூடுமன முடையீர்கள் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ'' [திருப்பல்-4] '' போதுவீர் போதுமினோ '' [திருப்பாவை-1] என்றனர் பெரியாழ்வாரும், திருமகளாரும். (தன்னொப்பான் ஈசன்) ''ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே'' [ச்வே] ''ஒத்தார் மிக்காரையிலேயாய மாமாயா'' [திருவாய் 2-3-2] என்கிறபடியே தனக்குத்தானே உபமானமான ஸர்வேஶ்வரன். நிர்ஹேதுக ரக்ஷகத்வத்திலே இவனுக்கு

அகிஞ்சநனான எனக்கும், என்னைப்போலே உபாயஶூந்யரான வர்களுக்கும் தனக்கு உபமானமின்றிக்கே உள்ளுன ஈச்வரன் உளன். (இமை) பு₃த்₃தி₄பண்ணு என்றபடி. 86.

87. இமயப் பெருமலைபோ லிந்திரனார்க்கிட்ட
சமய விருந்துண்டார் காப்பார்—சமயங்கள்
கண்டா னவைகாப்பான் கார்க்கண்டன் நான்முகனோடு
உண்டா னுலகோ டுயிர்.

பதவுரை:— இமயம் பெருமலைபோல்—பெரிய இமயமலை போன்றிருக்கும்படி, இந்திரனார்க்கு இட்ட—இந்திரனுக்காகச் சமைத்து வைத்த, சமயம் விருந்து—வழக்கமான ஆரா த₄னையை, உண்டு—உட்கொண்டபோது, (நேர்ந்த கல்மழை யாலாகிய ஆபத்தில் நின்றும்) ஆர் காப்பார்—காப்பாற்றினது யார்? சமயங்கள்—வைதி₃க மதங்களை, கண்டான்—(ஆதி₃ யில்) ஸாக்ஷாத்கரித்தவன், ஆர்—யார்? அவை காப்பான்—

---

உபாயஶூன்யரானவர்க்கும் தனக்குத்தானே உபமானமாவ தொழிய உபமானமின்றிக்கேயிருக்கிற ஸர்வேஶ்வரன் ரக்ஷகனாய்க்கொண்டு உளனாயிருக்கும். இவ்வர்த்தூத்தை பு₃த்₃தி₄பண்ணு. இமை என்றது - பு₃த்₃தி₄பண்ணு என்றபடி. 86.

---

இணை வேறெவருமில்லை என்று கருத்து. (ஈசன்) உடையவனுகை யாலே உடைமையை ரக்ஷிக்கக் கடமைப்பட்டவன் இவனே என்று உணர்த்துகிறர். (தமியேற்கு என்றெப்பார்க்குத் தானுயுளன் காண்) உபாயஶூன்யனை எனக்கும் என்னை ஒத்திருக்கும் பரமைகாந்திகளுக் கும் ரக்ஷகனுயிருக்கிறன் காண் ஸர்வேஶ்வரன். (தமியேற்கு) தனிமைப்பட்டவனுக்கு; தனிமைப்பட்டிருக்கையாவது "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்றுப்போலே தன்னை ரக்ஷிப்ப தற்குத் தன் கையில் கைம்முதலின்றியிருக்கை. "அநுத்தமம் பாத்ர மித₃ம் த₃யாயா:" என்கிறபடியே கருணைக்கு ஒப்பற்ற விஷயமா யிருப்பவனுக்கு என்றுமாம். (தானுயுளன்) ரக்ஷகனுயுளன்; ரக்ஷகத் வமே இவனுக்கு ஸ்வரூபம்—(ஸ்வரூபநிருபகத₄ர்மம்)—என்று கருத்து. (இமை) இவ்வர்த்தூத்தை அறிவாயாக. 86.

அவற்றை (நிலைகுலையாதபடி) ரக்ஷிப்பவன், ஆர்—யார்? கார்க்கண்டன் நான்முகனோடு காப்பான் ஆர்—சிவனையும் பிரமனையும் (பெரிய ஆபத்துக்களில் நின்றும்) ரக்ஷிப்பவன் யார்? உலகோடு உயிர் உண்டான் ஆர்—உலகங்களையும் (உலகங்களிலுள்ள) ஜீவராசிகளையும் (பிரளயத்தில்) உண்டு ரக்ஷித்தவன் யார்? [எல்லாம் எம்பெருமானே யன்றோ.]

**பெரி:-அவ:—** (இமைய இத்யாதி₂) தம்மையொக்கும் அகிஞ்சனர்க்கு இவன் நிர்வாஹகனானபடியைக் காட்டுகிறார்.

**வ்யா:—** (சமயவிருந்து) சமயம் பண்ணின விருந்து (ஆர் காப்பார்) இந்த்₃ரன் ப₃ாத₄கனைப் வர்ஷிக்கிறபோது எம்பெருமா

---

**அவ:—**தம்மையொக்கும் அகிஞ்சனர்க்கு அவன் நிர்வாஹகனானபடியை மூதலிக்கிறார்.

**உரை:—**ஹிமவானாகிற பெரிய பர்வதம்போலே இந்த்₃ரனுக்கு, சமைத்துக்கொடுவந்து சொரிந்து வத்ஸரம்தோறும் நியமேந விருந்திடுவாரைப்போலே ஸாத₃ரமாக இட்ட சோற்றை ஒன்றொழியாதபடி தானே அமுதுசெய்து, முக்₃ப₄ங்க₃குபிதனான இந்த்₃ரனால் வந்த வர்ஷாபத்தை ஸர்வேஶ்வரனையொழிய வேறு பரிஹரித்து ரக்ஷித்தார் ஆர்?

---

87. அவ:—''என்னைப்பார்க்குத் தானையுளன்'' என்று சென்ற பாசுரத்திற் சொன்னபடியே, தன்னையொத்த அகிஞ்சனர்க்கு இவன் உதவும்படியைப் பலபடியாக நிருபிக்கிறார்.

வ்யா:—(இமயப் பெருமலைபோல் இந்திரனார்க்கிட்ட சமய விருந்துண்டு ஆர் காப்பார்) ''அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும்'' [பருப்பதம் — பர்வதம்] என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடியே இந்திரனுக்கென்று வருடந்தோறும் வழக்கமாக ஆயர்கள் சமைத்திடும் இமயமலை போன்ற சோற்றைத் தானே உண்டு. அதனால் கோபங்கொண்ட இந்திரனால் வர்ஷிக்கப் பட்ட கல்மழையினின்று இடையர்களைக் காப்பதற்காக ஏழுநாள் கோ₃வர்த்த₄ன கி₃ரியைத் தூக்கி நின்று ரக்ஷித்தவன் யார்? (ஆர் காப்பார்) அநுகூலனான இந்திரனே பிரதிகூலனாய் நின்று கல்மழை

னன்றோ காத்தான். இடையரோ? (சமயவித்யாதி₃) வைதி₃க சமயத்தைக் கண்டானும், அவற்றை ரக்ஷிப்பானும், நீல கண்ட₂ன், சதுர்முக₂ன் முதலானவர்கள் து₃ரிதங்களைப்போக்கு

---

வைதிகசமயங்களை ப்ரவர்த்திப்பித்தானும், அவற்றை உபதே₃ஶ பரம்பரையாலே குறைவற ரக்ஷிப்பானும், நீல கண்ட₂னான ருத்₃ரன் சதுர்முக₂னிவர்களோடும், இவர் களிருப்பிடமான லோகங்களோடும் கூட, லோகவர்த்திக ளான அல்லாத ஆத்மாக்களை ப்ரளயத்தில் அழியாதபடி

---

பொழிந்தபோது, இடையர்கள் தங்களைத் தாங்களே ரக்ஷித்துக் கொண்டார்களோ, அல்லது எம்பெருமான் அவர்களைக் காப் பாற்றினானே என்பதை ஆராய்ந்தாலாகாதோ? என்னைப்பார்க்கு இவன் உதவினது இங்குமட்டுமன்று; மற்றும் பலவிடங்களிலும் உண்டு என்று காட்டுகிறார் அடுத்தபடியாக: (சமயங்கள் கண்டான் ஆர்) அகிஞ்சனரான அடியார் கடைத் தேறுவதற்காக, "-மாதம் ப்ரதீ₃பமிவ காருணிகோ த₃த₃ாதி" [ர-ஸ்த 2-1] [கருணைக்கடலான ஸர்வேஶ்வரன் வேத₃த்தை விளக்கைப்போலே தருகிறான்] என்கிற படியே வைதி₃கமதத்தை ஸாக்ஷாத்கரித்து இவ்வுலகில் பரவச் செய்தவன் யார்? (சமயங்கள்) 'சமயம்' என்னுமல் சமயங்கள் என்று பன்மையாகச் சொல்லுவானென்? என்னில், ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வத் ப்ராப்திகள் என்று பலவகையான ப்ராப்யங்களை யும், ப₄க்தி, ப்ரபத்தி, திருநாம ஸங்கீர்த்தனம் முதலான பலவகை ப்ராபகங்களையும் வைதி₃க மதமானது காட்டுகையாலே அதைப் பல மதங்களின் ஸமுத₃ாயமாகவும் சொல்லலாம். ஆகையாலே சமயங் கள் என்கிறார். அகிஞ்சனர்க்கு உதவுவதை விவரிக்கும் பிரகரணமாகை யாலே புறச்சமயங்களை இங்கு சொல்லுவதாகக் கொள்ளுவது பொருந்தாது. "அறமுயல் ஞானச்சமயிகள்" [திருவிருத்தம்] என்று நம்மாழ்வாரும் வித்₄யாபே₄த₃த்தாலே பலவகைப்பட்டிருக்கும் ப₄க்தியோக₃ நிஷ்ட₂ர்களை 'சமயிகள்' என்று பன்மையாகப் பேசினா ரன்றோ. (அவை காப்பானார்) அந்த மதங்கள் நிலைகுலையாதபடி அவற்றை ரக்ஷிப்பவனார்? இதுவும் அகிஞ்சனரான அடியாரை ரக்ஷிப்பதற்குச் செய்தது. (கார்க்கண்டன் நான்முகனோடு காப்பானார்) ப்₃ரஹ்மருத்₃ரர்களும், ராவணாதி₃யராலே துன்புற்று அகிஞ்சனராய் அடையும்போது அவர்களுடைய துன்பத்தைத் துடைப்பவன் யார்? அன்றிக்கே, (கார்க்கண்டன் நான்முகனோடு, உண்டான் உல

மவனும், இவ்வாத்மாக்களையும் வயிற்றிலே வைத்துப் பரி ஹரித்தானும் எம்பெருமானையொழிய மற்றார்? 87.

---

திருவயிற்றிலே வைத்துப் பரிஹரித்தானும் எம்பெருமானை யொழிய மற்றார்? வர்ஷாபத்தோடு ப்ரளயாபத்தோடு வாசி யற ரக்ஷித்தவன் ஸர்வேஶ்வரனித்தனைபோக்கி, இடைய ராதல், ப்₃ரஹ்மாதி₃களாதல் ரக்ஷித்தார்களாக ப்ரஸங்க₃ முண்டோ? என்கை. "சமயங்கள் கண்டானவை காப் பான்" என்று வைதி₃கசமயங்களை ப்ரவர்த்திப்பித்து ரக்ஷித்தமை சொல்லுகையாலே ஸம்ஸாராபத்தைப் பரி ஹரிப்பானும் இவனையொழிய வேறொருவர் உண்டோ? என்று சொன்னபடி. 87.

---

கோடுயிர்) என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். அதி₃கமான ஞானஶக்திகளையுடைய ப்₃ரஹ்ம ருத்₃ரர்களோடு, மற்றுள்ள ஜீவர் களோடு வாசியற ப்ரளயாபத்திலே அகப்பட்டு கதியற்றுத் திரியும் போது, அவர்களை வயிற்றிலே வைத்து ரக்ஷிப்பவனும் இவனே யென்கிறார். "எல்லாரு மறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாமுளரே" [பெரிய திரு 11-6-2] என்றார் மங்கை மன்னனும். (உலகோடு உயிர் உண்டானார்) உயிர்களையும், அவற் றிற்கு உறைவிடமான உலகங்களையும் வயிற்றிலே வைத்து ரக்ஷித் தவன் ஆர்? இப்பாசுரத்தை அடியொற்றியே ஆளவந்தார்,

"கஸ்யோத₃ரே ஹரவிரிஞ்சிமுக₂: ப்ரபஞ்ச:"

[யாருடைய திருவயிற்றிலே ப்₃ரஹ்ம ருத்₃ரர்களை முன்னிட்ட உலகம் ஒடுங்கிற்று] என்றும்,

"வேத₃ாபஹார கு₃ருபாதக தை₃த்யபீடா₃த்₃-
யாபத்₃ விமோசந மஹிஷ்ட₂ ப₂ல ப்ரதா₃நை: ।
கோந்ய: ப்ரஜாபஶுபதீ பரிபாதி"

[வேத₃ாபஹாரம், (தந்தை தலையைக் கிள்ளிய) பெரும்பாவம், அசுரபீடை முதலான ஆபத்துக்களை அகற்றி, பெரும்பலன்களைத் தந்து ப்₃ரஹ்ம ருத்₃ரர்களை ரக்ஷிப்பவன் யார்?] என்றும் ஸ்தோத்ர ரத்னத்திலே அருளிச் செய்தாரென்பது ஸ்பஷ்டம். 87.

88. உயிர்கொண் டுடலொழிய வோடும்போ தோடி
அயர்வென்ற தீர்ப்பான்பேர் பாடி—செயல்தீரச்
சிந்தித்து வாழ்வாரே வாழ்வார் சிறுசமயப்
பந்தனையார் வாழ்வேல் பழுது.

பதவுரை:—உடல் ஒழிய — சரீரத்தைப் போட்டு விட்டு, உயிர் கொண்டு — ப்ராணனைப் பிடித்துக்கொண்டு, ஓடும் போது—(இவ்வாத்மா) ஓடும்போது, ஓடி—(எம்பெருமானாகிய தானே) ஓடிச்சென்று, அயர்வு என்ற — கஷ்டமென்று சொல்லப்படுகிற எல்லாவற்றையும், தீர்ப்பான் — தீர்க்குமவனான எம்பெருமானுடைய, பேர்—திருநாமங்களை, பாடி—வாய்விட்டுப்பாடி, செயல் தீர—பேற்றுக்காக நாம் செய்ய வேண்டிய செயல் [ப்ரவ்ருத்தி] ஒன்றுமில்லையென்று, சிந்தித்து — ஸ்வரூபத்தை யுணர்ந்து, வாழ்வாரே — வாழ நினைப்பவர்களே, வாழ்வார்—வாழ்ச்சி பெறுவர்; சிறு சமயம் பந்தனையார் - அற்பங்களாய் பல நியமங்களோடு கூடினவையாய் ஸம்ஸார ப₃ந்த₄த்திற்கே காரணமாக உள்ளவையான உபாயங்களைப் பற்றினவர்களுடைய, வாழ்வு ஏல் — வாழ்ச்சியோவென்றால், பழுது—உபயோக₃மற்றது.

பெரி-அவ:— (உயிர்) இப்பாட்டிலும் அவ்வர்த்த₂த்தையே விஸ்தரிக்கிறார்.

---

அவ:— ஆஶ்ரிதர்க்கு ஶரீரவிஶ்லேஷ ஸமயத்தில் வரக்கடவ யமவஶ்யதாதி₃ து₃ரிதபரம்பரைகளைத் தானே முற்கோலிப் பரிஹரித்தமை சொல்லுகிற வழியாலே, கீழ் "சமயங்கள் கண்டானவை காப்பான்" என்கிறவிடத்தில் கூர்ப்பி₄தமான ஸம்ஸாராபத்₃ரக்ஷகத்வத்தை விவரிக்கிறார்.

---

88. அவ:—அகிஞ்சனரான அடியார்க்கு இவன் செய்யும் உதவிகளை இப்பாட்டிலும் தொடர்ந்து விவரிக்கிறார்.

வ்யா:—(உயிர்கொண்டு உடலொழிய ஓடும்போது) இவ்வாத்மா ஶரீரத்தை விட்டு ப்ராணனைப் பற்றிக்கொண்டு யமதூ₃தர்களாலே தூண்

வ்யா:—(உயிரீத்யாதி₂) இவ்வாத்மா ஶரீரத்தைப் பொகட்டு ப்ராணனைக்கொண்டு யமப₄டராலே ப்ரேரிதமாய்ப் போம்போது. (ஓடியீத்யாதி₂) ஆஶ்ரிதரானவர்களை ஆளிட்டு அந்தி தொழாதே தானேயோடி, அவர்கள் தௌ₃ர்ஜனத்தாலே வந்த அறிவுகேடு முதலான து₃ரிதங்களையெல்லாம் போக்குமவன் திருநாமத்தை ப்ரியத்தோடே சொல்லி, 'இவ்வாத்மா செய்யக்கடவது ஒன்று

---

உரை:— ஶரீரத்தைப் பொகட்டு ப்ராணனைக்கொண்டு யமப₄டனாலே ப்ரேரிதனாய்ப் போம்போது, ஆஶ்ரிதரான வர்களை ஆளிட்டு அந்தி தொழுத (தொழாதே?) தானே விரைந்துசென்று,அவர்கள் தௌ₃ர்ஜனத்தால் வந்த அறிவுகேடு முதலான து₃ரிதமென்று பேர்பெற்றவை எல்லாவற்றை யும் போக்கும் ஸ்வபா₄வனானவனுடைய கு₃ணசேஷ்டிதாதி₃ களுக்கு வாசகமான திருநாமங்களை ப்ரீதிபரவஶராயக் கொண்டு சொல்லி, இவர் ஸ்வரக்ஷணத்துக்கு உடலாகச்

---

டப்பட்டுப் போகும்போது. (ஓடி) அடியார்கள் அல்லலுறுவதைக் கண்டிருப்பான் ஒருவனன்றே; ஆளிட்டு அந்தி தொழுவது போலே, தன் கிங்கரர்களை அனுப்பி ரக்ஷித்தாலும் திருவுள்ளம் ஆறுதலடையாதே. [ஆளிட்டு அந்தி தொழுவதாவது:—அஶக்தராயிருப்பவர்கள், தமக்கு பதிலாக ஓர் ப்ரதிநிதி₄யை நியமித்து ஸந்த்₄யாவந்த₃னம் செய்கை] ஆகையாலே தானே ஓடிச்சென்று அடியாரல்லல் தவிர்க்கிறபடி. (ஓடி) "ப₄க₃வதஸ் த்வராயை நம:" [ர-ஸ்த-2-57] [ப₄க₃வானுடைய வேக₃த்துக்கு நமஸ்காரம்] என்று அடியார் ஈடுபடுவதொன்றன்றோ இவனுடைய ஓட்டம். (அயர்வென்ற தீர்ப்பான்) யமதூ₃தர்களுக்கு வஶப்பட்டு இவன்பட்ட துன்பங்களையெல்லாம் ஒன்றொழியாமல் தீர்ப்ப வன். அவர்களைக் காண்பதாலே பயந்து நடுங்கி அறிவிழப்பது, அவர் களால் தே₃ஹத்தை விட்டு வெளிவரும்படி பற்றியிழுக்கப்படுவது முதலான துன்பங்களையெல்லாம் போக்குமவன். (அயர்வென்ற) உண்மையில் யமப₄டர்களுக்கு வஶப்பட்டு இவன் அனுப₄விக்கும் துன்பமே துன்பமெனும் பெயர்க்குப் பொருந்தியது; மற்ற துன்பங்க ளெல்லாம், இதற்கொப்பிடும்போது இன்பமேயாகும் என்று கருத்து. (தீர்ப்பான் பேர் பாடி) துன்பம் துடைத்தவனின் திருநாமத்தை வாயாரச் சொல்லி, (செயல் தீரச் சிந்தித்து வாழ்வாரே வாழ் வார்) ஸாத₄னமாகச் செய்யும் செயல்கள் தீர்ந்தொழியும்படியாக

மில்லை; எம்பெருமானே நிர்வாஹகன்' என்றிருக்குமவர்கள் வாழ்வார். (சிறு சமயமித்₂யாதி₃) து₃:க்க₂ஹேதுவாய், அஹங்கார

---

செய்யக்கடவதொரு ப்ரவ்ருத்தியில்லாதபடி ஸ்வரூபபார தந்த்ர்யத்தை அநுஸந்தி₄த்து, எம்பெருமானே நிர்வாஹக னென்று அவன் தலையிலே ஸர்வப₄ரத்தையும் பொகட்டு, தத்₃கு₃ணாநுப₄வம் பண்ணி வாழுமவர்களே பழுதற வாழும வர்கள். அந்யஸாபேக்ஷமாகையாலே அதிக்ஷுத்₃ரமாய் ப்ரதிபுருஷம் தத்தத்₃ருச்யநுகு₃ணமாக வ்யவஸ்தி₂தமாய் து₃:க்க₂ஹேதுவான அஹங்காரமமகார க₃ர்ப்ப₄மாகையாலே

---

அவனையே உபாயமாகநினைத்து வாழுமவர்களே உண்மையில் வாழ்ச்சி பெற்றவர்கள். (செயல் தீரச் சிந்தித்து வாழ்வார்) ''தன் துன்பங்களைத் துடைக்கவும், பேரின்பமடையவும் தன்னால் செய்யக்கூடியதொன்று மில்லை; யமப₄டரிடம் அகப்பட்டுச் செய்வதறியாமல் துன்புறும்போது தானே ஓடிச்சென்று ரக்ஷிக்கும் அவனே உபாயம்'' என்று நினைத்திருப் பவர்கள். ''கடைத்தலையிருந்து வாழும் சோம்பர்'' [திருமாலை 38] என்று தொண்டரடிப்பொடிகளால் சொல்லப்பட்டவர்கள்.

அகிஞ்சனருடைய பெருமை சொன்னார் கீழ்; ஸகிஞ்சனருடைய சிறுமை சொல்லுகிறார் மேல்:— (சிறு சமயப் பந்தனையார் வாழ்வேல் பழுது) '' ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு '' என்கிறபடியே அரும்பாடு பட்டு ஸாதி₄க்க வேண்டுமவையாகையாலும், இவனுடைய அத்யந்த பரதந்திர ஸ்வரூபத்துக்கு மாறுபட்டு அஹங்காரக₃ர்ப்ப₄மாயுள்ள வையாகையாலும், இவனை ஸம்ஸாரத்திலேயே நெடுநாள் கட்டிவைப் பவையாய், தாழ்ந்தவையான கர்மயோக₃ம், ஞானயோக₃ம், ப₄க்தி யோக₃ம் என்னும் உபாயங்களைப் பற்றினவர்களுக்கு ஒரு பயனு மில்லை. (சிறு சமயம்) '' பராயணம் நாராயணம் '' [நாராயண ஸூக்தம்] [ மேலான உபாயமாயிருக்கும் நாராயணன் ] என்னும் அவனைப்போலன்றியே தாழ்ந்த உபாயங்கள். (சமயப் பந்தனை ) '' நெறிகாட்டி நீக்குதியோ '' [பெரியதிருவ 6] என்கிறபடியே மோக்ஷோபாயமென்று பேராய், உண்மையில் இவனை ப₄க₃வத்₃ விஷ யத்திலிருந்து நெடுங்காலம் நீக்கிவைத்து, ஸம்ஸார ப₃ந்த₄த்திற்கே உபாயங்களாகின்றன அவை என்று கருத்து. ( வாழ்வேல் பழுது ) ஆராய்ந்து பார்த்தால் அவர்களுக்கு அவ்வுபாயங்களால் வருவது ஒரு பயனுமில்லை என்று பா₄வம். (சமயம்) ஒவ்வொரு மனிதனுக்

கூர்ப்ப₄மாகையாலே ப₃ந்த₄கமாய், க்ஷுத்₃ரமான கர்மாத்₃யு பாய பே₄த₃ங்களைப் பற்றிஞர்க்கு ஒரு ப்ரயோஜனமில்லை. 88.

89. பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான் பாதம்
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவாரை
கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்த வினைகெடுத்து
விண்டிறந்து வீற்றிருப்பார் மிக்கு.

---

ப₃ந்த₄கமாயிருக்கிற கர்மாத்₃யுபாயவிஶேஷங்களைப் பற்றி நிற்கிறவர்களுடைய வாழ்வு ஆமாகில் நிஷ்ப்ரயோஜனமா யிருக்கும். அந்வயவ்யதிரேகங்களாலே இவற்றுக்கு உபா யத்வம் முதலிலேயில்லை என்று உள்ளபடி உணர்ந்திருக் கும் ஜ்ஞாநிநாம் அக்₃ரேஸரராகையாலே "பந்தனையார் வாழ் வேல் பழுது" என்று அவற்றில் ஒரு சரக்கற அருளிச் செய்கிருர். 88.

---

கும், அவனவனுடைய ருசிக்குத் தக்கவாறு வ்யவஸ்தை₂—(பாகு பாடு)—செய்யப்பட்டிருக்கையாலே, உபாயங்களை 'சமயம்' என்கிருர். "செயல்தீரச் சிந்தித்து வாழ்வார்" என்று எடுக்கப்பட்ட நிவ்ருத்தி நிஷ்டருக்கு எதிர்த்தட்டாக எடுக்கப்பட்ட "சிறுசமயப் பந்தனை யார்" ப்ரவ்ருத்தி த₄ர்மமாகிற உபாயாந்தரங்களிலே நிஷ்டரான வர்கள் என்று பொருள்கொள்வதே பொருத்தமுள்ளதாகையால், புறச்சமயிகளைச் சொல்லுவதாகப் பொருள்கொள்ளுவது அஸ்வரஸம். மேலும், பரோபதே₃ஶம் செய்து புறச்சமயிகளையெல்லாம் ப₄க₃வத்பரர் களாகத் திருத்தியபிறகு அவர்களை நிந்தி₃க்கவேண்டிய அவஶ்யமு மில்லை. (சிறு சமயப் பந்தனையார் வாழ்வேல் பழுது) "அந்வய வ்யதிரேகங்களாலே இவற்றுக்கு உபாயத்வம் முதலிலே இல்லை என்று உள்ளபடி உணர்ந்திருக்கும் ஜ்ஞாநிநாமக்₃ரேஸரராகையாலே 'பந்தனையார் வாழ்வேல் பழுது' என்று அவற்றில் ஒரு சரக்கற அருளிச்செய்கிருர்"—என்று அப்பிள்ளையுரை. அந்வயவ்யதிரேகங்க ளாலே உபாயத்வமில்லையென்று அறிகையாவது:— கர்மயோக₃ம் முதலியவற்றை உடையார்க்கும், ப₄க₃வான் பிரீதியடையாதபோது மோக்ஷமில்லையென்று காண்கையாலும், கர்மயோகா₃தி₃களில்லாத க்ஷத்ரப₃ந்து₄, க₄ண்டாகர்ணன் முதலாஞர்க்கு மோக்ஷமுண்டாவதைக் காண்கையாலும் இவற்றுக்கு உபாயத்வமில்லையென்று அறிகை. 88.

பதவுரை:— பழுது ஆகாது ஒன்று—பழுதுபடாத [சிறந்த] ஒருபாயத்தை, அறிந்தேன்—தெரிந்து கொண்டேன்; (அது என்னவென்றால், கேண்மின்:) பால் கடலான் பாதம்—க்ஷீராப்₃தி₄ நாத₂னுடைய திருவடிகளை, வழுவா வகை நினைந்து — தப்பாதபடி அநுஸந்தி₄த்து, தொழுவாரை—எப்போதும் வணங்குமவர்களை, கண்டு—(சென்று) த₃ரிசித்து, இறைஞ்சி—வணங்கி, வாழ்வார்—வாழ்பவர்கள் [பா₄க₃வத ப₄க்தர்கள்]—கலந்த வினை கெடுத்து—ஆத்மாவோடு சேர்ந்த தீவினைகளைத் தொலைத்து, விண் திறந்து—பரமபத₃வாசலைத் திறந்து, மிக்கு—சிறப்புடனே, வீற்றிருப்பார்—எழுந்தருளியிருக்கப் பெறுவர்.

பெரி-வ்யா:— (பழுதாகாது) பழுதாகாத உபாயங்களில் உத்க்ருஷ்டமான உபாயம். (ஒன்றறிந்தேன்) பா₄க₃வத ஸமா

---

அவ:— இப்படி கர்மாத்₃யுபாயங்கள்போலே பழுதாகையன்றிக்கே, பழுதற்ற உபாயந்தான் ஏதென்ன, ப₄க₃வத்ஸமாஶ்ரயணமும் பா₄க₃வத ஸமாஶ்ரயணமும் பழுதற்ற உபாயங்கள்; அவையிரண்டிலும் பா₄க₃வதஸமாஶ்ரயணமே உத்க்ருஷ்டம் என்கிறார்.

உரை:— பழுதுபோகாத உபாயங்களில் அத்₃விதீயமானதொரு உபாயம் பா₄க₃வதஸமாஶ்ரயணமென்று

---

89. அவ:—இப்படி கர்மயோகா₃ம் முதலிய உபாயங்களைப்போல் நிஷ்ப்ரயோஜநமாயிருக்கையன்றிக்கே, பழுதற்ற உபாயம் உண்டோ? என்னில்; ப₄க₃வத் ஸமாஶ்ரயணமும், பா₄க₃வத ஸமாஶ்ரயணமும் பழுதற்ற உபாயங்கள்; அவையிரண்டினுள்ளும் பா₄க₃வத ஸமாஶ்ரயணமே உயர்ந்தது என்கிறார்.

வ்யா:—(பழுதாகாதொன்றறிந்தேன்) வீணாகாத உபாயங்களில் உயர்ந்ததொன்றை அறிந்தேன். வீணாகாத உபாயங்களாவன:— 1. ப₄க₃வானை உபாயமாகப் பற்றுகை. 2. பா₄க₃வதர்களை உபாயமாகப் பற்றுகை. 3. பா₄க₃வதர்களின் அபி₄மானத்தின் கீழ் ஒதுங்கியிருக்கை. இவை மூன்றும் உத்தரோத்தரம் உத்க்ருஷ்டமானவை. இவற்றுள் இரண்டாமதான பா₄க₃வத ஸமாஶ்ரயணத்தை இப்பாசுரத்திலும். முதலதான ப₄க₃வத் ஸமாஶ்ரயணத்தையும்,மூன்றுமதான பா₄க₃வதாபி₄

ம்ரயணாம் என்றறிந்தேன். (கலந்தவித்யாதி₃) ஆத்மாவோடு அவிநாபூ₄தமான பாபத்தைப் போக்கி, ஸ்ரீவைகுண்ட₂த்தில்

---

அறிந்தேன். அதெங்ஙனேயென்னில்: பே₄ாக₃பூ₄மியான பரமபத₃த்தைவிட்டு, ஆஶ்ரயிப்பார்க்கு ஸமாஶ்ரயணீய னாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற வனுடைய திருவடிகளைத் தப்பாத ப்ரகாரத்திலே அநுஸந் தி₄த்து நாள்தோறும் ஆஶ்ரயித்துக்கொண்டு போருமவர் களைக் கண்ணாரக்கண்டு, தலையாரவணங்கி, ஸுகோ₂த்தர ராக ஆஶ்ரயித்துக்கொண்டு போருமவர்கள், ஆத்மா வோடு பொருந்திக்கிடக்கிற கர்மங்களை நிஶ்ஶேஷமாகப் போக்கி, ஸ்ரீவைகுண்ட₂த்தின் திருவாசல் திறந்து—ஜ்ஞான

---

மான நிஷ்டை₂யையும் அடுத்த பாசுரத்திலும் அருளிச்செய்கிறர். அப்படிதாகாத உபாயம்தான் என்னென்னில்: (பாற்கடலான் பாதம்) பே₄ாக₃பூ₄மியான பரமபத₃த்தைவிட்டு, ஆஶ்ரயிப்பாரைப் பெறுவதற் காகப் பாற்கடலிலே பள்ளிகொண்டருளுமவனுடைய திருவடிகளை. (வழுவா வகை நினைந்து) தப்பாத முறையிலே அநுஸந்தி₄த்து. அதாவது:-அதையே ப்ராப்ய ப்ராபகங்களாக நினைத்து. கற்பக வ்ருக்ஷத் திடம் சென்று கௌபீநபி₄க்ஷை கேட்பாரைப்போலே மோக்ஷப்ரத₃மான ஸர்வேஶ்வரனுடைய திருவடிகளையடைந்து, ப்ரயோஜநாந்தரங்களைப் பிச்சை கேட்கை தப்பான முறையன்றே. அப்படியல்லாமல், அத் திருவடிகளையே ப்ராப்யப்ராபகங்களாக நினைத்து. (வைகல் தொழு வாரை) விஷயத்தின் இனிமை, ஒருநாள் தொழுதவுடன் தினந் தோறும் தொழச் செய்துவிடுமன்றே. (தொழுவாரைக்கண்டு) ப₄க₃வத்₃ ப₄க்தர்களைத் தாமே தேடிச்சென்று கண்டு. இத்தால் அடுத்த பாசுரத்தில் சொல்லப்படும் விலக்ஷணாதி₄காரிகளுக்கும், இவர்களுக்கு முள்ள வாசி உணர்த்தப்படுகிறது. "ப்ரஜாபதிம் த்வோ வேத₃" என்றாற்போலே, தாமே சென்று ப₄ாக₃வதர்களைப் பற்றுமவர்கள் இவர்கள். ப₄ாக₃வதர்களுடைய அபி₄மானத்துக்கு விஷயமாயிருப்பவர் கள் அவர்கள். (கண்டு இறைஞ்சி வாழ்வார்) ப₄க₃வத்₃ ப₄க்தர்களைக் கண்ணாரக்கண்டு, வாயாரத் துதித்து வாழ்ச்சிபெற்றவர்கள். (இறைஞ்சி) "தலையார வணங்கி" என்பர் அப்பிள்ளை. (கலந்த வினை கெடுத்து விண் திறந்து வீற்றிருப்பார் மிக்கு) ஆத்மாவோடு இரண்டறக் கலந்து நிற்பதோ? என்னும்படியாக ஒன்றிநிற்கும் பாபங்களைப் போக்கி, ஸ்ரீ வைகுண்ட₂த்தில் திருவாசல் திறக்கப்

வாசல் திறந்து அங்கே அதிஸம்ருத்₃த₄மான ஜ்ஞானப₄க்திகளை யுடையராய் ப₄க₃வத் கைங்கர்யத்தில் தலைவரான நித்யஸூரி களுக்கு அடிமை செய்யப்பெறுவார்கள். 89.

90. வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான்
பால்திருந்த வைத்தாரே பன்மலர்கள்—மேல்திருந்த
வாழ்வார் வருமதிபார்த் தன்பினராய் மற்றவற்கே
தாழ்வா யிருப்பார் தமர்.

பதவுரை:—வீற்றிருந்து—பெருமை விளங்க (இவ்வுலகில்) இருந்து, விண்—பரமபத₃த்தை, ஆள வேண்டுவார்—ஆட்சி செய்ய விரும்பியிருப்பார், வேங்கடத்தான் பால்-திருவேங்கட முடையான் பக்கலில், பல் மலர்கள் — பலவகைப்பட்ட மலர்களை, திருந்த—நன்றாக, வைத்தாரே—ஸமர்ப்பித்தவர் களே யாவர்; வரும் மதி பார்த்து — (எம்பெருமானுடைய திருவுள்ளத்தில்) ஓடுகின்ற கருத்தை அறிந்து, அன்பினர் ஆய் — ப₄க்தியையுடையவர்களாய், மற்றவற்கே — அந்த எம்பெருமானுக்கே, தாழ்வு ஆய் இருப்பார் — அடிமைப் பட்டிருப்பவர்களாலே, தமர் — அபி₄மானிக்கப்பட்டவர்கள், மேல் திருந்த வாழ்வார்—முன்னடிகளிற் சொல்லப்பட்டவர் களிற் காட்டிலும் விலக்ஷணராக வாழ்பவராம்.

---

ப்ரேமங்களால் பரிபூர்ணராய், ததீ₃ய கைங்கர்ய லாப₄த் தால் வந்த வேறுபாடுதோற்ற இருக்கப்பெறுவர்கள். 89.

---

பெற்று, அங்கே மிகவதி₄கமான ஜ்ஞானப₄க்திகளை உடையவர்களாய், ப₄க₃வத் கைங்கர்யம் செய்வாரில் தலைவரான நித்யஸூரிகளுக்கு அடிமை செய்யப்பெறுவர். (மிக்கு வீற்றிருப்பர்) ஞானப₄க்திகள் மிகுந்தவராய் வீற்றிருப்பர். (வீற்றிருப்பர்) வீறுதோற்ற இருப்பர். ப₄க₃வத் கைங்கர்யம் செய்யும் நித்யஸூரிகளிலும் தங்களுடைய ஆதி₄க்யம் தோற்றும்படி பரமப்ராப்யரான பா₄க₃வதர்களுக்குக் கைங் கர்யம் செய்யப்பெறுவர். 89.

90. அவ:—''பழுதாகாதொன்றறிந்தேன்'' என்று பழுதாகாத உபாயங்களில் ஒன்றாகிய பா₄க₃வதஸமாச்ரயணத்தைச் சொன்னார் கீழ்ப் பாசுரத்தில்; பழுதாகாத உபாயங்கள் மற்றுமுள்ளவற்றையும் அருளிச்செய்யலாகாதோ? என்ன, ''ப₄க₃வத்ஸமாஸ்ரயணமும், பா₄க₃வ

பெரி-வ்யா:—(வீற்றிருந்தித்யாதி₃)விலக்ஷணமான ப₄க₃வத் கைங்கர்யத்திலே அதி₄கரித்து ஸ்ரீவைகுண்ட₂த்திலுள்ளார்க்கும்

அவ:— பா₄க₃வதராலே அங்கீ₃க்ருதரானவர்களே எல்லாரிலும் மேற்பட்டவர்கள் என்கிறார்.

உரை:— ப₄க₃வத் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்திலே மூர்த்தா₄பி₄ஷிக்தராகையாலே வந்த வேறுபாடு தோற்ற இருந்து

தாபி₄மாநநிஷ்டை₂யும் மற்றுமுள்ள பழுதாகாத உபாயங்கள்; அவற்றிலே பா₄க₃வதாபி₄மான நிஷ்டை₂யாகிய சரமோபாயத்தைக் கைக்கொண்டவர் மிகவும் விலக்ஷணராவர் என்கிறார் இப் பாசுரத்தில். "பழுதாகாதொன்றறிந்தேன்" என்கிற பாட்டை பூர்வோபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்தி₄ப்பது; "நல்லவென் தோழி" [நாச்-திரு] "மாறாய தானவனை" [நான்-திருவ-18] என்கிற பாட்டுகளையும், ஸ்தோத்ரத்தில் முடிந்த ஶ்லோகத்தையும், "பஶுர் மநுஷ்ய:" என்கிற ஶ்லோகத்தையும், இதுக்கு ப்ரமாணமாக அநுஸந்தி₄ப்பது" என்ற ஸ்ரீவசநபூ₄ஷண ஸூத்ரங்களும், அவ்விடத்து வ்யாக்₂யானங்களும் இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கவை. பா₄க₃வத விஷயத்தில் ஸ்வக₃த ஸ்வீகாரம் – [தானே பற்றுகை] – சென்ற பாசுரத்தில் சொல்லப்பட்டது; பா₄க₃வத விஷயத்தில் பரக₃தஸ்வீகாரம் சென்ற பதினெட்டாம் பாசுரத்திலும். இப்பாசுரத்திலும் சொல்லப்படுகிறது. ப₄க₃வத்₃விஷயத்திற்போலவே, பா₄க₃வத விஷயத்திலும் ஸ்வக₃த ஸ்வீகாரம், பரக₃தஸ்வீகாரம் என்னும் இரண்டுமுண்டு என்பதும், இரண்டும் பழுதாகாத உபாயங்களென்பதும்,

"கு₃ருணா யோऽபி₄மந்யேத கு₃ரும் வா யோபி₄மந்யதே।
தாவுபௌ₄ பரமாம் ஸித்₃தி₄ம் நியமாது₃பக₃ச்ச₂த:॥"

[கு₃ருவினால் எவன் அபி₄மானிக்கப்படுகிறானோ, கு₃ருவை எவன் அபி₄மானிக்கிறானோ, அவர்களிருவரும் பரமபுருஷார்த்த₂மான மோக்ஷத்தைத் தப்பாமல் அடைகின்றனர்] என்று பா₄ரத்₃வாஜஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டதன்றோ.

வ்யா:—(வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார்) வீறுதோற்ற ப₄க₃வத் கைங்கர்ய நிஷ்ட₂ராயிருந்து, பரமபத₃த்திலுள்ளாரும் தங்களுக்குக் கைங்கர்யம் செய்யும்படியான பூ₄லனைப்பெற விரும்பி இருப்பர். (வேங்கடத்தான்பால் திருந்த வைத்தாரே பன்மலர்கள்)

அப்படியே வர்த்திக்கவேண்டியிருக்கப்பெற்றவர்கள் திரு வேங்கடமுடையான் திருவடிகளிலே நிரந்தரமாகவே ஆஶ்ர யித்தவர்கள். அதிலும் விலக்ஷணமான ப₄ாக₃வத ப்ராப்தி காம ராய், அது பெற்றவர்கள் ப₄ாக₃வதராலே அங்கீ₃க்ருதரானவர் களென்கிறுர்—(வருமதியித்யாதி₃) எம்பெருமான் திருவுள்ளத்

பரமபத₃த்தில் நித்ய கைங்கர்ய நிரதரான நித்யஸூரிகளை ஸ்வாதீ₄னமாக நிர்வஹிக்கையாகிற இப்புருஷார்த்த₂த் தைப் பெறவேணுமென்று மநோரதி₂த்து யதா₂மநோரத₂ம் பெற்றவர்கள் — திருமலையிலே வந்து ஸூலப₄னை திரு வேங்கடமுடையானிடத்திலே ப₃ஹுவித₄மான புஷ்பங்களை ஶாஸ்த்ரோக்த க்ரமம் தப்பாதபடி அழகிதாகப் பணிமாறி ஆஶ்ரயித்தவர்கள். "येन येन धाता गच्छति तेन तेन सह गच्छति" (யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி) என்கிறபடியே ஶேஷியான ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தில் கோலிவருமவற்றை யதா₂வத் த₃ர்ஶித்து அதுக்கு அநுரூப மான கைங்கர்யத்திலே நிரவதி₄க ப்ரேமத்தையுடையராய், அதுக்குமேலே, அந்த ஶேஷியான ஸர்வேஶ்வரன் பக்க லிலே ஸ்வஶேஷத்வாநுகு₃ணமாக ப்ரவணராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களாலே விஷயீக்ருதரான மஹாபுருஷர்கள்— ப₄க₃வத் கைங்கர்யத்திலும் உத்க்ருஷ்டமாய், ததீ₃யஶேஷ

எளியவர்க்கு முகங்கொடுத்து அவர்களை உய்விப்பதற்காகத் திருவேங் கடமலையிலே எழுந்தருளியிருப்பவனிடத்திலே ஶாஸ்த்ரோக்தமுறை தப்பாதபடி பலவித₄மான மலர்களை இட்டு அர்ச்சித்தவர்களேயாவர். ப₄க₃வத் கைங்கர்யம் செய்தவர்கள், பரமபத₃த்திலும் ப₄க₃வத் கைங்கர்யம் செய்யப்பெறுவர் என்கை. இந்த ப₄க₃வத் ஸமாஶ்ரயணத் திலும் மிகவுயர்ந்தது ப₄ாக₃வதாபி₄மான நிஷ்டை₂ என்று அருளிச் செய்கிருர் அடுத்தபடியாக — (வருமதிபார்த்து) "யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி" [எப்படியெப்படியெல்லாம் ஸர்வேஶ்வரன் நினைக்கிருனே அப்படியப்படியெல்லாம் இவனும் நினைக்கிருன்.] என்கிறபடியே ஸர்வேஶ்வரன் திருவுள்ளத்தில் நினைக் கிறவற்றை முன்கூட்டியே அறிந்து. (அன்பினராய் மற்றவற்கே தாழ்வாயிருப்பார்) அதுக்குத் தகுந்த கைங்கர்யங்களிலே அன்பு

திலே செல்லுவன அறிந்து, அதுக்கிடான அடிமைகளிலே ஸ்நேஹித்து, அவன் பக்கல் ப்ரவணரானவர்களாலே விஷயீக்ருதரானவர்கள். 90.

91. தமராவார் யாவர்க்கும் தாமரை மேலாற்கும்
அமரர்க்கும் ஆடரவார்த்தாற்கும்—அமரர்கள்
தாள் தாமரை மலர்களிட்டிறைஞ்சி மால்வண்ணன்
தாள் தாமரை யடைவோ மென்று.

**பதவுரை:—** **மால் வண்ணன்**—கரியமேனியனான எம்பெருமானுடைய, **தாள் தாமரை**—திருவடித் தாமரைகளில், **மலர்கள் இட்டு**—புஷ்பங்களை ஸமர்ப்பித்து, **இறைஞ்சி**—வணங்கி, **தாள் தாமரை அடைவோம் என்று**—அத்திருவடித் தாமரைகளை அடைவோமென்று, **தமர் ஆவார்**—பக்தராயிருக்குமவர்கள், **தாமரை மேலாற்கும்**—திருநாபிக் கமலத்திற் பிறந்த பிரமனுக்கும், **ஆடு அரவு ஆர்த்தாற்கும்**—ஆடுகின்ற ஸர்ப்பங்களை (உடம்பிலே) கட்டிக் கொண்டிருக்கும் சிவனுக்கும், **அமரர்க்கும்**—நித்யஸூரிகளுக்கும், **யாவர்க்கும்**—மற்றுமெல்லார்க்கும், **அமரர்கள்**—தேவதைகளாவார்.

---

த்வரூப ஸ்வரூபோசிதமாகையாலே கட்டளைப்பட்டிருக்கிற பாகவதாநுபவமாகிற பரமபுருஷார்த்தத்தைப் பெற்று ஸுகோத்தரராய் வர்த்திக்கிறவர்கள். தத்ஸமாஶ்ரயணம் பண்ணினவர்கள் தத்கைங்கர்யத்தைப் பெறுவர்கள், ததீயஸமாஶ்ரயணம் பண்ணினவர்கள் ததீயகைங்கர்யத்தைப்பெற்று வாழப்பெறுவர் என்றபடி. யதோபாஸனம் பலமென்கை எல்லார்க்கும் ஒக்குமிறே. 90.

---

***செய்து. அந்த பகவானுக்கு அடிமைப்பட்டிருப்பவர்கள். (தாழ்வாயிருப்பார் தமர் மேல் திருந்த வாழ்வார்) பகவத்பக்தர்களாலே "நம்முடையான்" என்று அபிமானிக்கப்பட்டவர்கள், பகவத் ப்ரபத்தியிலும் உயர்ந்ததான பாகவத கைங்கர்யத்தைப்பெற்று பேரானந்தத்துடன் வாழப்பெறுவர் என்கிறார். பாகவதாபிமான நிஷ்டர் பாகவத கைங்கர்யத்தைப் பெறுவர் என்கை. யதோபாஸநம் பலம் என்னும் தத்க்ரதுந்யாயத்தை அநுஸந்திப்பது. 90.***

பெரி-வ்யா:— (தமரித்யாதி₃) "தாள் தாமரை மலர்களிட்டிறைஞ்சி, மால்வண்ணன் தாள்தாமரை அடைவோமென்று தமராவார் — யாவர்க்கும் தாமரைமேலாற்கும் அமரர்க்கும்

---

அவ:— எம்பெருமான் திருவடிகளே உபாயோபேயங்களென்று அறுதியிட்டிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் உப₄ய விபூ₄தியிலுள்ளார்க்கும் நிர்வாஹகராம்படியான பெருமையை உடையவர்கள் என்கிறார்.

உரை:— "मामेकं शरणं व्रज" (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்று அருளிச்செய்த கறுத்த நிறத்தை உடையனை க்ருஷ்ணனுடைய திருவடித்தாமரைகளிலே செவ்விப்பூக்களைப் பணிமாறி, தங்கள் தலைச்சுமையை அங்கே வைத்து ஆஶ்ரயித்து, அவனுடைய திருவடித் தாமரைகளைக்கிட்டி அநுப₄விப்போமாகவேணுமென்று அத்₄யவஸித்திருக்கும் ஆஶ்ரிதரானவர்கள் — திருநாபீ₄கமலத்தை இருப்பிடமாக

---

91. அவ:—இம்மூன்று வித₄மான அதி₄காரிகளுக்கும் ப₄க₃வத்₃ ப₄க்தி பொதுவானதென்றும், அவர்கள் உப₄யவிபூ₄தியிலுள்ளார் அனைவரிலும் உயர்ந்தவர்களென்றும் அருளிச்செய்கிறார்.

வ்யா:— (தாள் தாமரை மலர்கள் இட்டு) எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளிலே - இன்ன பூ என்னுமல் கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் முதலிய பூக்களை இட்டு. "புரிவதுவும் புகை பூவே" [திருவாய் 1-6-1] என்கிறபடியே எம்பெருமானுக்கு ஆகாத பூவில்லை என்கிறபடி. அன்றிக்கே, உயர்ந்த திருவடிகளுக்குத் தக்கவாறு உயர்ந்த தாமரை மலர்களை இட்டு என்றும் பொருள் கொள்ளலாம். இது காயிகமான வ்யாபாரம். (இறைஞ்சி) வாயாரத் துதித்து. வாசிகமான செயல். (மால் வண்ணன் தாள் தாமரையடைவோம் என்று தமராவார்) நீலவண்ணனான எம்பெருமானுடைய திருவடித்தாமரைகளை அடையவேணுமென்று நெஞ்சிலே நினைந்து அவனுக்கு ஆட்பட்டிருக்குமவர்கள். (அடைவோமென்று தமராவார்) "என்னையே ஶரணமடை" என்ற கண்ணனே உபாயம் எனும் மாநஸமான அநுஸந்தா₄னம். (தமராவார்) மநோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் மால் வண்ணனுக்கு அடிமைப்பட்டிருக்குமவர்கள். (தாமரை மேலாற்கும்) எல்லாவுலகுக்கும் உற்பத்தி ஸ்தா₂னமான உந்தித்தாமரையின்

ஆடரவார்த்தாற்கும் அமரர்கள்'' என்று அந்வயம். அமரர்கள்— நித்யஸூரிகள்: மால் வண்ணன்—க்ருஷ்ணன். 91.

92. என்று மறந்தறியேன் என்னெஞ்சத்தே வைத்து
நின்று மிருந்தும் நெடுமாலை—என்றும்
திருவிருந்த மார்பன் சிரீதரனுக் காளாய்
கருவிருந்த நாள்முதலாக் காப்பு.

பதவுரை:—கரு இருந்த நாள் முதலா—(நான்) கர்ப்பத்திலிருந்த நாள் தொடங்கி, காப்பு—(எம்பெருமானாலே) ரக்ஷை பெற்றவனாகையாலே, திரு என்றும் இருந்த மார்வன் சிரீதரனுக்கு—பிராட்டி நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்வையுடைய அந்தத் திருமாலுக்கு, ஆள் ஆய்—ஆட்பட்டவனாய், நெடு மாலை—(அந்த) ஸர்வேஶ்வரனை, என் நெஞ்சத்து—என்னுடைய ஹ்ருதயத்திலே, வைத்து—நிலைநிறுத்தி, நின்றும் இருந்தும் என்றும்—நிற்றல் இருத்தல் முதலிய எல்லா நிலைமைகளிலும், மறந்தறியேன்—மறவாமல் (அவனையே) நினைப்பவனாயிருக்கிறேன்.

---

உடைய ப்ரஹ்மாவுக்கும், ஆடுகிற பாம்பை ஆபரணமாகப் பூண்டிருக்கும் ருத்ரனுக்கும், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளுக்கும் மற்றும் எல்லார்க்கும் நிர்வாஹகரான தேவர்களாம்படியான பெருமையை உடையராவர்கள். 91.

---

மேலிருந்துகொண்டு உலகையெல்லாம் படைத்தவனுக்கும். (ஆடரவார்த்தாற்கும்) ஆடும்படியான பாம்பை ஆபரணமாகத் தன் உடம்பில் கட்டிக்கொண்டவனான ஸம்ஹாரமூர்த்தியான ருத்ரனுக்கும். (யாவர்க்கும்) இவ்வுலகில் மற்றுமுள்ள இந்த்ரன், சந்த்ரன் முதலான தேவர்கள் மனுஷ்யர்கள் முதலான அனைவர்க்கும். இத்தால் லீலாவிபூதி முழுவதும் சொல்லப்பட்டது. (அமரர்க்கும்) அயர்வறுமமரரான நித்யஸூரிகளுக்கும். இத்தால் நித்யவிபூதி முழுவதும் சொல்லப்பட்டது. (அமரர்கள்) உபயவிபூதியிலுள்ளாரிலும் உயர்ந்தவர்கள். (அமரர்கள்) தேவதைகள்; பூஜ்யர்கள். ''*சீதனையே தொழுவரர் விண்ணுளாரிலும் சீரியரே*'' [திருவிரு-79] ''தேவர்வைகல் தீர்த்தங்களேயென்று பூசித்து நல்கியுரைப்பர் தம் தேவியர்க்கே'' [திருவாய் 7-10-11] என்றார் நம்மாழ்வாரும். 91.

பெரி-வ்யா:— (என்றுமித்யாதி₃) க₃ர்ப்ப₄த்திலே இருந்த நாள் தொடங்கி எம்பெருமான் என்னை நோக்கிக்கொண்டு

---

அவ:— க₃ர்ப்ப₄ாவஸ்தை₂யே தொடங்கி ஸர்வேஶ்வரன் என்னை ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே ஸர்வ காலத்திலும் நான் அவனை மறந்தறியேன் என்கிறார்.

உரை:— அறிகைக்கு யோக்₃யதையில்லாத க₃ர்ப்ப₄த்திலே இருந்த நாள் தொடக்கமாக அவன் என்னைக் குறைவற ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே, பெரியபிராட்டியார் ஸர்வகாலத்திலும் "இறையும் அகலகில்லேன்" என்கிற படியே எழுந்தருளியிருக்கும் திருமார்வையுடையனாய்,

---

92. அவ:— நானும் அவனுடைய தமர்களிலே ஒருவன் என்கிறார்; க₃ர்ப்ப₄த்திலிருந்த நாள் முதல் ஸர்வேஶ்வரன் என்னை ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே, எல்லாக் காலத்திலும் நான் அவனை மறந்தறியேன் என்கிறார்.

வ்யா:— (என்றும் மறந்தறியேன் என்னெஞ்சத்தே வைத்து நின்று மிருந்தும் நெடுமாலை) "என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை முற்றப்பருகினான்" [திருவாய் 9-6-10] "அதனிற் பெரிய என்னவாவறச் சூழ்ந்தாயே" [திருவாய் 10-10-10] என்கிறபடியே என்னுடைய காதலிலும் முற்பட்டதாய், பெரியதான காதலையுடைய ஸர்வேஶ்வரனை என் நெஞ்சிலே வைத்து, நிற்கிறபோதோடு இருக்கிற போதோடு வாசியற எல்லாக்காலத்திலும் மறவாமலிருக்கிறேன். (நின்றுமிருந்தும்)

"ஆஸீநா வா ஶயாநா வா திஷ்ட₂ந்தோ யத்ர குத்ர வா|
நமோ நாராயணாயேதி மந்த்ரைக ஶரணா வயம்||" [நாரதீ₃யம்]

[எங்கேயாவது இருந்தபோதோடு, படுத்திருக்கும்போதோடு, நின்ற போதோடு வாசியறத் திருமந்திரத்தையே ஶரணமாகக் கொண்டுள்ளோம் நாங்கள்.] என்றாப்போலே நிற்பதிருப்பது முதலான விடவொண்ணாத காரியங்களைச் செய்யும்போதும் நாராயணத்₄யான பரனாகவேயிருக்கிறேன் என்கை. மறவாமலிருந்தவளவேயோ? என்ன, கைங்கர்யத்திலும் அந்வயிக்கப்பெற்றேன் என்கிறார். (என்

போருகையாலே, என்றும் திருவிருந்த மார்பன் சிரீதரனுக்கு ஆளாகவும் பெற்று, வ்யாமுக்₃த₄னானவனை என்னெஞ்சிலே வைத்து என்றுமொக்க நின்றபோதோடு இருந்தபோதோடு வாசியின்றிக்கே மறந்தறியேன் என்கிறார். 92.

---

அத்தாலே ஸ்ரீத₄ரன் என்னும் திருநாமத்தை ஸார்த்த₂மாக உடையனான ஸர்வேஶ்வரனுக்கு அங்யார்ஹஶேஷபூ₄தனாய் ஆஶ்ரித விஷயத்தில் நிரதிஶயவ்யாமுக்₃த₄னானவனை என்னுடைய ஹ்ருத₃யத்திலே வைத்து, நின்றபோதோடு இருந்தபோதோடு வாசியற ஸர்வகாலத்திலும் மறந்தறியேன். 92.

---

றும் திருவிருந்த மார்வன் சிரீதரனுக்காளாய்) ''நித்யஸ்ரீ:'' [விஷ்ணு ஸஹஸ்ரநாமம்] ''அகலகில்லேன்இறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பா'' [திருவாய் 6-10-10] என்கிறபடியே அடியாரை, அநுகூலித்த கணத்திலேயே அடிசேர்ப்பிப்பதற்காக இறையும் அகலகில்லாமல் ஸ்ரீதே₃வி நித்யவாஸம் செய்யும் திருமார்பையுடைய ஸ்ரீத₄ரனுக்குக் கைங்கர்யமும் செய்யப்பெற்றேன். (என்றும் திருவிருந்தமார்வன் சிரீதரன்) மற்றுள்ளாரை ஸ்ரீமான்கள் என்பது மாம்பழத்தோடு ஸம்ப₃ந்த₄லேசமுமற்ற ஐந்துவை ''மாம்பழமுண்ணி'' என்பதுபோல. இவனே ஸ்ரீதே₃வியால் நித்யவாஸம் செய்யப்பெற்ற திருமார்வையுடையவனாகை யாலே ஸ்ரீத₄ரன் என்னும் அந்வர்த்த₂ நாமம் உடையவனாகிறான். (சிரீதரனுக்காளாய்) ''திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்'' [திருப்பல்-11] என்கிறபடியே கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தீ₄ ஒரு மிது₂நம் என்னுமர்த்த₂த்தையும், தாம் இப்பெருமைகளைப்பெற்றதுக்கு மூலகாரணம் அவளோடுண்டான ஸம்ப₃ந்த₄ம் என்பதையும் உணர்த்துகிறார். மறந்தறியாமைக்கும், ஆட்செய்கைக்கும் அடியென்னென்னில் (கருவிருந்த நாள் முதலாக் காப்பு) நான் க₃ர்ப்ப₄வாஸம் செய்தபோதிலிருந்து, என்னைக் கடாக்ஷித்து ஸாத்விகனாக்கி அவன் என்னைக் காப்பாற்றுகையாலே இப்பெருமைகளைப் பெற்றேன் என்கிறார்.

(கருவிருந்த நாள் முதலாக்காப்பு) நான் க₃ர்ப்ப₄த்திலிருந்த நாள் தொடங்கி என்னைக் கடாக்ஷித்து ரக்ஷிக்கையாலே, நான் இப்பேறு பெற்றேன்.

''ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மது₄ஸூத₃ந: |
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்த₂சிந்தக:||''
[பார-மோக்ஷ]

93. காப்பு மறந்தறியேன் கண்ணனே யென்றிருப்பன்
ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்—ஆக்கை
கொடுத்தளித்த கோனே குணப்பரனே உன்னை
விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்.

பதவுரை:— அங்கு — அந்தப் பிரளய காலத்தில், பல் உயிர்க்கும் — எல்லா ஆத்மாக்களுக்கும், ஆப்பு ஒழியவும்— சரீர இந்திரியக்கட்டு அழிந்துபோயிருந்தாலும், (மறுபடியும்) ஆக்கை கொடுத்து—சரீரங்களைக்கொடுத்து, அளித்த— அருள்செய்த, கோனே—பிரானே! காப்பு — (நீ செய்தருளும்) ரக்ஷையை, மறந்தறியேன் — ஒருநாளும் மறக்க மாட்டேன்; கண்ணனே என்று இருப்பன் — (ப்ராப்ய ப்ராபகங்கள்) கண்ணனே என்று உறுதி கொண்டிருப்பேன்; குணம் — திருக்குணங்களினால், பரனே — சிறந்த பெருமானே! மெய் தெளிந்தார் தாம்—உள்ளபடி (ஸ்வரூபத்தைத்) தெளிவாக அறிந்தவர்கள், உன்னை விட துணியார்—உன்னை விடமாட்டார்கள்.

---

அவ:—ஸர்வசேஷியாய் சூஞதிகனை உன்னை யதாவாக அறிந்தவர்கள் உன்னை விட்டிருக்கமாட்டார்கள் என்கிறார்.

---

[பிறக்கும்போதே எவனொருவனை மதுசூதனன் கடாக்ஷிக்கிறானோ, அவன் ஸத்வகுணம் நிறைந்தவனாக அறியத்தக்கவன், அவனே மோக்ஷத்தைப்பற்றிச் சிந்திப்பான்.] என்று சொல்லப்பட்டதன்றோ. "கருவரங்கத்துட்கிடந்து கை தொழுதேன் கண்டேன்" [6] "கருக்கோட்டியுட்கிடந்து கை தொழுதேன் கண்டேன்" [87] என்று பொய்கை பூதத்தாழ்வார்களும் தாங்கள் ஜாயமான கடாக்ஷம் பெற்றுக் கருவிலே திருவுடையரானமையைப் பேசினரன்றோ. 92.

93. அவ:— "ஆழ்வீர்! மறந்தறியேன் என்று இறந்தகாலத்தில் நிகழ்ந்ததைச் சொன்னீர்; எதிர்காலத்தில் மறக்கக்கூடுமன்றோ?" என்று ஸர்வேஶ்வரன் வினவ, "பிரானே! நீ செய்த ரக்ஷையையும், உன் ஸ்வபாவத்தையும் உள்ளபடி அறிந்தவர்கள் உன்னை விடுவதும் முடியுமோ?" என்கிறார்.

பெரி-வ்யா:-(காப்பித்யாதி₃) எம்பெருமானுடைய-ரக்ஷையை மறந்தறியேன். க்ருஷ்ணனே ப்ராப்யப்ராபகங்களென்றிருப்பன். (ஆப்பித்யாதி₃)ஸர்வாத்மாக்களுக்கும்,கரணகளேபரங்களையிழந்தால் அத்தை மீளவும் கொடுத்து ரக்ஷிக்கைக்குறுப்பான ஸ்வாபா₄விகமான ஶேஷஶேஷிபா₄வமான ஸம்ப₃ந்த₄த்தையுடையவனே!

---

உரை:— நீ இவ்வாத்மாவுக்குப் பண்ணும் ரக்ஷையை மறந்தறியேன். க்ருஷ்ணனாய் வந்து அவதரித்து ஆஶ்ரித ஸுலப₄னான நீயே ப்ராப்ய ப்ராபகங்களென்று அத்₄யவஸித்திருப்பன்; ப்ரளயத₃ஶையிலே ஶரீரங்கள் அழிந்து போகவும், ஸர்வாத்மாக்களுக்கும் உன்னை ஆஶ்ரயிக்கைக்கு உறுப்பான ஶரீரங்களை த₃யமானமனாவாய்க்கொடுத்து, குளிர ஈரக்கையாலே தடவி ரக்ஷித்தவனாய், இப்படி ரக்ஷிக்கைக்கு அடியான ஸ்வாபா₄விகமான ஶேஷித்வ ப்ராப்தியை உடையனாய், ரக்ஷணாநுகு₃ணமான கல்யாண கு₃ணங்களால் ஸர்வோத்தரனானவனே! உன்னோட்டை

---

வ்யா:—(காப்பு மறந்தறியேன்) பிரானே! க₃ர்ப்ப₄த்தில் இருந்த போது தொடங்கி நீ செய்துவரும் ரக்ஷையை மறந்துவிட்டேன் என்று நினைத்தனையோ? நான் தோன்றினவன்று முதல் நீ ரக்ஷகனாயிருக்கும் போது உன்னை நான் மறக்க வழியுண்டோ? ஸாத₄நாந்தரங்களிலும், விஷயாந்தரங்களிலும் மண்டி மறந்தாலோ? என்னில்;— (கண்ணனே என்றிருப்பன்) கிருஷ்ணனாய் அவதரித்த நீயே ப்ராப்யமும் ப்ராபகமும் என்றிருக்கும் நான் ப்ராபகாந்தர ப்ராப்யாந்தரங்களில் புக வழியுண்டோ? நீ செய்த உதவிகளையும், உன் கு₃ணங்களையும் உள்ளபடி அநுஸந்தி₄த்தால் உன்னை விட முடியுமோ? என்கிறார் மேல்:— (ஆப்பங்கொழியவும் பல்லுயிர்க்கும் ஆக்கை கொடுத்தளித்த கோனே) எல்லா ஆத்மாக்களும் சரீரேந்திரியங்களையிழந்து தவிக்கும்போது, அவர்களுக்கு ஶரீராதி₃களைக் கொடுத்து ரக்ஷித்த ஸ்வாமியே! ஆப்பு-இவனை இந்த ஸம்ஸாரத்திலே அகப்பட்டுக்கட்டுண்ணப்பண்ணும் உபகரணமாயிருக்கையாலே "ஆப்பு" என்று சரீரேந்திரியங்களைச் சொல்லுகிறது, (கோனே) உடையவனாகையாலே உடைமையை ரக்ஷித்தாய் என்று பா₄வம், (ஆப்பங்கொழியவும்......கோனே) நீ அடியிலே செய்த உதவியைக் கண்டபின்பு உன்னைவிட்டு அகல முடியுமோ?

இஸ்ஸம்ப₃ந்த₄த்தை மெய்யாக அறிந்தவர் உன்னை விடத் துணி யாரென்கிறார். 93.

94. மெய்தெளிந்தா ரென்செய்யார் வேறானார் நீறாக
கைதெளிந்து காட்டிக் களப்படுத்து—பைதெளிந்த
பாம்பினணையா யருளா யடியேற்கு
வேம்புங் கறியாகு மேன்று.

பதவுரை:—வேறு ஆனார்—வேறுபட்டவர்களான [பகைவர்களான] துரியோதநாதிகள், நீறு ஆக—சாம்பலாய் ஒழிந்து போம்படியாக, தெளிந்து—(ஆஶ்ரித விரோதி₄களை அழிப்பது தக்கதே என்று) தேறி, கை காட்டி—(பாண்ட₃வர்களுக்கு) வேண்டிய உதவிகளைச் செய்து, களம் படுத்து — (அந்த எதிரிகளைப்) போர்க்களத்தில் கொன்றொழித்து, (இவ்வகையாலே மண்ணின் பாரம் நீக்கி) தெளிந்த பை பாம்பு இன் அணையாய்—விளங்குகின்ற படங்களையுடைய ஆதிஶேஷனாகிற இனிமையான படுக்கையைச் சென்று சேர்ந்த பிரானே! அடியேற்கு—அடியேனுக்கு, அருளாய்—அருள்புரியவேணும்; என்று—வேணுமென்று விரும்பினால், வேம்பும் கறி ஆகும்—வேப்பிலையும்

---

உறவையும், உறவடியாக நீ பண்ணும் ரக்ஷணத்தையும், ரக்ஷணாநுகு₃ணமான கு₃ணவைலக்ஷண்யத்தையும் உள்ளபடி அறிந்தவர்கள் உன்னை விட அத்₄யவஸியார்கள். 93.

---

உன் ஶேஷித்வம் கண்டபின்பு உன்னைவிட்டு அகலமுடியுமோ? (குணப் பரனே) ''உயர்வறவுயர்நலமுடையவன்'' [திருவாய். 1-1-1] என்கிற படியே கு₃ணங்களால் மிகவுயர்ந்திருப்பவனே! உன் கு₃ணங்கண்டபின்பு தான் உன்னை விட்டு நீங்கமுடியுமோ? (உன்னை விடத்துணியார் மெய் தெளிந்தார் தாம்) உன்னை உள்ளபடி அறிந்தவர்கள் ஒருபோதும் உன்னைவிட்டு நீங்க எண்ணமாட்டார்கள். (உன்னை... தாம்) ரக்ஷகனன்றென்று விடுவதோ? உபகாரகனன்றென்று விடுவதோ? கு₃ணஹீனனென்று விடுவதோ? வகுத்தவனன்றென்று விடுவதோ? எத்தைச் சொல்லி விடுவது? 93.

கறியாகச் சமைத்துக் கொள்ளக் கூடியதே; மெய் தெளிந் தார்—உள்ளதை உள்ளபடி அறியுமவர்கள், என் செய்யார் —எதுதான் செய்ய முடியாதவர்கள்? [எது நினைத்தா லும் செய்யக் கூடியவர்களே].

பெரி-அவ:— (மெய் தெளிந்தார் இத்யாதி₃) அத்யந்த ஹேயனாகிலும் என்னை விஷயீகரித்தருளவேணும்; என்னிலும் தண்ணியரையும் "यदि वा रावणः स्वयं" (யதி₃ வா ராவண: ஸ்வயம்) என்னும்படியை வஸ்துஸ்தி₂தி அழகியதாக அறியு மவர்கள் என்றும் விஷயீகரி(க்க)ப்ப(டுமவ)ரென்கிறார்.

வ்யா:—(வேறானார் இத்யாதி₃) ஒன்றாய் வாழாதே வேறான துர்யோத₄நாதி₃கள் ப₄ஸ்மமாம்படி, பரஹிம்ஸை என்று கலங்

---

அவ:— அத்யந்தஹேயனேயாகிலும், என்னை விஷயீ கரித்தருளவேணும். வஸ்துஸ்தி₂தியை உள்ளபடி அறியு மவர்கள் எத்தனையேனும் தோ₃ஷமுடையவர்களையும் தோ₃ஷத்தைப் பார்த்து இகழாதே தோ₃ஷமே பச்சையாக மேல்விழுந்து விஷயீகரிப்பர்களிறே என்கிறார்.

உரை:— ஒன்றாய்க் கூடிவாழ அறியாதே ஏறிட்டுக் கொண்ட துர்யோத₄நாதி₃கள் ஒருபிடி சாம்பலாய்ப்போம் படியாக, பரஹிம்ஸை என்று கலங்காதே, ஆஶ்ரித

---

94. அவ:— "நீர் விடாவிடிலும், உம் தோ₃ஷங்கண்டு நான் உம்மை விட்டால் என் செய்வீர்?" என்ன, "எம்பிரானே! உன் ஸ்வரூபத்தை மறந்து பேசுகிறாய் போலும்! ஶரணாக₃த ரக்ஷகத்வமே வடிவெடுத்தவனான உன்னை நீ ஆராய்ந்து பார்த்தாயாகில், தோ₃ஷமே வடிவெடுத்த என்னை இதுவரை ரக்ஷித்ததோடன்றியில், காலதத்வமுள்ளதனையும் ரக்ஷிப்பதும் செய்வாய். ஆரோக்₃யஹேது என்று அறிந்தால், வேம்பின் இலையும் விரும்பியுண்ணும் கறியாகு மன்றோ₃, அப்படியே என்னையும் திருவுள்ளம்பற்றவேணும் என்கிறார்.

வ்யா:— (மெய் தெளிந்தார் என் செய்யார்) தமக்கு எது கு₃ணத்தை அளிப்பது என்பதை உள்ளபடி அறிந்தவர்கள் எதுதான் செய்யமாட்டார்கள்? பிரானே! தோ₃ஷமற்றவனை ரக்ஷித்தால் உனக் குப் பெருமையோ, தோ₃ஷம் நிறைந்த என்னைப் போன்றவனை

காதே ஆஶ்ரித விரோதி₄களாகையாலே திருவுள்ளம் தெளிந்து அணிவகுத்து யுத்₃த₄களத்திலே கொண்டு விழவிட்டுப் பின்னும் படுக்கையிலே சாய்ந்தவனே! (பை தெளிந்த) எம்பெருமானோட்டை ஸ்பர்ஶத்தாலே குளிர்ந்த ப₂ணங்கள்.

விரோதி₄களென்று திருவுள்ளம் தெளிந்து, கையும் அணியும் வகுத்து எதிரிகள் மர்மங்களைக் காட்டி யுத்₃த₄பூமியிலே கொன்று விழவிட்டு ஆஶ்ரித விரோதி₄களை அழியச்செய்து கைபொழிகையாலே, ஸ்வஸ்பர்ஶத்தாலே குளிர்ந்த படங்களையுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே கரைச்சலற்றுக் கண் வளர்ந்தருளுகிறவனே! அத்யந்த ஹேயனாய், அநந்யக₃தியான எனக்கு க்ருபை

ரக்ஷித்தால் உனக்குப் பெருமையோ, என்பதை உள்ளபடி ஆராய்ந்தால், நீ எனக்கு எந்த ரக்ஷணத்தைத்தான் செய்ய மாட்டாய்? அன்றிக்கே, உன்னுடைய ஶரணாக₃தரக்ஷகத்வமாகிற ஸ்வரூபத்தை நீ உள்ளபடி ஆராய்ந்தால், நீ எனக்கு எதைத்தான் செய்யமாட்டாய் என்றுமாம். தோ₃ஷங்களைக் காணாமல் ரக்ஷிக்குமளவன்றிக்கே. "யதி₃வா ராவண: ஸ்வயம்" [ரா-யு 18.33] என்று "தோ₃ஷமுள்ளவனைக் கிடைக்கப் பெறுவோமோ, அவனையும் ரக்ஷித்தோம் என்னும் புகழ்படைக்கைக்கு?" என்று ஆசைப்பட்டு தோ₃ஷமே ரக்ஷண ஹேதுவாக ரக்ஷிக்குமவனன்றோ நீ. "நான் ஶரணாக₃தரக்ஷகனென்னுமிடத்தை எங்கே கண்டீர்?" என்ன, பாண்ட₃வர்களை ரக்ஷித்த செயலிலே கண்டேன் என்கிறார் மேலே:- (வேறுனர்) "த்₃விஷந்நந்நம்" என்கிறபடியே, ரூவுலகிற்கும் முந்தைத் தந்தையான அவனும், நெஞ்சு கொதித்து "எதிரிகள்" என்று வாய்விட்டு அருளிச்செய்யும்படி பாண்ட₃வத்₃வேஷிகளாயிருக்கும் து₃ர்யோத₄நாதி₃யர். (வேறுனர் நீருக) து₃ர்யோத₄நாதி₃யர் ஒரு பிடி சாம்பலாகும்படி. (தெளிந்து கைகாட்டி) "இவர்களைக் கொல்லவேண்டிவருகிறதே" என்று கலங்காமல், ஆஶ்ரித விரோதி₄கள் கொல்லத்தக்கவரே என்று தெளிந்து அணிவகுப்பது முதலான உதவிகளைச் செய்து. (கைகாட்டி) அவர்களுடைய மர்மங்களைக் காட்டி.—என்றுமாம். (களப்படுத்து) யுத்₃த₄களத்திலே உயிரிழந்து விழச்செய்து. (பைதெளிந்த பாம்பின் அணையாய்) அடியாரல்லல் தவிர்த்த அசைவுதீரத் திருப்பள்ளியிலே சாய்ந்தவனே! தன்னோடுண்டான ஸ்பர்ஶத்தாலே குளிர்ந்திருக்கும் படங்களையுடைய திருவநந்தாழ்வான் மேலே சாய்ந்தருளினவனே! (அருளாய் அடியேற்கு) "தக்க ஐவர்" என்கிற

அவர்கள் தக்க ஐவர்; நீ ஹேயரையும் ஏறிட்டுக்கொண்டால் ரக்ஷிக்கலாம். கறியாகக் கொள்ளுவோமென்று அபி₄மாநிக்க, வேம்பு கறியாகிறாற்போலே. வஸ்து ஸ்தி₂தி அறிவார் எவ் வளவு செய்யார்கள்? "किमत्र चित्रं धर्मज्ञ" (கிமத்ர சித்ரம் த₄ர்மஜ்ஞ) இதிவத். 94.

---

பண்ணியருளவேணும். "அவர்கள் தக்கவர்கள்; நீ ஹேய னன்றோ" என்று திருவுள்ளமாகில், ஹேயரையும் ஏறிட்டுக் கொண்டால் ரக்ஷிக்கலாம்; 'கறியாகக் கொள்வோம்' என்று ஏறிட்டுக் கொள்ளுமளவில் விரஸமான வேம்பும் கறியாகிற தன்றோ. வஸ்துஸ்தி₂தியைப் பழையதாக அறியுமவர்கள். தோ₃ஷத்தைப் பார்த்து இகழாதே கைகொள்ளுமளவன்றிக்கே, "यदि वा रावणः स्वयम्" (யதி₃ வா ராவண: ஸ்வயம்) என்று தோ₃ஷத்தைப் பச்சையாகக்கொண்டு, "किमत्र चित्रं धर्मज्ञ" (கிமத்ர சித்ரம் த₄ர்மஜ்ஞ) என்று கைவிடுகைக்கு உறுப்பான குற்றங்களைச்சொல்லி மறுதலைத்தவர்களை வாய் விட்டுப் புகழும்படி மேல் விழுந்து விஷயீகரியார்களோ? 'பை தெளிந்த' என்கிற இடத்தில் தெளிவால் குளிர்த்தியை நினைக்கிறது. 94.

---

படியே ஸகிஞ்சனராய், கு₃ணவான்களான அவர்களை ரக்ஷித்தாற் போலே அகிஞ்சனனாய் அகு₃ணனான என்னையும் ரக்ஷிக்கவேணும். அவர்களை ரக்ஷித்ததிலும் என்னை ரக்ஷிப்பதாலேயே நீ நிறம்பெறு வாய். தோ₃ஷமுள்ள உம்மை எப்படி விரும்புவது? என்னில்: (வேம்பும் கறியாகும் ஏன்று) ஆரோக்₃யமளிப்பது முதலான கு₃ணங் களைக் கண்டு விரும்பினால், வேப்பிலையும் கறியமுதாகிறதன்றோ. (மெய்தெளிந்தார் என்செய்யார்) நீ செய்தவற்றிற்போலவே செய் யப்போகுமவற்றிலும் ஆச்சரியம் என்ன இருக்கிறது. உன் ஸ்வ ரூபத்தை உள்ளபடி அறியும்போது? என்று கருத்து.

"கிமத்ர சித்ரம் த₄ர்மஜ்ஞ லோகநாத₂ ஸுக₂ாவஹ!।
யத் த்வமார்யம் ப்ரப₄ாஷேதா₂: ஸத்வவாந் ஸத்பதே₂ ஸ்தி₂த:॥
[ரா-யு 18-36]

[தருமமறிந்தவனே! லோகநாத₂னே! ஸுக₂மளிப்போனே! ஸத்வகு₃ண முடையவனாய், நல்வழியில் நிற்கும் நீ இந்நல்வார்த்தை நவின்ற தில் என்ன ஆச்சர்யமுள்ளது?] என்றாப்போலே, 94.

95. என்றேனடிமை யிழிந்தேன் பிறப்பிடும்பை
ஆன்றே னமரர்க் கமராமை—ஆன்றேன்
கடனாடும் மண்ணாடுங் கைவிட்டு மேலை
யிடநாடு காண வினி.

பதவுரை:—அடிமை—அடிமையை, என்றேன்—ஏற்றுக் கொண்டேன்; பிறப்பு இடும்பை—பிறப்பினால் வரும் அஹங்காரமமகாரங்களில் நின்றும், இழிந்தேன் — நீங்கினேன்; அமரர்க்கு—பிரமன் முதலிய தேவர்களுக்கும், அமராமை—என் அருகு நாடவொண்ணாதபடி, ஆன்றேன் — (ஞானம் ப₄க்தி முதலியவற்றால்) நிரம்பினேன்; கடன் நாடும் — ஸ்வர்க்கம் முதலிய லோகங்களையும், மண் நாடும் — இப் பூலோகத்தையும், கை விட்டு — உபேக்ஷித்து, மேலை — எல்லாவற்றுக்கும் மேற்பட்டுள்ளதாய், இடம்—(அடியார்கள் குழாங்களுக்குத் தகுதியாக) இடமுடைத்தான, நாடு—திருநாட்டை, காண—கண்டு அநுப₄விக்கலாம்படி, இனி—இப்போது, ஆன்றேன்—(பரமப₄க்தி) நிரம்பப் பெற்றேன்.

பெரி-வ்யா:—(என்றேனடிமை) அடிமையென்றால் மருந்து போலேயிராதே அதிலே பொருந்தினேன். (இழிந்தேன் இத்

---

அவ:— எம்பெருமான்பக்கலிலே தமக்குப் பரமப₄க்தி பிறந்தபடியை அருளிச்செய்கிறார்.

உரை:— அடிமை என்றால் மருந்துபோலே முகம் சுளிக்கும்படி விரஸமாயிராதே, "अहं सर्वं करिष्यामि" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்கிறபடியே ஸர்வவித₄

---

95. அவ:— "அருளாய் அடியேற்கு" என்றபடியே எம்பெருமான் அருள, தாம் இஷ்டப்ராப்திகளையும், அநிஷ்டநிவ்ருத்திகளையும் பெற்றபடியைப் பேசுகிறார்.

வ்யா:— (என்றேனடிமை) ஒழிவில் காலமெல்லாம் செய்ய வேண்டிய அடிமையிலே பொருந்தினேன்; இதுக்கு முன்பு அடிமையிலே ருசியுண்டானாலும், அது ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄ப₃லத்தாலே மருந்

யாதி₂) அடிமைக்கு விரோதி₄யாய் ஸாம்ஸாரிகமான அஹங்கார மமகாரமாகிற பர்வதத்தில் நின்றும் இழிந்தேன். (ஆன்றேனித்யாதி₃) ப்₃ரஹ்மாதி₃களுக்கும் என்னைக்கண்டால் கூச வேண்டும்படி ஜ்ஞாநப₄க்த்யாதி₃களால் பூர்ணனானேன். அதுக்கு மேலே, புண்யப₂லம் பு₄ஜிக்கும் ஸ்வர்க்கா₃தி₃லோகங்களையும் புண்யார்ஜநம் பண்ணும் பூ₄மியையும் உபேக்ஷித்து, அவற்றில் விலக்ஷண

கைங்கர்யங்களிலும் அத்யபி₄நிவிஷ்டனாய்க் கொண்டு பொருந்தினேன். அடிமைக்கு விரோதி₄யாய், ஜந்மஸம்ப₃ந்த₄ ப்ரயுக்தமான அஹங்கார மமகாரங்களாகிற து₃:க்க₂ரூப பர்வதத்தினின்றும் இழிந்தேன். ப்₃ரஹ்மாதி₃ தே₃வர்களுக்கும் என்னைக் கண்டால் வந்து கிட்டமாட்டாமல் கூசி அகன்று போகவேண்டும்படி ஜ்ஞான ப்ரேமங்களால் பரிபூர்ணனானேன். அதுக்குமேலே — பண்ணின புண்யத்துக்குக் கடன்போலே அவஶ்யாநுப₄வ்யமாய் வரக்கடவ ஸ்வர்க்காதி₃லோகங்களையும், புண்யார்ஜனம் பண்ணும் பூ₄லோகத்தையும் உபேக்ஷித்து, "विश्वतः पृष्ठेषु" (விஶ்வத: ப்ருஷ்டே₂ஷு) என்னும்படி இவற்றில் விலக்ஷணமாய், "अनन्तायामविस्तीर्णः" (அநந்தாயாம விஸ்தீர்ண:) என்னும்படி இடமுடைத்தான வைகுந்தமாநாட்டைக் கண்டு அநுப₄விக்கலாம்படி இப்போது பரமப₄க்தியுக்தனானேன்.

திலே நோயாளிக்குள்ள ருசிபோலே அளவுபட்டிருக்கும், இப்போது அடிமைருசி அளவற்றதாயிற்று. இப்போது அடிமையிலே பொருந்துகைக்கு அடியென்னென்னில்: (இழிந்தேன் பிறப்பிடும்பை) பிறப்பினால் வரும் அஹங்காரமமகாரங்களாகிற தடையிலிருந்து நீங்கினேன். (இழிந்தேன்) அஹங்காரமமகாரங்கள் பர்வதம்போலே பெருத்திருக்கையாலே அவற்றை விட்டு இறங்கினேன் என்கிறார்.

(ஆன்றேன் அமரர்க்கு அமராமை) தே₃வதாந்தரங்களை நான் அணுகும் நிலைபோய், அவர்கள் என்னை அணுகக் கூசும்படி ஜ்ஞானப₄க்திகளால் நிறைவுபெற்றேன், (கடன் நாடும் மண்ணுடும் கைவிட்டு மேலை இடநாடு காண இனி ஆன்றேன்) புண்ணிய பலனநுப₄விக்கும் சுவர்க்கத்தையும், புண்ணியம் அநுஷ்டிக்கும் இவ்வுலகையும் கைவிட்டு, பழையதாய், இடமுடையதான பரம பத₃த்தைக்

மாய் இடமுடைத்தான ஸ்ரீவைகுண்டமும் காணலாம்படி இப்போது பரமப₄க்தியுக்தனானேன் என்கிறார். 95.

96. இனியறிந்தே னீசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனியறிந்தே னெம்பெருமா னுன்னை—இனியறிந்தேன்
காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன் நான்.

பதவுரை:— எம்பெருமான்—எம்பெருமானே! ஈசற்கும்—ருத்₃ரனுக்கும், நான்முகற்கும்—பிரமனுக்கும், தெய்வம்—தெய்வமாக, இனி அறிந்தேன்—இப்போது (உன்னை) திடமாகத் தெரிந்துகொண்டேன்: இனி—இப்போது, உன்னை அறிந்தேன்—உன் ஸ்வரூபத்தை (உள்ளபடி) அறிந்தேன்; காரணன் நீ — ஸகலஜக₃த்துக்கும் காரண பூ₄தன் நீ; கற்றவை நீ—இதற்கு முன்பு அறியப்பட்ட

இத்தால்-பரமப்ராப்யமான கைங்கர்யத்திலே தமக்கு அளவிறந்த ஸாரஸ்யம் விளைந்தபடியையும், அதுக்கு விரோதி₄யான அஹங்கார மமகாரரூப து₃:க்க₂ஸம்ப₃ந்த₄ம் விட்டு நீங்கினபடியையும், அடிமைக்கு அடைவில்லாத ஸம்ஸாரத்தில் தமக்கு உண்டான விரக்தியையும், அடிமைக்கு ஏகாந்தமான பரமபத₃த்திலே புக்கல்லது த₄ரிக்க அரிதாம்படி பரமப₄க்தி பிறந்தபடியையும், இப்படியிருக்கிற தம் அதி₄கார பூர்த்தியையும் கண்டு, ப்₃ரஹ்மாதி₃கள் தலை நடுங்கித் தன் கண்வட்டத்திலே வந்து கிட்டமாட்டாமல் கடக்கப்போம்படியான தம்முடைய வேண்டற்பாட்டையும் அருளிச்செய்தாராயிற்று. 95.

காணலாம்படி பரமப₄க்தியால் நிரம்பினேன். கடன்நாடு-தீர்த்தே தீர வேண்டிய கடனைப்போலே, அனுப₄வித்தே தீரவேண்டிய புண்ணிய ப₂லன் பு₄ஜிக்கும் நாடான சுவர்க்கம். (இடநாடு) "ஸர்வாத்ம ஸாத₄ரண நாத₂கே₃ாஷ்டீ₂ பூரே(அ)பி து₃ஷ்பூர மஹாவகாஶம்" [ர-ஸ்த 1-38] [எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவான எம்பெருமானுடைய அடியார்குழாங்கள் அனைவரும் திரண்டாலும் இடமுடையதான பரமபத₃ம்] என்று சொல்லப்பட்டதன்றோ. 95.

பொருள்களெல்லாம் நீ; கற்பவை நீ—இனிமேல் அறியப் படும் பொருள்களும் நீ; நல் கிரிசை—நிர்ஹேதுகரக்ஷண மாகிற நல்ல வ்யாபாரத்தை உடையனான, நாரணன் நீ—நாராயணன் நீ; இவையனைத்தையும், நான் நன்கு அறிந் தேன்—நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன்.

பெரி-வ்யா:— (இனியறிந்தேன்) இப்போது ஈசனுக்கும் நான்முகனுக்கும் தெய்வம் என்று எனக்குக் கைவந்தது; இப்போது நீயானபடியே உன்னையறிந்திருந்தேன்; ஸர்வத்

அவ:— மஹோபனிஷத்ப்ரக்ரியையாலே ப்ரஹ்ம ருத்ர ப்ரமுகமான ஸகல ப்ரபஞ்சத்துக்கும் காரணபூதனான நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று ப்ரதமத்திலே ப்ரதிஜ்ஞைபண்ணி ஶ்ருதிஸ்ம்ருத்யுபப்ருஹ்மணங்களாலும் அநந்யதாஸித்தமான ஶ்ரிய:பதித்வாதிசின்ஹங்களாலும் நெடுக உபபாதித்துக்கொண்டுபோந்து, அடியில் ப்ரதி ஜ்ஞாநுகுணமாக அவனுடைய பரத்வத்தைத் தலைக் கட்டுகிறார்.

உரை:— எனக்கு நாயகனான ஸர்வாதிகனாயிருக்கிற உன்னை — ப்ஶமப்ராயரராலே ஈஶ்வரதயா ஶங்கனீய ரான ருத்ரனுக்கும் ப்ரஹ்மாவுக்கும் ஆஶ்ரயணீயதெய்வமா யிருப்பானொருத்தன் என்னுமிடம் இப்போது உன் ப்ர ஸாதத்தாலே யதாவாக அறிந்தேன். ஸர்வத்துக்கும்

96. அவ:—முக்தி தஶையிலே இவன் பெறும் பெருமைகளுக் கெல்லாம் மூலகாரணம் ஞானவிகாஸமன்றோ. தாம் அதைப் பெற்றதைப் பேசி கிரந்தத்தைத் தலைக்கட்டுகிறார் இப்பாசுரத்தோடு.

வ்யா:— (இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்) ஈசனென்று பெயர்பெற்ற சிவனுக்கும், நாலு முகத்தையுடைய பிரமனுக்கும் நீயே தெய்வம் என்பதை இப்போது நேராகக் கண் டேன். இதுக்குமுன்பு சாஸ்திர முகத்தாலே அறுதியிட்டிருந்த அர்த்தத்தை நேரே ஸாக்ஷாத்கரித்தேன். ஒரு கிரந்தமாகில், உப க்ரமமும், உபஸம்ஹாரமும் — (தொடக்கமும், முடிவும்)—ஒருபடிப்பட

துக்கும் காரணன் நீ; இதுக்கு முன்பு அறிந்தனவும், இனி மேல் அறியக்கடவ பதா₃ர்த்த₂ங்களுமெல்லாம் நீயிட்ட வழக்கு. (நற்கிரிசை) நிர்ஹேதுகமாய் ரக்ஷிக்கும் ஸ்வபா₄வனாய் அதுக்கடியான ஶேஷியான நாராயணன் நீ. (நன்கறிந்தேன் நான்) இப்பொருள் எனக்கு அழகிதாகக் கைவந்ததென்கிறார். 96.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் முற்றிற்று.

---

காரணபூ₄தன் நீ; இதுக்கு முன்பு அறியப்பட்ட பதா₃ர்த்த₂ங்களும், பிறகு அறியக்கடவ பதா₃ர்த்த₂ங்களும் நீயிட்ட வழக்கு என்னுமிடம் இப்போது விஶத₃மாக அறிந்தேன்; நிர்ஹேதுகமாக ரக்ஷிக்கையாகிற நல்ல க்ரியையையுடையையாய், அதுக்கடியாக நாராயணத்வ ப்ரயுக்தமான ஸர்வஶேஷித்வரூபமான ஸம்ப₃ந்த₄ விஶேஷத்தையுடையையாயிருக்கிறாயும் நீ என்னுமிடம் நான் அழகிதாக அறிந்தேன். 96.

திருமழிசைப்பிரான் திருவடிகளே ஶரணம்
ஜீயர் திருவடிகளே ஶரணம்

---

இருக்கவேண்டும் என்னும் நியமமுண்டாகையாலே, "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்று தொடங்கின அர்த்த₂த்தையே பேசி முடிக்கிறார். (இனியறிந்தேன் எம்பெருமான் உன்னை) இப்போது உன்னை உள்ளபடியே நேருக்கு நேரே ஸாக்ஷாத்கரித்தேன். நீர் ஸாக்ஷாத்கரித்தபடிதான் என்னென்னில்: (காரணன் நீ) ஸகல ஜக₃த்காரணன் நீயே என்றறிந்தேன். (கற்றவை நீ கற்பவை நீ) இதுக்கு முன்பு அறிந்த பொருள்களும், ஞானவிகாஸம் பிறந்த பின்பு இனி அறியப்போகும் பொருள்களும் எல்லாம் நீயிட்டவழக்கு என்று அறிந்தேன். "ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம" என்ற வேதா₃ந்தபரிபா₄ஷையை அடியொற்றிப் பேசுகிறார். (நற்கிரிசை நாரணன் நீ) நிர்ஹேதுகமாக ரக்ஷிக்கையாகிற நல்ல செயலை உடையவனாய், இப்படி ரக்ஷிக்கைக்கு ஹேதுவான ஸ்வாமித்வத்தையுடைய நாராயணன் நீ என்று அறிந்தேன்; நாரணன்—நரஸமூஹங்களான நாரங்களுக்கு ஸ்வாமியாயிருப்பவன். இதுக்கு முன்பு இவற்றை அறிந்ததில்லையோ? என்னில்: (நன்கறிந்தேன் நான்)

இதுக்கு முன்பு சாஸ்திர முகத்தாலே அறிந்த அறிவு ஒருபுறமிருக்க, இப்போது நேராகவே நன்கு அறியப்பெற்றேன் நான்.

इत्थं श्रीश्रीनिवाससूरेः सूनोः करात्समुदितेयं।
व्याख्या सद्भिः सेव्या चतुर्मुखान्तादिदिव्यगाथायाः॥

இத்த2ம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸஸூரே: ஸூநோ: கராத் ஸமுதி3தேயம்
வ்யாக்2யா ஸத்3பி4ஸ் ஸேவ்யா சதுர்முகா2ந்தாதி3
தி3வ்யகா3தா2யா: |

[ஸ்ரீ ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியின் குமாரரால் எழுதப்பெற்ற இந்த நான்முகன் திருவந்தாதி வியாக்கியானம் நல்லோர்களால் ஸேவிக்கத்தக்கது.]

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா3ஸன் இயற்றிய
திவ்யப்ரபந்த ஸாரத்தில்
நான்முகன் திருவந்தாதி வியாக்கியானம் முற்றிற்று.
திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.
அப்பிள்ளை திருவடிகளே சரணம்.



இனியறிந்தே னீசற்கும் நான்முகற்கும் தெய்வம்
இனியறிந்தே னெம்பெருமா னுன்னை—இனியறிந்தேன்
காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன் நான்.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.